


உ சிவமயம்.

ஓம் தத் சத் பரப் பிரஹ்மணே நம:

நிஜ குண யோகீசுவரர் கன்னட பாஷையில் இயற்றிய

விவேக சிந்தாமணியில் உள்ள

வேதாந்தப் பரிச்சேதத்தை,

நல்லாற்றூர், தொரமங்கலம்,

ஸ்ரீ சிவப் பிரகாச சுவாமிகளவர்கள்,

182 செய்யுளில் மொழி பெயர்த்த,

# வேதாந்த சூடாமணி மூலமும்,

கோவிலூர் மடம், திருக்களர்,

ஸ்ரீ வீர சேகர ஞானதேசிக ஸ்வாமிகளவர்கள்

மாணாக்கரும்,

உபய பாஷா வேதந்த பிரவர்த்தகாச்சாரியரும்,

மண்டலேசுவரரும், பர சமய கோளரியாரும்,

சத சாத்திர கர்த்தரும் (நூறு நூல் இயற்றியவரும்)

திரி பாஷா பண்டித மணியும், சதுர் வித சக்த சாகரரும்,

பிரசங்க பானுவும், திருப்பூவண மட ஸ்தாபகரும் ஆகிய

நவ வித நிதியினைப் பொருந்திய,

ஸ்ரீ காசிகானந்த ஞானாச்சாரிய சுவாமிகளவர்கள்

பலர் விருப்பாடு கொள்ள இயற்றிய,

சந்தோஷதாயினி உரையும்,

இவை,

மதுரை, அரிமய திவாகரம் பிரசிலும்,

V. சுப்புராயலு நாயு பிரசிலும், அச்சிடப்பட்டன.

காபி ரைட்] 1967. [விலை ரூபாய் ஐந்து.

உ சிவமயம்

பரப் பிரஹ்மணே நம.

# நூன் முகம்.

அகில உலகத்திலும், 1. ஊர்வன, 2. நீர் வாழ்வன, 3. பறப்பன, 4. நாற் கால் மிருகங்கள், 5. தாவரங்கள், 6 தேவர்கள், 7 மநிதர்கள் ஆகிய எழு வகைத் தோற்றங்களில், ஆறறிவுடைமையின் மநிதர்களே உயர்வுடையவர்கள், ஏனைய அறு வகையும் அருந்தல் பொருந்தலில் மூழ்கித் திருப்தி அடைகின்றன. மநிதன் ஒருவனே இன்ப அடைவு, துன்ப ஒழிவுக்கு விரும்புகின்றனன். அதனால், மநித ஜந்மமே மோக்ஷம் அடைவதற்குச் சாதநம் ஆகின்றது,

"அம்புவி மாந்தர்க் கெல்லாம் ஆளோ சிறித தற்குள்,
வெம்பிணி யிளமை மூப்பு விழி ல் சோம்பல் காதல்,
கம்பலை நீக்கி நன்ருக் கற்பதெங் ங்கற் ருலும்,
தம்புலன் சிறிது ஞாந சாகரம் தன் றுன்னி."

என்று கூறுகிறபடியால், சார ம ஆத்ம ஸ்வருபத்தினை யாவரும் அடைய வேண்டு என்னும் கருத்தால், கன்னட தேசத்து நிஜ குண யோ வரர் என்னும் மகான் கன்னட பாஷையில் வசந ரூபம் க விவேக சிந்தாமணி என்னும் பெயர் வைத்துப் ப பரிச்சேதம் உடைய தாக ஒரு நூல் செய்தனர்.

அதனைக் காசி நீல கண்ட டிமிகள், நூறு வருஷத்துக்கு முன், தமிழில் வசநம் மொழி பெயர்த்தனர். அந்த விவேக சிந்தாமணியில் ள முதல் வேதாந்தப்

8-H



பரிச்சேதத்தினை, 182 கவியில், நல்லாற்றூர், தொர மங்கலம் சிவப் பிரகாச சுவாமிகள் ''வேதாந்த சூடாமணி' என்னும் பெயரால் செய்தனர்.

அது, வேதாந்த விஷயங்களைக் கரதலாமலகம் எனக் கூறுதலின், தென் ஞட்டு வேதாந்த ஆதீனம் ஆகிய கோவிலூர் மடாலயத்தில் பாடமாக நடக்கும் 16 நூல்களில், 9வது நூலாக அங்கீகரித்திருக்கின்றனர். இதில், இரண்டு வகை முதல் இருபத்தொன்பது வகைப் பதின் மூன்று பிரிவாக 133 தொகுதியில், 535 பதார்த்தங்கள் கூறப்பட்டிருக்கின்றது. இம் மாதிரித் தொகுப்பில், வேதாந்த பதார்த்த மஞ்ஜூஷா என்பதும் ஒன்ருகும்.

இந்த அருமை வாய்ந்த வேதாந்த சூடாமணி என்னும் நூலுக்கு, 1. பிறையாறு, அருணசல சுவாமிகள் ஓர் உரையும். 2 சென்னை குயப் பேட்டை, ஈசூர் சச்சிதாநந்த சுவாமிகள் ஓர் உரையும், 3. சென்னை, கோமளேசுவரன் பேட்டை, கோ. வடிவேல் செட்டியார், ஓர் உரையும், 4. சிதம்பரம், கோ, சித. மடம், ஸ்ரீ பொன்னம்பல சுவாமிகள் ஓர் உரையும், 5. திருவாரூர் மடப்புரம், தக்ஷிணமூர்த்தி மடம், (கோவிலூர் சித மாணவர் மதுரை) சிவாநந்த சுவாமிகள் ஓர் உரையும், 6 காளையார் கோவில், செல்லப்ப சுவாமிகள் ஓர் உரையும், 7, திருப்பூவணம், வேதாந்த மடாதிபதியாகிய நாம் சந்தோஷ தாயினி என்னும் ஓர் உரையும், 8, குடியாத்தம், தர்க்க வேதாந்த போதகாசிரியர் செங்கல்வராய முதலியார் ஓர் உரையும் செய்திருக்கின்ருர்கள்.

நாம் சப்த ரிஷி போன்று, ஏழாவது ஆக 1920 வருஷத்தில் உரை செய்தோம். பாட்டு மொழி பெயர்ப்புத்

தவறையும், கண்டித்திருக்கின்றோம் அவற்றை ஆங்காங்கு உற்று நோக்குவார்க்குப் புலன் ஆகும். சிலருக்குக் கவி ஆற்றல் உண்டு, சிலருக்கு எழுத் தாற்றல் உண்டு. சிலருக்கு சொல் லாற்றல் உண்டு சிலருக்கு பிரசங்க ஆற்றல் உண்டு. ஆக நால் வித ஆற்றலும் எல்லாருக்கும் அமையாது. சிலருக்குத் தான் அமையும்.

வசநத்திலும், கவியிலும், மொழி பெயர்ப்புத் தவறு. நூல் சம்பிரதாயத்துக்கு விரோதம் ஆக பல இருக்கின்றன. இந்த வேதாந்தப் பரிச்சேதத்தை சம்ஸ்கிருதத்திலும், மகாராஷ்ரத்திலும், மொழி பெயர்த்திருக்கின்றார்கள்.

நம்மிடம் கந்நட விவேக சிந்தாமணி, சம்ஸ்கிருதமொழி பெயர்ப்பு வேதாந்த பரிச்சேதம் தமிழ் வசந மொழி பெயர்ப்பு விவேக சிந்தாமணி, அருணசல சாமி உரை, சச்சிதாநந்த சாமி உரை, வடி வேல் செட்டியார் உரை, பொன்னம்பல சுவாமிகள், மறை பொருள் விளக்க உரை, சிவாநந்த சுவாமிகள், ஆந்தரார்த்த போதிநி உரை. காளையார் கோவில், செல்லப்ப சுவாமிகள் உரை ஆக ஏழு உரைகளும் (நம்மிடம்) இருக்கின்றன.

இந்த எட்டு உரைகளையும் ஒப்பிட்டு நோக்குவார்க்கு உரையின் அருமையும், உட் கருத்தும், புலப்படும்,

நாம் அவதாரிகை; பதப் பொருள், தாத்பரியம், விசேஷம் என்னும் நான்கும் எழுதி, பதார்த்தக்கிரமம் செய்யுட் கிரம விஷய அட்டவணையும் எழுதியிருக்கின்றோம்.

பலர் பிறஉரைகளைத் திருடுவார்கள், நமது உரையில் அவ்வாருக ஒன்றும் இல்லை. அவர்கள் எல்லாரும் ஒரு

பாஷை இரு பாஷைப் பண்டிதர்கள். 1. நாம் முப்பாஷை பண்டிதர். 2 நூறு நூல் கர்த்தர், 3. சதுர் வித ஆற்றல் உடையவர் 4. பிரசங்க பாநு, 5 ஜயக் கொடி நாட்டியவர் 6. பரசமய கோளரியார், 7. மண்டலேசுவரர், 8. உபய பாஷா வேதாந்த பிரவர்த்தகர், 9. காசி வாசி, 10. உரை ஆசிரியர், 11. மொழி பெயர்ப்பு ஆசிரியர். 12, நூல் ஆசிரியர் என்னும் பன்னிரண்டு வகை யான ஆற்றல் குரு கிருபையினால் பெற்றிருக்கின்றோம்.

நமது உரை நூல் 18யும், படித்தவருக்குத் தான் உரையின் அருமை தெரியும். ஹிந்தி மொழி பெயர்ப்பும், சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பும் ஒப்பிட்டு நோக்குவார்க்குப் புலன் ஆம். தமிழ் வசன நூலும், தமிழ்க் கவி நூலும், ஆழ்ந்து நோக்குவார்க்கு ஆநந்தம் உண்டாம்.

நமது தன்மைகளை, திருக் களர் ஆண்டவர் செய்யுட் புராணத்தில். மாணவப் படலத்தில், வேத மொழி பெயர்ப்பு காசி வாசி, சிவாநந்த சுவாமிகள் 80 வது கவி முதல் 103 வது கவி வரை 24 கவியில் சிறப்பித்துக் கூறியிருக்கின்றார்கள் ஆண்டு உணரலாம்.

அவை வருமாறு:— (திருக்களர் ஆண்டவர் புராணம்.)

பொன்னி ரத்தின வணிகர்கள் பொங்கிடு நாட்டுள்,
தென்ன னுற்றிடுந் திருவால வாயெனச் செழித்த,
கன்னி யென்றிடுந் தேவியின் கோட்டையிற் கலைதேர்,
மன்ன னுக்குநல் மகுடமுஞ் சூட்டிடு மரபாம். (80)

இரத்தி னங்களை வாணிபஞ் செய்திடு மியல்பார்.
வரம ளித்திடுங் கோவிலை வாழ்வது வளரங்,

குரமெ னக்கொளுங் கோத்திரக் கொள்கையிற் குலவு,
தரமி குத்திடும் வணிகராந் தனிக்குல மரபில், (81)

எழின்மி குத்திடு முறைமையின்பா லிரமிக்குமி ராமன்,
பழைய நல்வினைப் பயனெலாம் பக்குவ மாகி,
அழிவ தற்றிடு மழற்பொறி யதுதிரண் டிடல்போல்,
ஒழிபு பற்றியிங் கொருமக வாகவே யுதித்த. (82)

அம்ம கவ்வது மவிர்மதி யழகினில் வளர்ந்து,
செம்மை யுற்றிடு மிளமையைச் செறிந்திடு போது,
அம்மை பாகனி னருளினு லரியநற் றலமாம்,
இம்மை முத்தியீந் திடுமெழிற் காசியை யேய்ந்து. (83)

வடமொ ழிக்கொரு வல்லுநக் கவிஞனுய் வருதல்,
திடமெ னத்தெரிந் திடும்வகை தெள்ளிதி னோர்ந்தே,
இடர கற்றிடுந் தந்தையு மினியதா யவளும்,
சுடர்வி ரித்திடுங் காசியாம் பெயரதுஞ் சூட்டி. (84)

தண்ட மிழ்க்கல்வி கற்பித்துத் தங்குல வழக்காம்,
பண்டை நன்முறை வாணிபம் பயில்வித்துப் பரிவால்,
கண்ட வர்க்குளக் களிப்பெழுங் கவின்பெற வளர்க்க,
மண்டு மவ்வினை ஞனும்மதி மலிந்திட மகிழ்ந்தே. (85)

வாணி பத்துறை மருவியே மாண்பொரு ளீட்டிப்,
பேணி யக்குடும் பத்தையும் பெருக்கிடு நாளில்,
வேணி யம்புலி விண்நதி விளங்கிடும் விமலன்,
பூணி யற்கையிற் பொலிந்திடும் பொன்னரு ளதனுல். (86)

காளை யாம்பரு வத்தினிற் கசந்துபூ வாளி,
வேளை நீத்துமே வெம்பவக் கடலதைக் கடக்கு,

நாளை யோர்ந்துநற் குரவனை நாடியே யரனின்,
தாளை யேகதி யெனக்கொண்டு தரைவழி நடந்தே. (87)

பொங்குங் கோவிலூர்ப் புண்ணியப் பயனெலா மொன்
தங்கு மாண்புள தகைமைசால் தண்ணளி யாலே, [ருய்த்,
எங்கு மோங்கிடு மெழிலுறு மடாலய மதனில்,
திங்கள் போன்றுளிர் தேசிகச் செம்மலைக் கண்டான். (88

கண்டு காயமு மாவியுங் கநகமுங் கருத்தால்,
பண்டு நின்னது பரித்தரு ளென்றுமே பணிந்து,
மண்டுந் தண்ணருள் பெற்றவன் மருங்கினி லிருந்தே,
தொண்டு செய்தவண் சொல்லிடும் பாடங்கள் கேட்டே.(89

மறைமு டிப்பொருள் தமிழதில் மன்னினு மதியில்,
உறைத லங்குள வடமொழி யுணர்விலு லுய்க்கில்;
நிறையு நம்மதி நீண்டகா லத்தவா ரியத்தும்,
குறைவ தற்றிடப் புதமெனக் கொண்டுதன் மநத்தில். (90)

குருவின் றண்ணருள் பெற்றுமே கூறிய பெயரும்,
மருவு மவ்வணங் காசியா மாநகர் மருவி,
மரபுக் குற்றிடு மிலிங்கசந் நியாசத்தைப் பெற்று,
உரிய விந்துவாம் பாடையி லுணருமா ருசான். (91)

சொன்ன வாறியல் தருக்கமுஞ் சுருதியின் முடியும்,
பன்னு யோகமீ மாஞ்சைபல் வடமொழிக் கல்வி,
மன்னு சீருடன் கற்றுமே மதிமிக மலிந்து,
தன்ன தாகிய தேசிகன் றுளதைச் சார்ந்து. (92)

மற்றும் பற்பல மதங்களின் மாண்பையு முணர்ந்து,
உற்ற நற்றமி ழாரிய முணர்த்துபோ தகனும்,

சொற்ற தன்குரு மடமதிற் றுலங்கிடு நாளில்,
குற்ற முற்றிடு சைவர்கள் கூட்டத்தி லொருவன். (93)

மறைமு டிக்குமா ருகிய பசுபதி மதத்தர்,
கறையு றும்படி யருந்தவன் கழறிய சூளால்,
நிறையு நான்மறை முடிவதி னிகழுமத் துவிதம்,
முறைய தன்றதை மூலமாக் கொண்டிடு மரபும். (94)

துறைய கன்றது துலங்குறு கோவிலூர் மடமும்,
பொறைய தற்றது புண்ணிய மற்றவம் மடத்தில்,
உறையு முண்டித ருறுவது மொப்பிலா நரகு,
இறையு மிம்மத மியைந்தில தெழிலுறு மளவை. (95)

மற்றும் பற்பல வாறுதன் மனஞ்சென்ற வாறே,
கற்ற நற்பசு கதறியே திரிவது கடுப்ப,
முற்று மெங்ஙனும் பழித்துமே மோகஞ்சேர் நாளில்
பற்று சங்கரன் வீரனின் பாதநல் லருளால்; (96)

பழிப்ப கற்றிட நான்மறை முடிவதின் பயன்சார்,
பழிப்ப துற்றிடப் பாசுப தம்மெனும் பழிநூல்,
பழிப்ப யத்தினிற் சைவர்கள் பயந்துமே யோடப்,
பழிப்பெ டுத்திடப் பகரும்போ ராட்டத்தைச் செய்தான்.

வேறு.

பித்தமிகுஞ் சைவர்காள் பேசக் கேண்மின்
பெருமறையின் முடிவதுவும் பெரியோ ரான
சுத்தசிவ சைவர்களுந் தொழுது போற்றுஞ்
சுருதிநெறி மிருதிவழி தொடர்ந்து மீறில்,

பெற்றுப் பதியை யடையும் நிலையும் என அவைகள் அடையும் நிலைகள் மூன் றென்றும், பாசத்தோ டுற்றுத் துன்பத்துள் மூழ்குதல் அவைகட்கு தடத்த விலக்கண மென்றும், பதி யோடுற்று இன்பத்துள் முழ்குதல் சொரூப விலக்கண மென்றும், அவை பாசத்தின் நீங்கிப் பதியினை யடைதல், அப் பதியே குரு வாக வந்து ஞானத்தை யருளும் பேற தெனவும், பதியை யன்றிப் பசுக்கட்கு வேறு ஆதாரம் எக் காலத்தும் இல்லை யெனவும், ஆதலால், பசுக்கள் என்றும் பதிக்குத் தொழும்பு பூண்டு நிற்றல் வேண்டும் என்றும், இவ் வாறு பசுக்களின் அடிமைத் திறத்தினையும், பதியினது முழு முதற் றிறத்தினையும், உணர்ந்து அவ் வடிமைத் திறத்தின் நிற்றலே, தம்மையும், தலைவனையும், உணர்த லாகு மெனவும், மற்றும் அத்துவிதம் என்னுஞ் சொல். பதியும் பசுவு மாய் விரு பொருளும் தனித் தனியே ஒற்றுமைப்பட்டு ஒன் றாய் நிற்றற்குக் காரண மாகிய வேற்றுமை யின்றிய தன்மையை யுணர்த்து மெனவும், ஏகமேவாத்விதீயம் பிரஹ்மம். என்னுஞ் சொற் றொடர்க்கு, ஒன் றாகிய பெரும் பொருள் உயிர்களின் வேற்றுமை யின்றி நிற்றலே பொரு ளெனவும், தத்துவமசி யென்னும் மாவாக்கியத்துள், தத் என்னுஞ் சொல். ஒன் றாய் வே றாய் உட னாய் நிற்கும் முதல்வனையும். துவம், என்னுஞ் சொல் உலகப் பற்று நீங்குமிடத்து, நானே முதல்வன் என முனைந்து வரும் உயிரையும் சுட்டுகின்ற முறைமையால் அவை பொருட் டன்மையால், இரண் டாதலை யுணர்த்து மெனவும், அசி யென்னுஞ் சொல், உயிரும், முதற் பொருளும் கலப்பினால் வேற்றுமையின்றி நிற்றலை

யுணர்த்து மெனவும், இதுவே சுத்தாத்வைத மெனவும். பிரஸ்தாநத் திரயக் கேவலாத்வைதத்திற்கு மாருகச் சைவருள் ஒரு சாரார் கூறுவர். இக் கூற்று முன்னர்க் கூறியவற்ருலும், இனிக் கூறப்படு மவற்ருலும், மறுக்கப் படு மாறுங் கண்டு கொள்க

இனிப் பாரமார்த்திகம், வியாவகாரிகம், பிராதிபாசிகம், துச்சம், என்ப்படும் பொருள்கள் நான்கனுள், பிரஹ்மம் பாரமார்த்திகப் பொரு ளென்றும், உலகமும், மாயையும் வியாவகாரிகப் பொரு ளென்றும், கயிற் றரவு முதலியன பிராதிபாசிகப் பொரு ளென்றும், முயற் கோடு முதலியன துச்சப் பொரு ளென்றும், இவற்றுள், பிரஹ்மமே நித்தியப் பொரு ளென்றும், மற்றவை அநித்தியப் பொரு ளென்றும், உணரும் பான்மையன வாம்-உலகமும், அதன் பரிணாமி யுபாதான காரணமாகிய மாயையும், பரமார்த்த மாக நோக்குமிடத்து அசத் தாம் இவற்றிற்கு வேருக வுள்ள பிரஹ்மம் சத் தாம். அதனிடத்துச் சப்சார துக்கம், நீரின்கண் எவ்வாற்ருலும் புழுதி யில்லாமை போல இல்லை யாம். இவ் வனுபூதி ஞானசாரியன் உபதேச வாயிலாகச் சமாதியின் நிலைபெற்றுப் பிரஹ்ம மாக விளங்கும் பிரம்ம ஞானிகட்கு அங்கை நெல்லிக் கனி போல நித்திய அபரோட்ச மாகும் பழுதையில் அத்தியாசமாகத் தோற்றும், பாம்பு பழுதையை நோக்க அசத்தா யிருப்பினும், அது அப் பாம்பின் தோற்றத்திற்குக் காரண மா மாறு போல, பிரஹ்மத்திற் கற்பித மாய்த் தோற்றும் பிரபஞ்சம், அதனை நோக்க அசத்தா யிருப்பினும், அது பிரபஞ்சத் தோற்றத்திற்குக் காரண மா மாறு காண லாம். கண்ணடியிற் றேன்றும் ஒரு பொருளின் பிரதிபிம்பம்,

கண்ணுடியு மாகாது, அப் பொருளு மாகாது, அப் பொருளுக்கு வேறு மாகா திருத்தல் போல, மாயையின்கண்ணுள்ள பிரஹ்மப் பிரதிபிம்பம், மாயையு மாகாது, பிரஹ்மமு மாகாது, பிரஹ்மத்திற்கு வேறு மாகா திருக்கின்றது. கண்ணுடி நீங்கிய போது, அதி லுள்ள பொருளின் பிரதிபிம்பம் அப் பொருளாவ தன்றிப் பிறி தொன்ருகாத வாறு போல, மாயை நீங்கிய போது, அதன்கண் ணுள்ள பிரஹ்மப் பிரதிபிம்பம் பிரஹ்மமாவ தன்றிப் பிறி தொன்ருகாமைச் செவ்வே யுணருந் தன்மைத் தாம் இங்ஙனம், கூறிய வாற்ருல் பிரஹ்மம் சத் வடிவ மென்றும், பிரபஞ்சம் அசத் வடிவ மென்றும். இவற்றை யறியும் ஆன்மா சதசத் விலக்ஷண வடிவ மென்றும் உணர லாம். உபநிடதக் கருத் திங்ஙன மிருக்க, "ஆன்மா சத்தை யறிவதால் சத்தாயும், அசத்தை யறிவதா லசத்தாயும் இருத்தலால், அது சதசத் வடிவ மெனக் கூறும் மேற் காட்டிய சைவருள் ஒரு சாரார் கூற்றுப் பொருந்து மாறு எங்ஙன்? பொருந்தா தென்க. என் னெனின்:- ஒருவன் நீரை, யறிவதால் நீராயும், நெருப்பை அறிவதால் நெருப்பாயு முளன் என்பது போன்று, ஒன் ருெற் கொன்று மாறுபட்ட இரண்டு தருமங்கள் ஒரு தருமியில் இருக்கின்றன வென்று கூறும் வியாகாத தோட முடைமையின் எனக் காண்க இக் கருத்தை, "ஆபாசனும் ஜடாஜட விலக்ஷணமா யிருப்பதால் அநிர்வசனீயமா யிருக்கின்ருன்" "ஆபாசனுக்கே பந்தம்; கேவல சைதன்யமோ முக்தம்; ஆகையால், பந்த முத்திகள் ஓரதிகரணத்தில் இல்லை யாம்" எனச் சித்தாந்த பிந்து வலியுறுத்துவது காண்க.

இனிப், பிரம்மம் ரஜோ தமோ குணங்கள் நிரம்பி யுள்ள ஊனக் கண் ணுகிய அசுத்த மனதிற்கு விஷய மாக

மல், சத்துவ குணம் நிரம்பியுள்ள ஞானக் கண்ணாகிய சுத்த மனதிற்கு விஷய மாகு மென்பது கருதற்பாலது. எனவே, மகா வாக்கியத்தின் சக்தி விருத்திக்கு விஷயமாகாது, இலக்ஷணு விருத்திக்கு விஷய மாகு மென்பது பெற்ரும். பிரம்மத்தை யறிதற்குத் தத்துவமசி மகாவாக்கிய வுபதேசம் அசாதாரண காரண மாயும், ஞானக் கண்ணெனுஞ் சுத்தமனம் சககாரி காரண மாகவு முள்ளன. மனம் கரண மென்றும், உபதேசம் சக காரி யென்றும் உரைப்பாரும் உளர். இக் கருத்தை:- "வாக்கியந் தனக்கெட் டாதுவத்து வென் றுரைத்த வேதம், வாக்கிய விருத்தி யாலவ் வத்துவைக் காட்டிற் றன்ரே"(2—8) என வருங் கைவல்ய நவநீதமும், "ஊனகண் பாச முணராப் பதியை, ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி" என வருஞ் சிவ ஞான போதத் தொன்பதாஞ் சூத்திரக் கூறும் வலியுறுத்துவன வாம், மகா காயமும், கடாகாயமும், தம்முள் வேருகா வென்றறிவது போல், பிரம்மமும் பிரத்யகாத்மாவுந் தம் முள் வேருகா வென்று விட்டு விடாத லக்ஷணை வாயிலாக அறிதலே ஈண்டு பிரம்மம் இலக்ஷணு விருத்திக்கு விஷய மாதும் என்பதன் கருத் தாகும். இவ் வபேதம் அனுமானப் பிரமாண வடிவ யுக்தியினுலும் புலனுகும். அனுமானம் வருமாறு — சீவன் பிரம்மாபின்னன், சச்சிதானந்த வடிவமா யிருத்தலின்; எவன் சச்சிதானந்த வடிவன், அவன் பிரம்மாபின்னன், ஈசுவரன் போல்; எவன் பிரம்மாபின்னன் அல்லன், அவன் சச்சிதானந்த வடிவனு மல்லன், குடம் போல என்பதாம். இது அந்நுவய வெதிரேகி யனுமான மாம். இக் கருத்தை:– ஆன்மாவிற்குப் பின்ன மாய்ப் பிரம்மம் இருக்குமேல் அஃது அனுத்மா வாம். அனுத்ம கடாதிகள் ஜடமா

யிருக்கின்றன; அதனுல், ஆத்மாவிற்கு வேருன பிரஹ்மமும் ஜடமே யாகும். ஆதலால், பிரம்மம் ஆத்மா விற்கு வே றன்று, பிரம்ம சொரூபமே ஆத்மாவாம்" என விசார சாகரம் கூறுவது காண லாம். மித்தை யாகிய கானல் நீருக்குக் கானல் அதிஷ்டானமா யிருத்தல் போல, மித்தை யாகிய ஜீவேசுவர ஜகங்கட்கு பிரம்மம் அதிஷ் டானமா யுள்ளது. கானலை யறிந்த விடத்து நீர் மித்தை யாகத் தோன்றுவது போலப், பிரம்மத்தை யறிந்த விடத்து ஜீவேசுவர ஜகம் மித்தை யாகத் தோன்றுவன வாம். ஆயி னும், பிரம்மத்தைத் தவிர இவற்றிற்கு ஆதாரம் வே றில்லை. பாத சமானுதிகரண்ய சம்பந்த வாயி லாக ஆரோப மனைத் தும் அதிட்டான வடிவமே யாகலின். இக் கருத்தை:- "ஆதலாற் பிரம்மம் மொன்றே நித்திய மலகைத் தேரின் பேதுறத் தோன்று நீரிற் பிரபஞ்சம் மருண்டு தோன்றும், தீதுறு மனத்தர் தீய பிரபஞ்சம் பிரம்மம்வே றென்று, ஓதுவர் ஒக்கநோக்கும் யோகியர் ஒன்ருய்க் காண்பர்," என வரும் கூர்ம புராணம் விளக்குவது காண்க தவத் திரு இராம லிங்க அடிகளாரும், "பரமேது வினைசெயும் பயனேது பதியேது பசுவேது பாசமேது" எனக் கூறும் சொற்றொடரால், பதி பசு பாசங்கட்கு அதிட்டானம் பரமே என உடம்படு புணர்த்தல் என்னும் உத்தியாற் குறிப்பித்து அதனையே முதற்கண் வைத் தோதியதுங் கண்டு கொள்க.

மற்றும், "சர்வோபாதிகளின்றும் விடுபட்டதும், நிர்விசேஷ சின் மாத்திரமும், சத்தும் அத்வைதமும். ஆனந்தமு மாகிய, மாயை இன்றிய வஸ்து பிரம்மம், அதுவே உபாதியிரு லாகிய, தத் பத வாச்சியத்

தினும். த்வம் பதவாச்சியத்தினும் வேறுகிய அபேதமும், அதிட்டானத்தினுல் உபலக்ஷிக்கப் பட்டதும், சுத்தமும், பாரமார்த்திகமும், அவிநாசியுமாம்'' எனச் சர்வ சாரோபநிடதமும், ''புருஷன் எதனுல் இதனைக் காண்கின்றுனே, கேட்கின்றுனே, முகருகின்றுனே, உருசி, உருசி யின்மைகளை யறிகின்றுனே, அது பிரக்ஞானம் எனப்படும். சதுர்முகேந்திர தேவர்களினும், மனிதர், பசு, குதிரை முதலியவற்றிலு முள்ள சைதந்யம் ஒன்றே பிரம்மம், ஆதலால், என்னிடத் துள்ள பிரக்ஞானம் பிரம் மாம். பரிபூரண பரமாத்மா இந்த உடம்பில் புத்தியின் சாக்ஷித் தன்மை யாக விருந்து விளங்குவதாய் அக மென்று சொல்லப்படுகின்றது. பரிபூரண பரமாத்மா வாகிய அதுவே, இங்குப் பிரம்ம சப்தத்தால் வர்ணிக்கப் பட்டுள்ளது. அஸ்மி என்பது ஐக்கிய ஆராய்ச்சி யாம். அதனுல், யான் பிரம்ம மாகின்றேன் ஒரே அத்விதீய நாம ரூப மின்றிய வஸ்துவே சிருட்டிக்கு முன் னிருந்தது. இப் பொழுதும் அதற்கு அத் தன்மை யிருத்தலால், ''தத்'' எனப்படுகின்றது. கேட்பவனது தேகேந்திரிய அதீத வஸ்து இங்குத் துவம் பதத்தாற் சொல்லப்படுவதாம். அஸி என்பதனுல், ஐக்கியம் கிரகிக்கப்படுகின்றது. அவ் வைக்கியம் அனுபவிக்கப்படுக. சுயம்பிரகாச அபரோட்சத்துவம் அயம் என்னும் பதத்தத்தாற் கொள்ளப்படுகின்றது. அகங்கார முதல் தேக பரியந்த முள்ள பிரத்யக்கு ஆத்மா வென்று சொல்லப்படுகின்றது காணப்படுகின்ற சகல ஜகத்தின் தத்துவம் பிரஹ்ம சப்த்தத்தாற் சொல்லப்படுகின்றது. அந்தப் பிரம்மம் சுயம்பிரகாச ஆத்ம வடிவ மாம். அநாத்ம திருஷ்டியினுல் அவிவேக நித்திரையினையும், யா னென தென்னுஞ் சொப்பன கதியினையும், அடைந்திருந்த யான்

சற்குருவின் வெளிப்படையாக வுள்ள வாக்குக ளாகிய மகா வாக்கிய சுவரூப சூரியன் உதிக்கவே விழித்தேன். வாச்சிய இலக்ஷிய மென்னு வாக்கியத்திற்கு இருவகைப் பாகுபா டுண்டு. துவம் பதத்தில் வாச்சியம் பௌதிகமும், இந்திரியாதிகளு மாம். இலக்ஷியம் நீ யென்னும் சொற் பொரு ளாம். தத் பத வாச்சியம் புத்தியா லாகிய ஈசத் தன்மை, இலக்ஷியம் சச்சிதானந்த பிரம்மப் பொரு ளாம். அஸி யென்னும் பதம் அவ் விரண்டும் ஒன் றென்பதனை யறிவிக்கின்றது. துவம் என்றும், தத் என்றும், காரிய காரணங்களா லாகிய உபாதி யுள்ள போது இரண் டாம். அவை இல்லாத போது ஒரே சச்சிதானந்த வடிவ மாம். இரண்டு வசனங்கட்குங் காரண மான தேச காலங் களை விடின் உலகத்தில் அவனே இத் தேவ தத்தன் என்று எப்படி ஒருவனே யாகின்றானோ, அப்படியே காரிய உபா தியை யுடையவன் இந்தச் சீவன், காரண வுபாதியை யுடையவன் ஈசன், காரிய காரணத் தன்மைகளை விடின், பூரண போதம் மிஞ்சுகின்றது'' எனவும் வரும் சுக ரகஸ்யோபநிடதமும் விளக்குவதுவும் காண்க.

இது காறுங் கூறியவாற்றால் போந்த பொருள் வரு மாறு:- சுரோத்திரியப் பிரம்ம நிஷ்ட ராகிய ஞானாசாரி யர், நான்கு சாதனங்களும் அவதிபரியந்தம் கைவரப் பெற்ற முமுட்சுவிற்கு, ஜீவப் பிரம்மங்களின் அபேதத் தைப் போதிக்க வேண்டு மெனத் திரு வுளங் கொண்டு, சாம வேத சாந்தோக்கிய வுபநிடதத்தின்கண் ணுள்ள 'தத்துவமசி'' என்னும் மாவாக்கியத்தை யுபதேசித்தார் - ஈண்டு மாயா விசிட்ட சைதன்ய மாகிய ஈசுவரன், தத் பதத் தின் வாச்சியார்த்தமும், அவித்தையா விசிட்ட ஜீவன்

துவம் பதத்தின் வாச்த்யார்த்தமும் ஆகும். இங்ஙனம் ஒன்றற் கொன்று விரோத தர்மங்களோடு கூடிய ஜீவேசு வரர்கட்கு ஐக்கியம் பொருந்தாமையால், விட்டு விடாத லக்ஷணை வாயி லாக ஐக்கியங் கூற வேண்டுவ தாயிற்று. ஈண்டு விட்டலக்ஷணை கொள்ளின், வாச்சியார்த்தம் முழு வதும் விடப்படுகின்றமையாலும், விடாத லக்ஷணை கொள்ளின், வாச்சியார்த்தத்தோடு அதிக அர்த்தமுங் கொள்ளப்படுகின்றமையாலும், மாவாக்கியத்தில் இவ் விரு லக்ஷணைகளும் பொருந்தா வாம். ஆகையால் தத் துவம் பதங்களின் வாச்சியார்த்த ஏக தேச பாகங்க ளாகிய மாயை அவித்தைகளை விட்டு, எஞ்சிய ஈசுவர சாட்சி ஜீவ சாட்சிகட்கு, விட்டு விடாத இலக்கணையால், முக்கிய சமா னாதிகரண்ய சம்பந்த வாயி லாக ஐக்கியம் பொருந்து மா றுகாண லாம். எனவே தத்துவமசி மகாவாக்கியத்திற்கு அகண்ட சைதன்யமே இலட்சியார்த்த மாம்.

இனி, இருக்கு வேத ஐதரேயே உபநிடத்தின்கண் "பிரக்ஞானம்" பிரம்மம் என்னும் மாவாக்கியமும், எசுர் வேத பிருகுதாரண்ய வுபநிடதத்தின்கண், "அகம் பிரஹ் மாஸ்மி" என்னும் மாவாக்கியமும், அதர்வண வேத மாண்டூக்கிய வுபநிடத்தின்கண், "அயமாத்மா பிரம்மம்" என்னும் மாவாக்கியமும் கூறப்பெற் றுள்ளன. இவை களும் விட்டு விடாத இலக்கணையினாற் றான் அகண்ட சைதன்யத்தைப் போதிக்கின்றன அவை விரிக்கிற் பெருகும். ஈண்டுக் கூறிய கேவலாத்வைதக் கொள்கை களைப் பிரஸ்தாநத் திரய மாகிய, பிரம சூத்திரம் கீதை, உபநிடதங்களும், அவற்றிற்குத் தீர்க்க தரிசி யாகிய ஸ்ரீமத் சங்கர பகவத் பாதாசாரிய சுவாமி களாற் செய்யப்பெற்ற

பாஷ்யாதி வியாக்கியானங்களும் செவ்வனே விளக்குவன வாம். அத் தகைய விரிந்த பாற் கடலை யொத்த, பிரஸ்த் தானத் திரய பாஷ்யாதி வியாக்கியானங்களைக் கேட் டறிய ஆற்ற லற்ற அதிகாரிகளின் பொருட்டு, அவற்றை யெல் லாந் திரட்டி, ஸ்ரீ நிஜ குண யோகி யெனப் பெயரிய பிரம்ம நிஷ்ட பண்டிதர், கன்னட மொழியில் விவேக சிந்தாமணி யென்னும் சாத்திரத்தில், ஒரு பகுதி யாக வேதாந்த பரிச் சேத மென நாம மிட்டுக் கூறியருளினர். அதனைக் காசி வாசி யாகிய, ஸ்ரீமத் நீல கண்ட சுவாமிகள், தமிழ் மொழி யில் வசன வடிவ மாக மொழி பெயர்த்தனர். இதனையே, தஞ்சை மாநகரம், ஸ்ரீமத் வெ. குப்புசுவாமி ராஜு அவர் கள் பரிசோதித்துத் திருத்தி 1906ல் மறு முறையும் வெளி யிட்டனர். இதன்கண் ஆசாரியர் துதி முத லாக, விதேக கைவல்யம் அடையும் கிரமம் ஈருக 136 விஷயங்கள் கூறப் பெற்றுள்ளன. இக் கன்னட மொழியி லுள்ள வேதாந்த பரிச் சேதத்தி லுள்ள, 14 வித்தைகள் முத லாக விதேக கைவல்யம் அடையும் கிரமம் ஈருக வுள்ள 100 விஷயங்கள், துறை மங்கலம் ஸ்ரீமத் சிவப்பிரகாச சுவாமி கள் அவர்களால் தமிழ் மொழியில் செய்யுள் வடிவ மாக மொழி பெயர்க்கப் பெற்றன. இந் நூற்குப் பிரசை. ஸ்ரீமத் அருணாசல சுவாமிகள் அவர்களும். சென்னை உயர் திரு. கோ வடி வேற் செட்டியாரவர்களும் உரையியற்றி வெளி யிட்டுள்ளார்கள். மேலும், திரு வாரூர் ஸ்ரீ தக்ஷிணா மூர்த்தி சுவாமிகள் மடாலய, ஸ்ரீமத் சிவாநந்த சுவாமிகள் அவர்களும், தருக்க வேதாந்த போதகாசிரியர், உயர் திரு ஆ. செங்கல்வ ராய முதலியரவர்களும். உரை யியற்றியுள் ளார்கள் அவை வெளிவர வில்லை. தற் போது திருக் களர் ஆண்டவர் என நல்லோராற் சிறப்பு நாமம் பெற்று, வழி படப் பெற்ற ஸ்ரீமத் வீர சேகர ஞாந தேசிக சுவாமி களின் மாணவரும், அசேஷ சாத்திர பாண்டித்திய முடை யவரும், மும் மொழிப் புலவரும், பரசமய கோளரியா ரென்னும் சிறப்பு நாமம் பெற்றவரும், மொழி பெயர்ப்பு வாயி லாகவும், உரை வாயி லாகவும், தோத்திர வாயி லாக

வும், நூற்றுக்கு மேற்பட்ட நூல்களை வெளியிட்டவரும், திருப் பூ வண மடாலயத் தலைவரும் ஆகிய, ஸ்ரீமத் வீர, காசிகாநந்த ஞாநாச்சாரிய சுவாமிகள் அவர்களால், இவ் வேதாந்த சூடாமணி யென்னுஞ் சாத்திரத்திற்குச், ''சந் தோஷ தாயினி' என்னும் பே ருரை யொன்று வெளிவரு கின்றது. சுவாமிகள் உரையியற்றும் வன்மையும் மிகப் படைத்துளார்கள் என்பதை, அவர்கள் முன்னர் இயற் றிய உரை நூல்களைக் கற்றூர் அனைவரும் நன்கு அறிவர். இவ் வுரையின்கண். காண்டிகையும், விருத்தியுங் கலந்த பே ருரையோடு, அவதாரிகை, பதார்த்தக் கிரம அட்ட வணை, செய்யுட் கிரம விஷய அட்டவணை. இவையுங் கலந்து மிளிர்கின்றன. முன் வெளி வந்த உரைகளி லுள்ள ஐயந் தரும் பகுதிக ளெல்லாம் இவ் வுரையில் ஐயம் நீங்கப் பெற்றுள்ளன. ஆங்காங்கு வேதாந்த பதார்த்த பரி பாஷைச் சொற்கள் விளக்கம் பெறுகின்றன கருத்துக் கள், கற்பாருக்குத் தெள்ளிதின் விளங்கும் வண்ணம் எளிய நடையிலும் விளங்குகின்றன. சுருங்கக் கூறின், இவ் வுரையைக் குறிக்கொண்டு கற்கும் அதிகாரிகள், பல வேதாந்த சாத்திரப் பொருள்களையும், எளிதிற் புரிந்து கொள்ளும் புலமை யுடையோ ராவர் என்பதில் ஐயம் இல்லை. இத் தகைய அரும் பெரும் உரையைக் கைமாறு கருதாது ஆக்கி நம் பொருட் டுதவிய சுவாமிகள் அவர்கள் திடகாத்திரத்தோடு நீடூழி வாழ்ந்து இன்னும் பல சாத்திர வுரைகளை உலக்குக் களிக்க வேண்டு மென எல்லாம் வல்ல இறைவனை இறைஞ்சுவோ மாக.

''தென்ற மிழ்க்கலை தெரிந்தவர் பொருந்திய தேவூர்,
அன்பன் சேவடி யடைந்தனம் அல்லலொன் றிலமே''

(திரு ஞான சம்பந்தர்)

சுபம்.

---

உ

சிவமயம்.

# பதார்த்தக் கிரமம்.

---

## (1) ஒரு பதார்த்தம்.

**ஈசுவர காரணம்**—1. அபிந்ந நிமித்த உபாதாந காரணம். 2. மாயா சக்தி. 3. மித்தையாத் தன்மை. 4. மஹத் தத்வம். 5. மூலாகங்காரம். 6. பஞ்சீகரணம். 7. அந்தக் கரணம் இருக்குும ஸ்தாநம், ஹிருதயம். 8. சுத்தி ரஜதம் போல அத்தியாச லக்ஷணம். 9. ஆத்மாவால் சம்சார கற்பனை. 10. சுழுத்தியில் ஆத்மாவின் இருப்பு. 11. அஹங்கார ஆத்ம கண்டநம். 12. தசம திருஷ்டாந்தம். 13. தத் த்வ மசி மஹா வாக்கியார்த்தம். 14. அஸி பத அர்த்தம். 15. தத் த்வ மசி மஹா வாக்கியார்த்த ஏகத்வம் ஸ்வபாவ சித்தம். 16. ஆத்மா நாநா விபுவில், சாங்கியாதி மதத்தில், போக வியவஸ்தை அநவஸ்தா தோஷ யுக்தி. 17. ஜீவத்வ நாசம். 18. விதேக கைவல்ய லக்ஷண ஸ்வரூபம். 19. விதேக கைவல்யப் பிராப்திக் கிரமம்.

## (2) இரு பதார்த்தம்.

**பதார்த்தம்**—1. திருக்-திருசியம். 2. அத்தியாரோப-அபவாதம். 3. சமஷ்டி-வியஷ்டி. 4. சங்கோச-விகாசம். 5. ஸ்வதந்தரத் தன்மை-அஸ்வதந்தரத் தன்மை. 6. சிருஷ்டி, கிரம சிருஷ்டி-யுகபத் சிருஷ்டி. 7. பிரபஞ்சம், சாஸ்திரப் பிரபஞ்சம்-அசாஸ்திரப் பிரபஞ்சம். 8. அசாஸ்திரப் பிரபஞ்சத்தில், தீவிரப் பிரபஞ்சம்-மந்தப் பிரபஞ்சம். 9. தத் த்வம்

பத வாச்சியார்த்தம்-லக்ஷ்யார்த்தம். 10. சிரவணம் அங்கி-மநந நிதித்தியாசநங்கள் அங்கம். 11. முக்தி, ஜீவந் முக்தி-விதேக முத்தி. 12. பிராந்தி, சோபாதிகப் பிராந்தி-நிருபாதிகப் பிராந்தி. 13. விராத்திரியர் சுரோத்திரியர் போல, ஞாநி-அஞ்ஞாநி. 14. சாபம்-அநுக்கிரகம். 15. தவம், சகாம தபம்-நிஷ்காம தபம்.

## (3) மூன்று பதார்த்தம்.

1. **மங்கலம்**, ஆசீர்வாத ரூப மங்கலம்-நமஸ்கார ரூப மங்கலம்-வஸ்து நிர்த்தேச ரூப மங்கலம். 2. **அதிகாரி**, கர்ம காண்டி-பக்தி காண்டி-ஞாந காண்டி. 3. **அதிகாரி**, விவேக கதி-விரக்தி கதி-தெய்வ கதி. 4. **உபதேசம்**, உத்தேச உபதேசம்-லக்ஷண உபதேசம் - பரிக்ஷா உபதேசம். 5. **பேதம்**, சஜாதீய பேதம்-விஜாதீய பேதம்-ஸ்வகத பேதம். 6. ஏகம்-ஏவ-அத்வைதம். 7. **லக்ஷணம்**—அத்தத் வியாவிருத்தி லக்ஷணம் - தடஸ்த லக்ஷணம் - ஸ்வரூப லக்ஷணம். 8. **சத்து**, வியாவகாரிக சத்து-பிராதிபாஸிக சத்து-பாரமார்த்திக சத்து. 9. **பரிச்சேதம்**, கால பரிச்சேதம் - தேச பரிச்சேதம் - வஸ்து பரிச்சேதம். 10. **ஜீவந்**, விச்வ ஜீவந்-தைஜச ஜீவந்-பிராஞ்ஞ ஜீவந். 11. **ஆத்மா**, ஜீவ ஆத்மா-பரம ஆத்மா-அந்தர்ஆத்மா. 12. **ஈசுவரன்**, விராட ஈசுவரன் - ஹிரண்யகர்ப்ப ஈசுவரன்-அந்தர்யாமி ஈசுவரன். 13. **ஈசுவரப் பிரபுத்வம்**, கருத்துருத்வம்-அகருத்துருத்வம்-அந்யதா கருத்துருத்வம். 14. **ஞாநம்**, சுருதி சம்பந்த ஞாநம்-யுக்தி சம்பந்த ஞாநம்-லோக சம்பந்த ஞாநம். 15. மாயை - அவித்தை - பிரகிருதி. 16. **குணம்**, சத்வம்-ரஜஸ்-தமஸ். 17. **அகங்காரம்**, வைகரி அஹங்காரம்-தைஜச அஹங்காரம் - பூத ஆதி அஹங்காரம். 18 **தாபம்**, ஆத்யாத்மீகம்-ஆதி பௌதிகம்-ஆதி தைவீகம் 19. **திரிபுடி**,

ஞாதுரு-ஞாந-ஞேயம். 20. **விஷயம்**, பிரிய விஷயம் - அப்பிரிய விஷயம் - உபேக்ஷா விஷயம். 21. **உபாதி**, அவச்சிந்ந உபாதி - பிரதிபிம்ப உபாதி - அத்தியாச உபாதி. 22. அகார-உகார - மகார அக்ஷரம். 23 பிரஹ்மா - விஷ்ணு - ருத்திரன். 24. நேத்திரம் - கண்டம் - ஹிருதயம். 25. **ஸ்தாநம்**, கமல அஷ்ட தள கதி - கர்ணிகா கதி - மத்ய கதி. 26. **சம்பந்தம்**, கர்மஜ தாதாத்மிய சம்பந்தம் - சஹஜ தாதாத்மிய சம்பந்தம்-பிராந்திஜ தாதாத்மிய சம்பந்தம். 27. **வேத வாக்கியம்**, விதி வாக்கியம் - நிஷேத வாக்கியம்- சித்த அர்த்த போதக வாக்கியம். 28. தத் பதம்-த்வம் பதம்-அஸி பதம். 29. **சம்பந்தம்**; சாமாநாதிகரண்ய பாவ சம்பந்தம் - விசேஷண விசேஷிய பாவ சம்பந்தம் - லக்ஷிய லக்ஷண பாவ சம்பந்தம். 30. பதம்-பதார்த்தம்-வாக்யார்த்தம். 31. **லக்ஷணை**, ஜகத் லக்ஷணை-அஜகத் லக்ஷணை - ஜகத் அஜகத் லக்ஷணை. 32. கங்காயாம் கோஷ: - குந்த: பிரவிசந்தி - ஸோயம் தேவதத்த: 33. அஞ்ஞாநம்-சந்தேகம்-விபரீதம் 34. சிரவண-மநந-நிதித்யாசநம். 35 யுக்தி-தர்க்கம்-அநுமாநம். 36. பிரதிபந்தம், பூதப் பிரதிபந்தம் - வர்த்தமாநப் பிரதிபந்தம் - ஆகாம்யப் பிரதிபந்தம். 37 ஞாநம்-வைராக்யம்-உபரதி. 38 ஞாநத்திற்கு, ஹேது-ஸ்வரூபம் - காரியம். 39. **வைராக்யத்திற்கு**, ஹேது - ஸ்வரூபம்-காரியம். 40. **உபரதிக்கு**, ஹேது-ஸ்வரூபம்-காரியம். 41 ஞாநத்தின் அவதி - வைராக்யத்தின் அவதி - உபரதியின் அவதி 42 பிராரப்தம், இச்சாப் பிராரப்தம் - அநிச்சாப் பிராரப்தம் - பரேச்சாப் பிராரப்தம்.

## (4) நான்கு பதார்த்தம்.

1. **அநுபந்த சதுஷ்டயம்**, விஷயம்-சம்பந்தம்-பிரயோஜநம்-அதிகாரி. 2. **சாதநம்**, நித்திய அநித்திய வஸ்து விவே

கம்-இஹ அமுத்தர அர்த்த பல போக விராகம்-சமாதி ஷட்க சம்பத்தி-முமுக்ஷுத்வம். 3. **சேவை,** ஆப்த சேவை-அங்க சேவை - ஸ்தாந சேவை - சத்பாவ சேவை. 4. **சேதநம்,** ஜீவந்-ஈசுவரன்-கூடஸ்தன்-பிரஹ்மம். 5. **அபாவம்,** பிராக் அபாவம் - பிரத்வம்ச அபாவம் - அந்நிய அந்நிய அபாவம்-அத்தியந்த அபாவம், 6. தௌத படம் - கட்டித படம்-லாஞ்சித படம்-ரஞ்சித படம். 7. சித்-அந்தர்யாமி-ஹிரண்ய கர்ப்பன் - விராட். 8. மநம் - புத்தி - சித்தம் - அஹங்காரம். 9. **அந்தக்கரணத்தின் கிரியை**—ஸ்மரண - நிச்சய - அபிமாந-சிந்தனே, 10. **அந்தக்கரணத்தின் அதிதேவதை** — சந்திரன்-பிரஹ்மா-விஷ்ணு-ருத்ரன். 11. **காரிய உத்பத்தி** — விருத்தி-பரிணமம்-ஆரம்பம்-விவர்த்தம். 12. **திருஷ்டாந்தம்,** பட கூடார நியாயம் - க்ஷீர ததி நியாயம் - தந்து பட நியாயம் - ரஜ்ஜு சர்ப்ப நியாயம். 13. **அத்தியாசம்,** மித்தியா அத்தியா சம் - இதர அத்தியாசம் - இதர இதர அத்தியாசம் - சத்திய அத்தியாசம். 14. **அத்தியாசம்,** நிருபாதிக அத்தியாசம் - சோபாதிக அத்தியாசம்-தத்தர்ம அத்தியாசம்-சம்பந்த அத்தி யாசம். 15. ஞாந பலம்—துக்க அபாவம்-சர்வ காம ஆப்தி-கிருத கிருத்தியத்வம் - பிராப்திப் பிராப்பியம். 16. **குணம்,** மைத்திரி-கருணை-முதிதை-உபேக்ஷை. **17. உபதேசம் பெறுவோர்,** சிஷ்யர் - பக்தர் - உதாசீநர் - பாபி. 18. **சம்ஸ்காரம்,** தீவிரப் பிராரப்த சம்ஸ்காரம் - மந்தப் பிராரப்த சம்ஸ்காரம்-மத்திய பிராரப்த சம்ஸ்காரம் - சுப்தப் பிராரப்த சம்ஸ்காரம்,

## (5) ஐந்து வகைப் பதார்த்தம்.

1. **வியாக்யாந பஞ்ச லக்ஷணம்,** பதம் - பதார்த்தம் - வாக்கிய யோசனை - வினு - விடை. 2. **அந்வய பஞ்ச லக்ஷணம்,** விசேஷணம் - விசேஷியம் - கர்த்தா - கர்மம் - கிரியை.

3. **அதிகாரி,** கர்மி-முமுக்ஷு-அப்யாசி-அநுபவி-ஆருடன். 4. சத்-சித்-ஆநந்தம்-நித்தியம்-பூரணம். 5. **ஈச்வர பஞ்ச கிருத்தியம்** — சிருஷ்டி-ஸ்திதி-சம்ஹாரம்-திரோபவம்-அநுக்கிரஹம். 6. **மாயையின் லக்ஷணம்** — அசத்-ஜடம்-துக்கம்-அநித்தம்-கண்டிதம். 7. **மாயையின் நாமம்** — தமம்-மாயை-மோஹம்-அவித்தை-மித்தியா ஸ்வரூபி. 8. **ஞாநேந்திரியம்,** சுரோத்திரம்-த்வக்-சக்ஷு-ஜிங்வை-கிராணம். 9. **கர்மேந்திரியம்,** வாக்-பாணி-பாதம்-பாயு-உபஸ்தம். 10. **வாயு,** வியாந வாயு-பிராண வாயு-அபாந வாயு-சமாந வாயு-உதாந வாயு. 11. **பூதம்** — ஆகாசம்-வாயு-அக்நி-அப்பு-பிருதிவி. 12. **ஞாந இந்திரியக் கிரியை**— சிரவண-பரிச-தெரிசந-சுவாது-கிரகணம், 13. **ஞாந இந்திரிய அதிதேவதை**—திக்-வாயு-சூரியன்-வருணன்-அச்விநி குமாரர். 14. **ஞாந இந்திரிய ஸ்தாநம்,** காது-சர்வாங்கம்-கண்-நா-மூக்கு. 15. **கர்ம இந்திரியக் கிரியை,** வசந-கமந-தாந-விசர்ஜந-ஆநந்தம். 16. **கர்ம இந்திரிய அதிதேவதை,** அக்நி-இந்திரன்-சூரியன்-மிருத்யு-பிரஜாபதி. 17. **கர்ம இந்திரிய ஸ்தாநம்,** வாய்-கால்-கை-பாயு-உபஸ்தம். 18. **வாயு ஸ்தாநம்,** ஹிருதயம்-குதம்-கண்டம்-உந்தி-சர்வ அங்கம். 19. **வாயு,** நாக வாயு-கூர்ம வாயு-கிருகல வாயு-தேவதத்த வாயு-தநஞ்செய வாயு. 20. **நாகாதி வாயுவின் கிரியை,** சோம்பல்-விக்கல்-தும்மல்-சிரித்தல்-சோகித்தல். 21. **வாயு,** வைரம்ப வாயு-முக்கிய வாயு-பிரபஞ்சந வாயு-அந்தர்யாமி வாயு-மஹாப் பிராண வாயு. 22. **பஞ்ச பூத வியாபாரம்,** பொறை-பிண்டீகரணம்-பாகம்-விரகம்-இடம் கொடை 23. **பஞ்ச பூத தர்மம்,** திண்மை-நெகிழ்வு-அழற்சி-பரிசம்-வெளி. 24. **பஞ்ச பூத அதிதேவதை,** அயன்-ஹரி-ஹரன்-ஈசன்-சதாசிவன். 25. **பஞ்ச பூத குணம்** — சப்த-ஸ்பரிச-ரூப-ரச-கந்தம் 26. **அவஸ்தை,** ஜாக்

கிர-ஸ்வப்ந-சுழுத்தி-துரியம்-துரியாதீதம் 27. **பஞ்ச கோசம்,** அந்நமய கோசம் - பிராணமய கோசம் - மநோமய கோசம்-விஞ்ஞாநமய கோசம்-ஆநந்தமய கோசம். 28. **நிதித்யாசந ரூபம்,** மந்திர யோகம் - ஸ்பரிச யோகம் - பாவ யோகம்-அபாவ யோகம்-மஹா யோகம். 29. **ஜீவந் முத்திப் பிரயோஜநம்,** ஞாந ரக்ஷை - தபம் - சகல ஜந சம்வாதம் - துக்க நிவிர்த்தி - சுக ஆவிர்ப்பாவம்.

## (6) ஆறு வகைப் பதார்த்தம்.

1. **மூன்றும் சாதநம்,** சமை-தமை-திதிக்ஷை-உபரதி-சிரத்தை-சமாதி. 2. **ஈசுவர குணம,** சர்வஞ்ஞத்வம்-சர்வேசுவரத்வம் - சர்வ நியந்திருத்வம் - சர்வாந்தர்யாமித்வம் - சர்வ கர்த்ருத்வம் – சர்வ சக்தித்வம். 3. **லிங்கம்,** உபக்கிரமம் - உபசம்ஹாரம்-அப்யாசம்-அபூர்வதை - பலம்-அர்த்த வாதம்-உபபத்தி. 4. **சமாதி,** பாஹ்ய திருசிய அநுவித்த் சவிகற்ப சமாதி - பாஹ்ய சப்த அநுவித்த சவிகற்ப சமாதி - பாஹ்ய நிருவிகற்ப சமாதி – ஆந்தர திருசிய அநுவித்த சவிகற்ப சமாதி – ஆந்தர சப்த அநுவித்த சவிகற்ப சமாதி – ஆந்தர நிருவிகற்ப சமாதி.

## (7) எழு வகைப் பதார்த்தம்.

1. **சப்த அவஸ்தை,** அஞ்ஞாநம் - ஆவரணம் - விக்ஷேபம் - பரோக்ஷ ஞாநம் - அபரோக்ஷ ஞாநம் - சோக நிவிர்த்தி-நிரங்குச திருப்தி. 2. **ஞாந சப்த பூமி,** சுபேச்சை-விசாரணை-தநுமாநசி - சத்வாபத்தி - அசம்சத்தி - பதார்த்த அபாவனை-துரியகாமி.

## (8) எண் வகைப் பதார்த்தம்.

1. குரு, நிஷித்த குரு – காமிய குரு – போதக குரு - வேதக குரு – சூசக குரு – வாசக குரு - காரக குரு - விஹித

குரு. 2. **பிரமாணம்,** பிரத்யக்ஷப் பிரமாணம் – அநுமாநப் பிரமாணம் – உபமாநப் பிரமாணம் – சப்தப் பிரமாணம் - அர்த்த ஆபத்திப் பிரமாணம் – அநுபலப்திப் பிரமாணம் - சம்பவப் பிரமாணம் – ஐதிஹ்யப் பிரமாணம். 3. **ஆநந்தம்,** விஷய ஆநந்தம் – பிரஹ்ம ஆநந்தம் – வாசநா ஆநந்தம் – முக்கிய ஆநந்தம்-நிஜ ஆநந்தம்—ஆத்ம ஆநந்தம்—அத்வைத ஆநந்தம்-வித்தியா ஆநந்தம். 4. **அங்கம்,** யம-நியம-ஆசந-பிராணாயாம—பிரத்யாகார—தாரணை—தியாந—சமாதி.

## (9) ஒன்பது வகைப் பதார்த்தம்.

1. **மாயையின் அநிர்வசநீயம்,** பிந்நம்—அபிந்நம்—பிந்ந அபிந்நம்-சத்—அசத்—சத் அசத் – சாவயவம்—நிரவயவம்—சாவயவ நிரவயம்.

## (10) பத்து வகைப் பதார்த்தம்.

1. **ஞாநியின் சிந்நம்,** அக்குரோதம் – வைராக்கியம்—ஜிதேந்திரியத்வம்—க்ஷமை-தமை-ஜநப் பிரியத்வம்-அலோபம்-தாதுருத்வம்—அபயம்—நிர்மதம்.

## (11) பதினொரு வகைப் பதார்த்தம்.

1; அர்த்த வாத வாக்கியம்—உபாசநா வாக்கியம்-ஸ்துதி வாக்கியம் – உபசார வாக்கியம் – குணசாதிருசிய வாக்கியம்-ஜாதி வியக்தி வாக்கியம் – கார்ய காரண வாக்கியம் – குண குணி வாக்கியம்-விராக வாக்கியம்—அம்ச அம்சி வாக்கியம்-பிம்பப் பிரதிபிம்ப பாவ வாக்கியம்.

## (12) பதினான்கு வகைப் பதார்த்தம்.

1. **சதுர்த்த தச வித்தை,** ரிக்—யஜுர்.—சாம—அதர்வண—வேதம் நான்கு. சந்தஸ்-கல்பம்-வியாகரணம்-ஜோதிஷம்-

நிருத்தம்-சிக்ஷை-அங்கம் ஆறு, நியாயம் ஒன்று, மீமாம்சை ஒன்று, ஸ்மிருதி ஒன்று, புராணம் ஒன்று, ஆகப் பதினான்கு.

## (13) இருபத் தொன்பது வகைப் பதார்த்தம்.

1. **தத்துவங்கள்,** ஸ்தூல சரீரம் ஐந்து, ஞான இந்திரியம் ஐந்து, கர்ம இந்திரியம் ஐந்து, வாயு ஐந்து, புத்தி-சித்தம்-அஹங்காரம்-மூன்று, மனம் ஒன்று, மூல அஹங்காரம் ஒன்று, அஹங்கார விசிஷ்ட ஜீவன் ஒன்று, மாயா விசிஷ்ட ஈச்வரன் ஒன்று, கூடஸ்தன் ஒன்று, பிரஹ்மம் ஒன்று. ஆக இரு பத் தொன்பது.

ஆக வகை பதின் மூன்றுக்கு தொகை 138-க்குப் பதார்த்தம் 535.

---

## செய்யுட் கிரமமாகப் பதார்த்தம்.

| | | |
|---|---|---|
| 1. | **வித்தை**—வேதம் 4, அங்கம் 6, நியாயம் 1, மிமாம்சை 1, ஸ்மிருதி 1, புராணம் 1. ஆக | 14 |
| 2. | **மங்கலம்**—ஆசீர்வாதம், நமஸ்காரம், வஸ்து நிர்த்தேசம். | 3 |
| 5. | **வியாக்கியான லக்ஷணம்**—பதம், பதார்த்தம், வாக்கிய யோசனை, சங்கை, சமாதானம். | 5 |
| 4. | **அந்வய லக்ஷணம்**—விசேஷண, விசேஷியம், கர்த்தா, கர்மம், கிரியை. | 5 |
| 5. | **அநுபந்த சதுஷ்டயம்**—விஷயம், சம்பந்தம், பிரயோஜநம், அதிகாரி. | 4 |

6. சாதநம்—நித்திய அநித்திய வஸ்து விவேகம், இஹ அமுத்தர அர்த்த பல போக விராகம், சமாதி ஷட்க சம்பத்தி, முமுக்ஷுத்வம். 4

7. மூன்றும் சாதநம்—சமை, தமை, திதிக்ஷை, உபரதி, சிரத்தை, சமாதி. 6

8. குரு சேவை—ஆப்தம், அங்கம், ஸ்தாநம், சத்பாவம். 4

9. அதிகாரி—கர்ம காண்டி, பக்தி காண்டி, ஞாந காண்டி. 3

10. அதிகாரி—கர்மி, முமுக்ஷு, அப்யாசி, அநுபவி, ஆரூடன். 5

11. அதிகாரி—விவேக கதி, விரக்தி கதி, தெய்வ கதி. 3

12. குரு—நிஷித்த குரு, காமிய குரு, போதக குரு, வேதக குரு, சூசக குரு, வாசக குரு, காரக குரு, விஹித குரு. 8

13. உபதேசம்—உத்தேசம், லக்ஷணம், பரிக்ஷை. 3

14. பிரமாணம்—பிரத்தியக்ஷம் அநுமாநம், உபமாநம், சப்தம், அர்த்த ஆபத்தி, அநுபலப்தி, சம்பவம், ஐதிஹ்யம். 8

15. பதார்த்தம்—திருக், திருசியம். 2

16. பேதம்—சஜாதீயம், விஜாதீயம், ஸ்வகதம். 3

17. சுருதி வாக்கியம்—ஏகம், ஏவ, அத்வைதம். 3

18. திருசியம்—அத்தியாரோபம், அபவாதம். 2

19. திருக் லக்ஷணம்—அதத்வியா விருத்தி, தடஸ்தம், ஸ்வரூபம். 3

20. பிரஹ்ம லக்ஷணம்—சத், சித், ஆநந்தம், நித்தியம், பூரணம். 5

21, சத்—வியாவ காரிகம், பிராதிபாஸிகம், பாரமார்த்திகம். 3

22. சித்—ஜீவந், ஈசுவரன், கூடஸ்தன், பிரஹ்மம். 4

23. ஆநந்தம்—விஷயம், பிரஹ்மம், வாசனை, முக்கியம், நிஜம், ஆத்மா, அத்வைதம், வித்தை. 8

24. நித்தியப் பிரதியோகி அநித்தியம்—பிராக் அபாவம், பிரத் த்வம்ச அபாவம், அந்நிய அந்நிய அபாவம், அத்தியந்த அபாவம். 4

25. பரிபூரணப் பிரதியோகி பரிச்சிந்நம்—தேச பரிச்சேதம், கால பரிச்சேதம், வஸ்து பரிச்சேதம். 3

26. ஜீவந்—விசுவ, தைஜச, பிராஞ்ஞன். 3

27. ஆத்மா—ஜீவ ஆத்மா, பரம ஆத்மா, அந்தர் ஆத்மா. 3

28. ஈசுவரன்—விராட், ஹிரண்ய கர்ப்பன், அந்தர்யாமி. 3

29. வஸ்திர திருஷ்டாந்தம்—தௌதம், கட்டிதம், லாஞ்சிதம், ரஞ்சிதம். 4

30. சேதநம்—சித், அந்தர்யாமி, ஹிரண்ய கர்ப்பன், விராட். 4

31. ஈசுவரப் பிரதாந குணம்—சர்வஞ்ஞத்வம் முதலியன (சர்வேசுவரத்வம், சர்வ நியந்திருத்வம், சர்வாந்தரியாமித்வம், சர்வ கர்த்திருத்வம், சர்வ சக்தித்வம்) 6

32. ஈசுவரப் பிரபுத்வம்—கர்த்திருத்வம், அகர்த்திருத்வம், அந்யதாகர்த்திருத்வம். 3

33. ஈசுவர பஞ்ச கிருத்யம்—சிருஷ்டி, திதி, சம்மாரம், அநுக்ரஹம், திரோபவம். 5

34. ஈசுவர காரணம்—அபிந்ந நிமித்த உபாதாந காரணம். 1

51. ரஜோகுணத்தினின்றும்—வாக், பாணி, பாதம், பாயு, உபஸ்தம். 5

52. வியானன், பிராணன், அபானன், சமானன், உதானன். 5

53. தமோ குணத்தினின்றும்—ஆகாசம், வாயு, அக்கினி, அப்பு, பிருதிவி. 5

54. பஞ்சீகரணம். 1

55. அந்தக் கரண வியாபாரம்—ஸ்மரணம், நிச்சயம், அபிமானம், சிந்தனே. 4

56. அதிதேவதை—சந்திரன், பிரஹ்மா, விஷ்ணு, ருத்திரன். 4

57. இருக்கும் இடம்—ஹ்ருதயம். 1

58. ஞான இந்திரியத்தின் கிரியை—சிரவண, பரிச, தெரிசந, சுவாது, கிரகணம். 5

59. அதிதேவதை—திக், வாயு, சூரியன், வருணன், அசுவினி குமாரர். 5

60. இருக்கும் இடம்—காது, சர்வ அங்கம், கண், நா, மூக்கு. 5

61. கர்ம இந்திரியத்தின் கிரியை—வசந, கமந, தாந, விசர்ஜந, ஆநந்தம். 5

62. அதிதேவதை—அக்நி, இந்திரன், சூரியன், மிருத்யு, பிரஜாபதி. 5

63. இருக்கும் இடம்—வாய், கை, கால், பாயு, உபஸ்தம். 5

64. பதி மூன்கு தத்துவங்கள்—ஆத்யாத்மீகம், ஆதி தைவீகம், ஆதி பௌதீகம். 3

65. வாயு இருக்கும் இடம் – ஹ்ருதயம், குதம், உந்தி, கண்டம், சர்வ அங்கம். 5

66. வாயு—நாகன், கூர்மன், கிருகலன், தேவதத்தன், தநஞ்ஜயன். 5

67. கிரியை—சோம்பல், விக்கல், தும்மல், சிரித்தல், சோகித்தல். 5

68. வாயு—வைரம்பன், முக்கியன், பிரபஞ்சநன், அந்தர்யாமி, மஹாப் பிராணன். 5

69. பஞ்ச பூத வியாபாரம்–பொறை, பிண்டீகரணம். பாகம், விரகம், இடம் கொடை. 5

70. பஞ்ச பூத தர்மம்—திண்மை, நெகிழ்வு, அழற்சி, பரிசம், வெளி. 5

71. பஞ்ச பூத அதிதேவதை—அயன், ஹரி, ஹரன், ஈசன், சதா சிவன். 5

72. பஞ்ச பூத குணம்—சப்த, ஸ்பரிச, ரூப, ரச, கந்தம். 5

73. திரிபுடி—ஞாதுரு, ஞாநம், ஞேயம். 3

74. தத்துவங்கள்—தூல சரீரம் 5. ஞாந இந்திரியம் 5. கர்ம இந்திரியம் 5. வாயு 5. புத்தி, சித்தம், அஹங்கரரம், மநம் 4. மூல அஹங்காரம் 1. அஹங்கார விசிஷ்ட ஜீவந் 1. மாயா விசிஷ்ட ஈச்வரன் 1. கூடஸ்தன் 1. பிரஹ்மம் 1. ஆக 29

75. சிருஷ்டி—கிரம சிருஷ்டி - யுகபத் சிருஷ்டி. 2

76. காரிய உத்பத்தி—விருத்தி, பரிணமம், ஆரம்பம், விவர்த்தம். 4

77. திருஷ்டாந்தம்—படம் கூடாரம், பால் தைர், தந்து படம், ரஜ்ஜு சர்ப்பம். 4

78 விஷயம்—பிரியம், அப்பிரியம், உபேக்ஷை. 3
79 பிரபஞ்சம்—சாஸ்த்ரம் - அசாஸ்த்ரம். 2
80. அசாஸ்த்ரப் பிரபஞ்சம்—தீவிரம் - மந்தம். 2
81. உபாதி—அவச்சின்னம், பிரதிபிம்பம், அத்தியாசம். 3
82. அத்தியாச லக்ஷணம். 1
83. அனாத்ம அத்தியாசம்—மித்தை, இதரம், இதர இதரம், சத்தியம். 4
84. ஆத்ம அத்தியாசம்—நிருபாதிகம், சோபாதிகம், தத் தருமம், சம்பந்தம். 4
85. ஆத்மாவால் சம்சார கற்பனை. 1
86. ஜாக்கிர, ஸ்வப்ன, சுழுத்தி, துரியம். துரியாதீதம். 5
87. மூன்று அவஸ்தையின் அக்ஷரம்—அகார, உகார, மகாரம். 3
88. மூன்று அவஸ்தையின் அதிதேவதை—பிரஹ்மா, விஷ்ணு, ருத்திரன். 3
89 மூன்று அவஸ்தையின் ஸ்தானம்—விழி, கண்டம், ஹிருதயம். 3
90. முக்கிய அபேத ஸ்தானம்—கமல அஷ்ட தள கதி, கர்ணிகா கதி, மத்ய கதி. 3
91. சுழுததியில் ஆத்மாவின் சத்பாவம். 1
92. பஞ்ச கோசம்—அன்ன மயம், பிராண மயம், மனோ மயம், விஞ்ஞான மயம், ஆனந்த மயம். 5
93. அஹங்கார ஆத்ம கண்டனம். 1
94. அஹங்காரத்திற்கும், தேகம் சித்சாயை ஆத்மாவிற்கும் – கர்மஜ தாதாத்மிய சம்பந்தம். சஹஜ தாதாத்மிய சம்பந்தம், பிராந்திஜ தாதாத்மிய சம்பந்தம். 3

108. மோக்ஷ விக்நம் — அஞ்ஞாநம் - சந்தேஹம் - விபரீதம். 3

109. விக்ந நிவிர்த்தி சாதநம்—சிரவணம் - மநநம் - நிதித்யாசநம். 3

110. சிரவணம் - அங்கி, மநந - நிதித்யாசநம் – அங்கம். 2

111. சிரவண சஹகாரி வேத தாத்பரிய லிங்கம்— உபக்கிரம உபசம்ஹாரம் - அப்யாசம் - அபூர் வதை - பலம் - அர்த்தவாதம் - உபபத்தி. 6

112. மநந சஹகாரி – யுக்தி - தர்க்கம் - அநுமாநம். 3

113. யுக்தி—சாங்கியாதி மதங்களில், ஆத்மா நாநா, விபு ஆதலின், போக வியவஸ்தை பொருந்தாமையால், அநவஸ்தா தோஷம். 1

114. நிதித்யாசந சஹகாரி–மந்திர யோகம்-பரிச யோகம்-பாவ யோகம் - அபாவ யோகம் - மஹா யோகம். 5

115. ஆத்ம சாக்ஷாத்கார விக்கிநம்—பூதப் பிரதிபந்தம் - வர்த்தமாநப் பிரதிபந்தம் - ஆகாமியப் பிரதிபந்தம். 3

116. விக்ந நிவிர்த்தி உபாயம்—ஞாநம் - வைராக்யம் - உபரதி. 3

117. ஞாநத்தின்—ஹேது - ஸ்வரூபம் - காரியம். 3

118 வைராக்யத்தின்—ஹேது - ஸ்வரூபம் - காரியம். 3

119. உபரதியின்—ஹேது - ஸ்வரூபம் - காரியம். 3

120. உபரதியின் ஹேது—யம-நியம-ஆசந-பிராணாயாம-பிரத்யாகார - தாரணை - தியாந - சமாதி. 8

121. அவதி — ஞாந அவதி - வைராக்ய அவதி - உபாதி அவதி. 3

122. ஞாந சப்த பூமிகை—சுப இச்சை - விசாரணை - தநுமாநசி - சத்துவ ஆபத்தி - அசம்சத்தி - பதார்த்த அபாவனை – துரிய காமி. 7

123. சமாதி—பாஹ்ய திருசிய அநுவித்த சவிகற்ப சமாதி- பாஹ்ய சப்த அநுவித்த சவிகற்ப சமாதி - பாஹ்ய நிருவிகற்ப சமாதி - ஆந்தர திருசிய அநுவித்த சவிகற்ப சமாதி - ஆந்தர சப்த அநுவித்த சவிகற்ப சமாதி - ஆந்தர நிருவிகற்ப சமாதி. 6

124. ஞாந பலம்—துக்க அபாவம் - சர்வ காம ஆப்தி - கிருத கிருத்யத்வம் - பிராப்திப் பிராப்யம். 4

125. முக்தி—ஜீவந் முக்தி - விதேஹ.முக்தி. 2

126. பிராந்தி–சோபாதிகப் பிராந்தி - நிருபாதிகப் பிராந்தி. 2

127. ஜீவந் முக்தன் குணம்—மைத்திரி - கருணை - முதிதை - உபேக்ஷை 4

128. ஜீவந் முக்தப் பிரயோஜநம்—ஞாந ரக்ஷை - தபம் - சகல ஜந சம்வாதம் - துக்க நிவிர்த்தி - சுக ஆவிர்ப் பாவம். 5

129. ஞாநி சிந்நம் — அக்ரோதம் - வைராக்யம் - ஜிதேந் திரியத்வம் - க்ஷமை - தமை - ஜநப் பிரியத்வம் - அலோபம் - தாதுருத்வம் - அபயம் - நிருமதம். 10

130. ஜீவந் முக்தரிடம் உபதேசம் பெறுவோர்—சிஷ்யர் - பக்தர் உதாசீநர் - பாபி. 4

131. பிராரப்த சம்ஸ்காரம்—தீவிர சம்ஸ்காரம் - மந்த சம்ஸ்காரம் - மத்தியம சம்ஸ்காரம் - சுப்த சம்ஸ்காரம். 4

---

[சிவப்பிரகாச சுவாமிகள் வேதாந்த அர்த்தத்தினை, தமிழில் கவியாகச் செய்தனர் என்கின்றார்.]

## சிறப்புப் பாயிரம்.

அறு சீர்க் கழி நெடி லடி யாசிரிய விருத்தம்.

**அருமறையின் பொருடெரித்த விவேக சிந்தா**
**மணியதனு ளறைவே தாந்தப்,**
**பொருளினைமுந் நீர்வரைப்பி னுலகறியச்**
**செந்தமிழாற் புனைதல் செய்தான்,**
**பெருகுசுவை நறவொழுகு செஞ்சொன்மல**
**ராற்புனைபாப் பெருந்தண் மாலைக்,**
**கருமிடற்று வானவர்க்கே சாத்துசிவப்**
**பிரகாசன் கவிஞர் வேந்தே.**

(இ—ள்.) முந்நீர் - (ஆற்று நீர், ஊற்று நீர், மேக நீர் என்று சொல்லப்பட்ட ஜலத்தினையுடைய) சமுத்திரத்தினை,

வரைப்பின்-எல்லையாக (உடைய), உலகு-உலகத்தில் உள்ளார் யாவரும், அறிய-உணர்ந்து (மோக்ஷத்தினை யடைதற் பொருட்டு), அரும்-(அநதிகாரிகளால் அத்யயநஞ் செய்தற்கு) அருமையான, மறையின்-(இருக், யஜுர், சாம, அதர்வணம் என்னும் நான்கு) வேதத்தின், பொருள் - அர்த்தங்களை, தெரித்த-விளக்கிக் கொண்டிருக்கின்ற, விவேக சிந்தா மணி யதனுள் - (நிஜகுண யோகீச்வரரால், கந்நட பாஷையில் பத்துப் பரிச்சேத மாகச் செய்யப்பட்ட) விவேக சிந்தா மணி (யென்னும்) கிரந்தத்தினுள், அறை-பிரதிபாதிக்கின்ற-வேதாந்தப் பொருளினை- (வேதாந்தப் பரிச்சேதத்தி லுள்ள) வேதாந்தஅர்த்தந்தினை, பெருகு-மிகுந்த, சுவை-நவ ரசங்கள் (ஆகிற), நறவு-தேன், ஒழுகு-கொட்டுகின்ற, செம்-சிறந்த, சொல் - பதங்க ளாகிற, மலரால் - புஷ்பங்களால், பெரும்-மிகுந்த, தண்- குளிர்ச்சியினை யுடைய, பா - செய்யுளாகிற, மாலை - மாலையை, புனை - தொடுத்து, கரும் - நீல, மிடற்று-கண்ட னை, வானவர்க்கே பரமேச்வரருக்கே, சாத்து-அணி கின்ற, கவிஞர் - வித்வான்களுக்கு. வேந்து - அரச னாகிய, சிவப்பிரகாசன் - சிவப்பிரகாச ஸ்வாமி (என்னும் நாமத்தை யுடையவன்), செம் தமிழா -சிறந்த தமிழில் (184 விருத்தப் பாசுரங்க ளாக), புனைதல் செய்தான் - அலங்கரித்துப் பாடினன். எ-று. (ஏ - அசை: 'விவேக சிந்தாமணி யது' என்பதில் அது பகுதிப்பொருள் விகுதி.

அவதாரிகை. [நூல் ஆரம்பத்தில், விநாயகர் வணக்கம் கூறுகின்றார்.]

1 **தருணமா துமைமுகத தாம ரைக்கெழு**
**மருணனு மெனவுதித் தடியர் பாற்புரி**
**கருணைமா மதமெனக் காட்டு மாமுகன்**
**சரணவா ரிசமலர் தலையிற் கொள்ளுவாம்.**

(இ-ள்.) தருணம் - (சராசராத்மக மாக விரிந்திருக்கப் பட்ட பிரபஞ்சத்தைச் சிருஷ்டித்தும் ஸ்தநச் சோர்வின்மை யாகிய) யௌவநப் பருவத்தினை யுடைய, உமை மாது - உமா மஹேச்வரியினது, முக - வதந மாகிற, தாமரைக்கு- கமலம் (விகசிதம்) ஆகுதற்கு, எழும் - உண்டாகின்ற, அருணன் ஆம் - (உதய கால) சூரியனை, என - போல, உதித்து-ஜநித்து, அடியர்பால்-சாதுக்களிடத்து, புரி-செய் கின்ற, மா-பெரிய, கருணை-கிருபையினையே, மதம்-மதம், என-போல, காட்டும்-அறிவிக்கின்ற, மா-யானை, முகன்- முகத்தினை யுடைய (விக்நேச்வரக்) கடவுளின், சரண-பாதங் க ளாகிற, வாரிசம்-தாமரை, மலர்-புஷ்பத்தினை, தலையில்- (நமது) சிரஸில், கொள்ளுவாம் (அணிந்து) கொள்ளுவாம் (யாம்). எ-று. "யாம்" தோன்ரு யெழுவாய். 2

[நூற் பெயர் கூறுகின்றார்.]

எண் சீர்க் கழி நெடி லடி யாசிரிய விருத்தம்.

2 சீர்கொண்ட வருமறையின் முடிமணியைத் தெய்வ
சிகாமணியை யடியவர்தங் கண்மணியை மாயைப்
பேர்கொண்ட விருளிரிக்குந் திநமணியை முக்கட்
பெருமணியை யகத்தினுக்கோர் விளக்காக விருத்தி,
யேர்கொண்ட விவேகசிந்தா மணியெனு நூ லதனு
ளெடுத்தியம்பும் வேதாந்தப் பரிச்சேதப் பொருளை,
நேர்கொண்ட தமிழ்விருத்த யாப்பதனுற் றெரிய
நிகழ்த்துவன்வே தாந்தசூ டாமணியென் றன்றே.

(இ ள்.) சீர்கொண்ட - (கர்மம், பக்தி, ஞாநம் என் பவற்றைப் பிரதிபாதிக்கும்) பெருமை வாய்ந்த. அரும் - (தன்னுலும், பிறராலும், தோஷ மற்ற) அருமையான,

மறையின் முடி - வேதாந்தம் (ஆகிய உபநிஷத்துக்களில் பிரதிபாதிக்கப்படும் நிர்க்குணப் பிரஹ்ம மாகிய), மணியை- (ரத்நம் போன்ற) வஸ்துவையும், தெய்வ - (பிரஹ்மா முத லிய) தேவதைகள், சிகா - சிரஸில் (சூட்டிக்கொள்ளும்படி காரணப் பிரஹ்ம சகுண ரூப மாக விளங்காநின்ற), மணியை-வஸ்துவையும், அடியவர்தம்கண் - சாதுக்களது இருதயத்தி னிடத்தில் (தக்ஷிணா மூர்த்தி ரூப மாக விளங்கா நின்ற), மணியை - (கண் மணி போன்ற) வஸ்துவையும், மாயை-மாயை (என்னும்) பேர் கொண்ட-நாமம் பூண்ட, இருள்-அஞ்ஞாநத்தினை, இரிக்கும் - நாசம் செய்கின்ற, திந- (அகண்ட பிரம்மாகார விருத்தி ரூப ஞாந) சூரிய னாகிய, மணியை-வஸ்துவையும், முக் கண் - மூன்று நேத்திரங்களை யுடைய (காரியப் பிரஹ்ம ரூப), பெரும்-உயர்ந்த, மணியை- வஸ்துவையும், அகத்தினுக்கு - (மந மாகிய) கிரகத்துக்கு, ஓர்-உயர்ந்த, விளக்கு ஆக - தீப மாக, இருத்தி-வைத்துக் கொண்டு, ஏர் கொண்ட - உயர்வு பொருந்திய, விவேக சிந் தாமணி - விவேக சிந்தாமணி, எனும் - என்று கூறும், நூ லதனுள் - கிரந்தத்தில், இயம்பும் - பிரதிபாதிக்கப்படும், வேதாந்தப் பரிச்சேதப் பொருளை - வேதாந்தப் பரிச்சேத அர்த்தத்தினை, எடுத்து - (மநதில்) தாரணை செய்துகொண்டு, வேதாந்த சூடாமணி - (தமிழில்) வேதாந்த சூடாமணி, என்று-என (நாமம் இட்டு), நேர் கொண்ட-செம், தமிழ்- தமிழில், விருத்த யாப்பதனால்- (அறு சீர், எழு சீர், எண் சீர்க் கழி நெடில் ஆசிரிய) விருத்த (18-16-148) 182 பாசுரங்களி னால், தெரிய-(யாவருக்கும்) விளங்கும்படி, நிகழ்த்துவன்- (யான்) கூறுவேன். எ-று. தம்-அன்று-ஏ-அசை நிலை.

“ நூ லதனுள் ” என்பதில், அது பகுதிப் பொருள் விகுதி.

## நூல்.

[பதின் நான்கு வித்தையும், மீமாம்சை இரு விதம். அவற்றுள், பூர்வ மீமாம்சை 12 அத்தியாயம் உடையது எனவும் கூறுகின்றார்.] .

எண் சீர்க் கழி நெடில் அடி ஆசிரிய விருத்தம்.

1 வேதமொரு நான்குமா றங்கமுநன் னியாய
மீமாஞ்சை யொடுமிருதி புராணமுமீ ரேழா,
வோதலுறும வித்தைகளா மவற்றுண்மீ மாஞ்சை
யுயர்ந்ததா யைந்நான்கத் தியாயமா யருத்த,
பேதமுற விருகூறா மவற்றுண்முதற் கூறே
பிறங்குமருட் சைமினிசூத் திரரூப மாகிப்,
போதுமீ ராறத்தி யாயமாய்க் கருமப்
பொருளுணர்த்திப் பூருவமீ மாஞ்சையெனப் படுமால்.

(இ-ள்.) ஒரு - ஒப்பற்ற, நான்கு வேதம் உம் - சதுர் வேதமும், அங்கம் ஆறும் - (சந்தஸ், கற்பம், வியாகரணம், சோதிஷம், நிருத்தம், சிக்ஷை என்னும்) சடங்கமும், நல் - நல்ல, நியாயம்-நியாய சாஸ்திரமும், மீமாஞ்சை-(பூர்வோத்தர) விசார சாஸ்திரமும், மிருதி-(பதினெண்) ஸ்மிருதிகளும், புராணமும் - (பதினெண்) புராணமும், ஈர் ஏழா - (ஆகிய) பதினான்கும், ஓதல் உறும் - அப்பியாசம் செய்யத் தகுந்த, வித்தைகள் ஆம் - வித்தைகளாகும், அவற்றுள் - அந்தச் சதுர்த் தச வித்தைகளுள், மீமாஞ்சை - விசார சாஸ்திர மானது, உயர்ந்தது ஆய-சிரேஷ்ட முடையதாய், ஐ நான்கு- இருபது, அத்தியாயம் ஆய்- அத்தியாயங்களை யுடையதாய், அருத்த பேதம் உற- (கருமம், பக்தி, ஞான மாகிய) பொருள் வேற்றுமையை அடைந்து, இரு-இரண்டு, கூறு ஆம்-பாக

மாம், அவற்றுள்-அவ் விரண்டு பாகங்களுள், முதல்-பிரதம, கூறு-பாகமானது, அருள்-ஆத்ம ஞாநத்தோடு, பிறங்கும்-விளங்குகின்ற, சைமினி - சைமினி பகவானால் (இயற்றப் பட்ட), சூத்திர ரூபம் ஆகி - சூத்திர மாகிய ஸ்வரூபத்தினை யுடைய தாய், ஈர் ஆறு - பன் னிரண்டு, அத்தியாயம் ஆய் - அத்தியாயங்களை யுடைய தாய், கருமப் பொருள் - (விதி நிஷேத நித்ய நைமித்ய காமிய பிராயச் சித்தாதி) கர்மார்த் தங்களை, உணர்த்தி போதும் - (லோக வேத அதிகரணாதி) சகஸ்ர நியாயத்தால்) அறிவித்து வருகின்ற (காரணத்தினால்), பூருவ - முன், மீமாஞ்சை - விசார சாஸ்திரம், எனப்படும்-என்று பெரியோர்களால் நிச்சயிக்கப்படும். எ-று 1

ஆல், ஓடு, ஏ - அசை நிலை.

கீதா உபநிஷத் 5-வது மந்திரம் கூறுகிறபடி. **சதுர்த் தச வித்தைகள் ஆவன** :— வேதம் நான்கு; அங்கம் ஆறு; நியாயம் ஒன்று; மீமாம்சை ஒன்று; ஸ்மிருதி ஒன்று; புராணம் ஒன்று; என்பன ஆம். இவற்றுள், தர்மத்தினை யும், பிரஹ்மத்தினையும், பிரதிபாதிப்பனவாய், அபௌரு ஷேயமாய் உள்ள, பிரமாண வாக்கியம் வேதம் ஆம். அது நிஷத் - உபநிஷத் என்றும், மந்திர ரூபம்-பிராஹ்மண ரூபம் என்றும் சொல்லப்படும். தர்மம் முதலியவற்றைப் போதிக் கும் பூர்வ பாக மாகிய கர்ம காண்டம் உபாசநா காண்டம் நிஷத் என்றும், பிரஹ்மத்தினைப் போதிக்கும் உத்தர பாக மாகிய ஞாந காண்டம் உபநிஷந் என்றும், பெயர் பெறும். மந்திர பாகம் வியாக்கேய ரூபம் என்றும், பிராஹ்மண பாகம் வியாக்யாந ரூபம் என்றும், பெயர் பெறும். மந்திர பாகம் – அநுஷ்டாந காரண ரூப திரவிய தேவதைகளை அறிவிப்பது ஆம். அது, ரிக் யஜுர் சாம என்று மூன்று

வகையா யிருக்கும். "அக்நி மீளே புரோஹிதம்" என்பதாதி பாதங்களால் கட்டப்பட்டுக், காயத்ரி முதலிய சந்த விசிஷ்டங்கள் ரிக்காம். கீத விசிஷ்ட மாயின், அதுவே சாமம் ஆம். இவ் விரண்டின் வேறுயது யஜுஸ் ஆம். "அக்நீத் அக்நீந் விஹர" என்பதாதி சம்போதந (விளி) ரூப மந்திரங் களும் நிகத மந்திரங்களும். யஜுஸில் அடங்கும். பிராஹ்மண பாகம் - அநுஷ்டாந யாகக் கிரியைகள் ஆகிய எல்லாத் தர்மங்களையும் அறிவிப்பது ஆம். அது விதி மந்திர நாமதேய அர்த்த வாதம் நிஷேதம் உபாக்யாநம் என்று ஆறு பிரகாரம் ஆம். ராஜ ஆஞ்ஞை போன்று, நிஷேதத்தி னின்றும் நிவிர்த்தி தர்மத்தினைப் போதிக்கும் வாக்கிய பாகம் விதி ஆம். ஆசாரியர் போன்று, செய்யத் தக்க யாகம் யாக சாதநங்களைப் பிரகாசித்து, யாக சாதந வாக்கிய பாகம் மந்திரம் ஆம். மாதா பிதா போன்று, யாகாதிகளுக்குப் பெய ரிடும் வாக்கிய பாகம் நாமதேயம் ஆம். துதிப்போர் போன்று, திவ்ய அர்த்தத்தினைக் கூறும் வாக்கிய பாகம் அர்த்த வாதம் ஆம். "ந கலஞ்சநம் பக்ஷயேத்" என்பதாதி யதேஷ்டாசரணத்தினை நிஷேதிக்கும் வாக்கிய பாகம், நிஷேதம் ஆம். கிளைக் கதைகளைக் கூறும் வாக்கிய பாகம் உபாக்யாநம் ஆம். இவ் வேதம் அநாதி என்றும், பரமேச்வரனுல் உண்டாயது என்றும் கூறுப.

கீதா உபநிஷத் நாலாவது மந்திரத்திலும், முக்திகா உபநிஷத் முதலாவது அத்தியாயம் 11 முதல் 13½ வரை உள்ள மந்திரத்திலும் கூறியபடி. வேதம் * வியாசாதிகளால், ரிக் சாகை, யஜு சாகை, சாந்தோக்கிய சாகை, அதர்வண

* வி. ஆஸ். வேதத்தினை பிரித்தவர் வியாசர் என்பது வியாச பதம் அறிவிக்கின்றது.

சாகை முதலிய பேதத்திஞல் விபாகம் செய்யப்பட்டிருக்கின்றது. ரிக் சாகை 21 விதம் ஆம். யஜுஸ் சாகை (101, அல்லது,) 109 விதம் ஆம். சாம சாகை 1000-ம் விதம் ஆம். அதர்வண சாகை (9, அல்லது) 50. விதம் ஆம். ஆகச் சாகை (1131, அல்லது,) 1180 ஆகும் எத்தனை சாகைகள் உண்டோ, அத்தனை உபநிஷத்துக்கள் உண்டு

ரிக், யஜுஸ், சாம, அதர்வண பேதத்தால், வேதம் நான்கு ஆம். அள வின்றிய அக்ஷரத்தினை உடைய ஹோதாவின் வேத பாகம், ரிக்கு ஆம். அளவோடு கூடிய அக்ஷர முடைய அத்வரியுவின் வேத பாகம், யஜுஸ் ஆம் ஸ்துதி விசிஷ்ட அள வின்றிய அக்ஷர முடைய உத்காதாவின் வேத பாகம், சாமம் ஆம். அளவும், அளவு இன்றியதும், ஆன அக்ஷரம் உடைய பிராஹ்மணனது வேத பாகம், அதர்வணம் ஆம்.

840 சாகை யாகிய உபநிஷத், கர்மத்தினைப் பிரதிபாதித்துக், கர்ம காண்டம் என்றும், 232 சாகை யாகிய உபநிஷத், தியேயப் பிரஹ்மத்தினைப் பிரதிபாதித்து, உபாசநா காண்டம் என்றும், 108 சாகை யாகிய உபநிஷத், ஞேயப் பிரஹ்மத்தினைப் பிரதிபாதித்து, ஞாந காண்டம் என்றும் சொல்லப்படும்.

வேதத்திற்கு மாதவாசாரியரும், ராவணனும், மஹீதரரும், பாஷ்யம் இயற்றியிருக்கின்றார்கள். சௌநகர் அநுக்கிர மணிகையின்படி, ரிக் வேதம் 10 மண்டலமாகவும், 85 அநுவாகம், 1016 சூக்தங்கள் ஆகவும், இருக்கின்றது. காத்தியாயநர் அநுக்கிரக மணிகையின்படி 8 அஷ்டகமும், 1016 சூக்தங்களும் இருக்கின்றது. யஜுர் வேதம், கிருஷ்ண





யஜுஸ் என்றும், சுக்ல யஜுஸ் என்றும் இரு பிரிவுளவாய் 286 அநுவாகங்களும், 1987 பிரகரணங்களும், உள்ள தாய் இருக்கின்றது. (சாம வேதம்) அதர்வண வேதம் 28 காண்டங்கள் 100 அநுவாகம் 760 சூக்தங்களாக இருக்கின்றன

**உப வேதம் நான்கு.** 1. ஆயுர் வேதம், 2. தநுர் வேதம், 3. கந்தர்வ வேதம், 4. அர்த்த வேதம் என ஆம்.

1. ஆயுர் வேதத்திற்குச், சூத்ரம் சாரீரம் ஐந்திரியம் சிகித்சை நிதாநம் விமாநம் கல்ப்பம் சித்தி என எட்டுத் தாநங்கள் இருக்கின்றன,

இந்த ஆயுர் வேதம், பிரஹ்ம பிரசாபதி, அசுவினி குமாரர்கள். தந்வந்திரி இந்திரன் பரத்வாஜர் ஆத்திரேயர் அக்நிவேசியர் முதலியோர்களால் செய்யப்பட்டது.

சரகர் என்பவரால் சங்கிரகிக்கப்பட்டது, அதனுள்ளேயே சுசுருதர் என்பவரால் பஞ்ச ஸ்தாந வடிவமான பிரஸ்தாநந்தரம் செய்யப்பட்டது. இவ்வாறே வாக்படர் முதலியோராலும் பலவிதம் செய்யப்பட்டன. சாஸ்திர பேதம் இன்று.

காம சாஸ்திரமும் ஆயுள்வேதத்தில் அடக்கம். சுசுருதர் என்பவரால், வாஜிகரணம் என்னும் பெயரிய காம சாஸ்திரம் செய்யப்பட்டது வாத்ஸ்யாயநரால் ஐந் தத்திபாய வடிவ காம சாஸ்திரம் செய்யப்பட்டிருக்கின்றது. சிகித்சா சாஸ்திரம், ரோகம் அதன் சாதநம். ரோக நிவிர்த்தி அதன் சாதநம் கூறுகின்றது.

2. தநுர் வேதம் விசுவாமித்திரரால் செய்யப்பட்டது. நான்கு பாத வடிவம் ஆனது. முதல், தீக்ஷா பாதம் 2. சங்கிரக பாதம் 3. சித்தி பாதம் 4. பிரயோக பாதம் ஆம்.

முதல் பாதத்தில் தநுவின் லக்ஷணம், அதிகாரி நிருபணம் செய்யப்பட்டிருக்கின்றது. தநு என்னும் சப்தம் வில்லில் ரூடமாயினும், நான்கு வித ஆயுத வாசக மாக இருக்கின்றது. அவை முக்தம் அமுக்தம் முக்தாமுக்தம் யந்திர முக்தம் என நான் காம். சக்கிரம் முதலியன முக்தம் ஆம். கட்கம் முதலியன அமுக்தம் ஆம். சல்லிய அவாந்தர பேத முதலியன முக்தாமுக்தம் ஆம். சர முதலியன யந்திர முக்தம் ஆம். முக்தம் அஸ்திரம் என்றும், அமுக்தம் சஸ்திரம் என்றும், சொல்லப்படும். அது பிராஹ்ம வைஷ்ணவ பாசுபத பிரஜாபத்ய ஆக்நேயம் முதலிய பேதத்தால் அநேக விதம் ஆம். அதிதெய்வங்களோடும், மந்திரங்களோடும், கூடிய நான்கு வித ஆயுதங்களிலும், எந்த க்ஷத்திரிய, க்ஷத்திரிய குமாரர்கட்கும், அவர் அநுயாயிகட்கும் அதிகாரம் உண்டோ, அவர் யாவரும் பதாதி ரத கஜ துரங்க ஆருடர் என நான்கு வகையினர் ஆவர். தீக்ஷை அபிஷேகம் சகுநம் மங்கலகரணம் முதலியன எல்லாம் முதல் பாதத்தில் நிருபிக்கப்பட்டன

இரண்டாவது பாதத்தில், சகல சாஸ்திர விசேஷணங்களுடைய சங்கிரகணப் பிரகாரம் ஆசாரியருடைய லக்ஷண வாயிலாகத் தரிசிப்பிக்கப்பட்டது.

மூன்றாவது பாதத்தில், குரு சம்பிரதாய சித்த சஸ்திர விசேஷங்களி னுடைய அடிக்கடி அப்பியாசமும், மந்திர தேவதைகளின் சித்தி கரணமும், நிருபிக்கப்பட்டன.

நான்காவது பாத்த்தில், இவ்வண்ணம் தேவதை அர்ச்சந அப்பியாச முதலியவற்றால் சித்த மான அஸ்திர விசேஷங்களி னுடைய பிரயோகம் நிருபிக்கப்பட்டது.

க்ஷத்திரியர்களுடைய ஸ்வதர்ம ஆசரணம் யுத்தம். துஷ்ட சத்துரு சோராதிகளினின்றும் பிரஜா பாலநம் செய்தல், தநுர் வேதத்திற்குப் பிரயோசநம் என இவ் வண்ணம் பிரஹ்மப் பிரர்ஜாபத்தியாதிக் கிரமத்தினுல், விசுவாமித்திரரால் செய்யப்பட்டது தநுர் வேத சாஸ்திரம் ஆம்.

3. கந்தர்வ வேதம் பரதரால் செய்யப்பட்டது. அதில், நிருத்திய கீத வாத்திய பேதத்தால், அநேக வித அர்த்தம் விசாரிக்கப்பட்டிருக்கின்றன. தேவதா ஆராதநமும், நிர்விகல்ப சமாதி ஆதி சித்தியும், காந்தர்வ வேதத்தின் உடைய பிரயோசந மாம்.

4. அர்த்த சாஸ்திரமும், நீதி சாஸ்திரம், அசுவ சாஸ்திரம், கஜ சாத்திரம் சில்ப சாஸ்திரம், பாக சாஸ்திரம், அறு பத்து நான்கு கலா சாஸ்திரம் எனப் பல விதம் ஆம்.

சைவ ஆகமங்களில், கூறப்பட்ட அவ் வறுபத்து நான்கு கலை ஞாநங்கள் ஆவன. கீதம் 1, வாத்யம் 2, நிருத்யம் 3, நாட்டியம் 4, ஆலேக்யம் 5, விசேஷ கச்சேத்தியம் 6, தண்டுல குசும்பலி விகாரங்கள் 7, புஷ்பாஸ்தரணம் 8, தசந வசநாங்க ராகங்கள் 9, மணி பூமிகா கர்மம் 10, சயந ரசநம் 11, உதக வாத்யம் 12, உதக வாதம் 13, அத்புத தர்சந வேதிக்வம் 14, மாலாக்ர தந கல்ப்பம் 15, சேகரா பீட யோஜநம் 16, நேபத்ய யோகங்கள் 17, கர்ண பத்ர பங்கங்கள் 18, கந்த யுக்தி 19, பூஷண யோஜநம் 20, இந்திர ஜாலம் 21, கௌசுமார யோகங்கள் 22, அஸ்த லாகவம் 23, சித்ர சாகா பூப பக்த விகாரக் கிரியைகள் 24, பாநக ரசராகாசவ யோஜநம் 25, சூசீ வாப கர்மம் 26, சூத்ரக் கிரீடை 27, வீணை டமருக வாத்தியங்கள் 28, பிரகேளிகாப் பிரதி மாலைகள் 29, துர்வஞ்சக யோகங்கள் 30, புஸ்தக

வாசநம் 31, நாடிகாக்யா தர்சநம் 32, காவ்ய சமஸ்யா பூர்ணம் 33, பட்டிகா வேத்ர பாண விகல்ப்பங்கள் 34, தர்க்கு கர்மங்கள் 35, தக்ஷணம் 36, வாஸ்தாது வித்தை 37, ருப்ய ரத்நப் பரீக்ஷை 38, தாது வாதம் 39, மணி ராக ஞாநம் 40, ஆகர ஞாநம் 41, விருக்ஷாயுர்வேத யோகங்கள் 42, மேஷ குக்குட லாகவ யுத்த விதி 43, சுக சாரிகாப் பிரலாபநம் 44, உத் சாத்நம் 45, கேசமார்ஜந கௌசலம் 46, அக்ஷர முஷ்டி சாத்நம் 47, மிலேசித கவி கல்ப்பங்கள் 48, தேச பாஷா ஞாநம் 49, புஷ்ப சகடிகா நிமித்த ஞாநம் 50, யந்திர மாதிருகா 51, தரண மாதிருகா 52, அசம் வாச்சிய சம்பாட்டியமான மூகாவ்யக் கிரியா விகல்ப்பங்கள் 53, சலிதக யோகங்கள் 54, அபிதாந கோச சந்தோ ஞாநம் 55, கிரியா விகல்ப்பங்கள் 56, லலித விகல்ப்பங்கள் 57, வஸ்திர கோபநங்கள் 58, த்யூத விசேஷம் 59, ஆகர்ஷக் கிரீடை 60, பாலக் கிரீடநங்கள் 61, வைநாயகீ வித்யா ஞாநம் 62, வைஜயிக வித்யா ஞாநம் 63, வைதலிகீ வித்யா ஞாநம் 64, என்பன ஆம். இவை நாநா முநிகளால் செய்யப்பட்டன.

**ஆறு அங்கம்** — 1. சிக்ஷை, 2. வியாகரணம், 3. நிருக்தம், 4. சந்தஸ், 5. ஜோதிஷம், 6. கல்பம் என்பன ஆம்.

1. **சிக்ஷை என்பது**, பாணிநி முநிவரால் "இனிச் சிக்ஷையை இயம்புகின்றேன்" என்பதை ஆதி யாக, "சம்பவதீ தநாநி" என்பதை அந்த மாகவுடைய 62 சுலோகங்களால், ஐந்து அல்லது, ஒன்பது அல்லது, பதி னொரு காண்ட ரூபமாகச் செய்யப்பட்டிருக்கின்றது. வேதத்தில் உள்ள, உதாத்த அநுதாத்த ஸ்வரித ஹ்ரஸ்வ தீர்க்க புலுத ஆதி விசிஷ்டம் ஆகிய உயிர் மெய் வடிவ வர்ண உச்சாரண ஸ்தாந விசேஷங்களைத் தெரிந்து கொள்ளுதல் பலன் ஆம்.

அஃ தின்றேல், மந்திரங்கட்கு அநர்த்தகத் தன்மை உண்மை யின், "ஸ்வரத்தாலும், வர்ணத்தாலும் ஹீநம் ஆன மந்திரம் ஆனது, மித்யா ப்ரயுக்த மாய் அவ் அர்த்தத்தினைக் கூறுவ தில்லை. அவ் வாக்கு ஆன, வஜ்ஜரம் ஆனது, யஜமானனைக் கொல்லுகின்றது. ஸ்வரத்தினது அபராதத்தால், "இந்த்ர சத்ரு" என்று, சிக்ஷை 52-வது சுலோகத்தில் சொல்லப்பட் டிருக்கின்றது. சிக்ஷை எல்லா வேதத்திற்கும் உரியது ஆம். ஒவ் வொரு வேத சாகைகள் தோறும் பின்ன ரூபங்க ளாய் பிரதிசாக்யம் எனப் பெயரியவைகள் ஏனைய முநிகளால் அறிவிக்கப்பட்டிருக்கின்றன. அவை சிக்ஷக்குட்பட்டன.

2. வியாகரணம் என்பது, பாணினி முநிவரால், பர மேச்வரன் கொடுத்த, 14 சூத்திரங்களை ஆதர வாகக் கொண்டு, "விருத்தி ராதைச்" என்பதனை ஆதி யாக, "அ அ இதி" என்பதை அந்த மாக உடைய, 8 அத்தியாய மாய், அத்தியாயங்கள் தோறும் நான்கு பாதங்கள் உடை யது ஆய், 3983 சூத்திரங்களில் செய்யப்பட்டிருக்கின்றது. வேதத்தில் உள்ள பத சாதுத்வ ஞானமும், ஊகாதிகளும், பிரகிருதி பிரத்யய லிங்க சமாசங்களை போதித்தலும், பலன் ஆம். காத்தியாயந முநிவரால் இதற்கு, 'வார்த்திக' ரூப வியாக்யானம் செய்யப்பட்டிருக்கின்றது. சூத்திரம் வார்த் திகம் என்னும், இரண்டின் பேரிதும், பதஞ்சலி முநிவரால், மஹா பாஷ்யம் என்னும் வியாக்யானம் செய்யப்பட்டிருக் கின்றது. பாணினி சூத்திரத்திற்கு, "காசிகா விருத்தி" என்று ஒரு வியாக்யானம் பண்டிதவர ஜயாதித்யரால் செய்யப்பட் டிருக்கின்றது.

இந்திரன், அமர சிம்ஹன், கௌமாரர் என்பவர்கள், வேறு வியாகரணம் செய்திருக்கின்றனர். அவை, வேத

சப்த விஷயம் இன்மையின், லௌகிகப் பிரயோக பத ஞாநத்தின் பொருட் டாம். இதனுல், இவை, வேதாங் கங்கள் அன் று.

3. நிருக்த்தம் என்பது, யாஸ்க முநிவரால், "சமாம் நாய: சமாம்நாத: (அது வியாக்யாநம் செய்யத்தக்கது)" என்பதை ஆதி யாக வுடையதும், "வியாக்யாதம் அக்நீ:" என்பதை அந்த மாக உடையதும், 450 சூத்திரங்களால், பதி னுன்கு அத்தியாய மாகச் செய்யப்பட்டிருக்கின்றது. வேத மந்திர பதங்களின் அர்த்த ஞாநத்தினை உண்டாக்குதல் பலன் ஆம். வேத மந்திரங்களில், பிரசித்தம் இல்லாத பதங் களின் அர்த்தங்களை அறிவிக்கும் பொருட்டுப் பெயர்கள் நிரூபிக்கப்பட்டிருக்கின்றன. வர்ணுகமம், வர்ண விபர்ய யம், வர்ண விகாரம், வர்ண நாசம், தாதுக்கட்கு அதிசய அர்த்தத்தோடு சம்பந்தம், ஐந்தும் நிரூபிக்கப்படும். நாமம், ஆக்யாதம், நிபாதம், உபசர்க்கம் என்னும் நான்கு வித பத சமுதாயத்தினை நிரூபித்து, வைதிக மந்திரங்களி னுடைய பதங்களின் அருத்தம் அறிவிக்கப்பட்டிருக்கின்றது. மந்தி ரங்கட்கு அநுஷ்டேய அர்த்தப் பிரகாச வாயி லாகக் கரணத் தன்மை உண்மையின், வாக்கியார்த்த ஞாநத்திற்குப் பதார்த்த ஞாந அதீநத் தன்மை உண்மையானும். மந்திரத் தில் உள்ள பதார்த்த ஞாநத்தின் பொருட்டு, நிருக்த்தம் அபேக்ஷிக்கப்பட்டது. இஃ தின்றேல், அநுஷ்டாந சம்ப வம் இன்மையின், "ஸ்ருண்யேவ ஜர்ப்பரீ துர்ப்பரி தூந" என்ப தாதி, அதி துக்கத்தா லும் ஊகிக்கத் தகாதனவான வற்றிற்குப் பிரகாராந்தரத்தால் அர்த்த ஞாநத்தினது சம்ப வம் இன்மையின், வைதிக திரவிய தேவதை ரூப பதார்த்த பர்யாய சப்த ரூபம் ஆன நிகண்டு முதலியன நிருக்தத்தின்

கண் அடங்குகின்றன. யாஸ்க முநிவரால், ஐந்து அத்தியாய ரூப நிகண்டு என்னும் நூல் செய்யப்பட்டிருக்கின்றது. அமர சிம்ஹன், ஹேமச் சந்திரன் முதலியவர் இயற்றிய வேறு எல்லாக் கோசங்களும் நிகண்டு ரூபத் தன்மையால் நிருக்தத்தில் அடங்கும்.

4 சந்தஸ் என்பது, பிங்கல நாக முநிவரால், "தீச் ரீஸ் த்ரீம்" என்பதனை ஆதி யாகவும், "பரே பூர்ணம் பரே பூர்ணம்" என்பதை அந்த மாகவும், உடைய எட்டு அத்தி யாயம் செய்யப்பட்டிருக்கின்றது. அவற்றுள், "அத லௌ கிகம்" என்பதை அந்தம் ஆக உடைய மூன்று அத்தியா யத்தால், காயத்ரீ, உஷ்ணிக், அநுஷ்டுப், பருஹதி பக்ந்தி, த்ரிஷ்டுப், ஜகதீ என ஏழு உட் பிரிவுகளோடு கூடிய சர்வ சந்தங்களும் பிரசங்கத்தால் நிரூபிக்கப்பட்டன. "அத லௌ கிகம்" என ஆரம்பித்து, ஐந்து அத்தியாயங்களால், புராண இதிகாசாதிகளில் பயன்படும் லௌகிக சந்தங்கள் பிரசங் கத்தால், வியாகரணத்தில், லௌகிக பத நிருபணம் போல, நிருபிக்கப்பட்டன. வேதத்தில் உள்ள ரிக் மந்திரங்கட்குப் பாத பத்த சந்த விசேஷ விசிஷ்டத் தன்மை யிருத்தலின், அதனை அறியாவிடின் நிந்தை கேட்கப்படலாலும், சந்த விசேஷ நிமித்த, அநுஷ்டான விசேஷத்தாலும், சந்த ஞானம் விரும்பப்படுகிறது. சந்த சாதுத் தன்மை விஷயமும், அநேக சந்தத்தின் ஞானமும், அநேக சந்தம் செய்தலும், பலன் ஆம். வேதத்திற் கூறிய காயத்ரி முதலிய சந்தசுக் களின் ஞானம் உண்டாகின்றது. மகண ஆதி கணம், மாத் திரை முதலிய பேதத்தினால் இரு வகைச் சந்தம் ஆம். சந்தத்தின் ஜாதி அநந்தமும், அபரிமிதமும், ஆம். சேஷ முநிவரும் சந்தஸ் கிரந்தம் செய்திருக்கின்றார்.

5. **சோதிஷம்** என்பது, லகதா என்பவர் செய்தது "பஞ்ச சம்வத்ஸர மயம்" என்பது ஆதி, "பஞ்ச சம்வத்சர மயம் பிரபத்யேதே" என்பது, அந்த மாக உடையது. ஆதித்யர், கர்க்கர் முதலியோரால், அநேக பிரகார மாகச் செய்யப்பட்டிருக்கின்றது. அதில், வேதத்திற் கூறிய கர்மா நுஷ்டாந ஏது, சுப அசுப கால நிரூபணம், இச் சந்மத்தில் உண்டாம் பிராரப்த கர்மத்தின் பல சுக துக்க ஆயுள் நிய மங்களை, பிரஹஸ்பதி முதலிய கிரகங்களின் சுப அசுப ஸ்தாந வாயி லாய், நிரூபணம் செய்யப்பட்டிருக்கின்றது. இது, வைதிக கர்மாங்க மாய தர்சாதி கால ஞாநத்தின் பொருட்டு வேதத்தில் விரும்பப்படுகிறது. இனி உண்டாம் சுக துக்கங்களின் ஞாநம் இதன் பலன் ஆம்.

6. **கல்பம்** என்பது, 1 காத்தியாயநர், 2 ஆச்வலாய நர், 3. ஜைமிநி, 4. ஆபஸ்தம்பர் 5. பௌதாயநர், 6 வைகா சநர், என்னும் அறுவரால் செய்யப்பட்டிருக்கின்றது. அதில், கர்மங்களை அநுஷ்டிக்கும் முறையும் யக்ஞம் செய் விக்கும் பிராமணன் ரித்விக் ஆதலும், ரித்விக்கினது வேறு வே ருகச் செய்ய யோக்கிய கர்மங்களை அறிவிப்பனவு மாம். வைசுவாநராதி 14 உபாசனை அநுஷ்டாநப் பிரகாரமும் கூறப்படும். சித்த ஏகாக்கிரத்தை உண்டாக்குதல் வாயி லாக வேதார்த்த உபயோக மாம். சாகாந்தரீய குணோப சம்ஹாரத்தினுல், வைதிக அநுஷ்டாநக் கிரம விசேஷ ஞாநத் தின் பொருட்டுக் கல்ப சூத்திரங்கள் விரும்பப்படுவன. அவையும், பிரயோக பேதத்தால் மூ விதம் ஆம். அவற் றுள், ஹௌத்ரப் பிரயோகப் பிரதிபாதகங்கள், ஆச்வலாயந சாங்க்யாயந ஆதிகளால் செய்யப்பட்டன. ஆத்வர்யவப் பிரயோகப் பிரதிபாதகங்கள், பௌத்தாயந, ஆபஸ்தம்ப,

காத்யாயந ஆதிகளால் செய்யப்பட்டன. ஔத்காரப் பிர யோகப் பிரதிபாதகங்கள், லாட்யாயந, திராஹ்வ்யாயண ஆதிகளால் செய்யப்பட்டன. ஆசவலாயநர், சிரௌத சூத்ரம், பூர்வ ஷட்கம், ஆறத்தியாயம் 96 சூத்ரம் என்பதும், உத்தர ஷட்கம், ஆறத்தியாயம் 70 சூத்ரம் என்பதும், கிருஹ்ய சூத்ரம் 4 அத்தியாயம் 55 சூத்ரம் என்பதும் செய்திருக்கின்றார்.

**நியாயம்** :— பிராசீநம், நவீநம் என்னும் பேதத்தினால், இரு வகைத் தாம். பிராசீநம் நியாய சாஸ்திரம் எனப்படும். கௌதம முநிவரால், "பிரமாண பிரமேய சம்சய பிரயோஜந திருஷ்டாந்த சித்தாந்த அவயவ தர்க்க நிர்ணய வாத ஜல்ப விதண்டா ஹேத்வாபாச சல ஜாதி நிக்ரஹஸ்தாநாநாம் தத்வ ஞாநாத் நிஸ்சிரேயசாதிகம:" என்பதை ஆதி யாக, "ஹேத்வாபாசாச்ச யதோக்தா:" என்பதை, அந்த மாக வுடைய 530 சூத்திரங்கள் உள்ள, ஐந்து அத்தியாய வடிவமாய், அத்தியாயந் தோறும், இரண்டு இரண்டு ஆஹ்நிகம் உள்ள, நியாய சாஸ்திரம் செய்யப்பட்டிருக்கின்றது.

இதன் முத லாவது அத்தியாயம் 1-வது ஆஹ்நிகத்தில், பிரமாண முதலிய ஒன்பது பதார்த்தங்களின் லக்ஷணமும், 2-வது ஆஹ்நிகத்தில், வாதம் முதலிய ஏழு பதார்த்தங்களின் லக்ஷணங்களும், 2-வது அத்தியாயம் 1-வது ஆஹ்நிகத்தில், சம்சய விசாரமும், பிரமாண சதுஷ்டயங்கட்கு அப்பிரமாண்ய சங்கா நிவிர்த்தியும், 2-வது ஆஹ்நிகத்தில், அர்த்தாபத்தி முதலியன, அநுமாந முதலியவற்றில், அந்தர்கத விசாரமும், 3-வது அத்தியாயம் 1-வது ஆஹ்நிகத்தில், ஆத்மா சரீரம் இந்திரியம் அர்த்தம் என்பவற்றின் நிருபணமும், 2-வது ஆஹ்நிகத்தில், புத்தி மந நிருபணமும், 4-வது

அத்தியாயம் 1-வது ஆஹ்நிகத்தில், பிரவிர்த்தி, தோஷம், சாக்காடு, பலம், துக்கம், மோக்ஷம், என்பவற்றின் நிருபணமும், 2-வது ஆஹ்நிகத்தில், தோஷ நிவிர்த்தி அவயவி ஆதி நிருபணமும், 5-வது அத்தியாயம் 1-வது ஆஹ்நிகத்தில், ஜாதி பேத நிருபணமும், 2-வது ஆஹ்நிகத்தில், நிக்கிரஹ ஸ்தாந பேத நிருபணமும் செய்யப்பட்டிருக்கின்றது. இதில், ஆத்ம ஞாநத்தின் பொருட்டு ஐந்து அவயவங்களை யுடைய யுக்தி வாக்கியங்களினால், உத்தேசம் லக்ஷணம் பரிக்ஷையின் வாயிலாய் பிரமாணம் முதலிய பதினாறு பதார்த்தங்கள் விசாரிக்கப்பட்டிருக்கின்றது. இதில், யுக்தி பிரதாந மாக எழுதப்பட்டிருக்கின்றது. யுக்தியின் சிந்தநத்தால், தீவிர புத்தி யுண்டாகிறவன் மநநம் செய்வதில் சமர்த்தன் ஆகின்றான். இச் சூத்திரங்களின் மீது வாத்ஸ்யாயந முநிவர் பாஷ்யமும், விச்வ நாதர் விருத்தி ரூப வியாக்கியாநமும் செய்திருக்கின்றனர்.

**நவீநம் :—** வைசேஷிக சாஸ்திரம் எனப்படும். * கணாத முநிவரால், "அதாதோ தர்மம் வ்யாக்யாஸ்யாம:" என்பதை

---

* *இவருக்கு கபோதி (புறா) என்னும் பக்ஷியின் தன்மையினை அநுஷ்டித்துக் கொண்டு, வழியில் கிடக்கின்ற தண்டுல கணங்களை கொண்டுவந்து ஒவ்வொரு திநமும் புசித்தலின், 'கணாதர்' என்றும், 'கண பக்ஷர்' என்னும், உலூக ரிஷியின் புதல்வராகலின், ஔலூக்யர் என்னும், இவர் கஸ்யப கோத்திரத்தில் பிறந்தவர் என்றும், தபஸ் செய்யும் கணாத முநியின் பொருட்டு ஈசுவரன் தாமாகவே உலூக (ஆந்தை) ரூபம் தரித்துப் பிரத்தியக்ஷமாய், "ஆறு பதார்த்தங்களை உபதேசஞ் செய்" என்று கூறினர் என்று ஐதிய மாகவும், கேட்கப்படுகின்றது. இதனால், ஔலூக்யர் என்றும், இந்தத் தரிசநம் ஔலூக்ய தரிசநம் என்றும், கௌதமர் கூறிய பிரமாணாதி பதினாறு பதார்த்தங்கள்—*

ஆதி யாக. "தத் வசநாத் ஆம்நாயஸ்ய பிராமாண்யம் இதி" என்பதை அந்த மாக வுடைய, 370 சூத்திரங்கள் உள்ள, பத் தத்தி யாய் வடிவ மாய், அத்தியாயந் தோறும் இரண்டு இரண்டு ஆஹ்நிகம் உள்ள, வைசேஷிக சாஸ்திரம் செய்யப் பட்டிருக்கின்றது. இதன் 1-வது அத்தியாயம், 1-வது ஆஹ்நிகத்தில், ஜாதி விசிஷ்ட வியக்தி நிருபணமும், 2-வது ஆஹ்நிகத்தில், ஜாதி விசேஷம் என்பவற்றின் நிருபணமும், 2-வது அத்தியாயம், 1-வது ஆஹ்நிகத்தில், பூத விசேஷ லக்ஷணமும், 2-வது ஆஹ்நிகத்தில், திக்குக் காலங்களின் நிருபணமும், 3-வது அத்தியாயம், 1-வது ஆஹ்நிகத்தில், ஆத்மாவின் லக்ஷணமும், 2-வது ஆஹ்நிகத்தில், அந்தக் கர ணத்தின் லக்ஷணமும், 4-வது அத்தியாயம், 1-வது ஆஹ்நி கத்தில், சரீரத்தின் உபயோகிகளின் விசாரமும், 2-வது ஆஹ்நிகத்தில், சரீர விசாரமும், 5-வது அத்தியாயம், 1-வது

---

*கணாதருக்கும் அங்கீகார மாயினும், இச் சகத்தில் உள்ள பதார்த் தங்களில், தர்மிகள் எவை, தர்மங்கள் எவை, அவை எத்தனை எனப் பரஸ்பரம் சம்பந்தம் இன்றிய ரூபத்தினால் பதார்த்த ஞானம் உண்டாகாதவரை சாதர்மிய வைதர்மிய ஞானம் இன்மை யின், சஹசார நியம ரூப வியாப்தி ஞானம் உண்டாவது சுலபம் அன்று என உணர்ந்து, திரவிய குண முதலிய பேதத்தினால், ஏழே பதார்த்தம் என நிச்சயித்து, இந்தத் திரவியத்திற்கு, இது ஸ்வரூபம், இவையே அதன் குணங்கள் என யாவும் நல் வியவஸ் தை யாகக் கணாதர் கூறியிருக்கின்றார். இதனால், இவ் வாறுய விசேஷத்தினை உத்தேசித்து பிரவிருத்தித் திருத்தலின் இது வைசேஷிக சாஸ்திரம் என்றும் சொல்லுகின்றனர்.*

*இவ் வாறு சர்வ தரிசந சங்கிரகத்தின் தரிசந அங்குரம் என்னும் வியாக்யாநத்தில், வாசுதேவ சாஸ்திரியால் எழுதப்பட் டிருக்கின்றது.*




ஆஹ்நிகத்தில், சாரீர கர்ம விசாரமும், 2-வது ஆஹ்நிகத்தில், மாநஸீக கர்ம விசாரமும், 6-வது அத்தியாயம், 1-வது ஆஹ்நிகத்தில், தாந பிரதிக்கிரக தர்ம பேதங்களின் நிருபணமும், 2-வது ஆஹ்நிகத்தில், நான்கு ஆச்சிரமத்திற்கும் உரிய தர்மங்களின் நிருபணமும், 7-வது அத்தியாயம், 1-வது ஆஹ்நிகத்தில் புத்தியை அபேக்ஷிக்காத குண நிருபணமும், 2-வது ஆஹ்நிகத்தில், புத்தியை அபேக்ஷித்த குண நிருபணமும், சமவாய நிருபணமும், 8-வது அத்தியாயம், 1-வது ஆஹ்நிகத்தில், நிர்விகல்ப பிரத்தியக்ஷ விசாரமும், 2-வது ஆஹ்நிகத்தில், பிரமாண விசாரமும், 9-வது அத்தியாயம், 1-வது ஆஹ்நிகத்தில், அபாவ நிருபணமும், 2 வது ஆஹ்நிகத்தில், சப்த உபமிதிகள், அநுமிதியில் அந்தர்பாவமும், ஸ்மிருதி, அவித்தை, வித்தை, என்பவற்றின் லக்ஷணம் நிருபணமும், 10-வது அத்தியாயம், 1-வது ஆஹ்நிகத்தில், சுக துக்கங்களின் பேதம், சரீர அவயவங்களின் பரஸ்பர பேதம், என்பவற்றின் நிருபணமும், 2-வது ஆஹ்நிகத்தில், மூன்று காரணங்களின் விசேஷ விசாரமும், செய்யப்பட்டிருக்கின்றது. இதில், ஆத்ம ஞாநத்தின் பொருட்டு திரவியம் குணம் கர்மம் சாமாந்யம் விசேஷம் சமவாயம் அபாவம் ஆகிய ஏழு பதார்த்தங்கள் விசாரிக்கப்பட்டிருக்கின்றது. இருபத்தொரு துக்க நிவிர்த்தியே இதில் மோக்ஷமாம்.

இச் சூத்திரங்களின் மீது, அநந்த தேவர் பாஷ்யமும், சந்திர காந்த பட்டாசாரியர் பாஷ்யமும், பிரசஸ்த ஆசாரியர் பாஷ்யமும், சங்கர மிசிரர் சூத்திர உபஸ்காரம் என்னும் வியாக்யாநமும், செய நாராயண பட்டாசாரியர், கணாத சூத்ர விவிருதி என்னும் வியாக்யாநமும் செய்திருக்கின்றனர். இவற்றினை ஆதாரமாகக் கொண்டு, கெங்கேச உபாத்

யாயர், தத்வ சிந்தா மணி என ஒரு நூலும், இதன் மீது, சிரோமணி பட்டாசாரியர், தீதிதி என்னும் வியாக்யாநமும், இதன் மீது, கதாதர பட்டாசாரியர், காதாதரி என்னும் வியாக்யாநமும், மதுரா நாத பட்டாசாரியர், மாதுரி என்னும் வியாக்யாநமும், ஜகதீஸ பட்டாசாரியர், ஜாகதீசி என்னும் வியாக்யாநமும் செய்திருக்கின்றனர்.

**மீமாம்சை** :– பூர்வ மீமாம்சை, உத்தர மீமாம்சை என இரு வகை யாம். அவற்றுள், பூர்வ மீமாம்சை ஜைமினி முனிவரால், "அதாதோ தர்ம ஜிக்ஞாசா" என்பதை ஆதியாக, "அங்வாஹார்யே ச தர்சநாத்" என்பதை அந்தமாக உடைய, 2745 சூத்ரம், 907 அதிகரணம், 60 பாதம் உள்ள, 12 அத்தியாய வடிவ, பூர்வ மீமாம்சா சாஸ்திரம் செய்யப்பட்டிருக்கின்றது.

இதன்கண், முதலாவது அத்தியாயம் நாலு பாதத்திலும் உள்ள, 42 அதிகரணத்திலும், தர்மப் பிரமாணமும், 2-வது அத்தியாயம் நாலு பாதத்திலும் உள்ள, 47 அதிகரணத்திலும், தர்ம பேத அபேதங்களும், 3-வது அத்தியாயம் எட்டுப் பாதத்திலும் உள்ள, 157 அதிகரணத்திலும், அங்க அங்கி பாவமும், 4-வது அத்தியாயம் நாலு பாதத்திலும் உள்ள, 62 அதிகரணத்திலும், கிருத்வர்த்த-புருஷார்த்த-பேதத்தால், பிரயுக்தி விசேஷமும், 5-வது அத்தியாயம் நாலு பாதத்திலும் உள்ள, 54 அதிகரணத்திலும், சுருத்யர்த்த-பாடாதிக் கிரம-பேதமும், 6-வது அத்தியாயம் எட்டுப் பாதத்திலும் உள்ள, 107 அதிகரணத்திலும், அதிகார விசேஷமும், 7-வது அத்தியாயம் நாலு பாதத்திலும் உள்ள, 23 அதிகரணத்திலும், சாமாந்ய அதிதேசமும், 8-வது அத்தியாயம் நாலு பாதத்திலும் உள்ள, 35 அதிகரணத்திலும்,

விசேஷ அதிதேசமும், 9-வது அத்தியாயம் நாலு பாதத்திலும் உள்ள, 67 அதிகரணத்திலும், ஊகமும், 10-வது அத்தியாயம் எட்டுப் பாதத்திலும் உள்ள, 179 அதிகரணத்திலும், பாதமும், 11-வது அத்தியாயம் நாலு பாதத்திலும் உள்ள, 64 அதிகரணத்திலும், தந்திரமும். 12-வது அத்தியாயம் நாலு பாதத்திலும் உள்ள, 68 அதிகரணத்திலும், பிரசங்கமும், நிரூபிக்கப்பட்டிருக்கின்றது. இதனது, 1-வது அத்தியாயம் நாலு பாதத்திலும் உள்ள, 42 அதிகரணத்திலும், விதி அர்த்த வாதம் மந்திரம் ஸ்மிருதி நாமதேயம் என்பவற்றின் பிராமாண்ய விசாரமும், 2-வது அத்தியாயம் நாலு பாதத்திலும் உள்ள, 47 அதிகரணத்திலும், கர்ம பேதத்திற்கு உபோத்காதம் பிரமாண அபவாதம், பிரயோக பேதம் என்பவற்றின் விசாரமும், 3-வது அத்தியாயம் எட்டுப் பாதத்திலும் உள்ள, 157 அதிகரணத்திலும், சுருதி லிங்கம் வாக்யம் பிரகரணம் ஸ்தாநம் சாமக்கிரியை என்பவற்றிற்கு விரோதங்களும், பிரதிபத்தி கர்மம், அநாரப்பியாதீதம், அநேக பிரதாநத்திற் குபகாரக மான பிரயாஜ முதலிய கர்மங்களின் விசாரம், யஜமாநன் செய்யும் கர்ம விசாரமும், 4-வது அத்தியாயம் நாலு பாதத்திலும் உள்ள, 62 அதிகரணத்திலும், ராஜசூய யாகத்திற்கு அங்க மான பிரதாந பிரயோஜகத்வம் - அப்பிரதாந பிரயோஜகத்வம் - பர்ணமயம் ஆன ஜுஹுவின் பலம் - சொற் கேட்டான் ஆடல் - என்பன வாதி விசாரமும், 5-வது அத்தியாயம் நாலு பாதத்திலும் உள்ள, 54 அதிகரணத்திலும், சுருதி முதலிய கிரமங்கள் - அவற்றின் விசேஷங்கள் - பிராபல்ய தௌர்ப்பல்யங்கள் என்பவற்றின் விசாரமும், 6-வது அத்தியாயம் எட்டுப் பாதத்திலும் உள்ள, 109 அதிகரணத்திலும், அதிகாரி-அவன் தர்மம்- திரவியப் பிரதிநிதி - அர்த்த லோபப் பிராயச்சித்தம்-சத்திரம்-தேசம்-அக்நி - என்பவற்றின் விசார

மும், 7-வது அத்தியாயம் நாலு பாதத்திலும் உள்ள, 23 அதிகரணத்திலும், பிரத்தியக்ஷ வசந அதிதேசங்களின், நாமலிங்க-அதிதேச விசாரமும், 8-வது அத்தியாயம் நாலு பாதத்திலும் உள்ள 35 அதிகரணத்திலும், ஸ்பஷ்ட-அஸ்பஷ்ட-பிரபல-லிங்க-அதிதேசத்தின் அதிதேச விசாரமும், 9-வது அத்தியாயம் நாலு பாதத்திலும் உள்ள, 67 அதிகரணத்திலும், ஊக விசாரத்திற் குபயோக மான சாமாவின் ஊகம் - மந்திர ஊகம் - பிரசங்கத்தாற் பெறப்பட்ட விஷய விகார மும், 10-வது அத்தியாயம் எட்டுப் பாதத்திலும் உள்ள, 179 அதிகரணத்திலும், பாதத்திற்குக் காரண மான துவார லோபம் - விஸ்தார மான பாத காரணம் - நஞ் அர்த்தம் - என்பவற்றின் விசாரமும், 11-வது அத்தியாயம் நாலு பாதத்திலும் உள்ள, 64 அதிகரணத்திலும், தந்த்ர-உபோத்காதம்-தந்த்ர - அபாவம் - தந்த்ரப் பிரபஞ்சகம் முதலிய விசாரமும், 12-வது அத்தியாயம் நாலு பாதத்திலும் உள்ள, 68 அதிகரணத்திலும், பிரசங்கம்-தந்த்ர நிர்ணயம்-சமுச்சயம்-விகற்பம் என்பவற்றின் விசாரமும், செய்யப்பட்டிருக்கின்றது.

இந்தச் சூத்திரங்களின் மீது, குமாரில பட்டாசாரியரால், சுலோக வார்த்திக ரூப வியாக்யாநமும், சபர சுவாமியினால், பாஷ்யமும், செய்யப்பட்டிருக்கின்றது. பாஷ்யத்தின் மீது, பிரபாகர பட்டாசாரியாரால், ஒரு வியாக்யாநம் செய்யப்பட்டிருக்கின்றது. பார்த்த சாரதி மிசிரர், சாஸ்திர தீபிகை என்று ஒரு வியாக்யாநமும் செய்திருக்கின்றனர். மாதவாசாரியர், ஜைமநீய நியாய மாலை என்று இதனை அநுசரித்து ஒரு வியாக்யாநம் செய்திருக்கின்றனர்.

இந்கண், நித்திய நைமித்திய காமிய பிராயச்சித்த நிஷித்தம் என்னும் ஐவகைக் கர்மங்களின் அதிகாரிகள்,

ஹாந உபாதாநத்தின் பொருட்டுச் சுருதி தம தர்த்தத்தில், தாத்பரிய நிவாரணத்தின் பொருட்டு, அங்க அங்கி விசாரமும் செய்யப்படுகிறது. வர்ணாச்சிரம அபிமாநி அதிகாரி. ஆசாரவானுய புருஷனுக்கு சகாம கர்மப் பிரவிர்த்தி வாயிலாய்ச் சுவர்க்காதி பலத்தைப் போதிப்பது ஆகும். ஜைமிநி முநிவரால், "அநுய்ஜதீதி" என்பதை ஆதி யாக, "வித்ய தேவா அந்ய காலத்வாத் யதா யாஜ்யா ஸம்ப்ரைஷோ யதா யாஜ்யா ஸம்ப்ரைஷ:" என்பதை அந்த மாக உடைய, 347 சூத்திரம், பதினாறு பாதம், நான்கு அத்தியாயம் உள்ள, சங்கர்ஷண காண்டம் செய்யப்பட்டிருக்கின்றது. இதற்கு, உபவர்ஷ மஹரிஷி, 'விருத்தி' என்னும் வியாக்யாநமும், பாஸ்கர பட்டாசாரியர், "பாட்ட சந்திரிகை" என்னும் வியாக்யாநமும், செய்திருக்கின்றனர். சபர சுவாமி, "பாஷ்யம்" என்னும் வியாக்யாநமும் செய்திருக்கின்றனர். இதன்கண், கர்மமும், உபாசனையும், பிரதிபாதிக்கப்பட்டிருக்கின்றது. இந்த சங்கர்ஷண காண்டத்தினை விசார சாகர கிரந்த கர்த்தா நிச்சல தாஸர் ஐந்து அத்தியாயம் என்கின்றார்.

**உத்தர மீமாம்சை**:— வியாச முநிவரால், கீதா உபநிஷந்தில், இரண்டாவது மந்திர மாகிய, "அதாதோ பிரஹ்ம ஜிஞ்ஞாஸா" என்பதை ஆதி யாக, "அநா வ்ருத்தி: சப்தாத்" என்பதை அந்த மாக உடைய, 555 சூத்ரம், 192 அதிகரணம், 16 பாதம் உள்ள, நான்கு அத்தியாய ரூப, உத்தர மீமாம்சா சாஸ்திரம் செய்யப்பட்டிருக்கின்றது. இதில், அத்தியாயம் நான்குக்கும் அதிகரண பிரதாந சூத்ரம் 192, கௌண சூத்ரம் 363 ஆக இருக்கின்றது இதனது 134 சூத்ரம், 40 அதிகரணம் உள்ள, முதலாவது அத்தியாயத்திற்குச் ச[illegible]வய அத்தியாயம் என்று பெயர். அதில், எல்லா

உபநிஷத் வாக்கியங்களும், நேராகவேனும், பரம்பரையாகவேனும், பிரத்தியக் அபிந்ந அத்விதீயப் பிரஹ்மத்தினைப் பிரதிபாதநஞ் செய்கின்றன, அந்நியவற்றை அல்ல எனக் கூறப்பட்டிருக்கிறது. அதில், முதலாவது பாதம் 11 அதிகரணத்திலும், ஸ்பஷ்ட பிரஹ்ம லிங்கத்தோடு கூடிய வாக்கியங்களின் விசாரமும் 2-வது பாதம் 7 அதிகரணத்திலும், உபாஸ்யப் பிரஹ்மத்தினைக் கூறும் அஸ்பஷ்ட பிரஹ்ம லிங்கத்தோடு கூடிய வாக்கியங்களின் விசாரமும், 3-வது பாதம் 14 அதிகரணத்திலும், பெரும்பான்மையும் ஞேயப் பிரஹ்மத்தினைக் கூறும் அஸ்பஷ்ட பிரஹ்ம லிங்கத்தோடு கூடிய வாக்கியங்களின் விசாரமும், இவ் வாறு, மூன்று பாதங்களால் வாக்கிய விசார சமாப்தியும், 4-வது பாதம் 8 அதிகரணத்திலும், பிரதாந விஷயமாக்ச் சந்தேகிக்கப்பட்ட அவ்யக்த-அஜா-முதலிய பதங்களின் விசாரமும் செய்யப் பட்டிருக்கின்றது. 157 சூத்ரம், 47 அதிகரணம் உள்ள, இரண்டாவது அத்தியாயத்திற்குச் சமந்வய அத்தியாயம் என்று பெயர். அதில், முதலாவது அத்தியாயத்தால், வேதாந்தங்கட்கு அத்வயப் பிரஹ்மத்தில் சமந்வயம் சித்திக்கில், அதன்கண் சம்பாவிக்கப்பட்ட ஸ்மிருதி தர்க்கம் முதலியவற்றின் விரோதத்தினைச் சங்கித்து, அதன் பரிகார பூர்வம் அவிரோதம் காட்டப்பட்டிருக்கின்றது. அதில், 1-வது பாதம், 13 அதிகரணத்திலும், வேதாந்த சமந்வயத்திற்குச் சாங்கியர்-யோகர்-கணாதர்-முதலியோரது ஸ்மிருதிகளாலும், சாங்கியர் முதலியோரால் கூறப்பட்ட தர்க்கங்களாலும், உண்டான விரோத பரிகாரமும், 2-வது பாதம், 8 அதிகரணத்திலும், விசாரத்திற்குத் தன் பக்ஷத்தினை ஸ்தாபித்தல், அந்ய பக்ஷத்தினை நிராகரித்தல் ரூப இரு வடிவம் உளவாகலின், சாங்கியர் முதலியோர் மதங்கட்குத் துஷ்டத்

தன்மையினைப் பிரதிபாதித்தலும், 3-வது பாதம், 17 அதிகரணத்திலும், பூர்வ பாகத்தால், மஹா பூத சிருஷ்டி முதலிய சுருதிகட்குப் பரஸ்பர விரோத பரிகாரமும், உத்தர பாகத்தால் ஜீவ விஷய சுருதிகளின் பரஸ்பர விரோத பரிகாரமும், 4-வது பாதம், 9 அதிகரணத்திலும், இந்திரியாதி விஷய சுருதிகளின் விரோத பரிகாரமும், செய்யப்பட்டிருக்கின்றது. 186 சூத்திரம் 67 அதிகரணம் உள்ள, 3 வது அத்தியாயத்திற்கு, சாதந அத்தியாயம் என்று பெயர். அதில், எல்லாச் சாதநங்களின் நிரூபணஞ் செய்யப்பட்டிருக்கின்றது. அதன்கண், 1-வது பாதம், 6 அதிகரணத்திலும், ஜீவனுக்குப் பரலோக கமந நிரூபணத்தால் வைராக்கியப் பிரதிபாதநமும், 2-வது பாதம், 8 அதிகரணத்திலும், பூர்வ பாகத்தால், த்வம் பதார்த்த சோதனையும் உத்தர பாகத்தால், தத் பதார்த்த சோதநமும், 3 வது பாதம், 36 அதிகரணத்திலும், நிர்க்குணப் பிரஹ்மத்தில் நாநா சாகைகளில் படிக்கப்பட்ட புநர் உக்த (மீண்டும் கூறிய) பத உப சம்ஹார நிரூபணமும், பிரசங்கத்தாலும், சகுண வித்தையில் சாகாந்தரீய குண உப சம்ஹார அநுப சம்ஹாரங்களின் நிரூபணமும், 4-வது பாதம், 17 அதிகரணத்திலும் நிர்க்குணப் பிரஹ்ம வித்தைக்குப் பகிரங்க சாதநங்களான - ஆசிரம தர்ம - யக்ஞ - தாநாதிகளும் அந்தரங்க சாதநங்களான சம-தம-நிதித்யாசநாதிகளும் நிரூபணம் செய்யப்பட்டிருக்கின்றது. 78 சூத்திரம், 38 அதிகரணம் உள்ள, 4-வது அத்தியாயத்திற்கு, பல அத்தியாயம் என்று பெயர். அதில், சகுண நிர்க்குண வித்தைகளின் பல விசேஷ நிர்ணயம் பரிகாரதமோடு செய்யப்பட்டிருக்கின்றது. அதில், 1-வது பாதம், 14 அதிகரணத்திலும், சிரவணாதி ஆவிருத்தியால், நிர்க்குணப் பிரஹ்மத்தினை, அல்லது, உபாசனையின் ஆவிருத்

தியால், சகுணப் பிரஹ்மத்தினை, சாக்ஷாத்காரம் செய்து, ஜீவிக்கும் போதே, பாப புண்ணிய லேபநம் இன்றிய ஜீவந் முக்தியும், 2-வது பாதம், 11 அதிகரணத்திலும், மரணம் அடைகின்றவனுக்கு, உத் கிராந்திப் பிரகார சிந்தனையும், 3-வது பாதம், 6 அதிகரணத்திலும், சகுணப் பிரஹ்மத்தினை, உணர்ந்து மரித்தோனுக்கு, உத்தர மார்க்க நிருபணமும், 4-வது பாதம், 7 அதிகரணத்திலும், பூர்வ பாகத்தால், நிர்க் குண பிரஹ்ம வித்திற்கு, விதேக கைவல்ய பிராப்தியும், உத்தர பாகத்தால், சகுண பிரஹ்ம வித்திற்கு, பிரஹ்ம லோகத்தில் இருத்தலும், சொல்லப்பட்டிருக்கின்றது.

இந்தச் சூத்ரங்கட்கு கலி 3889-க்குச்சரியான, விக்கிர மார்க்க வருஷம் 845-ல், அல்லது, கலி 2593-க்குச் சரியான, நந்தந வருஷத்தில், மலையாளத்தில், காலடியில், அவதரித்த ஸ்ரீ சங்கர பூஜ்ய பகவத் பாத ஆசாரிய ஸ்வாமிகள், அதி கெம்பீர மான வாக்கியாமிருதம் அமைந்த, பாஷ்யம் என்னும் வியாக்யாநம் இயற்றியிருக்கின்றார்கள். இந்தப் பாஷ்யத்தின் மீது பத்ம பாத ஆசாரியர் என்பவர் பஞ்ச பாதிகை என்று ஒரு வியாக்யாநம் இயற்றியிருக்கின்றனர். பஞ்ச பாதிகையின் மீது பிரகாச ஆத்ம யதி என்பவர் விவரணம் என்று ஒரு வியாக்யாநம் இயற்றியிருக்கின்றனர். விவரணத்தின் மீது அகண்டாநந்த முநி என்பவர் தத்வ தீபநம் என்று ஒரு வியாக்யாநம் இயற்றியிருக்கின்றனர். விவரணத்தின் மீது நரசிம்ம ஆசிரம முநி என்பவர் பாவப் பிராகசம் என்று ஒரு வியாக்யாநம் இயற்றியிருக்கின்றனர். சங்கர பாஷ்யத்தின் மீது வாசஸ்பதி மிசிரர் என்பவர் பாமதி என்று ஒரு வியாக்யாநம் இயற்றியிருக்கின்றனர். பாமதியின் மீது அமலாநந்த சரஸ்வதி என்பவர் கல்ப்ப தரு என்று ஒரு வியாக்யாநம் இயற்றியிருக்கின்றனர். கல்ப்ப தருவின் மீது

அப்பய்ய தீக்ஷிதர் என்பவர் பரிமளம் என்று ஒரு வியாக்யாநம் இயற்றியிருக்கின்றனர். சங்கர பாஷ்யத்தின் மீது கோவிந்தாநந்த சுவாமி என்பவர் ரத்நப் பிரபை என்று ஒரு வியாக்யாநமும், சுத்தாநந்த சுவாமியின் சிஷ்யர் ஆநந்தகிரி என்பவர், நியாய நிர்ணயம் என்று ஒரு வியாக்யாநமும், இயற்றியிருக்கின்றனர்.

இந்தச் சூத்திரங்களின் மீது, கிருஷ்ணாநந்த சரஸ்வதி என்பவர் சித்தாந்த சித்தாஞ்சநம் என்று மிக விரிவான ஒரு வியாக்யாநமும், அப்பய்ய தீக்ஷிதர் என்பவர் நியாய ரக்ஷா மணி என்று விரிவான ஒரு வியாக்யாநமும், பாரதி தீர்த்த முநி என்பவர் நியாய மாலை என்று, சுலோகமும், வியாக்யாநமு மான வசநமும், உள்ள, ஒரு வியாக்யாநமும், ஆநந்தாத்ம சுவாமிகள் சிஷ்யர் சங்கராநந்த சுவாமிகள் என்பவர், தீபிகை என்று ஒரு வியாக்யாநமும், ராமாநந்த சரஸ்வதி என்பவர் பிரஹ்மாமிர்த வர்ஷிணி என்று, ஒரு விருத்தி ரூப வியாக்யாநமும், பரசிவேந்திர சரஸ்வதி சிஷ்யர், சதா சிவேந்திர சரஸ்வதி என்பவர், பிரஹ்ம தத்வப் பிரகாசிகை என்று, ஒரு விருத்தி ரூப வியாக்யாநமும், அநுபவாநந்த சுவாமி சிஷ்யர், அமலாநந்த சுவாமி என்பவர், சாஸ்தர தர்ப்பணம் என்று, ஒரு விருத்தி ரூப வியாக்யாநமும்,

இன்னும், இச் சூத்ரம் பாஷ்யம் முதலியவற்றை ஆதாரமாகக் கொண்டு சங்கராநந்த சுவாமிகள் என்பவர், ஆத்ம புராணம் என்று, ஒரு நூலும், அதற்கு காகா ராம பண்டிதர் என்பவர், சத் பிரசவம் என்று, ஒரு வியாக்யாநமும், செய்திருக்கின்றனர். மதுசூதந சரஸ்வதி என்பவர், அத்வைத சித்தி என்று, ஒரு நூலும், அதற்கு பிரஹ்மாநந்த சரஸ்வதி என்பவர், லகு சந்திரிகை என்று, ஒரு வியாக்யாநமும், லகு

சந்திரிகையின் மீது, விட்டலேச உபாத்தியாயர் என்பவர், விட்டலேசி உபாத்தியாயி என்று, ஒரு வியாக்யாநமும், அத்வைத சித்தியின் மீது, பலபத்திர ராமர் என்பவர், சித்தி, வியாக்யா என்று, ஒரு வியாக்யாநமும், பிரஹ்மாநந்த சரஸ்வதி என்பவர். குரு சந்திரிகை என்று, ஒரு வியாக்யாநமும், செய்திருக்கின்றனர். ஸ்ரீ ஹர்ஷ மிசிராசிரியர் என்பவர், கண்டந கண்ட காத்தியம் என்று, ஒரு நூலும், அதற்கு, (1) ஆநந்த பூரணர் என்பவர், கண்டந பக்கிகா (வாசகத்தின் போக்கு) விபஞ்ஜநம் (வித்யா சாகரி) என்று, ஒரு வியாக்யாநமும், (2) சங்கரமிசிரர் என்பவர், ஆநந்த வர்க்கனே (சாங்கரி) என்று, ஒரு வியாக்யாநமும், (3) பரமாநந்தர் என்பவர், கண்டந மண்டநம் என்று, ஒரு வியாக்யாநமும் (4) பவாநந்தர் என்பவர், கண்டந மண்டநம் என்று, ஒரு வியாக்யாநமும், (5) ரகு நாத சிரோமணி என்பவர், தீதிதி என்று, ஒரு வியாக்யாநமும், (6) வர்த்தமாநர் என்பவர், பிரகாசம் என்று, ஒரு வியாக்யாநமும், (7) வித்யாபரணர் என்பவர், வித்யா பரணி என்று, ஒரு வியாக்யாநமும், (8) பலபத்ர மிசிரர் புத்ரர் பத்ம நாப பண்டிதர், கண்டந டீகா என்று, ஒரு வியாக்யாநமும், (9) சுபம் கர மிசிரர் என்பவர், ஸ்ரீ தர்ப்பணம் என்று, ஒரு வியாக்யாநமும், (10) சரித்திர சிம்மர் என்பவர், கண்டந மஹா தர்க்கம் என்று, ஒரு வியாக்யாநமும், (11) பிரகல்ப மிசிரர் என்பவர், கண்டந கண்டநம் என்று, ஒரு வியாக்யாநமும், (12) பத்ம நாபர் என்பவர், சிஷ்ய ஹிதைஷிணி என்று, ஒரு வியாக்யாநமும், (13) கோகுலநாத உபாத்தியாயர் என்பவர், கண்டந குடாரம் என்று, ஒரு வியாக்யாநமும், (14) வாசஸ்பதி மிசிரர் என்பவர், கண்டந கண்ட காத்யோத்தாரம் என்று, ஒரு வியாக்யாநமும், (15) சங்கர சைதந்ய பாரதி

ஸ்வாமி என்பவர், சாரதாக்யா என்று, ஒரு வியாக்யாநமும், ஆக பதினைந்து வியாக்யாநங்களும், இன்னும் அநேக வியாக்யாநங்களும், செய்திருக்கின்றனர். சித்சுக ஆசாரியர் என்பவர், தத்வப் பிரதீபிகை என்று, ஒரு நூலும், அதன் மீது, பிரத்தியக் ரூப பகவான், நயநப் பிரசாதிநி என்று, ஒரு வியாக்யாநமும், செய்திருக்கின்றனர். தர்ம ராஜ தீக்ஷிதர் என்பவர். வேதாந்த பரிபாஷை என்று, ஒரு நூலும், அதன் மீது, ராம கிருஷ்ணர் என்பவர், சிகாமணி என்று, ஒரு வியாக்யாநமும், சிவ தத்தர் என்பவர், அர்த்த தீபிகை என்று, ஒரு வியாக்யாநமும், செய்திருக்கின்றனர்.

இன்னும், அநேகர் எல்லையின்றிய கிரந்தங்கள் இயற்றியிருக்கின்றனர். இன்னும், இந்தச் சூத்திரங்கட்கு, ஸ்ரீகண்டாசார்யர் என்பவர். பாஷ்யம் என்று, ஒரு வியாக்யாநமும், ராமாநுஜ ஆசாரியர் என்பவர், பாஷ்யம் என்று, ஒரு வியாக்யாநமும், மத்துவாச்சாரியர் என்பவர், பாஷ்யம் என்று, ஒரு வியாக்யாநமும், விஷ்ணு சுவாமி என்பவர், பாஷ்யம் என்று, ஒரு வியாக்யாநமும், விஞ்ஞாநேந்திர பிக்ஷு என்பவர். பாஷ்யம் என்று, ஒரு வியாக்யாநமும், செய்திருக்கின்றனர்.

தர்ம சாஸ்திரத்தில் அடங்குவன:— * கபில முநிவரால், "திரிவித துக்க அத்தியந்த நிவிர்த்தி அந்தயந்த புருஷார்த்த:"

---

* *கபிலர், "பிரம புத்திரர்" என்றும், "சாங்கிய பிரவர்த்தகர் அக்கிநி அவதாரக் கபிலர்" என்று பாரதத்திலும், "கர்த்தம ரிஷிக்கு தேவஹூதியினிடத்தில் பிறந்தவர் கபிலர்" என்று பாகவதத்திலும், சாங்கியப் பிரவசந பாஷ்ய ஆரம்பத்தில், "நாராயண அவதாரக் கபிலர் 22 சூத்திரங்களைச் செய்தார் என்றும், "மீண்டும் விரிவாக ஆறு அத்தியாய ரூப சூத்திரங்*

என்பதை ஆதியாக, " ... " என்பதை அந்த் மாக உடைய சூத்ரம் உள்ள, ஆறு அத்தியாய ரூப, 60 விஷயங்கள் உள்ள, நிரீச்வர சாங்கிய சாஸ்திரம் இயற்றப்பட்டிருக்கின்றது. அதன், முத லாவது அத்தியாயத்தில், விஷயங்களின் நிரு பணமும், 2-வது அத்தியாயத்தில், பிரதாந காரியங்களின் நிருபணமும், 3-வது அத்தியாயத்தில், விஷய வைராக்கிய நிருபணமும், 4-வது அத்தியாயத்தில், விரக்தர்க ளாகிய பிங்கள ஆகுர குமாரர்களது கதைகளும், 5-வது அத்தியா யத்தில், பரபக்ஷ கண்டந நிருபணமும், 6-வது அத்தியாயத் தில், சர்வார்த்த சங்கிரக நிருபணமும், செய்யப்பட்டிருக் கின்றது. பிரகிருதி புருஷர்களின் விவேக ஞாநத்தால், புருஷன் அசங்கன் என்னும் ஞாநம் உண்டாவது பிரயோ ஜநமாம். இதில், முக் குண ரூப பிரகிருதி தத்துவத்தினை மூலப் பிரகிருதி என்றும், கேவலம் காரணம் என்றும், ஸ்வதந்திரம் என்றும், நித்தியம் என்றும், அதன் பிரவிர்த்தி, புருஷர்களின் போக மோக்ஷத்தின் பொருட்டு உண்டா கின்றது என்றும், தன் பொருட்டுப் பிரவிருத்தி உண்டா கிற தில்லையென்றும் சத்துவத்தினதும், புருஷர்களினதும், அவிவேக ரூப பரிணமத்தினை அடைந்து, புருஷனைத் தன் குணத்தின் காரிய மாகிய சுக துக்க ரூப மோகத்தில் கட்டு கிறது என்றும், விவேக ரூப பரிணமத்தினை அடைந்து, சத்துவத்தினதும், புருஷர்களினதும், அந்யதாக் கியாதி

---

*களைச் செய்தார்" என்றும், சங்க்ஷேப விஸ்தாரத்தால், புநருக்தி யில்லை என்றும், ஒருவரே இரண்டற்கும் கர்த்தா என்றும், இப் பொழு திருக்கும் ஆறு அத்தியாய ரூப கபில சாஸ்திரம் அக்கி அவதார ரூப கபிலர் இயற்றியது என்றும், நான்கு பெயர் கபிலர் கூறப்படுகின்றனர் என உணர்க.*

வாயி லாய், அதன் அபவர்க்கத்திற்குக் காரண மாகின்றது என்றும், மஹத் ஆதி ஏழு தத்துவங்களும், பிரகிருதி விகிருதி ரூபம் ஆகின்றது என்றும், பதி னாறு தத்துவங்கள், கேவலம் விகிருதி என்றும், ஜீவ ஆத்ம ரூப புருஷன், சேதந ஸ்வரூப அசங்க உதாசீநன் என்றும் கூறப்பட்டிருக்கின்றது. இதற்கு, ஒருவர் பாஷ்யம் என்று ஒரு வியாக்யாநம் இயற்றியிருக்கின்றனர் இம் மதத்தினை அநுசரித்து ஈசுவர கிருஷ்ணர் என்பவர், 70 காரிகையில், சாங்கிய காரிகை என்று ஓரு நூலும், அதன் மீது. வாசஸ்பதி மிசிரர் என்பவர், சாங்கிய தத்வ கௌமுதி என்று, ஒரு வியாக்யாநமும், கௌமுதியின் மீது. பால ராம உதாசீந சாது என்பவர், வித்வத் சந்தோஷிணி என்று, ஒரு வியாக்யாநமும், சாங்கிய காரிகையின் மீது கௌட பாத சுவாமிகள் என்பவர், பாஷ்யம் என்று ஒரு வியாக்யாநமும், நாராயண தீர்த்தர் என்பவர், சாங்கிய சந்திரிகை என்று ஒரு வியாக்யாநமும் இயற்றியிருக்கின்றனர்

இந்தச் சாங்கிய காரிகையே ஸ்ரீ ஜகத் குரு சங்கர பகவத் பாத ஆசாரிய சுவாமிகள், தமது பாஷ்யத்தில் சாங்கிய மதத்திற்குப் பிரமாண மாக எடுத்து எழுதியிருக்கிறார்கள்.

இந்தச் சாங்கிய காரிகை, “ துக்கத் திரய அபிகாதாத் ” என்னும் காரிகையை ஆதி யாக, “ஏதத் பவித்ரம் அக்ர்யம்” என்பதை அந்த மாக உடைய 70 காரிகைகளை யுடையதாகின்றது. இதில், சாங்கிய சாஸ்திரத்தில் கூறும் விஷயங்கள், 1. பிரகிருதியின் இருப்பு. 2. அது ஒன்றே. 3. அது சுக துக்க மோக ரூப மாம். 4. பிரதாந புருஷர்களின் பேதம். 5. பிரகிருதி பரார்த்த மாம். 6. புருஷன் அநேகன். 7. பிரகிருதி புருஷர்களின் விபாகம். 8. பிரகிருதி புருஷ சம்யோ

கம். 9. தத்வ சாக்ஷாத்காரம் உண்டான பின் சரீர தாரணத்திற்கு யுக்தி. 10. புருஷன் அகர்த்தா ஆவ தில்லை. (இவை முக்யம்). 11. அவித்தை (தமஸ்). 12. அஸ்மிதை (மோஹம்). 13. இராகம் (மஹா மோஹம்). 14. துவேஷம் (தாமிசிரம்). 15. அபிநிவேசம் (அந்ததாமிசிரம்) (என விபர்யயம்). 16. (ஆத்யாத்மீகத்தில்) பிரகிருதி துஷ்டி (அம்ப). 17. உபாதாந துஷ்டி (சலிலம்). 18. கால துஷ்டி (ஓகம்). 19. பாக்கிய துஷ்டி (விருஷ்டி). 20. (பாஹ்ய துஷ்டியில்) பார துஷ்டி. 21. சுபார துஷ்டி. 22. பாராபார துஷ்டி. 23. அநுத்தமாம்பஸ் துஷ்டி. 24. உத்தமாம்பஸ் துஷ்டி. 25. (கரண அசாமர்த்தியம்) சுரோத்திரேந்திரிய அசாமர்த்தியம், செவிடு. 26. துவக் கிந்திரிய அசாமர்த்தியம், குஷ்ட ரோகம். 27. சக்ஷுரிந்திரிய அசாமர்த்தியம், குருடு. 28. சிஹ்வேந்திரிய அசாமர்த்தியம், ஜாட்டியம். 29. கிராணேந்திரிய அசாமர்த்தியம், கவர்ச்சி யின்மை. 30. வாக் இந்திரிய அசாமர்த்தியம், ஊமை. 31. பாணி இந்திரிய அசாமர்த்தியம், கோணுதல். 32. பாத இந்திரிய அசாமர்த்தியம், நொண்டல். 33 உபஸ்த இந்திரிய அசாமர்த்தியம், அலியா யிருத்தல். 34. குத இந்திரிய அசாமர்த்தியம், உதாவர்த்த ரோகம். 35. மநதின் அசாமர்த்தியம், மந்தம். 36. புத்தியின் அசாமர்த்தியம், பிரகிருதி துஷ்டி அபாவம். 37 உபாதாந துஷ்டி யபாவம். 38. கால துஷ்டி யபாவம். 39 பாக்கிய துஷ்டி யபாவம். 40. பார துஷ்டி அபாவம். 41. சுபார துஷ்டி அபாவம். 42. பாராபார துஷ்டி அபாவம். 43. அநுத்தமாம்பஸ் துஷ்டி அபாவம் 44. உத்தம அம்பஸ் துஷ்டி அபாவம். 45. (சித்தி யபாவம்) அத்யயந அபாவம். 46. சப்த அபாவம். 47. ஊஹ அபாவம். 48. சுஹ்ருத் பிராப்தி அபாவம். 49. தாந அபாவம் 50. பிரமோத அபாவம், 51. முதித அபாவம். 52.

மோதமாந அபாவம். 53. (சித்திகள்) அத்தியயாந (தார) சித்தி. 54. சப்த (சுதார) சித்தி. 55. ஊஹ (தாரதரம்) சித்தி. 56. சுஹ்ருத் பிராப்தி (ரம்யக்) சித்தி. 57. தாந (சதாமுதிதம்) சித்தி. 58. பிரமோத சித்தி. 59 முதித சித்தி. 60. மோதமாந சித்தி ஆகிய 60 விஷயங்கள் நிரூபிக்கப்பட்டிருக்கின்றன. இதில், கபில முனிவர் இயற்றிய சூத்திரத்திற் குறைவில்லா மல் விஷயங்கள் நிரூபிக்கப்பட்டிருக்கின்றமையின், சாஸ் திரம் என்று கொள்ளத் தக்க தாம். பிரகரண கிரந்தம் என்று நினையற்க என்று கூறப்பட்டிருக்கின்றது. ஸ்ரீ சங்க ராசார்ய ஸ்வாமிகளின் பரம குரு வாகிய கௌடபாதாசாரிய சுவாமிகள் இக் காரிகைகளின் மீது, பாஷ்யம் இயற்றியிருப் பதனுனே, இது மிகப் பெருமை யுடைய தாம்

§ பதஞ்சலி முனிவரால், "அத யோகாநுசாசநம்" என் பதனை ஆதி யாக, "புருஷார்த்த சூந்யாநாம் குணாநாம் பிரதி பிரசவ: கைவல்யம் ஸ்வரூப பிரதிஷ்டா வா சிதி சக்திரிதி" என்பதனை அந்த மாக உடைய, 195 சூத்ரம், நான்கு பாதம் உள்ள, யோக சாஸ்திரம் செய்யப்பட்டிருக்கிறது. அதில், முதல் பாதத்திற்கு, சமாதி பாதம் என்று பெயர். இதில்

---

*§ பதஞ்சலி—இவர் சேஷாவதாரம். ஒரு ரிஷி ஜலத்தில் சந்தி யோபாசனை செய்து கொண்டிருக்கும் பொழுது, அவருடைய அஞ்சலியில் தோன்றி, பூமியில் விழுந்தபடியால், பதஞ்சலி எனப் பெயர் பெற்றார். இவர், வாக்கின் அசுத்த பதங்களின் உச்சாரண ரூப மலத்தினைப் போக்க, பாணினி முனிவரின் வியா கரணத்தின் மீது, மஹா பாஷ்யம் செய்திருக்கிறார். விக்ஷேப ரூப அந்தக் கரண மலத்தினைப் போக்க, யோக சூத்திரங்களைச் செய்திருக்கிறார். சரீரத்தின் மல ரூப ரோக நிவிர்த்தியின் பொருட்டுச் சிகித்சை நூலைச் செய்திருக்கிறார்.*

உள்ள, 51 சூத்ரங்களிலும், சித்த விருத்தி நிரோத ரூப சமாதியும், அதன் சாதந மான அப்பியாசம் வைராக்கியம் முதலியனவும், 2-வது பாதத்திற்குச் சாதந பாதம் என்று பெயர். இதில் உள்ள, 55 சூத்ரங்களிலும், விக்ஷேப சித்த முள்ளவர்கட்குச் சமாதி சாதந மாகிய, இயமம் நியமம் ஆசநம் பிராணாயாமம் பிரத்யாகாரம் தாரணை தியாநம் சமாதி எனச் சமாதியின் அஷ்டாங்கங்களும், 3-வது பாதத்திற்கு, விபூதி பாதம் என்று பெயர். இதில் உள்ள, 55 சூத்ரங்களிலும், யோகத்தின் விபூதி (ஐச்வர்யங்) களும், 4-வது பாதத்திற்கு, கைவல்ய பாதம் என்று பெயர். இதில் உள்ள, 34 சூத்ரங்களிலும், யோகத்தின் பல னாகிய மோக்ஷமும் நிருபிக்கப் பட்டிருக்கின்றது.

இதில், பிரகிருதி (1). மஹத் தத்வம் (2). அஹங்காரம் (3). ஞானேந்திரியம்-5 (8). கர்மேந்திரிய பஞ்சகம்-1 (13). மநம் (14). பஞ்ச தன்மாத்திரை-15 (19). பஞ்ச பூதங்கள்-5 (24). புருஷன் (25). பரமேசுவரன் (26). என்று தத்துவங்கள் கூறப்படுகின்றது.

இனி, புராணம் 18, உப புராணம் 18, உப புராண உப புராணம் 18, ஆக 54 புராணங்க ளாம்.

(1) புராணம் 18 ஆவன :—

1. சிவனுக்கு—1. சைவம் 2. ஸ்காந்தம் 3. லைங்கம் 4. வாமநம் 5. கூர்மம் 6. பவிஷ்யத் 7. மாத்ஸ்யம் 8 மார்க்கண்டேயம் 9. வராஹம் 10 வாயவ்யம் (பிரமாண்டம்) எனப் பத் தாம்.

2. விஷ்ணுவுக்கு—1. வைஷ்ணவம், 2. பாகவதம், 3, நாரதீயம், 4. காருடம் என்னும் நான் காம்.

3. பிரஹ்மாவுக்கு—1 பிரஹ்மம், 2. பத்மம் என்னும் இரண்டு ஆம்.

4. அக்கினிக்கு—1. ஆக்நேயம் என்று ஒன்று ஆம்.

5. சூரியனுக்கு — 1. பிரஹ்ம வைவர்த்தம் என்று ஒன்று ஆம். ஆக ஐந்து தேவதையைக் குறித்துக் கூறும் புராணம் பதின் எட்டாம்.

பதினெண் புராணம்—1. பிரஹ்ம புராணம்–பத்தாயிரம் 215 அத்தியாயம் 13783 சுலோகம். 2. பத்ம புராணம்–ஐம்பத்தையாயிரம் 628 அத்தியாயம் 48452 சுலோகம். 3. விஷ்ணு புராணம் – ஆறாயிரம் (17000). 4. சைவ புராணம் – இருபத்து நாலாயிரம் சுலோகம் 7 சம்ஹிதை. 5 ஸ்ரீமத் பாகவத புராணம்–பதினெட்டாயிரம் (125000). 6. நாரதீய புராணம் – இருபத்தையாயிரம். 7. மார்க்கண்டேய புராணம்–முப்பத்தீராயிரம். 8. ஆக்நேய புராணம்–எட்டாயிரம் 383 அத்தியாயம் 11457 சுலோகம். 9. பவிஷ்யத் புராணம்–முப்பத்தோராயிரம் 4 பர்வம். 10. பிரஹ்ம வைவர்த்த புராணம்-பன்னீராயிரம் 4 காண்டம். 11. லிங்க புராணம் – பதினோராயிரம். 12. வராஹ புராணம் – இருபத்து நாலாயிரம். 13. ஸ்காந்த புராணம் – நூறாயிரம் (7 காண்டம் 81100). 14. வாமந புராணம்–பதினாலாயிரம். 15. கூர்ம புராணம் – ஆறாயிரம். 16. மத்ஸ்ய புராணம்–பதினாலாயிரம் 298 அத்தியாயம் 14062 சுலோகம். 17. காருட புராணம்–ஆறாயிரம். 18. பிரஹ்மாண்ட (வாயவ்ய) புராணம் பன்னீராயிரம் 112 அத்தியாயம் 10991 சுலோகம். ஆக நால் நூற்று எட்டாயிரம் கிரந்தம் என்று சொல்லப்படுகிறது. சுலோகம் வேறு. கிரந்தம் வேறு. எட்டு உயிரெழுத்தாகச் சேர்த்தால் ஒரு கிரந்தம் எனக் கணக்கிடல் வேண்டும். முப்பத்து இரண்டு லக்ஷத்து அறுபத்து நாலாயிரம் உயிர் எழுத்துக்களைக் கொண்டது பதின் எண் புரா

ணம் ஆகும். இந்தப் பதின் எண் புராணத்திற்கும், வியாசர் கர்த்தா ஆவர். இவை, சர்க்கம் பிரதி சர்க்கம் வம்சம் மந்வந்தரம் வம்சாநுசரிதம் என்னும் பஞ்ச லக்ஷணத்தினை யும், வைதிக தருமம், தாந்திரிக தருமம் என்பவற்றையும் கூறும்.

(2) உப புராணம் 18 :—

1. சநத் குமார புராணம் – சநத் குமாரர் செய்தது 2. நரசிம்ம புராணம். 3. நந்தி புராணம் 4 சிவ தரும புராணம். 5. துர்வாச புராணம், 6. நாரதீய புராணம். 7. காபில புராணம். 8. மாநவ புராணம். 9. ஔசந புரா ணம்–உசநாவால் சொல்லப்பட்டது. 10. வாசிஷ்ட லிங்க புராணம். 11. வாருண புராணம். 12. காளிகா புராணம். 13. சாம்பேச புராணம். 14. சௌமிய புராணம். 15 சௌர புராணம். 16. பராசர புராணம்–பராசரர் செய்தது. 17. பார்க் கவ புராணம். 18. தேவீ பாகவத புராணம் – வியாசர் செய்தது.

(3) உப புராண உபா புராணம் 18 :—

1. சுதர்சந புராணம் 2. சூரிய புராணம். 3. பிருஹத் ஸ்வயம்பு புராணம் 4. மகா பாகவத தேவீ புராணம். 5. ஹரி வம்ச புராணம் 6. பிருஹத் தர்ம புராணம். 7. ஆதி புரா ணம். 8. கல்கி புராணம் – மகரிஷி வேதவியாசர் செய்தது. 9. கணேச புராணம். 10. ஜைமிநீய புராணம். 11. ஸ்ரீமத் தேவீ பாகவதம். 12. நிருசிஹ்ம புராணம். 13. வாயு புராணம் – வியாச தேவர் செய்தது. 14. சாம்ப புராணம். 15. சௌர புராணம்–த்வைபாயநர் செய்தது. 16. காலிகா புராணம். 17. ஈசாந புராணம். 18. மாகேசுவரம். 19. மாரீ சம். 20 பிரஹ்மாண்டம். 21. வாசிஷ்டம்.

(4) இதிகாசம் :—

1. பாரதம் – வியாசரால் செய்யப்பட்டது. 2. ராமாயணம்-வால்மீகரால் செய்யப்பட்டது. 3 சிவ ரஹஸ்யம். 4. பக்த விலாசம். 5. பக்த லீலாமிருதம். 6 சிவ லீலாமிருதம். 7. சங்கர திக் விஜயம்–வித்தியாரண்ய சுவாமிகளால் செய்யப்பட்டது. 8. மந்திர சாஸ்திரம்.

(5) அறு பத்து நாலு கலை ஆவன :—

1. அக்ஷர லக்ஷணம். 2. லிகிதம். 3. கணிதம் 4 வேதம். 5 புராணம். 6. வியாகரணம். 7. நீதி சாஸ்திரம். 8 ஜ்யோதிஷ சாஸ்திரம். 9. தர்ம சாஸ்திரம். 10. யோக சாஸ்திரம். 11. மந்திர சாஸ்திரம். 12 சகுந சாஸ்திரம். 13. சிற்ப சாஸ்திரம். 14. வைத்திய சாஸ்திரம். 15. ரூப சாஸ்திரம். 16. இதிகாசம். 17. காவியம். 18. அலங்காரம். 19 மதுர பாடநம். 20. நாடகம். 21. நிருக்தம். 22 சப்தப் பிரஹ்மம். 23 வீணை 24. வேணு. 25. மிருதங்கம். 26. தாளம். 27. அஸ்திர பரீக்ஷை. 28. கநக பரீக்ஷை. 29. ரத பரீக்ஷை. 30 கஜ பரீக்ஷை 31. அசுவ பரீக்ஷை, 32. ரத்ந பரீக்ஷை, 33. பூமி பரீக்ஷை 34, சங்கிராம விலக்ஷணம், 35. மல் யுத்தம். 36 ஆகருஷணம். 37. உச்சாடநம், 38. வித்துவேஷணம். 39. மதந சாஸ்திரம். 40. மோகநம். 41. வசீகரணம். 42, ரச வாதம். 43 காந்தருவ வாதம். 44, பைரவ வாதம். 45. கௌத்துவ வாதம். 46. தாது வாதம். 47. காருடம். 48. நஷ்டம். 49. முஷ்டி வாதம். 50. ஆகாயப் பிரவேசம். 51. ஆகாய கமநம். 52. பரகாயப் பிரவேசம். 53 அதிரிசயம். 54. இந்திர ஜாலம். 55. மாகேந்திர ஜாலம். 56. அக்கிநி ஸ்தம்பம். 57. ஜல ஸ்தம்பம். 58. வாயு ஸ்தம்பம். 59. திருஷ்டி ஸ்தம்பம். 60. வாக் ஸ்தம்பம். 61. சுக்ல ஸ்தம்பம். 62 கன்ன

ஸ்தம்பம். 63 கடக ஸ்தம்பம். 64. அவஸ்தைப் பிரயோகம் என்பன ஆம்.

(6) ஆக மங்கள் 28 ஆவன :—

1. காமிகம், 2. சிந்தியம், 3. யோகசம், 4. காரணம், 5. அசிதம், 6. தீப்தம், 7. சூக்ஷமம், 8. சஹஸ்ரம், 9. அம்சுமான், 10. சுப்பிர போதம், 11. விஜயம், 12. சந்திர ஞாநம், 13 ஸ்வாயம்புவம், 14. விமலம், 15 வீரம், 16. விம்பம், 17. புரோத்கீதம், 18. லலிதம், 19. நிசுவாசம், 20. அநிலம், 21. ரௌரவம், 22. சித்தம், 23. முகுடம், 24. சந்தாநம், 25. சர்வோத்தமம், 26. பாரமேசுவரம், 27. கிரணம், 28. வாதுளம் என்பன ஆம்.

இவை, மந்திரம் தந்திரம் சித்தாந்தம் எனப் பெயர் பெற்று, ஒவ் வொன்றும் கோடி கிரந்தங்கள் உள்ளன வாம்.

உப ஆகமங்கள் ஆவன :— காலோத்தரம் முதலியன உள்ளன.

ஆகமம் ஆவது ஸ்ரீ வித்தை. அது, மந்திரமும், சக்கரமும் என இரு வகைப்படும். மந்திரம் ஆவது, சிவத்துடைய எழுத்தும், சத்தியி னுடைய எழுத்தும், மந்மத னுடைய எழுத்தும், பூமியி னுடைய எழுத்தும், சூரிய னுடைய எழுத்தும் சந்திர னுடைய எழுத்தும், காம னுடைய எழுத்தும், ஆகாயத்தி னுடைய எழுத்தும், இந்திர னுடைய எழுத்தும், பரா சக்தியி னுடைய எழுத்தும், காம னுடைய எழுத்தும், திருமா லுடைய எழுத்தும், மூன்று கண்ட மாய், மாயையின் எழுத் தொன்றையும் மும் முறை யாக அமைத்து, இவ் வாறு, பதி னைந் தாகப் பொருந்துகின்ற எழுத்துக்கள் மந்திரம் எனப்படும்.

சக்கரம், சிவ கோணம் நான்கும், சக்தி கோணம் ஐந்தும், ஆகிய இவ் வொன்பது கோணத் துள்ளும் உண்டாவது, நாற் பத்து முக் கோணம். நாற் பத்து முக் கோணமும், அதற்கு மேல் வட்ட மாக எழுதி நிறைத்த எட் டிதழும், அதற்கு மேல் வட்டமாக எழுதி நிறைத்த பதி னாறு இதழும், அதற்கு மேல் மூன் று வட்டமும், அதற்கு மேல் மூன் று சதுரமும் சேர்ந்தது, தேவி பாத ரேகை யாம். இது சக்கரம் ஆம்.

இதனை அர்ச்சனை செய்யும் முறைமை யாவன—மேரு பிரஸ்தாரம், கைலாய பிரஸ்தாரம். பூ பிரஸ்தாரம் என மூ வகை யாம். சோடச நித்த தேவதைகள் சக்கரத்தினு டைய அங்க மாக வியாபித்திருப்பது, மேரு பிரஸ்தாரம் என் று வசிட்ட சங்கிதையில் தேவியை நோக்கி சிவனால் சொல்லப்பட்டிருக்கின் றது.

சோடச நித்த தேவதைகள் அக்ஷர உருவ மாக இருப் பதனால், அவ் வக்ஷரங்கள் தாமே சக்கரத்தி னுடைய அங்க மாக வியாபித் திருப்பது கைலாசப் பிரஸ்தாரம் என் று சநந்த சங்கிதையிலே ரிஷிகளை நோக்கி சநந்தராலே சொல் லப்பட்டிருக்கின் றது.

வசநி முதல் எண்மரும், நித்த தேவதைகள் பதி னாறு வரும், யோகிநிகள் பன் னிரு வரும், ஆகருஷிணிகள் நால்வரும், பாசமும், அங்குசமும் என் று சொல்லப்படும் தேவதைகள், சக்கரத்தி னுடைய அங்க மாக வியாபித்தி ருப்பது, பூ பிரஸ்தாரம் என் று சநத் குமார சம்ஹிதையிலே சநத் குமாரரால் சொல்லப்பட்டிருக்கின் றது.

எண்மர் — வசநி – காமேசுவரி — மோகிநி — விமலே, அருணை, சயிநி, சர்வேசுவரி, கௌளிநி எனக் கூறப்படுவர்.

பதி னறுவர் நித்த தேவைகள், திரிபுரசுந்தரி, காமேசுவரி நித்தியாநித்தியை, பகமாலினி, நித்தியக்கிலினே, பேருண்டை, வஹ்நிவாசிநி, மகா வித்தியேசுவரி, ரௌத்திரி, த்வரிதை, குள சுந்தரி, நித்தியாநில பதாகை, விஜயை, சர்வ மங்களை, ஸ்வாலா மாலிநிகை, சித்திரை என்பவர்கள் ஆவர்.

பன்னிருவர் யோகினிகள்—வித்தியா யோகினி, ரேசிகா யோகினி, மோசிகா யோகினி, அமிர்தா யோகினி. தீபிகா யோகினி, விஞ்ஞாந யோகினி, ஆப்பியா யோகினி, வியாப்பியா யோகினி, மேயா யோகினி, வியோம ரூபா யோகினி, சித்ரூபா யோகினி, லக்ஷுமி யோகினி ஆவர்.

நால்வர் ஆகர்ஷிணிகள் — ஸ்கந்த ஆகர்ஷிணி ரூப ஆகர்ஷிணி, ரஸ ஆகர்ஷிணி, பரிச ஆகர்ஷிணி ஆவர்.

ருத்திர யாமளம் என்னும் நூலினுள், இச் சக்கரம், தேவர்—கந்தருவர்—யக்ஷர், ராக்ஷதர்—அசுரர் இவர்களாலே உபாசிக்கப்பட்டது என்றும், நான்கு வர்ணத்துக்கும், நான்கு ஆசிரமத்துக்கும், உபாசிக்கத் தகும் என்றும், உபாசிக்கில், வாழ் நாளும், புகழும், நன் மக்களும், செல்வமும், வசியமும், ஸ்வர்க்கமும் என இவை முதலாயின நன்மைகளைத் தரும் என்றும் கூறப்பட்டிருக்கின்றது. இவற்றின் விரிவெல்லாம் அந் நூலிற் காண்க.

## ஸ்மிருதிகள் 21

மநு, யாஞ்ஞவல்கியர், விஷ்ணு, யமா, அசங்கிரா, வசிஷ்டர், தக்ஷர், சம்வர்த்தர், சாதாதபர், பராசரர், கௌதமர், சங்க லிகிதர், ஆரீதரர், ஆபஸ்தம்பர், உசாநா, வியாசர், காத்தியாயநர், பிரஹஸ்பதி, தேவலகர், நாரதர்,

பைடீநசி, என்னும் இரு பத்தொருவரும், இன்னும் சிலராலும் விபர மாக வர்ணாசிரம தர்மங்க ளாகிய ஸ்மிருதி, ரூப ஈநு, தர்ம சாஸ்திரங்கள் செய்யப்பட்டன.

சக்தி சம்பந்த அறுபத்து நாலு கலை ஆவன்.

1. மாயா சம்பிரதம், 2. தத்துவ சம்பிரதம், யோகினி சாலம், 4. மாலினி வித்தை 5. மகா சம்மோஹநம், 6. மநோ பேதம், 7. தந்திர பேதம், 8. குய்ய தந்திரம், 9. கலா வாதம், 10. கலா சாரம், 11. குண்டிகா மதம், 12. அஞ்சன வித்தை, 13. பாதுகை, 14. பாந பாத்திரம், 15 பரகாயப் பிரவேசம், 16. இரச வாதம் இவை முதலியன.

1. மாயா சம்பிரதம்—ஓர் இடத்தில், ஊர் போல, வநம் போல, மலை போல, நதி போலத், தோற்றுவித்தல்.

2. தத்துவ சம்பிரதம்—ஒரு பூதத்தில், ஒரு பூதம் தோற்றுவித்தல். இதனை, மகேந்திர ஜாலம் என்றும் சொல்வர்.

3. யோகினி ஜாலம்—மயாநத்தில் உபாசித்து யோகினி களைக் காண்பிப்பது.

4. மாலினி வித்தை—சமுத்திரங் கடக்கச் செய்வது.

5. மகா சம்மோகநம் — விழித்திருக்கின்றவர்களை மெய்ம் மறந்து, நித்திரை கொள்ளச் செய்வது.

6. மநோ பேதம்—மநத்தைப் பேதிக்கச் செய்வது.

7. தந்திர பேதம்—ஓரிடத்தும் வெளிப்படாத மந்திரத்தை வெளிப்படச் செய்வது.

8. குய்ய தந்திரம்—வெளிபட்டத்தை மறைப்பது.

9. கலா வாதம்—மந்மத வித்தை.

10. கலாசாரம்—வருணத்தை அதிகப்படுத்துவது.

11. குண்டிகா மதம்—குளிகையினாலே இளமை அடைவது.

12. அஞ்சந வித்தை—மறைபட்ட பொருள்களைக் காண்பிப்பது.

13. பாதுகை—செருப்பைத் தொட்டு நினைக்கில் நினைத்த இடத்தில் விடுவது.

14. பாந பாத்திரம்—ஒரு கரகத்தில், நினைத்த பாநம் எல்லாம் தருவது.

15. பர காயப் பிரவேசம—பிராணன் இல்லாத உடம்பில் புகுவது.

16. இரச வாதம் — உலோகத்தைப் பேதிக்கச் செய்வது.

1. சகளாதிகாரம் சிற்ப நூல். அகஸ்தியர் செய்தது.
2. விசுகர்மியம்—சிற்ப நூல்.
3. சிற்ப ரத்நம்.
4. மார்சாரம்.
5. மய மதம்.
6. பிரஹ்மீய சித்ர கர்ம சாஸ்திரம்,
7. சரஸ்வதீய சித்ர கர்ம சாஸ்திரம்.

இவை சிற்பநூல்.

இவ் வாறே, இன்னும் 48 கலையின் பெயரும், பொருளும், சக்தி சம்பந்த மான நூலில் கண்டு தெளிக.

பதின் நான்கு, பதின் எட்டு வித்தை முற்றுப் பெற்றது. 1

**அவதாரிகை.**

சைமினி சூத்திரத்தின் மீது. சபர சுவாமிகளால் சாபர பாஷ்யம், குமாரில பட்டாசாரியரால் பாட்ட மதம் வார்த்திக ரூப வியாக்யானம் பிரபாகரரால் பிரபாகர மத மென மூன் றுண செய்யப் பட்ட தெனக் கூறுகின்றார்.

சாற்றியவச் சைமினிசூத் திரத்திற்கு மிக்க
சாபரமென் றொருபாடி யம்புரியப் பட்ட,
தேற்றமிகு மம்மீமாஞ் சைக்கு மதம் பாட்ட
மெனவொன் று பட்டாசா ரியனுல்வந் தன்று,
போற்றுமவன் சீடனு கியபிரபா கரனுற்
புகழ்பிரபா கரமெனவோர் மதாந்தரநன் கமைய,
வாற்றியவச் சாபரபா டியமதற்கு விளங்க
வாக்கப்பட் டுலகமெலா மறிந்திடனின் றதுவே. 2

இ-ள. சாற்றிய—(முன்னர்க்) கூறிய, அச் சைமினி—அந்தச் சைமினி பகவானுல் (செய்யப்பட்ட), சூத்திரத்திற்கு – சூத்திரத்திற்கு. மிக்க—உயர்வு (பொருந்திய), சாபரம்—சாபர (பாஷியம்), என்று—என, ஒரு—ஒரு. பாடியம் - பாஷியம், புரியப்பட்டது – (சபர சுவாமிகளால்) செய்யப்பட்டது, ஏற்றம்—உயர்வு, மிகும்—மிகுந்த, அம்—முன்னர்க் கூறிய, மீமாஞ்சைக்கு— (பூர்வ) மீமாஞ்சைக்கு. பாட்டம் மதம் – பாட்ட மதம், என—என்று. ஒன்று – (ஒரு வார்த்திக ரூப வியாக்யானம்), பட்டாசாரியனுல் – (சுப்பிரமண்யாவதாரமாகிய குமாரில)பட்டாசாரியாரால், வந்தன்று—செய்யப்பட்டது.

போற்றும்-(யாவரும்) துதிக்கின்ற, அவன்-அந்தக் குமாரில பட்டாச்சாரியரின். சீடன் ஆகிய-சிஷ்ய னுகிய, பிரபாகரனுல்-பிரபாகர பட்டாச்சாரியரால் நன்கு - செவ்வை யாக, அமைய - (அருந்தங்கள்) பொருந்தும்படி, ஆற்றிய - செய் திருக்கின்ற, அச் சாபர பாடியமதற்கு - முன்னர்க் கூறிய (சபர ஸ்வாமியினுல் செய்யப்பட்ட) சாபர பாஷியத்தின் மீது, புகழ்-(யாவரும்)கீர்த்திக்கும்படி, பிரபாகரம்-பிரபாகர (மத)ம், என-என்று, ஓர்-ஒரு (வியாக்யாந ரூப), மதாந்தரம்-வேறு மதம், விளங்க- (உலகத்தில் நன்ருக) விளங்கும்படி, ஆக்கப்பட்டு - செய்யப்பட்டு, உலகம் - இவ் வுலகத்தி லுள்ளார், எலாம்-யாவரும். அறிந்திட-உணர்ந்து (கர்மத் தினை அநுஷ்டித்து மோக்ஷத்தினை அடையும்படி யாக, நின்றது - இருக்கின்றது. எ-று. ஏ-அசை.

'வந்தன்று' என்பது வந்தது என்னும் பொரு ளுடையது. இதில் 'அன்' என்பது சாரியை யாகும். வந்தன்று, நின்றது என்பனவற்றிற்குப் போந்த பொருள் கூறப் பட்டன என்க.

'பாடியமது' என்பதில். அது பகுதிப் பொருள் விகுதி. பூர்வமீமாம்சைக்கு, சபரசுவாமியால் செய்யப்பட்ட பாஷ்யத்தை சாபர பாஷ்யம் என்பர். சுப்பிரமணிய அவதார மாகிய குமாரில பட்டாச்சரியரால் செய்யப்பட்ட உரையினை வார்த்திகம் என்பர். குமாரிலபட்டர் மாணவர் பிரபாகர பட்டாசாரியர், சாபர பாஷ்யத்தின் மீது பிரபாகர மதம் என்று சொல்லும்படி யாக. ஒரு வியாக்யாநம் செய்தனர். அதனை, ப்ராபாகர மதம் என்று வழங்குவர். 2.

உத்தர பாகம், சகுண நிர்க்குணப் பிரஹ்மப் பிரதி பாதக மாய் உத்தர மீமாம்சை என நாம வைத்து, வியாச பகவானுல் எட்டத்தியாய வடிவ சூத்திர மாகச் செய்யப் பட்ட தாம். அவற்றுள், நான் கத்தியாயம் தேவதா காண்டம் ஆம். அதற்கு, பலபத்திர ராமரால், தேவதை லக்ஷணம் விளங்க ஓர் உரை செய்யப்பட்டது. உத்தர பாக நான் கத்தியாயம் பிரம காண்டம் ஆம் எனக் கூறு கின்ருர்.

**உரைத்தவிரண் டாங்கூறு பிரமமுரைப் பதனு**
**லுத்தரமீ மாஞ்சையெனப் பட்டருள்கூர் வியாதன்,**
**தெரித்தசூத் திரவடிவ மாகியிரு நான்கத்**
**தியாயமா மவற்றுண்முத னன்கத்தி யாயம்,**
**விரித்தலுறு தேவதா காண்டமெனப் பட்டு**
**விளங்குறுதெய் வதவிலக் கணம்பலபத் திரனு,**
**னிரைத்துரைசெய் யப்படுமே னன்கத்தி யாய**
**நிகழ்பிரம காண்டமென வேநிகழ்த்தப் படுமால்.**
(3)

இ-ள். உரைத்த—(முன்னர்க்) கூறிய, இரண்டு ஆம்—இரண் டாவ தாகிய, கூறு—பாக மானது, பிரமம்—(சகுண நிர்க்குணப்) பிரஹ்மத்தை, உரைப்பதனல்-கூறுவதனல், உத்தர மீமாஞ்சை—பின் விசாரம், எனப்பட்டு—என்று (யாவராலும் நாமம்) இடப்பட்டு, கூர்—மிகுந்த, அருள்—காருண்யத்தினை யுடைய, வியாதன்—வியாச (பகவா)ன், தெரித்த—செய்த, சூத்திர வடிவம் ஆகி—சூத்திர மாகிய ஸ்வரூபத்தினை யுடைய தாய், இரு நான்கு—எட்டு, அத்தியாய மாம்—அத்தியாயங்களை யுடைய தாம், அவற்றுள்—(வியாச பகவான் சூத்திர ரூப மாகச் செய்து எட்டு அத்தியாயங்களை

யுடையதா யுள்ள) உத்தர மீமாஞ்சா கிரந்தத்தினுள், முதல் – பிரதமத்தி லுள்ள, நான்கு அத்தியாயம் – நான்கு அத்தியாயங்களிலும், தெய்வத இலக்கணம்–தேவதைகளின் லக்ஷணம், விரித்தல் உறு–விரி வாக, விளங்கு உறு–விளங்குகின்றமையின், தேவதா காண்டம் – (தேவதைகளின் ஸ்வரூபத்தினைப் பிரதிபாதிக்கும்) பக்தி காண்டம், எனப்பட்டு – என்று (யாவராலும்) கூறப்பட்டு, பலபத்திரனல்– பலபத்திர (ராம)ரால், உரை– (அதற்கு ஒரு) வியாக்கியாநம், நிரைத்து–கிரம மாக, செய்யப்படும் - இயற்றப்பட்டிருக்கின்றது, மேல்–(அதன்) பின் உள்ள, நான்கு அத்தியாயம்– நான்கு அத்தியாயங்களின் தொகுதி யானது, நிகழ்–விளங்கா நின்ற, பிரம காண்டம்–பிரஹ்ம (ஞாந) காண்டம்–என - என்று, நிகழ்த்தப்படும் – (யாவராலும்) சொல்லப்படுகின்றது. ஏ-ஆல் அசை. எ-று.

உத்திர மீமாம்சை வியாச பகவான், சகுண நிர்க்குணப் பிரஹ்மப் பிரதிபாதக மாய் எட்டு அத்தியாயம் 555 சூத்திரம் செய்தனர். முதல் நான்கு அத்தியாயம் தேவதா காண்டம். அதற்கு பலபத்திர ராமர், வியாக்யாநம் செய்தார். பின் நான்கு அத்தியாயம் 555 சூத்திரம், நிர்க்குணப் பிரஹ்மப் பிரதிபாதகத் தன்மையினல், பிரஹ்ம ஞாந காண்டம் என்று கூறப்படும்,

உத்தர மீமாஞ்சை சாத்திய விஷயத்தைக் கூறுதல் குறித்து, அதனை யுலகிற் குதவிய வாதராயணரை, "அருள் கூர் வியாதன்" எனப் புகழ்ந்தன ரென்க. 3.

பிரஹ்ம காண்டம், ஜீவப் பிரஹ்ம ஐக்கிய பிரதிபாத நத்தால், ஸ்ரீ ஜகத் குரு, சங்கராச்சாரிய ஸ்வாமிகள், ஈடும் எடுப்பும் இன்றிய ஒரு பாஷ்ய ரூப உரை செய்தார்கள். பாஷ்யத்தின் மீது விவரணச்சாரியர் விவரண வியாக்யாநம் செய்தார்கள். இதுவே, வேதாந்த சாஸ்திரம் ஆம். இந்த வேதாந்த விரிவை, சாஸ்திரம் கூறிய கிரம மாகக் கூறுவாம் என்கின்றார்.

அப்பிரம காண்டத்துட் சிவமொடுயி ரயிக்க
மறைதலாற் சங்கரா சாரியனாங் குருவா,
லொப்பரிய பாடியமொன் றுரைக்கப்பட் டதுபின்
னுரைத்ததற்கு விவரண சாரியனென் பவனாற்,
செப்பரிய விவரணமாக் குறப்பட்ட ததுவே
தெரியின்வே தாந்தநூ லென்றுரைக்கப் படுமா,
லிப்பெரிய வேதாந்த நூற்பொருளி னகல
மெங்ஙனமென் றிடினுரைத்து மியம்பியநூன்
[முறையே. (4)

இ-ள். அப் பிரம காண்டத்துள் - முன்னர்க் கூறியுள்ள (நான்கு அத்தியாய ரூப) பிரஹ்ம காண்டத்தினுள், உயிர் ஒடு - ஜீவனோடு, சிவம் - பிரஹ்மத்திற்கு, ஐக்யம் - ஏகத் தன்மை, அறைதலால் - பிரதிபாதிக்கின்றபடியால், சங்கராசாரியன் ஆம் - சங்கராசாரிய ஸ்வாமிக ளாகிய, குருவால் - ஆசாரியரால், ஒப்பு அரிய - உவமை யின்றிய, ஒன்று பாடியம் - ஒரு பாஷியம், உரைக்கப்பட்டது - செய்யப்பட்டது, உரைத்ததற்கு - கூறிய அந்தப் பாஷியத்திற்கு, பின் - பின்னர் (பத்ம பாத ஆசாரியர் பஞ்ச பாதிகை என்று ஒரு வியாக்யாநம் செய்தனர். அந்த பஞ்சபாதிகையின் மீது பிரகாச ஆத்ம யதி யாகிய), விவரண ஆசாரியன்-

விவரண ஆசாரியன், என்பவனால்—என்று கூறப்படுபவரால், செப்பு அரிய—சொலற் கரிய, விவரணம்—விவரணம்(என்னும் வியாக்யாநம்). ஆக்குறப்பட்டது — செய்யப்பட்டது. தெரியின்—விசாரிக்குமிடத்து, அதுவே — அந்த விவரணமே, வேதாந்த நூல் — வேதாந்த சாஸ்திரம், என்று — என, உரைக்கப்படும் — (பெரியோர்களால்) சொல்லப்படும், இப் பெரிய—இந்த விரி வாகிய, வேதாந்த நூல் — வேதாந்த சாஸ் திரத்திற் கூறும், பொருளின்—அருத்தத்தின், அகலம் — பெருமை, எங்ஙனம் — எவ் வாறு, என்றிடின் — எனக் கேட்கின், இயம்பிய — முன்னர்க் கூறிய, நூல் — வேதாந்த சாஸ்திரத்தில் கூறி யுள்ள, முறையே - கிரம மாகவே, உரைத்தும்—(யாம்) கூறு வாம். ஆல்—அசை. எ-று

“ஒப்பு அரிய பாடியம்” என்றது, ஈடும் எடுப்பும் இன்றியது ஆம். சங்கர பாஷ்யத்தின் மீது, பத்ம பாதாச் சாரியர், பஞ்ச பாதிகை என்று ஒரு வியாக்யாநம் செய்த னர். அந்தப் பஞ்ச பாதிகையின் மீது, பிரகாச ஆத்ம யதி என்வர். விவரணம் என ஒரு வியாக்யாநம் செய்தனர். அதனா லவர், விவரணாச்சாரியர் என வழங்கப்படுவர். இவற்றையே மூ வாயிரம் வருஷங்கட்கு முன்னர் வேதாந்த சாஸ்திரம் என்று வழங்கி வந்தனர். ஸ்ரீ பகவத் பாதாளே உலகி லஞ்ஞாநத்தை யழிக்கும் ஞாநத்தை யளிக்க வந்த ஆசாரியர் என்பதை விளக்கச், சாபரர், பட்டர், என்பன போல, வெறிதே கூருது. “சங்கராசாரியனாங் குருவால்” எனச் சிறப்பித்துக் கூறினரென்க 4

சாஸ்திர ஆரம்பத்தில், ஆசீர்வாதம், நமஸ்காரம், வஸ்து நிர்த்தேசம் என மங்கள ஆசரணம் மூன்று. பதம் பதார்த்தம் - வாக்கிய யோஜநா, ஆக்ஷேப சமாதாநம்

என வியாக்யாந பஞ்ச லக்ஷணம், விசேஷம், விசேஷியம், கர்த்தா, கர்மம், கிரியை, அந்நுவய பஞ்ச லக்ஷணம், விஷயம் சம்பந்தம் பிரயோசநம் அதிகாரி, அநுபந்த சதுஷ்டயம் என 17 விஷயங் கூறுகின்றார்.

வாய்த்தநூன் முகத்துரைக்கு மங்களா சரணை
வாழ்த்துவணக் கொடுவத்து நிர்த்தேச
மெனமூன்,
றாத்தபதம் பதப்பொருளே வாக்கியயோ சனையே
யறிவினு விடையிவையைந் துரையினிலக்
கணமாங்,
கோத்துரைசெய் விசேடவிசே டியங்கருத்தா கருமங்
கொள்கிரியை யிவையைந்தந் நுவய லக்
கணமாஞ்,
சாற்றுமநு பந்தசதுட் டயநூற்கு விடயஞ்
சம்பந்தம் பயனதிகா ரிகளெனநான் கறியே. (5)

இ-ள். வாய்த்த - (மோக்ஷ சாதந மாகக்) கிடைத்த, நூல்-சாஸ்திரத்தினது, முகத்து-ஆரம்பத்தில், உரைக்கும்-கூறுகின்ற, மங்களா ஆசரணை - மங்கலக் கோட்பாடு, வாழ்த்து - ஆசீர்வாதம், வணக்கு - நமஸ்காரம், வத்து நிர்த்தேசம் - வஸ்து நிர்த்தேசம், என - என்று, மூன்று - மூ வகை யாகக் கூறப்படும், ஆத்த - விரும்பாநின்ற, பதம் - பதமும், பதப் பொருள் - பதார்த்தமும், வாக்கிய யோசனை - (சொற்களைச் சேர்த்த லாகிய) வாக்கியார்த்தமும், அறி - உணர்தற்(குரிய), வினு - சங்கையும், விடை-சமாதானமும், இவை-(ஆகிய) இவை, ஐந்து-ஐந்தும், உரையின்-வியாக்யாநத்தின், இலக்கணம் ஆம் - இலக்ஷண மாம், கோத்து - சேர்த்து, உரை செய் - கூறுகின்ற, விசேட -

விசேஷணமும், விசேடியம் – விசேஷியமும், கர்த்தா - கர்த்தாவும், கருமம் - கருமமும், கொள்–அங்கீகரிக்கத் தக்க, கிரியை–கிரியையும், இவை ஐந்து–(ஆகிய) இவை ஐந்தும், அந்நுவய – அந்நுவயத்தின், இலக்கணம் ஆம் – இலக்ஷண மாம், சாற்றும்–கூறுநின்ற, அநுபந்த சதுட்டயம்-அநுபந்த சதுஷ்டய மாவது, நூற்கு – சாஸ்திரத்திற்கு, விடயம் - விஷயமும், சம்பந்தம்–சம்பந்தமும், பயன்–பிரயோஜநமும், அதிகாரிகள் – அதிகாரியும், என - என்று, நான்கு – நாலு (பிரகாரமா யிருக்கின்றது என), அறி – (நீ) உணர்ந்து கொள்வா யாக. ஏ. ஏ. ஏ. அசை. எ-று.

ஆப்தம் என்பது, எதுகை நோக்கி, "ஆத்தம்" என நின்றது. ஆப்தம்-விரும்பப்பட்ட; அடையப்பட்ட எனப் பொரு ளாம்.

நூல் ஆரம்பத்தில், ஆசீர்வாதம், நமஸ்காரம், வஸ்து நிர்த்தேசம் என்று, மங்கலம் மூன்று வித மாம், (பிரார்த்தனை (வேட்டல்) வணங்கல் பொரு ளியல்பு உரைத்த லாம்)

பதம், பதார்த்தம், வாக்கிய யோஜநா, ஆக்ஷேப, சமாதாநம், என்பன, வியாக்யாந பஞ்ச லக்ஷண மாம், (உரை கூறல் ஐ வகைத் தாம்) லக்ஷணம் – வடிவம்.

விசேஷண விசேஷியம் கர்த்தா கர்மம் கிரியை என்பன, அந்வய பஞ்ச லக்ஷண மாம், (கொண்டு கூட்டல் ஐ வகைத் தாம்.)

நூற்கு, விஷயம் சம்பந்தம் பிரயோஜநம் அதிகாரி என்பன, அநுபந்த சதுஷ்டய மாம். (நாலையும் ஒன்று சேர்த்துக் கட்டப்பட்டது) என்பது பொரு ளாம். கிரந்தம் நிர்விக்கிந மாக நிறைவேறும் பொருட்டும், இந் நூலை படிப்போர்

கேட்டோர் விக்கிந மின்றி ஆத்ம சாக்ஷாத்காரத்தினை அடையும் பொருட்டும், நூற்கு புறம்போ, நூ லகத்தோ, மங்கலம் செய்ய வேண்டும். அப் போது தான் கிரந்த கர்த்தாவி னிடம் எல்லாருக்கும் ஆஸ்திக புத்தி யுண்டாகும்.

அநுபந்தம் :— தம்மை யறிந்தவரை அறிந்த பின் நூலிற் பிரவேஸிக்கு மாறு செய்வது; பந்திப்பது என்ப தாம். எடுத்துக் கொண்ட நூ லிடையூ றின்றி யினிது முடிதற் பொருட்டும், படிப்போர் கேட்போர் விக்கிந மின்றி நூலை யறிந்து ஆத்ம சாக்ஷாத்கார முதலிய பயன்களைப் பெறும் பொருட்டும், செய்யப்படு மங்கலம், நூலின் முகத்தே செய்யு ளாக யாத்து வைக்கப்படும்; நூலி னிடத்தும் நூற் கருத்தா விடத்து மாஸ்திக புத்தி யுண்டாதற்பொருட்டும், மாணாக் கர்களுக் கறிவுறுத்தற் பொருட்டும், என்க. 5.

அநுபந்த சதுஷ்டயமும், சா த ந சதுஷ்டயத்தின், நித்திய அநித்திய வஸ்து விவேகம், இகாமுத்தரார்த்த பல போக விராகம், சமாதி ஷட்க சம்பத்தி, முமுக்ஷத்வம் எனப் பெயரும் கூறுகின்றார்.

விடயமது சிவசீவர் தமதேகத் துவமாம்
விமலனொடு நூற்கறையப் படலறையுந் தன்மை,
யடைதலுறு சம்பந்தம் பயன் றுயரெ லாநீத்
தாநந்தப் பதம்பெறுதல் சாத நான் கினையும்,
உடையவனே யதிகாரி யென்றறைவ ரறிஞ
ருரைத்தசா தநசதுட் டய நித்த வநித்தப்,
படுபொருளின் விவேகமிக பரபோக விராகம்
பழிப்பரிய சமைமுமுட் சுத்வமெனப் படுமால்,

இ-ள். நூற்கு – சாஸ்திரத்திற்கு, விடயமது –விஷய மாவது, சிவ சீவர் தமது – சீவப் பிரஹ்மங்களினது, ஏகத்துவம் ஆம் – ஐக்கியமே யாம், விமலன் ஒடு – (சாஸ்திரத்திற்கு) பிரஹ்மத்தோடு, அறையப்படல் - பிரதிபாத்யம், அறையுந் தன்மை–பிரதிபாதக பாவம், அடைதல் உறு - பொருந்தாநின்ற சம்பந்தம் – சம்பந்த மாம், பயன் – (சாஸ்திரத்திற்குப்) பிரயோஜநம், எலாம் - சர்வ, துயர் – துக்கத்தையும், நீத்து – நிவிர்த்தித்து, ஆநந்தப் பதம் – பிரஹ்மாநந்தத்தை பெறுதல் – அடைத லாம், அதிகாரி – (சாஸ்திரத்திற்கு) அதிகாரி, சாதநம் நான்கினையும் உடையவனே - நான்கு சாதநங்களோடு கூடியவனே ஆவன், என்று–என, அறிஞர்–பெரியோர், அறைவர்–கூறுவார்கள், உரைத்த – (முன்னர்க்) கூறியுள்ள, சாதந சதுட்டயம் - நான்கு சாதநங்க ளாவன, நித்த அநித்தப்படு பொருளின் விவேகம் - நித்திய அநித்திய வஸ்துக்களின் விவேகமும், இக பர போக விராகம் – இக லோக பரலோகங்களி லுள்ள போக்யங்களில் வைராக்கியமும், பழிப்பு அரிய – (ஒருவராலும்) நிந்திக்க முடியாத, சமை- சமையும், முமுட்சுத்வம் – முமுக்ஷுத்வமும் ஆம், எனப்படும் - என்று கூறப்படும். ஆல்-அசை.

எ-று.

'சிவ சீவர் தமது' என்பதில், தம் அசை. தம் என்பது சுட்டுப் பொருட் டாக வந்த தென்று மாகும்.

'விடயமது' என்பதில், அது பகுதிப் பொருள் விகுதி.

1. நித்திய அநித்திய வஸ்து விவேகம், 2. இக அமுத்தர அர்த்த பல போக விராகம், 3. சமாதி ஷட்க சம்பத்தி, 4. முமுக்ஷுத்வம் என சாதநம் நான்காம்(கருவி நான் காம்)

இலக்கியார்த்தங்களுக்கே ஏகத்துவம் என்பார். "விமலன்" என்றனர். சம்பந்த மாவது அறையப்படல் அறையுந் தன்மை எனப் பொதுப்படக் கூறினும், சுருக்கி யறைதல் அறையப்படல், விரித் தறைதல் அறையப்படல். சுருக்கியும் விரித்து மறைதல் அறைப்படல் என்னுஞ் சம்பந்தமே அறியத் தக்கன வாம்; அச் சம்பந்த மறியப் படாவிடின் சிற் றறிவினோர் பெரு நூலையும் (விரிந்த நூலையும்) பே ரறிவினோர் சிறு நூலையும், கற்கப் புகுந் திடர்ப்படுவா ராதலின் என்க. இவ் விடயம் நன்கு விளங்கவே "தொகுத்தல் விரித்தல் தொகைவிரி மொழி பெயர்ப், பெனத்ததும் நூல்யாப் பீரிரண் டென்ப" என நன்னூலார் முன்னோர் மொழிந்த சூத்திரத்தைச் சிறிது திருத்தி யமைத்துக் கூறினர் என்க. 6.

நித்திய அநித்திய வஸ்து விவேக லக்ஷணமும், இகாமுத்தரார்த்த பல போக விராக லக்ஷணமும், சமாதி ஷட்க சம்பத்தி லக்ஷணமும், முமுக்ஷுத்வ லக்ஷணமும், சுருக்க மாகக் கூறுகின்றார்.

நித்தியமாம் மாவேபொய் விடயமெலா மெனத்தேர்
　　நிலைதருநித் தியாநித்திய வத்துவிவே கம்பின்,
மெத்திவரு மிகமொடமுத் தரத்தில்வரு போக
　　விராகமிம்மை மறுமையுள விடயநுகர் வனைத்தும்,
பொய்த்தழியு மிடும்பையம மெனவிடுத லாகும்
　　புகழ்சமையே முதலாய சட்குணங்கள் பெறுதல்,
வைத்தசமை யியல்பாய முத்திவிருப் பதுவே
　　வயங்குமுமுட் சுத்வமென் றறிந்திடுக மதித்தே.
(7)

இ-ள். ஆந்மாவே—ஆத்மாவே, நித்தியம்- நித்திய மாம். விடயம் - விஷயங்கள், எலாம் — யாவும், பொய் — அநித்திய மாம், என — என்று, நிலைதரு—ஸ்திர மாக, தேர் — தெளிந்து கொள்வதே, நித்ய அநித்திய வத்து விவேகம் - (முத லாவது சாதந மாகிய) நித்தியாநித்திய வஸ்து விவேக மாம். இம்மை — இகலோகத்தில் உள—இருக்கின்றதும், மறுமை— பரலோகத்தில் (இருக்கின்றது மாகிய), விடய நுகர்வு — விஷயாநுபவங்களுக் குரிய பதார்த்தங்கள், அனைத்தும் — யாவும் பொய்த்து அழியும் — (அத்தியந்தம்) நாசத்தை அடையாநின்ற, இடும்பை மயம் — துக்க சொரூபமே யாம். என—என்று (கருதி), விடுதலே — (விட்டு) விடுதலே பின் — பின்னர், மெத்தி — அதிகரித்து, வரும்—(இரண்டாவது சாதந மாய்) வருகின்ற, இகமொடு அமுத்தரத்தில் வரு போக விராகம் ஆகும் — இகாமுத்தரார்த்த பல போக விராக மாம், புகழ் — (யாவராலும்) துதிக்கப்பட்ட, சமை முதல் ஆய — சமை முதலிய, சட் குணங்கள் — அறு குணங்களையும், பெறுதல் — அடைதலே, வைத்த— (மூன்றாவது சாதந மாக) வைக்கப்பட்ட, சமை — சமை யாம், இயல்பு ஆய — சகஜ (ஸ்வபாவ) மாகவே சித்தித்திருக்கின்ற, முத்தி — மோக்ஷத் தின்கண், விருப்பதுவே — இச்சை வைப்பதுவே, வயங்கு— (நான் காவது சாதந மாக) விளங்குகின்ற, முமுக்ஷுத்வம்— முமுக்ஷுத்வ மாம், என்று — என, மதித்து — யூகித்து, அறிந்திடுக — உணர்ந்திடுவா யாக. எ-று.

ஏ ஏ அசை, 'விருப்பதுவே' என்பதில், அது பகுதிப் பொருள் விகுதி.

1. ஆந்மா நித்தியம் விஷயம் பொய் எனத் தெளிதல், நித்தியாநித்திய வஸ்து விவேகம் ஆம். 2. இக லோக பரலோக போகங்கள் அனைத்தும் அநித்தியம், துக்க

ஸ்வரூபம் என அறிந்து வைராக்கியத்தினை அடைதல், இகாமுத்தரார்த்த பல போக விராகம். ஆம். 3. க்ஷமை தமை திதிக்ஷை உபரதி சிரத்தை சமாதி என்னும் அறு குணங்களை அடைதல், சமாதி ஷட்க சம்பத்தி ஆம். (சமம் முதலிய ஆறு குணங்களை அடைதலாம்) 4. ஸ்வ பாவ சித்த மோக்ஷத்தில் விருப்பம் உண்டாவதே முமுக்ஷுத்வம் ஆம். (விட வேண்டும் என்னும் விருப்பம் ஆம்.) இதனைச் சாதந சதுஷ்டயம் என்பர். 7.

மூன்றும் சாதந மாகிய சமாதி ஷட்க சம்பத்தியினை விரித்துக் கூறி, அதிகாரி செய்யும் ஆசாரிய சேவையினையும், கூறுகின்றார்.

சமைதமையே திதிக்கையுப ரதிசிரத்தை சமாதி
சமைமுதலா மறுகுணங்க ளுட்கரண மடக்கல்,
சமைதமைதான் புறக்கரண மடக்குதல்கா மாதி
தணித்திடுகை திதிக்கைகரு மங்களனைத்
திணையுஞ்,
சுமையெனவே விடுதலுப ரதிசுருதி குருவைத்
துணிவினு னம்புமதே சிரத்தைகுரு மொழிநெஞ்,
சமைவுறவே திட்பமுறல் சமாதியிச்சா தநஞ்சேர்
அதிகாரி செயுங்குருசே வையினையெடுத்
தியம்பில். (8)

இ-ள். சமை—சமையும், தமை—தமையும், திதிக்கை—திதிக்ஷையும், உபரதி - உபரதியும், சிரத்தை – சிரத்தையும், சமாதி—சமாதியும் (ஆகிய இவைகளே ) சமை முதல் ஆம் — சமை முதலிய வாகிய, அறு குணங்கள்—சட் குணங்க ளாம், சமை – சமை யாவது, உள் கரணம் – அந்தக் கரணத்தினை, அடக்கல்— (விஷயங்களில் செல்லாது) தகைத லாம், தமை -

தமை யாவது, புறக் கரணம் – பாகிய இந்திரியங்களை, அடக்குதல் – (விஷயங்களிற் செல்லாது) தகைத லாம், திதிக்கை–திதிக்ஷை யாவது, காம ஆதி – காமம் குரோதம் லோபம் மோகம் மதம் மாச்சரியம் ஈரிஷை டம்பம் தர்ப்பம் அகங்காரம் இராகம் துவேஷம் அசூயை என்னும் பதின் மூன்று குணங்களையும், தணித்திடுகை – அடக்கிக் கொள் ளுத லாம், உபரதி – உபரதி யாவது, கருமங்கள் அனைத்தினை யும்–(நித்திய நைமித்திய காமியப் பிராயச்சித்தாதி விதி நிஷேத) கருமங்கள் யாவற்றையும், சுமை – பாரத்தை, என–போல (கருதி), விடுதல் – (இன்றியமையாதவற்றைப் பலனை விரும்பாது செய்து கொண்டு மற்றவற்றை விட்டு) விடுத லாம், சிரத்தை – சிரத்தை யாவது, சுருதி – வேத வாக்கியத்தையும், குருவை – குரு வாக்கியத்தையும், துணிவினுல்–சத்திய மாக, நம்புமதே–கருதி அநுஷ்டிப்பதே யாம், சமாதி – சமாதி யாவது குரு–ஆசாரியர், மொழி – உபதேசித்த (வஸ்துவில்), நெஞ்சு – மந மானது, அமைவு உற–(போய்) பொருந்தும்படி, திட்பம் உறல் – திட மாகத் தியாநம் செய்தலே யாம், இச் சாதநம்–இப்பொழுது கூறிய நான்கு சாதநங்களையும், சேர்– (அவதி பரியந்தம்) பொருந்தி யிருக்கின்ற, அதிகாரி – சிஞ்ஞாசு, செயும் – செய்யத் தக்க, குரு – ஆசாரியரது, சேவையினை – சிசுருஷையினை, எடுத்து இயம்பில்–எடுத்துச் சொல்லுமிடத்து. எ-று.

ஏ-தான். ஏ–ஏ: அசை. (இச் செய்யுள் குளகம்)

'நம்புமது' என்பதில், அது பகுதிப் பொருள் விகுதி.

1. அந்தக் கரணத்தினை விஷயங்களில் செல்லாது தகைதல். க்ஷமை ஆம், 2. பாஹ்ய இந்திரியங்களை விஷயங் களிற் செல்லாது தகைதல், தமை ஆம், 3 காமம் குரோதம் லோபம் மோகம் மதம் மாச்சரியம் ஈரிஷை

டம்பம் தர்ப்பம் அகங்காரம் இராகம் துவேஷம் அசூயை என்னும் பதின் மூன்று குணங்களையும் வெளியில் போக விடாமல் அடக்கிக்கொள்ளுதல் திதிக்ஷை யாம், 4. நித்திய நைமித்திய காமிய பிராயச்சித்தம் விதி நிஷேத கர்மங்மள் யாவற்றையும் பாரத்தைப் போலக் கருதி, இன்றியமையாத வற்றைப் பலனை விரும்பாது செய்துகொண்டு மற்றயவற்றை விடுதல், உபரதி யாம். 5. சுருதி குருவை சத்திய மாகக் கருதி, அவர்கள் கூறும் வாக்கியத்தினை மெய் யென நம்பி அநுஷ்டிப்பது, சிரத்தை யாம், 6. ஆசாரியர் உபதேசித்த வஸ்துவில், மநம் போய் பொருந்தும்படி, திட மாகத் தியாநம் செய்தல், சமாதி ஆம். எனச் சமாதி ஷட்க சம்பத்தினை உணர்க. (8)

ஆசாரியருக்கு சிஷ்யன் செய்யும் ஆப்தம் அங்கம் ஸ்தாநம் சத்பாவம் என்னும் நான்கு பணிவிடைகளைக் கூறுவதோடு, கர்ம காண்டி, பக்தி காண்டி, ஞாந காண்டி என மூன் றதிகாரிகளையும் வே றுகக் கூறுகின்றார்.

ஆத்தமுட னங்கமே தா நஞ்சற் பாவ
மாமவற்றுட் குருபரனுக் கநுகூல விருத்தி,
யாத்தமுயர் குருபரன்குற் றேவலே யங்க
மருட்குரவர்க் குரியமனை நிலமுதலா மவற்றைக்,
காத்தலது தாநமாஞ் சற்குருவே மெய்யாக்
கண்டசிவு மெனநம்பு மதுவேசத் பாவ,
மேத்துகரு மம்பத்தி மிகுஞாந காண்ட
மெனுமிவற்றுன் மூவதிகா ரிகள்வேறு முளரால்.

இ-ள். ஆத்தம் — ஆத்தமும், அங்கம் — அங்கமும், தாநம் — ஸ்தாநமும், சற்பாவம் ஆம் — சத்பாவமும் (என நான்கு பிரகாரம்) ஆம், அவற்றுள் — அந் நான்கு வித பணி

விடைகளுள், ஆத்தம் – ஆத்தப் பணிவிடை யாவது, குருபரனுக்கு – ஞானாசாரியருக்கு, அநுகூல விருத்தி – அநுகூலமானவற்றைச் (செய்தலே யாம்), அங்கம் – அங்கப் பணிவிடை யாவது, உயர் – சிரேஷ்டம் பொருந்திய, குருபரன் – ஞானாசாரிய ருடைய, குற்று ஏவல் – சிறிய ஏவலை (பாதப் பிரக்ஷாளனாதிகளை)ச் செய்வதே யாம், தானம் – ஸ்தானப் பணிவிடை யாவது, அருள் குரவர்க்கு – ஞானாசாரியருக்கு, உரிய – சொந்தமா யுள்ள, மனை – கிரகம், நிலம் – நன் செய், புன் செய், முதலாம் அவற்றை – முதலியவற்றை, காத்தலது ஆம் – (தனது சொத்தை எவ்வாறு அபிமானிப்பனோ, அவ்வாறு அபிமானம் வைத்து வீண் போகாது) இரக்ஷித்தலே யாம், சத்பாவம் – சத்பாவப் பணிவிடை யாவது, சத் குருவே-ஞானா சாரியரையே, மெய்யாக் கண்ட– பிரத்தியக்ஷ மாகப் பார்க்கப்பட்ட, சிவம் – பரமேசுவரன், என–என்று, நம்புமதுவே - விசுவாசம் வைத்துத் (தியானிப்பதே யாம்), ஏத்து – துதிக்கானின்ற, கருமம் காண்டம் – கரும காண்டம், பக்தி – பக்தி (காண்டம்), மிகு – உயர்வு பொருந்திய, ஞானம் – ஞான (காண்டம்), எனும் – என்று சொல்லப்படும், இவற்றால் – இம் மூன்று ஏதுக்களால், வேறும்– (முன்னர்க் கூறிய நான்கு சாதனங்களை யுடைய அதிகாரிக்கு) அந்நிய மாகவும், மூ அதிகாரிகள் – (கர்ம காண்டி, பக்தி காண்டி, ஞான காண்டி என) மூன்று அதிகாரிகள், உளர் – இருக்கின்றார்கள். எ-று ஏ ஏ. ஆல், அசை உடன், என்பது, ஒடு என்னும் பொருளது.

'காத்தலது, 'நம்புமது' என்பதில், அது பகுதிப் பொருள் விகுதி.

1. ஞான ஆசாரியருக்கு அநுகூல மாக நடப்பது, ஆப்தப் பணிவிடை யாம். 2. ஞானாசாரிய ருடைய ஏவல்

பணிவிடைகளைச் செய்வது, அங்கப் பணிவிடை யாம், 3. ஞானாச்சாரியருக் குரிய வீடு, நிலம், மடம் முதலியவற்றைத் தன் னுடையது போல், பாது காத்தல், ஸ்தானப் பணிவிடை யாம், 4 ஞானாச்சாரியரையே பிரத்தியக்ஷ மாகக் கண்ட பரம சிவன் என்று விசுவசிப்பதே, சத்பாவப் பணிவிடை யாம், என உணர்க. 9.

அதிகாரி, கரும காண்டி, பக்தி காண்டி, ஞான காண்டி, என மூவர், என்பவர் லக்ஷணமும், கருமி, முமுக்ஷு அப்யாசி அநுபவி ஆரூடன் என வேறு ஐந்து அதிகாரிகள் உளர் எனவும், கூறுகின்றார்.

உடம்பினையும் வருகுடும்பந் தனையுமியா னெனதென்
றுளன்கரும காண்டியெலாக் கிரியையுமீ சற்கே,
திடம்பெறநின் றுக்குமவ னேபத்தி காண்டி
செயுங்கரும மனைத்தினுக்குங் கிரிதானென்
றிருப்போன்,
மடந்தவிரு நன்ஞான காண்டியென லாகு
மற்றுமுள ரைவரொரு வர்க்கொருவ ருயர்வா,
யடைந்தவதி காரிகளங் கவர்கருமி முமுட்சோ
டறையுமப்பி யாசியநு பவியுடனா ரூடன். (10)

இ-ள். உடம்பினையும் – தேகத்தினையும், வரு – (கருமாதீன மாக) வருகின்ற, குடும்பந்தனையும் – (தார புத்திர தநாதிக ளாகிற) குடும்பத்தினையும், யான் என்று – (தேகத்தினை) நான் என்றும், எனது – (குடும்பத்தினை) என்னுடையது (என்றும்), உளன் – அபிமானம் செய்து கொண்டிருப்பவன், கரும காண்டி – கர்ம காண்ட அநுஷ்டான முடைய அதிகாரி யாவன், எலாக் கிரியையும் – சர்வ

கர்மங்களையும் (செய்து அவற்றின் பலனை) ஈசற்கு – ஈஸ்வரனுக்கு, திடம் பெற நின்று – நன்ருக, ஆக்குமவனே – (அர்ப்பணம்) செய்பவனே, பக்தி காண்டி – பக்தி காண்ட அநுஷ்டான முடைய அதிகாரி யாவன், செயும் – (முக்கரணங்களிருலும்) செய்யாநின்ற, கருமம் அனைத்தினுக்கும் - சர்வ கர்மங்களுக்கும், தான் –(ஆத்மா வாகிய) நான், கரி–சாக்ஷி யாகவே (யிருக்கின்றேன்), என்று – என்னும் (பாவனையோடு கூடி), இருப்போன் – இருப்பவன், மடம் – அஞ்ஞானம், தவிரும் – நீங்கியிருக்கின்ற, நல் – உயர்ந்த, ஞான காண்டி - ஞான காண்ட அநுஷ்டான முடைய அதிகாரி, எனல் ஆகும் - என்று சொல்லப்படும், மற்றும் – பின்னும், ஒருவர்க்கு ஒருவர் – ஒருவருக்கு ஒருவர், உயர்வு ஆய் அடைந்த – சிரேஷ்டத் தன்மையினைப் பொருந்தியிருக்கின்ற, அவர் அதிகாரிகள் – சிஞ்ஞாசுக்கள், கர்மி – கர்மியும், முமூட்சு – முமுக்ஷுவும், அறையும் – சொல்லாநின்ற, அப்பியாசி – அப்பியாசியும், அநுபவி - அநுபவியும், ஆருடன் - ஆருடனும் (என), ஐவர் - ஐந்து பேர்கள், உளர்-இருக்கின்ருர்கள். எ-று.

அங்கு – அத்தொகுதியில், ஒடு – உடன் என்பன எண்ணுப் பொருளில் வந்தன. ஏ–ஏ, அசை.

'குடும்பந் தனையும்' என்பதில், 'தன்' அசை.

1. தேகத்தினை யான் என்றும், குடும்பத்தினை எனதென்றும், அபிமாநிப்பவன், கரும காண்டி யாவன்.

2. சகல கிரியைகளையும், ஈசுவர அர்ப்பண மாகச் செய்பவன், பக்தி காண்டி யாவன், 3. செயயாநின்ற கிரியைகள் அனைத்தினுக்கும், தான் சாக்ஷி என்று, இருப்பவன், ஞான காண்டி எனக் கூறப்படுபவன் ஆவன். 10

அதிகாரிளுள், கருமி முமுக்ஷு அப்யாசி அநுபவி என்னும் நால்வ ருடைய லக்ஷணமும், ஜந்மமும், நிவிர்த்தியும், கூறுகின்றார்.

மூடமொடு தன்சாதி கருமமே பற்றி
முத்தனு மவனூறு பிறப்பினிலொண் கருமி,
நீடுலக மின்மையென நினைந்துபுறக் கரும
நிட்டனுய் முப்பிறப்பின் முத்தனு மவனே,
நாடரிய முமுட்சுலகங் கனவெனக்கண் டுள்ள
நற்கருமஞ் சேர்ந்துபிறப் பிரண்டுளனப் பியாசி,
வீடுலக விவகார நினையாமல் விவேக
மேவியோர் பிறப்பினுன் முத்தனநு பவியே. 11

இ-ள். மூடம் ஒடு — மூடத் தன்மையால், தன் சாதி கருமம் — தன் வருணத்திற் குரிய கருமங்களை, பற்றி — அநுஷ்டித்துக்கொண் டிருந்து, நூறு பிறப்பினில் — சத ஜந்மத்தில், ஒண்—பிரகபசம் பொருந்திய, முத்தன் ஆமவன்— மோக்ஷத்தை அடைபவன், கருமி—கருமி(என்று சொல்லப் படுபவன்), நீடு — விரிவா யுள்ள உலகம் — பிரபஞ்சம், இன்மை-இல்லை, என—என்று நினைந்து—நிச்சயித்துக் கொண்டு, புறக் கருமம் — பாகியத்தி லுள்ள (அர்ச்சனை முதலிய உபாசநா) கர்மங்களை, நிட்ட னுய் — செய்பவ னுய், முப் பிறப்பில்—திரி சந்மத்தில், முத்தன் ஆமவன் — மோக்ஷத்தை அடைபவன், நாடு அரிய — கருதுதற் கரிய, முமுட்சு — முமுக்ஷு (என்று சொல்லப்படுபவன்), உலகம் — பிரபஞ் சத்தை, கநவு - சொப்பநம், என — போல, கண்டு— (பொய் யாகப்) பார்த்து, உள்ளம் — மநத்தின்கண், நல் உயர்ந்த, கருமம்—சிரவண மநந நித்தியாசநங்களை, சேர்ந்து—பொருந்தி,

பிறப்பு இரண்டு – த்வி ஜந்மத்தில் (மோக்ஷ மடைபவ னாய்) உளன் – இருப்பவன், அப்யாசி – அப்யாசி (என்று சொல் லப்படுபவன்), வீடு – விட்ட, உலக விவகாரம் – லோக விவகாரங்களை. நினையாமல் – ஸ்மரணஞ் செய்யாமல், விவேகம்–(ஆத்மாநாத்ம) விவேகத்தினை, மேவி – பொருந்தி, ஓர் பிறப்பினால் - ஏக ஜந்மத்தில், முத்தன் – மோக்ஷத்தினை அடைபவன், அநுபவி – அநுபவி '(என்று சொல்லப்படு வன்). எ–று. ஏ-ஏ-ஏ—அசை.

'உலகம் உண்மை என நினைந்து' என்று பாடல் ஓது வாரும் உளர்.

1. அறியாமை உடையவனாய் தன் வர்ண ஆச்சிர மத்திற் குரிய கர்மங்களைச் செய்து நூறு ஜந்மத்தில் மோக்ஷம் அடைபவன், கருமி ஆவன். 2. நீண்ட உலகம் பொய் என்று அறிந்து, பாஹ்ய கர்ம பரனாய் மூன்று ஜந் மத்தில் மோக்ஷம் அடைபவன், முமுக்ஷு ஆவன், 3. பிரபஞ்சம் சொப்பநம் போல், மித்தியை எனப் பார்த்து மநத்தின்கண் சிரவண மநந நிதித்யாசநங்களைச் செய்து கொண்டு, இரண்டு ஜந்மத்தில் மோக்ஷ மடைபவன், அப்யாசி ஆவன். 4. வீட்டு வியவகாரம் உலக வியவகாரங் களை நினைக்காமல், ஆத்ம அநாத்ம விவேகத்தினை விளக்க மாக அடைந்து, ஒரு ஜந்மத்தில் மோக்ஷம் அடைபவன், அநுபவி ஆவன் என உணர்க.

ஆருடன் லக்ஷணமும், விவேக கதி-விரக்தி கதி–தெய்வ கதியால், ஜகத் காரணம் யாது எனும் விவேகம், தேகாதி மித்தை அசுத்தம் என விரக்தி, அந்நியருக்கு உபதேசிப்

பதை தெய்வாதீந மாகக் கேட்டலால், அதிகாரிகள் விவேகவான், விரக்தன், தெய்வகதியான், என மூன்று அதிகாரிகளின் லக்ஷணமும், கூறுகின்றார்.

உலகநிலை தோன்றுமற் றன்றிகழ்ஞா நத்தா
லுண்மைமுத்த னுமவனே யாரூடன் மற்று,
முலகமுதல் யாதெனத்தேர் வொடுகுருவை யடைந்து,
முடம்பாதி பொய்யெனக்கண் டருட்குருவை யடைந்து,
முலகிலொரு குரவன்றன் மகற்குபதே சஞ்செய்
துறக்கேட்டு முயர்தருஞா நிகளாகி முத்தி
யுலகுதொழு விவேகமொடு விரத்திதெய்வ கதியா
லுற்றிடுவோர் மூவரதி காரிகளா குவரால்.

இ-ள். உலக நிலை — லோகத்தின் தன்மைகள், தோன்றுமல்—பிரதீதி யாகாமல், திகழ்—விளங்காநின்ற, தன் ஞாநத்தால் — ஆத்ம ஞாநத்தினால், உண்மை — சத்யோ (அப் பொழுதே), முத்தன் ஆமவன் — மோக்ஷத்தினை அடைபவன், ஆரூடன்—ஆரூடன் (என்று சொல்லப்படுபவன்), மற்றும் - பின்னும்,உலகு தொழு-பெரியோர்களால் ஸ்துதிக்கப்பட்ட, விவேகமொடு — விவேகத்தினாலும், விரத்தி —வைராக்கியத்தினாலும், தெய்வ கதியால் — தெய்வ கதியினாலும், உலகம் — பிரபஞ்சத்திற்கு, முதல் - காரணம், யாது — எது, என — என்னும், தேர்வுஒடு—விவேகத்தோடு, குருவை — ஞாநாசாரியரை, அடைந்தும், (சரணாகதியாகப் போய்) அடைந்தும், உடம்பு ஆதி — தேகம் முதலியவற்றை, பொய் — மித்தை, என—என்று, கண்டு — பார்க்கின்ற (வைராக்கியத்தோடு), அருள் குருவை — ஞாநாசாரியரை, அடைந்தும் — (போய்ச்

சரணுகதி யாக) அடைந்தும், உலகில் – உலகத்தில், ஒரு குரவன்–ஒரு ஞாநாசாரியர், தன் மகற்கு – தனது சிஷ்ய னுக்கு, உபதேசஞ் செய்து உற — உபதேசஞ் செய்கின்ற காலத்தில், கேட்டும் – தெய்வ கதியால் அதனைச் சிரவணித் தும், உயர் தரு – சிரேஷ்டம் பொருந்திய, ஞாநிகள் ஆகி – ஞாநவான்க ளாய், முத்தி உற்றிடுவோர் – மோக்ஷத்தை அடைபவர்க ளாக, அதிகாரிகள் – அதிகாரிகள், மூவர் ஆகுவர்–மூன்று பேர்கள் ஆவார்கள். எ-று.

ஏ-ஆல்-அசை. சாதந சதுஷ்டய முடைய அதிகாரிகள்: 11

1. கர்ம காண்டி, 2. பக்தி காண்டி, 3. ஞாந காண்டி., 4. கர்மி, 5. முமுக்ஷு, 6. அப்பியாசி, 7. அநுபவி, 8. ஆரூடன், 9. விவேகவான், 10. விரத்திமான், 11. தெய்வ கதி, 12. என அதிகாரிகள் பன்னிரு பேதத்தினை அடை கின்றனர்.

உலக நிலை தோன்றுமல் என்பதனை, "யாதொரு பொருளை எல்லா வுயிர்களும் என்றும் காணும், காதலின் ஞாநி யத்தைக் கண்ணிணுற் றெரியக் காணுன்"

(பகவத் கீதை 2—57)

"தத்துவ ஞாநி காணினும் ஜகத்தைக் கண்டிலன்" (பிரஹ்ம கீதை 4—23) என்பதனுல் உணர்க.

உலக முதல் யாது என்பதனை, 6—13 இட்சுவாகு கதை 9. "சரைசா வின்ப துன்பங்க டளர்மோ கங்கள் மயக்கங்கள், வரையாய் நிலையாய்க் காண்பனவு மட்டி லாத சகத்துக்குப், புரைதீர் மூல மேதென்று புரிந்து நினைந்தான் பூபாலன், உரைசார் உலகின் மூலத்தை யுன்று நின்று முணர்ந்திலனுல்" என்னும் செய்யுளால் உணர்க.

(வாசிட்டம்)

தேகாதி மித்தை அசுத்தம் என உணர்தல் விரக்தி யா லாம். பகீரதன். விரக்தியா லாம்.

வேறு சிஷ்யனுக்கு உபதேசிக்குங் கால் சிரவணிப் போன், தெய்வ கதியால் அடைந்தவன் ஆவன். ஜநக ராஜன் தெய்வ கதியா லாம்.

வாசிட்டம், விவேகத்தால் – 6–13 இக்ஷ்வாகு 9 – "செய்யுள், விரகத்தியால் – 6-8 பகீரதன், தெய்வகதி யால் - 5-1 ஜநக ராஜா மோக்ஷ மடைந்தனர் என உணர்க. 12.

கிஷ்யர்களின் அதிகார வேற்றுமையினுல், ஆசாரியரும், 1. நிஷித்தாசாரியன், 2. காமியாச்சாரியன், 3. போதகாச் சாரியன், 4. வேதகாச்சாரியன், 5. சூசகாச்சாரியன், 6. வாசகாச்சாரியன் 7. காரகாச்சாரியன், 8 விகிதாச் சாரியன், என எண் வித பேதத்தினை அடைகின்றனர் எனக் கூறுவான் றெடங்கி, 1. நிஷித்தாச்சாரியன், 2. காமியாச் சாரியன், 3 போதகாச்சாரியன், 4. வேதகாச்சாரியன், என்னும் நான்கு ஆசாரியரைக் கூறுகின்றூர்.

சாதகர்க ளாஞ்சீடர் பேதத்தாற் குரவர்
தாமும்போ தககுருவே முதலாக விருநாற்,
பேதமடை குவரவருட் போதகன்முன் னூலிற்
பெரும்பொருள்கூ றிடுபவன்றத் துவந்திகழ்த்து பவனே,
வேதகனல் வசியாதி யாலிம்மை யின்பம்
வெந்துயரங் குதவுமவ னிசிதகுரு வறத்தைப்,
போதகஞ்செய் திருமையினு மின்பமருள் பவனே
புகழ்தருகா மியகுருவென் றறைகுவர்மு தறிஞர்.

இ-ள். சாதகர்கள் ஆம் - அப்பியாசிப்பவர்கள் ஆகிய சீடர் பேதத்தால் – சிஷ்யர்களின் (அதிகார) வேற்றுமையி ஞல், குரவர் தாமும்–ஆசாரியரும், போதக குரு—போதகாச் சாரியர், முதல் ஆக–முதல் (விகிதாச்சாரியர் பரியந்தம்) ஆக, இரு நால்–எட்டு, பேதம்-பேதத்தினை, அடைகுவர் – அடை கின்றனர், அவருள் – அவ் வஷ்ட குருக்களுள், முன் நூலில் – வேதத்தின்கண் ணுள்ள, பெரும் பொருள் – ஆத்மாநாத்ம வஸ்துக்களை, கூறிடுபவன் – உபதேசஞ் செய் பவன், போதகன் – போதகாச்சாரியன் ஆவன், தத்துவம் – (வேதார்த்தங்களின்) சுத்தாசுத்தத் தன்மைகளை, திகழ்த் துபவன்–உபதேசம் செய்பவன், வேதகன் – வேதகாச்சாரி யன் ஆவன், நல்–உயர்ந்த, வசிய ஆதியால் – வசியம்(மோக நம், மாரணம், உச்சாடநம், ஸ்தம்பநம், ஆகர்ஷணம்) முதலிய உபாயத்தினுல், இம்மை–இவ் வுலகத்தில், இன்பம்- சுகமும், அங்கு – பர லோகத்தில், வெம் – கொடிய, துயர் – துக்கமும், உதவும் அவன் – (உண்டாகும்படி யாக) உப தேசஞ் செய்பவன், நிசித குரு – நிஷித்தாச்சாரியன் ஆவன், அறத்தை – தர்மத்தினை, போதகஞ் செய்து – உபதேசித்து, இருமையினும் – இரண்டு லோகத்திலும், இன்பம் – சுகம், அருள்பவன் – (உண்டாகும்படி யான உபாயத்தினை) உப தேசஞ் செய்பவன், புகழ்தரு – (யாவரும்) புகழ்கின்ற, காமிய குரு – காமியாச்சாரியன் ஆவன், என்று – என, மூது – பழமை யான, அறிஞர் – ஞானிகள், அறைகுவர் – கூறுவார்கள், எ-று

தாம்-ஏ-ஏ-ஏ-அசை. மூ தறிஞர்–முன் புள்ள சான்ரோர். முதிர்ந்த அறிவினர் எனினு மாம்.

1. நிஷித்த ஆசாரியன், நல்ல வசிய முதலிய உபாயத்திஞல், இக லோகத்தில் சுகத்தினையும், பர லோகத்தில் கொடிய துக்கத்தினையும் அளிப்பவன் ஆவன். 2. காமியாச்சாரியன், தர்மத்தினை உபதேசித்து, இரண் டுலகத்திலும் சுகத்தினை அநுபவிக்கும்படி செய்பவன் ஆவன். 3. போதகாச்சாரியன், வேதத்தில் உள்ள ஆத்ம அநாத்ம வஸ்துக்களை உபதேசிப்பவன் ஆவன். 4. வேதகாச்சாரியன்—வேதத்தில் உள்ள சுத்த அசுத்த தத்துவங்களை உபதேசிப்பவன் ஆவன். 13

1. சூசாச்சாரியர் 2. வாசகாச்சாரியர் 3. காரகாச்சாரியர் 4. விகிதாச்சாரியர் என்னும் நால்வரையும் கூறி, சிஷ்யர் பலருள், ஒரு சிஷ்யன் தாபத் திரய அக்கினியிஞல் தப்தன் ஆகி, சித்த வியாகூலம் அடைந்து குருவை சரணுகதி அடைந்து வினவினன் எனக் கூறலும், செய்கின்ருர்.

சூசகனும் விவேகத்தாற் சமைமுதலாங் குணங்க
டொகுப்பவன்பொய் விடயமென வாங்மவிருப்
பருள்வோன்,
வாகனுஞ் சிவசீவ ரயிக்கியஞா நத்தை
வழங்குமவன் காரகனை யந்தவிர்த்து நிலேத்த,
வாசகலு முத்தியருள் பவன்விகித குருவா
மதிகா ரிகளாகு மெனமுன்னர்க் கூறு,
நேசமுறு சீடர்தம்மு ளொருவன்முத் தாப
நெருப்பினுல் வெந்துசிந் ா குலமுடைய ஞகி. 14

இ-ள். விவேகத்தால் - (ஆத்மாநாத்ம) விவேகத்திஞல், சமை — சமை, முதல் ஆம்--முத லாகிய, குணங்கள் — (ஆறு) குணங்களையும், தொகுப்பவன் — சுருக்கி உபதேசிப்

பவன், சூசகன் ஆம் – சூசகாச்சாரிய னுவன், விடயம் – (உலகத்தி லுள்ள)விஷயங்கள் (யாவும்), பொய்–அநித்தியம், என – என்று (உபதேசித்து), ஆந்ம – ஆத்மாவினிடத்து, விருப்பு-இச்சையினை, அருள்வோன்–உபதேசஞ் செய்பவன், வாசகன் ஆம் – வாசகாச்சாரியன் ஆவன், சிவ சீவர்-சீவப் பிரஹ்மங்களின், ஐக்ய ஞாநத்தை – ஏகத்வ ஞாநத்தினை, வழங்கும் அவன் – உபதேசஞ் செய்பவன், காரகன் ஆம் - காரகாச்சாரியன் ஆவன், ஐயம் – சந்தேக (விபரீத) ங்களை, தவிர்த்து – நிவிர்த்தித்து, ஆசு–குற்றம், அகலும் – இன்றி யிருக்கின்ற, நிலைத்த – ஸ்திர மான, முத்தி – மோக்ஷத்தினை, அருள்பவன் – உபதேசிப்பவன், விகித குரு ஆம் – விகிதாச் சாரியன் ஆவன், [சிஷ்யன் ஆசாரியரைச் சரணுகதி அடையும் கிரமத்தினைக் கூறுகின்றுர்.] அதிகாரிகள் ஆகும் – அதி காரிக ளாவார்கள், என – என்று, முன்னர் – பூர்வம், கூறும் – பிரதிபாதித்த, நேசம் உறு – சிரத்தை யுடைய, சீடர் தம்முள் – சிஷ்யர்களுள், ஒருவன் – ஒரு சிஷ்யன், முத் தாப - (ஆத்யாத்மீகம், ஆதிபௌதீகம், ஆதிதெய்வீகம் என்னும்)மூன்று தாப மாகிற, நெருப்பினுல்–அக்கினியினுல், வெந்து – தாப மடைந்து, சிந்தா – மநதில், ஆகுலம் – வியாகூலத்தை, உடையவன் ஆகி–உடையவ னுய். எ-று

தம்-அசை, இச் செய்யுள் குளகம்

1. நிஷித்தாச்சாரியன், 2. காமியாச்சாரியன், 3. போத காச்சாரியன், 4. வேதகாச்சாரியன், 5. சூசகாச்சாரியன், 6. வாசகாச்சாரியன், 7. காரகாச்சாரியன், 8. விகிதாச்சாரி யன், என எண் வித மான கிரமத்தினை உணர்க.

ஜநந மரண சம்சாரத்தின்கண் சுழலாநின்ற ஜீவந், முதலில், "நல் வசியாதியால் இம்மை யின்பம் அங்கு வெந் துயர் உதவும்" நிஷித்தாச்சாரியனை யடைந்து, அதன் பின்," இருமையினும் இன்பம் உதவும்படி யான அறத்தைப் போதகஞ் செய்யும்" காமியாச்சாரியனை அடைந்து, அதன் பின். "முன்னூலில் பெரும் பொருள் கூறிடும்" முதற் சாதந போதகாச்சாரியனை அடைந்து, அதன் பின், " தத்துவம் திகழ்த்தும்" இரண்டாம் சாதந வேதகாச்சாரியனை அடைந்து, அதன் பின், "சமை முதலாங் குணங்கள் தொகுக் கும், மூன் றும் சாதந சூசகாச்சாரியனை அடைந்து, அதன் பின்; " விடயம் பொய் யென ஆந்ம விருப் பருளும்" நான்காம் சாதந வாசகாச்சாரியனை அடைந்து, அதன் பின், "சிவ சீவர் ஐக்கிய ஞாநத்தை வழங்கும்" காரகாச்சாரியனை அடைந்து, அதன் பின், "ஐயம் தவிர்த்து ஆசு அகலும் நிலைத்த முத்தி அருளும்" விகிதாச்சாரியனை அடைந்து, ஜநந மரண சம்சாரத்தில் நின்றும் நிவிர்த்தி அடைகின்றனன் என்று கிரம மாக உணர்க.

ஒருவருக்கே, எண் வித உபதேசத்தால், எண் வித குருத் தன்மையும், ஒரு சிஷ்யனுக்கே எண் வித உபதேசத் தைக் கேட்டலால், எண் வித மாணுக்கத் தன்மையும் பொருந்து மென அறிக.

ஆத்யாத்மீக துக்கம்—அதி ஆத்ம சம்பந்தம் – ஆத்யாத் மீகம்—தூல தேகம். தூல தேகத்துக்கு வியாதி முதலிய வற்றால் வரும் தாபம் ஆம்.

ஆதி பௌதிக துக்கம் – அதிபூத சம்பந்தம், ஆதி பௌதிகம் - பிராணி வர்க்கம். தூல தேகத்துக்கு பிராணி வர்க்கத்தால் வரும் தாபம் ஆம்.

ஆதி தெய்வீக துக்கம், அதி தெய்வ சம்பந்தம்—ஆதி தெய்வீகம், மலே ஆறு கோபுரம், தூல தேகத்துக்கு, மலே ஆறு கோபுரம் இடிந்து விழுதலால் வரும் தாபம் ஆம்.

1. சூசக ஆசாரியன், ஆத்ம அநாத்ம விவேகத்திஞல், க்ஷமை தமை திதிக்ஷை உபரதி சிரத்தை சமாதி என்னும் அறு குணங்களே தொகுத்து கூறுபவன் ஆவன், 2. வாசக ஆசாரியன், விஷயம் பொய் எனக் கூறி ஆந்மாவினிடத்து விருப்பத்திண உண்டு பண்ணுபவன் ஆவன். 3 காரக ஆசாரியன், ஜீவப் பிரஹ்மங்களின் ஐக்கியத்திண உபதேசிப்பவன் ஆவன். 4. விஹித ஆசாரியன், சம்சய விபரீதங்களேப் போக்கி, குற்ற மற்ற நிலேத்த மோக்ஷத்திண உபதேசிப்பவன் ஆவன். 14.

சிஷ்யன், தானே விசாரித்து, பவம் வந்த வாறு, அஃது நசிக்கும் வழி, நசிப்பிப்பவர் யாவர் என ஆய்ந்து, அசேஷ சாஸ்திர பாண்டித்தியமும், ஆத்ம சாக்ஷாத்காரமும், க்ஷமை முதலிய குணங்களும், உடைய ஆசாரியரை அடைந்து, விதிவத் உபசந்நத்துவத்திணச் செய்தனன் எனக் கூறுகின்ருர்.

நாஞரிப் பவமெனக்கு வந்தவா றென்கொ
னசிப்பதெவ ராலெனவாய்ந் தலர்கரங்கொண் [டேகி,
யாஞநற் கல்வியறி வடக்கம்வை ராக
மாதியாங் குணமுடைச்சற் குருவையடைந்
தெதிர்மண்,
ஞூஞரப் பணிந்தெழுந்தன் பார்றகரங்கள் குவித்தே
யுறவழுத்தி யருட்குருவே யென்பாசத் தொழிவு,
தாஞமெத் திறத்திஞ லெனவினவல் சீடன்
றனதுவிதி வத்துபசந் நத்துவமா மன்றே. (15)

இ-ள். நான் — நான், ஆர்-யாவன், எனக்கு — எனக்கு, இப் பவம்—இந்தச் சம்சாரம், வந்த ஆறு - வந்த வழி, என்—எப்படி, எவரால்—எந்த ஆசாரியரால், நசிப்பது—நாச மடைவது, என—என்று, ஆய்ந்து — விசாரித்து, அலர்—விரிந்த புஷ்பங்களை. கரம் கொண்டு—கையில் கொண்டு, ஏகி —(ஆசாரியரைத் தேடிச்) சென்று, ஆறு — நீங்காத, நல் — உயர்ந்த, கல்வி — (அத்யாத்ம) வித்தை, அறிவு — விநயம், அடக்கம்—அடக்கம், வைராகம்—வைராக்கியம், ஆதி ஆம் — முதலியன வாகிய, குணம் உடை—குணங்களை உடைய, சத் குருவை — சதாச்சாரியரை, அடைந்து — (சரணாகதி யாக) அடைந்து, எதிர்-(ஆசாரியரது) எதிரில், ஊன் — சரீரம், மண்-பூமியில், ஆர — படியும்படி, பணிந்து — (அஷ்டாங்க) நமஸ்காரஞ் செய்து, எழுந்து — எழுந்து (நின்று), அன்பால் — பிரியத்தோடு, கரங்கள்—கைகளை, குவித்து —(சிரசின் மீது) ஒன்று சேர்த்து, உற—(நாத் தழும்பு) ஏறும்படி, வழுத்தி—துதித்து, அருள் குருவே — ஞானாச்சாரியரே, என் — எனது, பாசத்து ஒழிவு — பாச நிவிர்த்தி, எத் திறத்தினால்—எவ் வித உபாயத்தினால், ஆம்—உண் டாம், என—என்று, வினவல் —(குருவின் சந்நிதியில் சிஷ்யன்) கேட்குத லானது, சீடன் தனது — சிஷ்யனது, விதிவத்—விதி யாக, உபசந்நத்வம் ஆம் — சரணாகதி அடைந்து வணங்குவ தாம். எ-று.

கொல்-ஏ-தான்-தன்-அன்று-ஏ-அசை. ஆனல்—கெடுதல். குருவின் ஷட் குணம் :

கல்வி — அசேஷ சாஸ்திர பாண்டித்யம் ஆம். அறிவு—ஆத்ம அநாத்ம அபரோக்ஷ ஞானம் ஆம். அடக்கம் — டாம்பீகம் இன்மை ஆம். வைராக்கியம் — விஷய விருப்பம் இன்மை ஆம்.

விதி-வத்-உப-சம்-நத்வம் — விதியை உடைய நல் வணக்க மாம்.

வழுத்தல்— "சைதந்யம் சாஸ்வதம் சாந்தம் வியோ மாதீதம், நாத பிந்து கலாதீதம், தஸ்மை ஸ்ரீ குரவே நம:" எனத் துதித்தல் ஆம்.

நான் ஆர்– "நான் மநுடன்," "என் னுடைய சரீரம்" என்று இவ் வாறு இரு வகைப் பிரதீதியாவதால்,நான் தேக சொரூபனா ? அல்லது, தேகத்தினைப் பார்க்கிலும் பிந்நனா? நான் தேகத்தைப் பார்க்கிலும் பிந்நன் ஆகில், நான் கர்த்தா ? போக்தாவா ? அல்லது, அக்கிரியனா? அக்கிரிய னானாலும், சர்வ சரீரத்திலும் ஏக ரூபனா யுளனா ? அல்லது, நாநா ரூப மாக வுளனா ? என்பனவை, நான் ஆர் என்னும் முதல் விகற்பத்தின் அபிப்பிராயம் ஆம்.

இப் பவம் எனக்கு வந்த ஆறு என் என்பது.

இந்தச் செநந மரண ரூப சம்சாரம் எனக் குண்டான படியால், ஆரேனும் ஒரு கர்த்தாவினால் உண்டாயிற்றா ? அல்லது, தானே உண்டாயிற்றா?கருத்தாவினால் உண்டாயிற் றேல், அந்தக் கருத்தா ஜீவனா? அல்லது, ஈசுவரனா? ஈசுவரன் ஆனாலும், அவ் வீசுவரன், ஏக தேசத் திருப்பவனா? அல்லது, வியாபகனா ? வியாபகன் ஆனாலும், வியாபக ஆகாசத்தைப் பார்க்கிலும், ஜீவன் எப்படி பிந்நனோ? அப்படி, அவ் வீசுவர னைப் பார்க்கிலும் ஜீவந் பிந்நனா ? அபிந்நனா ? என்பனவை. "இப் பவம் எனக்கு வந்த ஆறு என் கொல்". என்னும் இரண் டாவது விகற்பத்தின் அபிப்பிராயம் ஆம்.

சிஷ்யன் அதிகாரத்தினை உணர்ந்து, ஆசாரியர் உபதேசமும், அதன், உத்தேச உபதேசம், லக்ஷண உபதேசம் பரிக்ஷா உபதேசமும் கூறுகின்றார்.

அனையவன ததிகாரந் தெரிந்தருளா னோக்கி
யஞ்சலோம் பென்றபய கரஞ்சிரத்தி லிருத்திப்,
புனையவருஞ் சுருதியுத்தி யாலவன தநாந்ம
புத்தியினை யொழித்துத்தா தாந்மியவாக் கியத்தா,
னினையலரு மொருபிரம நீயேயென் றுள்ள
நிலை யையுணர்த் துதல்குரவ னுபதேச மாகு,
மினையவுப தேசமுறை யுத்தேசத் துடனே
யிலக்கணஞ்சோ தனையெனுமூன் றினையுமுடைத்
தாமால். (16)

இ-ள். அனையவனது—அவ் வாறு சரணாகதி அடைந்த சிஷ்யனது, அதிகாரம் – பக்குவத்தினை, தெரிந்து–உணர்ந்து, அருளால் – கிருபையோடு, நோக்கி – பார்த்து, அஞ்சல் – பயப்படுதலை, ஓம்பு – நீக்குக, என்று – எனக் கூறி, அபய கரம்–அபயாஸ்தத்தினை, சிரத்தில்–சிரஸில், இருத்தி– வைத்து, புனைய வரும் – அலங்கரித்து வருகின்ற, சுருதி – சுருதியினாலும், யுக்தியால் – யுக்தியினாலும், அவனது – அந்தச் சிஷ்ய னுடைய, அநாந்ம – அநாத்ம, புத்தியினை – புத்தியை, ஒழித்து – நிவிர்த்தித்து. தாதாந்மிய வாக்கியத்தால்–மகா வாக்கியத்தினால், நினையல் – நினைத்தற்கு, அரும்– அரிய, ஒரு – ஒப் பற்ற. பிரமம் – பிரமம், நீயே – உனது சொரூபமே யாம், என்று–என, உள்ள நிலையை – யதார்த்த ஸ்திதியை, உணர்த்துதல் - அறிவித்தல், குரவன் – ஆசாரியரது, உபதேசம் ஆகும் – உபதேச மாம், இனைய – இவ் வாறுய, உபதேசம் முறை – உபதேசத்தின் கிரம மானது,

உத்தேசம் எனும் – உத்தேச உபதேசம் என்றும், இலக்கணம் – லக்ஷணோபதேசம் (என்றும்), சோதனை – பரிக்ஷா உபதேசம் (என்றும்), மூன்றினையும் – மூன்று பெயரினையும், உடைத் தாம் –உடைய தாம். எ-று.

ஏ-ஆல்-உடன்-அசை. அத்து சாரியை. " நினையல் அரும்" என்பது, சக்தி விருத்திக்கு விஷயம் ஆகாது, லக்ஷணா விருத்திக்கு விஷயம் ஆம் என்பதனை அறிவித்த தாம்.

'அவனது அநாத்ம புத்தியினை, சுருதியால் ஒழித்தல்' என்பது—ஆத்மா சரீரத் திரய விலக்ஷணம், பஞ்ச கோச வியதிரிக்தம், அவஸ்தாத் திரய சாக்ஷி, சச்சிதாநந்தம், அஹம் பதத்தின் லக்ஷியார்த்தம் என்பன முதலியவற்றை.

யுக்தி என்பது, அந்வய வியதிரேக யுக்தி முதலியவற்றை, தூல சரீரந் தோன்றாத ஸ்வப்நத்தில், அதற்குச் சாக்ஷி யாகத் தான் தோன்றுவது அந்நுவயம். தான் தோன்றினும், தூல சரீரம் தோன்றாததே வியதிரேகம், இலிங்க சரீரந் தோன்றாத சுழுத்தியில், தான் ஆநந்த ரூப மாகத் தோன்றுவதே அந்நுவயம். தான் தோன்றினும் இலிங்க சரீரந் தோன்றாததே வியதிரேகம்.

இலிங்க சரீரத்தில், பிராண மயம், மநோ மயம், விஞ்ஞாந மயம் என்னும் மூன்று கோசங்களும் இருத்தலால், அதனை நிஷேதித்தலே மூன்று கோசங்களையும் நிஷேதித்த தாம். சமாதியில், தாம் நிராவரண ஆநந்த மய மாகத் தோன்றுவதே அந்நுவயம் ஆம். தான் அங்ஙனந் தோன்றினும் சுழுத்தி ரூப மான அவித்தை தோன்றாததே, வியதிரேக மாம். முஞ்சிப் புல்லில், பக்கத்து மட்டைகளைத் தள்ளி

நடுவி லிருக்கிற ஆணியைக் காட்டுவது போல, சொல்லிய யுக்தியினால், சீடனது தூல தேக முதலிய அநாத்ம வர்க்கங்களில், அவிவேகத்தினால் எழும் அகந்தை, மமதை, ரூபம் ஆன பிராந்தியைப் போக்கி, தத் துவ மசி என்னும் மகா வாக்கியத்தினால், உண்மையை உணர்த்துவதே, குருவின் உபதேசம் ஆகும் என்பார், "சுருதி யுக்தியால் அவனது அநாத்ம புத்தியினை ஒழித்துத் தாதாத்மிய வாக்கியத்தால் நிலையல் அரும் ஒரு பிரமம் நீயே என் றுள்ள நிலையை உணர்த்துதல் குரவன் உபதேசம் ஆகும்" என்றார். இப்படியே, வாசிட்டத்தில், "இயற்கை குணம் சோதித்துமுன்னே பின்னே யாவையுமாம் பிரம நீ யென்னல் வேண்டும்" (4—4 தாசூரன் கதை 12) எனக் கூறியிருப்பது காண்க.

பெயர் மாத்திர மாகக் கூறுதல், உத் தேச உபதேச மாம். கழுத்தில் அலை தாடி உடையது பசு என்பது போல், தான் கூறப் புகும் வஸ்துவில் உள்ள அசாதாரண லக்ஷத்தினைக் கூறுதல், லக்ஷண உபதேசம் ஆம். 16.

உத்தேச, லக்ஷண, பரீக்ஷா உபதேசமும், ஒரு வஸ்துவை அறிந்து அடைதற்கு பிரத்தியக்ஷாதி அஷ்டப் பிரமாணம் உண்டு என்பதையும், கூறுகின்றார்,

அறியவுணர்த் துறுபொருளை நாமமாத் திரத்தா
லறைந்திடுத லுத்தேச மாங்களகம் பளமாங்,
குறியுடைய தாவெனல்போ லப்பொருளிற் சிறந்த
குறியுரைத்த லிலக்கணமவ் விலக்கியமாம் பொருளிற்,
செறிவுறுமவ் விலக்கணமுண் டோவிலையோ வென்னத்
தெரிந்திடுதல் பரீட்சையோர் பொருளறிந்துபெறற்குப்
பொறியுறல்செய் காட்சியா மளவைமுத லாகப்
பொருந்துபிர மாணங்க ளெட்டுளவா மன்றே. (17)

இ-ள். அறிய – (ஒருவன்) தெரிந்து கொள்வதற்கு, உணர்த்து உறு – அறிவிக்கின்ற, பொருளை – வஸ்துவை, நாம மாத்திரத்தால் – பெயர் மாத்திரத்தால், அறைந்திடுதல் – கூறுதல், உத்தேசம் ஆம்–உத்தேச (உபதேச) மாம்; கள – கண்டத்தில், கம்பளம் ஆம் – கம்பளம் போலும் அலை தாடி யாகிய, குறி யுடையது – லக்ஷணம் (அடையாளம்) உடையது, ஆன்-பசு, எனல்-என்று சொல்லுதல், போல் – போல, அப் பொருளில் (தன்னால் உபதேசிக்கப்பட்ட) வஸ் துவில் (உள்ள), சிறந்த – உயர்ந்த, குறி – லக்ஷண (அடையாள) ங்களை, உரைத்தல் – கூறுதல், இலக்கணம் – லக்ஷண உபதே மாம்; அவ் விலக்கியம் ஆம் பொருளில் – அந்த லக்ஷிய மாகிய வஸ்துவில், செறிவு உறும் – பொருந்தியிருக் கின்ற, அவ் விலக்கணம் – அந்த லக்ஷணம், உண்டோ – இருக்கின்றதா, இலையோ – இல்லையா, என்ன – என்று, தெரிந்திடுதல் – விளக்கி உபதேசித்தல். பரிக்ஷை – பரிக்ஷா உபதேச மாம்; ஓர் – ஒரு, பொருள் –வஸ்துவை, அறிந்து – தெரிந்து, பெறற்கு – அடைதற்கு, பொறி – இந்திரியங் களின், உறல் செய் – சம்யோகத்தினால் (உண்டாகின்ற), காட்சி ஆம் – பிரத்தியக்ஷம் ஆகிய. அளவை – பிரமாணம், முதல் ஆக – முதலியன வாக, பொருந்து – சேராநின்ற, பிரமாணங்கள் – பிரமாணங்கள், எட்டு உள ஆம் – எட்டு இருக்கின்றன வாம். எ-று

அன்று-ஏ-அசை.

1. ஒருவன் உணர்தற்கு அறிவிக்கும் பொருளை, பெயர் மாத்திர மாகக் கூறுவது, உத்தேச உபதேசம் ஆம்.

2 கழுத்தில் அலை தாடி யாகிய அடையாளம் யுடை யது பசு என்பது போன்று, தான் கூறும் பொருளில்

உள்ள, அசாதாரண லக்ஷணத்தினைக் கூறுவது, லக்ஷண உபதேசம் ஆம்.

3. கூறும் பொருளில், கூறிய லக்ஷணம் இருக்கின்றதா? இல்லையா? என அறிந்து கொள்ளும்படி கூறுவது, பரீக்ஷா உபதேசம் ஆம் என உணர்க.

ஒரு பொருளை அறிந்து அடைதற்கு, பிரத்தியக்ஷம் அநுமானம் உபமானம் சப்தம் அர்த்தாபத்தி அநுபலப்தி சம்பவம் ஐதிகம் என பிரமாணம் எட்டு வித மாக இருக்கின்றது, என உணர்க.

உத்தேசம் லக்ஷணம் பரிக்ஷை என்னும் மூன்றன் பிரயோசனம் என்னை எனிற் கூறுதும்.

உத்தேசத்துக்கு, அநுமானத்தில், பக்ஷத்தின் ஞானம் பிரயோசனம் ஆம். இலக்ஷணத்திற்குப், பக்ஷத்தில், இதர பதார்த்தங்களின் பேத ஞானம் பிரயோசனம் ஆம்.

பரிக்ஷைக்கு, அவ் விலக்ஷணத்தில், அதிவியாப்தி முதலிய தோஷங்களின் நிவிர்த்தியே பிரயோசனம் ஆம்.

என்னை, பிருதிவி, ஜல முதலிய இதர பதார்த்தங்களின் பேதம் உடைய தாக, வில்லையோ. அவ் வவ் வஸ்து கந்தம் உடையதும் ஆகாது. எப்படி ஜல முதலிய வஸ்துக்களைப் போலும், இவ் வநுமானத்தில், பிருதிவி என்னும் இவ் வாறான உத்தேசத்திற்குப், பிருதிவி வடிவ பக்ஷத்தின் ஞானமே பிரயோஜனம் ஆம். கந்தம் உடைமை வடிவ லக்ஷணத்திற்கு, பிருதிவி ரூப பக்ஷத்தில், ஜல முதலிய இதர பதார்த்தங்களின் பேத ஞானமே பிரயோஜனம் ஆம்.

ஆக்ஷேபம் - இலக்ஷணத்தில் அதிவியாப்தி முதலிய தோஷங்களின் பரிகாரம் பரீக்ஷைக்குப் பிரயோஜநம் என்னப் பட்டது. அவ் வதிவியாப்தி முதலிய தோஷங்கள் எவ் வள வாம், அத் தோசங்களின் சொருபம் என்னை என்று இவ் வாறு ஆக்ஷேபம் வரில், இப் போது, அவ் வதிவியாப்தி முதலிய தோசங்களின் ஸ்வருபங்களை வர்ணிப் பாம்.

அதிவியாப்தி, அவ்வியாப்தி, அசம்பவம் என்னும் பேதத்தால், இலக்கணத்தின் தோஷங்கள் மூ வகைத் தாம். அம் மூ வகைத் தோஷங்களுள்ளே, ஓர் தோஷ மாவது எந்த லக்ஷணத்தி லுண்டோ, அந்த லக்ஷணம் துஷ்ட லக்ஷணம் என்று சொல்லப்படும். இதனை, அசத்து லக்ஷணம் என்றும் கூறுவர். அந்த துஷ்ட லக்ஷணத்தால் அந்த லக்ஷிய வஸ்து சித்திக்கமாட்டாது. அம் மூ வகைத் தோஷங் களினின்றும், எந்த லக்ஷணம் விடுபட் டுள்ளதோ, அந்த லக்ஷணம் அதுஷ்ட லக்ஷண மாம் என்று சொல்லப்படும். சத்லக்ஷணம் என்னும் கூறுவர். அதுஷ்டலக்ஷத்தினு லேயே லக்ஷிய வஸ்துவின் சித்தி உள தாம்

1. இனி, அதிவியாப்தி லக்ஷணம், தனது லக்ஷியத்தின் கண் இருப்பதுந் தவிர, அலக்ஷியத்தின் கண்ணும் இருப்பது. "கோடுடையது பசு" என்று ஒருவன் கூறிடில், அஃது எருமை முதலியவற்றின் கண்ணும் உள தாகலின், அதி வியாப்தி தோஷம் உடைய தாம்.

2. அவ்வியாதி லக்ஷணம் — தனது லக்ஷியத்தில் ஏக தேசத் திருப்பது என்னை ஒருவன், "கபில நிறமுடையது பசு" என்னின், அந்தக் கபிலத்துவ லக்ஷணம் அவ்வியாப்தி தோஷ முடையது, என்னே? கபிலத்துவ லக்ஷணம் தனது லக்ஷிய ரூப மான சகல பசுக்களிடத்தும் இருப்ப தில்லை.

பின்னேயோ, எங்கேனும் ஒரு பசுவினிடத்தில், கபிலத்வம் இருக்கின்றது. ஆதலால், அக் கபிலத்வ லக்ஷணம் அவ்வியாப்தி தோஷம் உடைய தாம்.

3. இனி, அசம்பவ லக்ஷணம், தனது லக்ஷிய மாத்திரத்தில்இல்லாதது, என்னே? ஒருவன் 'ஒற்றைக் குளம்புடையது பசு என்னின், அவ் விலக்கணம் அசம்பவ தோஷ முடையது. எதனல் எனின், அஃதியாது ஒரு பசுவினிடத்து மின்றும் பின்னேயோ, சகல பசுக்களின் பாதத்தில், கவைக் குளம் புளது. அசுவம் கர்த்தபம் முதலியவற்றிலேயே ஒற்றைக் குளம் புள்ளது. ஆதலால்; "ஒற்றைக் குளம் புள்ளது" என்னும் பசுவின் இலக்ஷணம், தனது லக்ஷிய மாத்திரத்தில் இல்லாமையினுல், அசம்பவ தோஷ முடைய தாம். ஆதலின், கோடு டைமை—கபில நிற முடைமை, ஒற்றைக் குளம் புடைமை யாகிய மூ வகை யான பசுவின் இலக்கணம், முறையே. அதிவியாப்தி, அவ்வியாப்தி, அசம்பவம் என்னும் மூ வகைத் தோஷ முடையன வாகலின், தனது லக்ஷிய ரூப பசுவைச் சித்திக்கப்பண்ண மாட்டாது, பின்னேயோ, அதிவியாப்தி முதலிய மூன்று தோஷங்களி னின்றும் நீங்கிய, "கள கம்பள மாதி" யுடைய தன்மை ரூப மான லக்ஷணம், பசு ரூப லக்ஷியத்தை சித்திக்கப் பண்ணுவ தாம். ஆதி சப்தத்தால், கோடு முதலியவற்றைக் கொள்ளல் வேண்டும். ஆதலால், குக்குட முதலியவற்றிலும், அப்படியே, அலே தாடியில்லாத கோடுடைய எருமை ஆடு முதலியவற்றிலும், அவ் விலக்கணத்தின் அதிவியாப்தி உண்டாகாது. இவ் வாறன அதிவியாப்தி, அவ்வியாப்தி அசம்பவ ரூப மான மூன்று தோஷங்களின் பரிகாரமே அப்பரீட்சையின் பிரயோசந மாம். இவ் வளவு அபிப்பிராயமும் அடக்கி, "கள கம்பள மாம் குறி யுடையது ஆன் எனல் போல்!' என்றூர்.

" அவ் விலக்கணமாம் பொருளிற் செறிவுறுமவ் விலக் கணம்" என்றது. பிரமத்தின் தடஸ்த லக்ஷண மாம். குறி, அசாதாரண தர்மம். 17

பிரத்தியக்ஷப் பிரமாணம், பிரதிஞ்ஞை ஹேது திருஷ் டாந்தம் என்னும் மூன்று அவயவங்களோடு கூடிய அநு மானப் பிரமாணம், சப்தப் பிரமாணம், என்னும் மூன்று பிரமாணங்களைக் கூறுகின்றார்.

**கடமுதலா மவற்றினது கரண்கையது தானே**
**காட்சிபுகை யாலங்கி ஞானமநு மானந்,**
**திடமருவு மவ்வநுமா னம்பதிஞை யேது**
**திட்டாந்த மெனுமங்க முடைத்தவற்றுட் பதிஞை,**
**யிடமலைவெவ் வழலுடைத்தென் பதுபுகையுண் மையினு**
**லெனலேது மடைப்பளிபோ லென்பதுதிட் டாந்த,**
**முடைமையுண ராத்தனுரை யானதிதீ ராதி**
**யுறுகனியா திகளுண்மை ஞானமா கமமாம்,** (18)

இ-ள். கடம் - குடம், முத லாம் அவற்றினது - முத லிய பதார்த்தங்களினது, காண்கையது — பிரத்தியக்ஷப் பிரமைக்கு, காட்சி — (சாதன மாகிய இந்திரியம்) பிரத்தியக்ஷ (ப் பிரமாண மா)ம், புகையால் - தூம (ஞான)த்தினுல், அங்கி ஞானம் - (உண்டாம்) அக்கினியின் அநுமிதிக்கு, அநுமானம்— (சாதன மாயுள்ளது) அநுமான (ப் ரமாணமா)ம், திடம் மரு வும் — திட மாகப் பொருந்தியிருக்கின்ற, அவ் அநுமானம் — முற் கூறிய அநுமான (ப் பிரமாண மு)ம், பதிஞை பிர திஞ்ஞை, ஏது—ஏது, திட்டாந்தம் - உதாஹரணம், எனும்— என்னும், அங்கம் — (மூன்று) அவயவங்களை, உடைத்து— உடையதா யிருக்கின்றது, அவற்றுள் — அம் மூன்று அவய வங்களில், பதிஞை—பிரதிஞ்ஞை யாவது, இடம்—விரிந்த,

மலை—பருவதம். வெவ் - உஷ்ண மான, அழல் — அக்கினியினை, உடைத்து — உடையதா யிருக்கின்றது, என்பது - என்று கூறுவதே யாம், ஏது - ஏது ஆவது, புகை - தூமம், உண் மையினுல் — இருத்தலினுல். எனல் — என்று சொல்லுவதே யாம். திட்டாந்தம் - உதாஹரண மாவது, மடைப்பளி — அடுக்களை, போல் - போல, என்பது - என்று சொல்லு வதே யாம், உடைமை — பதார்த்தங்களின் தன்மையினை, உணர் — அறிந்திருக்கின்ற. ஆத்தன் — உண்மை உரைப்போ னது, உரையால் - வாக்கியத்தினுல் நதி தீர ஆதி உறு - ஆற் றங் கரை முதலியவற்றில் பொருந்தி யிருக்கின்ற (விருக்ஷங் களில்), கனி ஆதிகள் — பழ முதலியன, உண்மை — இருக் கின்றன (என்னும்), ஞானம் — (சாப்த) போதத்திற்கு, ஆக மம் ஆம்—(சாதநமா யுள்ளது) சப்த(ப் பிரமாண)மாம்,எ—று.

தான் — ஏ — அசை

"காண்கையது" என்பதில், 'அது' பகுதிப் பொருள் விகுதி.

1. கடாதி பதார்த்தங்களின் பிரத்தியக்ஷப் பிரமைக்குச் சாதக மான இந்திரியங்கள் பிரத்தியக்ஷப் பிரமாணம் ஆம்.

2. புகை ஞானத்தினுல் அக்கினியின் அநுமிதிக்குச் சாதநமா யுள்ளது. அநுமாநப் பிரமாண மாம்.

அவ் வநுமாநப் பிரமாணம், பிரதிஞ்ஞை, ஹேது, திருஷ்டாந்தம், என மூன்று அவயவம் உடையது, இம் மலை கொடிய நெருப் புடைத்து என்பது, பிரதிஞ்ஞை ஆம். புகை உடைமையினுல் என்பது ஹேது வாம். அடுக்களை போல் என்பது திருஷ்டாந்தம் ஆம்.

3 வஸ்துக்களை உணர்ந்திருக்கின்ற ஆப்த வாக்கியம், நதி தீரம் முதலியவற்றில், பழம் முதலியன இருக்கின்றன

என்னும் சாப்த போதத்திற்குச் சாதநமாய் உள்ளது, அதனுல், அது சப்தப் பிரமாண மாம். (18)

அருத்தாபத்திப் பிரமாணம் - திருஷ்ட அர்த்தாபத்தி, சுருத அர்த்தாபத்தி என இரு வகைத் தெனவும், உவமாநப் பிரமாணத்தின் லக்ஷணமும், கூறுகின்றுர்.

பகற்பொழுதுண் ணுனொருவ னிளையாமை கண்டு
பரிந்திரவூண் கற்பித்தல் காணருத்தா பத்தி,
யகத்தினிலே யுறுதேவ தத்தனெனி லிருப்ப
னவன்வேறோ ரிடத்திலெனத் தெரிந்திடுத றன்னைத்,
தகப்பெரியர் கேள்வியருத் தாபத்தி யென்பர்
தகும்பசுவோ டொக்குமரை யெனுமொழிகேட் டிருந்தோன், [தோன்,
புகைப்படரும் வநத்திலதன் விடயஞா நந்தான்
பொருந்துதலே யுவமாநப் பிரமாண மாகும். (19)

இ-ள். தக – தகுதி யான, பெரியர் – பெரியோர்கள், பகல் பொழுது – மத்யாநத்தில், உண்ணுன் – (பிறர் பார்க்க) போஜநம் செய்யாத, ஒருவன் – ஒரு புருஷனது (சரீரம்), இளையாமை – பருத்திருத்தல், கண்டு — (நேத்திரத்திஞல்) பார்த்து, பரிந்து - விருப்பத்தோடு, இரவு - ராத்திரி, ஊண்- போஜநத்தினை, கற்பித்தல் – கற்பிக்கும் (அர்த்தாபத்திப் பிரமைக்கு), காண் அருத்தாபத்தி–(சாதநமா யுள்ளது) திருஷ்ட அர்த்தாபத்திப் பிரமாண மாம், உறு –(நூறு வருஷம் ஜீவித்திருத்தலைப்) பொருந்தி யிருக்கின்ற, தேவதத்தன் – தேவதத்தன், அகத்தின் – கிரகத்தின்கண் இலை, எனில் - இல்லை என்று ஒருவன் கூறின், அவன்–அந்தத் தேவதத்தன், வேறு ஓர் இடத்தில் – அந்நிய மான இடத்தில், இருப்பன் – இருப்பான், என – என்று, தெரிந்திடுதல் தன்னை – அறிந்துகொள்ளும் (சுருதா அருத்தாபத்திப் பிரமைக்கு), கேள்வி அருத்தா

பத்தி – (சாதநமா யுள்ளது) சுருதாருத்தாபத்திப் பிரமாண மாம், என்பர் – என்று கூறுவர், தகும் – தகுதியா யுள்ள, பசுவோடு – (நகரப்) பசுவுக்கு, ஒக்கும் – சமாந மாகும், மரை–(காட்டுப்) பசு, எனும் – என்று கூறப்படும், மொழி– (ஆரண்யக புருஷனது) வாக்கியத்தினை, கேட்டிருந்தோன் – சிரவணஞ் செய்த (நகர வாசி) புருஷ னுனைவன், படரும் - விரிந்திருக்கின்ற, வநத்தில் – ஆரண்யத்தில், புக – பிரவேசித் ததும், அதன் விடய ஞாநம் – அந்த உவமிதிப் பிரமை (பசு விஷய ஞாந மானது), பொருந்துதல் – உண்டாவதற்கு, உவமாநப் பிரமாணம் ஆகும் – (சாதநமா யுள்ளது) உவமா நப் பிரமாணம் ஆம். எ–று.

தன் – தான் – ஏ – அசை

அர்த்தாபத்திப் பிரமாணம், திருஷ்ட அர்த்தாபத்தி, சுருத அர்த்தாபத்தி, என இரு வகைத்து.

1. பகல் புசியான் ஒருவன் பருத்திருத்தலைப் பார்த்து, இரவு போஜநத்தினைக் கற்பிக்கும் திருஷ்ட, அர்த்தாபத்திப் பிரமைக்குச் சாதந மாய் உள்ளது, திருஷ்ட அர்த்தாபத்திப் பிரமாணம் ஆம்.

2. நூறு வருஷ ஜீவி தேவ தத்தன், வீட்டில் இல்லை என்னும் வாக்கியத்தில், வேறு இடத்தில் இருப்பன் என் னும் சுருத அர்த்தாபத்திப் பிரமைக்குச் சாதந மாய் உள்ளது சுருத அர்த்தாபத்திப் பிரமாணம் ஆம்.

3. உவமாநப் பிரமாணம்.

நகரப் பசுவுக்குச் சமாநம் காட்டுப் பசு என்னும் ஆரண்யக புருஷனது வாக்கியத்தினைச் சிரவணஞ் செய்த நகர வாசி புருஷன். வநத்தில் போய், காட்டுப் பசு விஷய

ஞானம் உண்டாவதற்குச் சாதகமா யுள்ளது, உவமானப் பிர மாணம் ஆம். (19)

அபாவப் பிரமாணமும், சம்பவப் பிரமாணமும். ஐதிகியப் பிரமாணமும், பிரத்தியக்ஷாதி அஷ்டப் பிரமாணங் களுள், சமயிகள் கொள்ளும் பிரமாணம் இன்னவை என வும், கூறுகின்றார்.

இந்நிலனிற் கடமில்லை யென்பதனுற் றோன்று
  மின்மையுணர் வபாவமா மாயிரமா கியவெண்,
டன்னிலொரு நூறெனுமெண் ணுண்டெனுஞா னந்தான்
  சம்பவமா மிம்மரத்தி னியக்கனுள னென்னுஞ்,
சொன்னிகழ்வில் வருமியக்க விடயவுணர் வதனைச்
  சொற்றிடுவ ரறிஞரை திகமாகு மளவை,
யென்னவிவண் டொகுத்துரைத்த காட்சிமுத லாய (20)
  வெண்வகையிற் சமயர்கொள லின்னவென வுரைப்பாம்.

இ-ள். இந் நிலனில் – இந்தப் பூதலத்தில், கடம்–குடம், இல்லை – இல்லை, என்பதனுல் – என்று, தோன்றும் – உண் டாகின்ற, இன்மை உணர்வு – அபாவப் பிரமைக்கு, அபா வம் ஆம் (சாதநமா யுள்ளது) அநுபலப்திப் பிரமாண மாம், ஆயிரம் ஆகிய எண் தன்னில் - சகஸ்ர சங்கியையில், ஒரு நூறு எனும் எண் – சத சங்கியை, உண்டு - இருக்கின்றது, எனும்– என்னும், ஞானம் – (சம்பவப்) பிரமைக்கு, சம்ப வம் ஆம் (சாதநமா யுள்ளது) சம்பவ (ப் பிரமாண) மாம், இம் மரத்தின்–இந்த விருக்ஷத்தின்கண், இயக்கன்–யக்ஷன், உளன் - இருக்கின்றான், என்னும் சொல் நிகழ்வில் வரும் – என்று கூறுதலினுல் உண்டாகின்ற, இயக்க விடய-யக்ஷன் விஷய, உணர்வு அதனை – (ஐதிஹ்யப்) பிரமைக்கு, ஐதிகம் ஆகும் – (சாதநமா யுள்ளது) ஐதிஹ்ய (ப் பிரமாண) மாம்,

அறிஞர் – (என்று) பெரியோர், சொற்றிடுவர் – கூறுவார்கள், அளவை - பிரமாணம், என்ன - என்று, இவண்–இவ்விடத்து. தொகுத்து - சுருக்கி, உரைத்த - கூறிய, காட்சி முத லாய – பிரத்தியக்ஷப் பிரமாண முத லாகிய, எண் வகையில் — அஷ்டப் பிரமாணங்களில், சமயர் — மதத்தோர், கொளல் - கொள்ளுதல், இன்ன - இன்ன இன்ன பிரமாணமாம், என - என்று, உரைப் பாம்– கூறு வாம். எ-று

தன் – தான் – அசை

1. அபாவப் பிரமாணம் - இப் பூதலத்தில் குட மில்லை என்னும் பிரதீதியினுல். உண்டாம் அபாவப் பிரமைக்குச் சாதந மாய் உள்ளது. அபாவப் பிரமாணம் ஆகும்.

2. சம்பவப் பிரமாணம் - ஆயிரம் எண்ணிக்கையில், நூறு எனும் எண்ணிக்கை இருக்கின்றது. என்னும் சம்பவப் பிரமைக்குச் சாதநம் ஆய உள்ளது. சம்பவப் பிரமாணம் ஆம்.

3. ஐதிகியப் பிரமாணம் — "இம் மரத்தில் யக்ஷன் இருக்கின்ருன்" என்னும் வாக்கியத்தில், உண்டாகின்ற யக்ஷஸ் விஷய ஞாநத்திற்குச் சாதநமா யுள்ளது, ஐதிகியப் பிரமாணம் ஆம். (20)

உலகாயதர், பிரத்தியக்ஷப் பிரமாணம் ஒன்றை அங்கீகரிப்பவர். சைநர் புத்தர் வைசேஷிகர், பிரத்தியக்ஷப் பிரமாணம், அநுமாநப் பிரமாணம், இரண்டும் அங்கீகரிப்பவர். சாங்கியர், பிரத்தியக்ஷம் அநுமாநம் சப்தப் பிரமாணம் மூன்றும் அங்கீகரிப்பவர். நையாயிகர், பிரத்தியக்ஷம், அநுமாநம் சப்தம், உவமாநப் பிரமாணம் நான்கும் அங்கீகரிப்பவர். பிரபாகரர், பிரத்தியக்ஷம் அநுமாநம் சப்தம் உவமாநம் அர்த்தாபத்திப் பிரமாணம் ஐந்தும் அங்கீகரிப்பவர். பட்டரும்,

வேதாந்திகளும், பிரத்தியக்ஷம் அநுமாநம் உவமாநம் சப்தம் அர்த்தாபத்தி அபாவப் பிரமாணம் ஆறும் அங்கீகரிப்பவர். பௌராணிகர்கள், பிரத்தியக்ஷம், அநுமாநம், சப்தம், உவமாநம், அர்த்தாபத்தி அபாவம் சம்பவம் ஐதிகப் பிரமாணம் எட்டும் அங்கீகரிப்பவர் எனக் கூறுகின்ருர்.

புகலுலகா யதனுக்குக் காட்சியொன் றேசைந
புத்தவைசே டியர்கடமக் கிரண்ட நுமா நத்தோ,
டுகலருஞ்சாங் கியர்க்குமூன் றுரையொடுநான் குவமை
யொடுநியாயர்க் கருத்தா பத்தியொடைந் தாகு,
மிகுபிரபா கரர்க்காறு மபாவமொடு பாட்ட
வேதாந்தி கட்காகு மெனவறிக தெரிவுற்,
றிகலருமொண் புராணிகர்க டமக்களவை யெட்டா
மென்றுரைப்பர் சம்பவவை திகங்களுட னன்றே. (21)

இ-ள். புகல் — சொல்லாநின்ற, உலகாயதனுக்கு — லோகாயத (மதஸ்த்த)ர்களுக்கு, காட்சி — பிரத்தியக்ஷப் பிரமாணம், ஒன்றே - ஒன்றே (அங்கீகார மாம்), சைந — சைந மதஸ்த்தர்களுக்கும், புத்த — பௌத்த மதஸ்த்தர்களுக்கும், வைசேடியர்கள் தமக்கு — காணுத மதஸ்த்தர்களுக்கும், அநுமாநத்தோடு — அநுமாநப் பிரமாணத்திஞேடு, இரண்டு— (பிரத்தியக்ஷப் பிரமாணம், அநுமாநப் பிரமாணம் என்னும்) இரண்டு (பிரமாணங்களே அங்கீகார மாம்), உகல் அரும் — தள்ளுதற் கரிய (கெடுதல் அற்ற), சாங்கியர்க்கு — சாங்கிய மதஸ்த்தர்களுக்கு, உரையொடு — சப்தப் பிரமாணத்தோடு, மூன்று—(பிர்த்தியக்ஷப் பிரமாணம், அநுமாநம் பிரமாணம், சப்தப் பிரமாணம் என்னும்) மூன்று (பிரமாணங்களே அங்கீகார மாம்), நியாயர்க்கு — நியாய மதஸ்த்தர்களுக்கு, உவமையொடு — உபமாநப் பிரமாணத்தோடு, நான்கு —

(பிரத்தியக்ஷப் பிரமாணம், அநுமாநப் பிரமாணம், சப்தப் பிரமாணம், உபமாநப் பிரமாணம் என்னும்) நான்கு (பிரமாணங்களே அங்கீகரர மாம்), மிகு - சிரேஷ்டம் பொருந்திய, பிரபாகரற்கு - பிரபாகர மதஸ்த்தர்களுக்கு, அருத்தாபத்தியொடு - அருத்தாபத்திப் பிரமாணத்தோடு, ஐந்து ஆகும் - (பிரத்தியக்ஷப் பிரமாணம், அநுமாநப் பிரமாணம், சப்தப் பிரமாணம், உபமாநப் பிரமாணம், அருத்தாபத்திப் பிரமாணம் என்னும் ஐந்து (பிரமாணங்களே அங்கீகார மாம்), பாட்ட வேதாந்திகட்கு - (குமாரில) பட்ட மதஸ்தர்களுக்கும், வேதாந்திகளுக்கும், அபாவம் ஒடு-அநுபலப்திப் பிரமாணத்தினேடு, ஆறு ஆம் ஆகும் - (பிரத்தியக்ஷப் பிரமாணம், அநுமாநப் பிரமாணம், சப்தப் பிரமாணம், உபமாநப் பிரமாணம், அருத்தாபத்திப் பிரமாணம்,அநுபலப்திப் பிரமாணம் என்னும்) ஆறு பிரமாணங்களே அங்கீகார மாம், இகல் அரும் - பகைத்தற்கு அரிய, ஒண் - பிரகாசம் பொருந்திய, புராணிகர்கள் தமக்கு-புராண மதஸ்தர்களுக்கு. சம்பவ ஐதிகங்களுடன் - சம்பவப் பிரமாண ஐதிஹ்யப் பிரமாணங்களோடு, எட்டு ஆளவை ஆம் - (பிரத்தியக்ஷப் பிரமாணம், அநுமாநப் பிரமாணம், சப்தப் பிரமாணம், உபமாநப் பிரமாணம், அருத்தாபத்திப் பிரமாணம், அநுபலப்திப் பிரமாணம், சம்பவப் பிரமாணம், ஐதிஹ்யப் பிரமாணம் என்னும் எட்டுப் பிரமாணங்களே அங்கீகார மாம், என்று - என, உரைப்பர் - (சாஸ்திரஞ்ஞர்) கூறுவார்கள், என - என்று, தெரிவு உற்று அறிக - நன்ருய் உணர்ந்து கொள்க, எ-று அன்று - ஏ -அசை. 'வைசேடியர்கள் தமக்கு' என்பதில், தம், 'புராணிகர்கள் தமக்கு' என்பதில், தம், அசை.

பிரமா கரணம் பிராமண மாம். அசாதாரண காரணம் யாது அதுகரண மாம். பிரமா என்பது, ஸ்மிருதி ஞாநத்தின் வேருய். அபாதித அர்த்தத்தை விஷயம் பண்ணத் தக்க ஞாந மாம்; இதற் கந்நியங்க ளான, ஈசுவர ஞாநம், சுத்தி கோசர ஞாநம், ஸ்மிருதி ஞாநம், பிராந்தி ஞாநம் என்னும் இவை அப்பிரமா ஞாநங்க ளாம்.

1. சார்வாகர் பிரத்தியக்ஷம் ஒன்றே அங்கீகரித்தனர்.

2. கணுதர், சுகத மத அநுசாரிகள், பிரத்யக்ஷப் பிர மாணம் ஒன்றே அங்கீகரிக்கில், திருப்தி வேண்டினேனுக் குப், போசநத்தின் கட் பிரவிருத்தி யுண்டாகா தாகலின், இரண்டாவ தான அநுமாநப் பிரமாணமும் அங்கீகரித்த னர். என்னை, அபுக்த்த போசநத்தில், திருப்திக் கேதுத் தன் மையின் ஞாநம், பிரத்தியக்ஷப் பிரமாண ஜந்நிய மான பிரத்தியக்ஷ ஞாந மாக வின்ருகலின், புக்த போஜந (முன்னே தான் உண்ட அந்ந)த்தின், அநுபவித்த திருப்திக் கேதுத் தன்மையை. அபுக்த போஜநத்தின்கண்ணும் அநு மானத்திஞல் அறிந்து, திருப்தி வேண்டினேன் போஜநத் தின்கட் பிரவிருத்திலால் என்க.

3. சாங்கிய சாஸ்திர கர்த்தா வாகிய கபில மதாநு சாரியர், பிரத்தியக்ஷம், அநுமாநம், இரண்டே பிரமாண மங்கீகரிக்கில், தேசாந்தரத்திற் சென் றிருந்த ஒருவன் பிதா மரணமா யிருக்க, யதார்த்தஞ் சொல்பவ ஞன ஒருவன் வந்து, "உன் பிதா மரணம் ஆயினன்" என, அது, கேட்ட புத்திரனுக்குப் பிதா மரண நிச்சயம், பிரத்தியக்ஷம் அநுமா நங்களால் உண்டாகாமல், சப்தத்தால் உண்டாகலின், சப்தத்தோடு மூன்று பிரமாணம் அங்கீகரித்தனர்.

4. நியாய சாஸ்திர கர்த்தா வாகிய கௌதம மத அநுசாரியர், பிரத்தியக்ஷம் முதலிய மூன்றே பிரமாணம் அங்கீகரிக்கின், மரை அறியா ஒருவன், வந வாசி புருஷ னல், "பசுவுக்குச் சமாநம் மரை" என்பதைக் கேட்டு இருந்து, வநத்திற் சென்று, மரையைக் கண்டபோது, அவனுக்குப், "பசுவுக்குச் சமாநம் மரை" என்று வந வாசி புருஷன் சொன்ன வாக்கியார்த்தத்தின் ஸ்மரணம் உண்டாகின்றது. அநந்தரம், "இது மரை" என்னும் ஞாநம் உண்டாகின்ற தாதலால், இப்படிப்பட்ட விலக்ஷண ஞாநத்திற்கு ஏது வான உபமாநப் பிரமாணமும் அங்கீகரித்தனர்.

5. பூர்வ மீமாம்சையின் ஏகதேசியும், பட்ட ருடைய சிஷ்யரும் ஆகிய பிரபாகரர், ஐந் தாவ தாகிய அர்த்தாபத்திப் பிரமாணமும் அங்கீகரித்தனர். பகலில் போஜநத் தியாகி யான புருஷ னுடைய தூலத்தைக் கண்டு. "இவன் இராத்திரியில் போஜநம் செய்வன்" என்னும் ஞாநம் உண்டாகின்ற தாகலின் என்க.

6. பூர்வ மீமாம்சக ரான பட்டர், ஆ றுவ தான அநுபலப்திப் பிரமாணமும் அங்கீகரித்தனர், வேதாந்த சாஸ்திரத்திலும், ஆறு பிரமாணம் அங்கீகரித் துளர். கிரக முதலியவற்றில், கட முதலியவற்றின் அபாவ ஞாநம் உள தாதல், அது அநுபலப்திப் பிரமாணத்தின் பிரயோஜந மாம். ஆதலின் என்க. (21)

## *திருக்குத் திருசிய விவேகம்.*

[வேதாந்த சாஸ்திரத்தில் கூறும் திருக்குத் திருசிய வஸ்துக்களின் லக்ஷணம் கூறுவான் றொடங்கி, திருக்கு வஸ்து வின் சாமாந்ய லக்ஷணங் கூறுகின்றார்.]

திருந்தியவே தாந்தநூ லியம்புறுவ திருக்குத்
திரிசியமென் றிருபொருளங் கவற்றின்முதற் றிருக்கில்,
வரைந்திடுவ சுவகதஞ்ச ஜாதிவிசா திகளா
மற்றவைமூன் றினுக்குமுதா ரணமுறையே மொழியில்,
விரிந்திதரு நிழறருநெடும்பூம் பணைமரமொன் றிற்கு
ஞிமிறினங்கள் புக்குமுகத் துழுதுபெரு குறுதேன்,
னருந்துநறு மலர்முதலா யினவும்வே றுள்ள
வணிமரமுங் கன்முதலா யினவும்போ லாமால். (22)

(இ—ள்) திருந்திய-சிறந்த, வேதாந்த நூல் - வேதாந்த சாஸ்திரத்தில், இயம்புறுவ-கூறப்படுவன, திருக்கு என்று-திருக்கு என்றும், திருசியம் - திருசியம் (என்றும்), இரு பொருள் - இரண்டு பதார்த்தங்க ளாம், அவற்றில் - அவ்விரண்டனுள், முதல் - பிரதமத்தில் (கூறிய), திருக்கில் - திருக்கு வஸ்துவில், வரைந்திடுவ - நீக்கத் தக்கன, சுவகதம் - சுவகத(பேத)மும், சஜாதி - சஜாதீய (பேதமு)ம், விசாதிகள் ஆம் - விசாதீய(பேத)மும் ஆம். அவை மூன்றினுக்கும் - அம் மூன்றிற்கும், முறையே - கிரம மாக, உதாரணப -திருஷ்டாந்தத்தினை, மொழியில் - கூறுமிடத்து, விரிந்த - பரந்த, நிழல் - நிழலை, தரும்-தருகின்ற, நெடும் - நீண்ட, பூம் - அழகிய, பணை - கிளைகளை யுடைய, மரம் - விருக்ஷம், ஒன்றிற்கு - ஒன்றுக்கு, ஞிமிறு இனங்கள் - வண்டுக் கூட்டங்கள், புக்கு - புகுந்து, முகத்து - வாயினுல், உழுது - கீன்று, பெருகு உறு - (அதனுல்) பெருகப் பட்ட, தேன் - மதுக்களை, அருந்தும் - புஜிக்கப்பட்ட, நறும் - வாசனை யுள்ள, மலர் - புஷ்பம், முதலாயினவும் - முதலியவற்றிற்கும் (உள்ள சுவகத பேதம் போலவு)ம்,

வேறு - அந்நிய மாக, உள்ள - இருக்கின்ற, அணி - அழகிய, மரமும் - மரத்திற்கு (உள்ள சஜாதிய பேதம் போலவும்), கல் - பாஷாணம், முதலாயின - முதலியவற்றிற்கு (உள்ள விசாதிய பேதம்), போல் உம் ஆம் - போலவும் ஆகும். எ—று. மற்று ஆல் அங்கு அசை.

லக்ஷணப்''பிரமாணங்களால் வஸ்து சித்தி உண்டாதலின்'' என்னு நியாயத்தினுல், முதலில் லக்ஷணம் கூறினர். (22)

[திருக்கு வஸ்துவிற்கு, சஜாதிய பேதமும், விஜாதிய பேதமும் இல்லை எனல் ஆம். ஸ்வகத பேதம், மாயா சத்தியிருத்தலினுல், இருக்கின்றது என ஆக்ஷேபித்து, சித்திரிகன் இடம் உள்ள சித்திர சக்தியினைப் போல, திருக்குவுக்கு அந்நிய மாக வஸ்து வாக இல்லாமையினுல் என்று திருஷ்டாந்த பூர்வக மாகச் சமாதாநம் கூறி, ஸ்வகத பேதம் இன்று என்று கூறுகின்றுர்.]

நிரவயவ மாதலினு னுஞ்சத்து வேறு
நிகழாமை யானுமிறை தனக்குமுத னடுவின்,
ருெருவுறுக விவ்வுலக காரணமா மாயை
யுண்மையினு னிறுதியதி லென்பதென் கொ லென்னில்,
வனைவுதரு சித்திரிகன் சித்திரசத் தியைப்போன்
மாயையுஞ்சந் மரத்திரமாம் பிரமத்தின் வேருய்த்,
தெரிவதிலா மையினென்றுஞ் சச்சிதா நந்த
சிவத்தினுக்கு விசாதியிலை யென்றுணர்க தெரிந்தே
(23)

(இ—ள்) இறைதனக்கு - (திருஷ்டாந்தம் போலத் தார்ஷ்டாந்தத்தில்) திருக்கு வஸ்துவிற்கு, நிரவயவம் ஆதலி

ஞனும் - அவயவம் இல்லாதபடியினுலும், வேறு - அந்ய மாக, சத்து - சத் வஸ்து (ஒன்று). நிகழாமையானும் - விளங்காதபடியினுலும், முதல் - முதலிற் (சொல்லிய சுவகத பேதமும்), நடுவு - மத்தியில் (கூறிய சஜாதீய பேத மும்), இன்று- இல்லை (என்று உணர்ந்து), ஒருவு உறுக - விட்டுவிடுக, இவ் வுலக காரணம் ஆம் - இந்த ஜகத் கார ணம் ஆகிய, மாயை - மாயை, உண்மையினுல் - (விலக்ஷண மாக) இருக்கின்றமையினுல், இறுதியது - அந்தத் திற்(கூறிய) விஜாதீய பேதம், இல் - இல்லை, என்பது - என்று சொல்வது, என்-எப்படிக் கூடும், என்னில்-என்று வினவுவாயாகில், வரைவு தரு-(சித்திரங்களை)எழுதுகின்ற, சித்திரிகன்- சித்திரக்காரனது, சித்திர சத்தியை-சித்திர சத் தியானது (அவனுக்குப் பின்ந மில்லாமல், இருப்பதை), போல்- போல, மாயையும் - (ஜகத் காரண மாகிய) மாயை யும், சந் மாத்திரம் ஆம் பிரமத்தின்-சத் ரூப மாகிய பிரஹ்ம மத்திற்கு, வேறு ஆய் - அந்நிய(மாய்ப்) பதார்த்த ரூப மாய், தெரிவது இலாமையின் - பிரதீதியாகாமையின்- என்றும் - காலத் திரயத்திலும், சச்சிதாநந்த சிவத்தினுக்கு, சச்சிதாநந்த ஸ்வரூபப் பிரஹ்மத்திற்கு, விஜாதி - விஜாதீய (பேதம்), இலை - இல்லை, என்று - என, தெரிந்து உணர்க- தெளிவாய் அறிக. எ—று. சொல் ஏ இறை தனக்கு என் பதில் தன்-அசை, 'இறுதியது' என்பதில், அது பகுதிப் பொருள் விகுதி.

இதற்கு உதாரணம், ஈசுவர கீதை, 9-2, "என்னெழிய வில்லைச்சக மியானவ்வு ருவல்லே, னுன்னிலொரு மாயை யுல குக்குமு தலாகு, ஞன்னுருவ மானவெனை யன்றியது நாளுந், தன்னியல்பி னுனிகழ்வு றத்தகுவ தன்றால்". என

வும், பிரஹ்ம கீதை, 2—10 "வேதமோ தியதே மெய்ப் மொருண் மற்றைப் பொருளெலா மித்தையே வேத, மோதமே வுற்ற பொருளிரு வகையா மதனிலொன் றென்றுமுண் மையதாய்ப், போதவா நந்த மாகிய சிவ மும் பொருளது மற்றதப் பொருளி, லேதமே வாமற் கற்பித மாகு மற்றத னியல்பையு மிசைப்பாம்". எனவும், மேற்படி 2—11. "சொல்லுரு நின்ற கற்பிதப் பொருளிற் சொல்லள வுள்ளதா யுண்மைக், கில்லையா யிருக்குஞ் சில பொருள் சொலவு மில்லையாஞ் சிலபொரு ளவைதா, னெல்லைதீர் வாநா திகளுஞ்சுத் திகையி லிரசதா திகளுமா முன்னைத், தொல்லையாம் பொருளுங் கற்பிதத் துண்மைப் பொருளையுஞ் சொல்லுநற் சுருதி." எனவும், வருவனவற் ருல் காண்க, (23)

[பிரஹ்மத்திற்கு "ஏகமேவாத்வைதம்" என்னும் சுருதிப் பிரமாண வாயிலாய், சஜாதீய பேதம், ஸ்வகத பேதம், விஜாதீய பேதம் இல்லை என்று கூறுகின்ருர்.]

சுருதியினு ளேகமே வாத்வைத மென்னுஞ்
சொற்கிடையு ளேகமெனுஞ் சொல்லதனுக் கயிக்க,
மரிதிலுண ரேவவெனு மிடைச்சொற்குத் தேற்ற
மத்துவித மெனுமொழிக்குத் துவிதவிலக் காகக்,
கருதுபொருள் வருதலினு லிம்முறைபே மாயா
கற்பனைகள் கடந்துநிர வயவமா யென்றுந்,
திரிதலில்சிந் மயமாகு மொருபிரமந் தனக்குத்
தெரித்தசுவ கதமுதலா யினமூன்று மிலையே. (24)

(இ—ள்) சுருதியினுள் - வேதத்தில், ஏகம் ஏவ அத் வைதம் - ஏகமேவாத்வைதம், என்னும் - என்று கூறும்,

சொற்கிடையுள் - வாக்கியத்துள், ஏகம் - ஏகம், எனும் - என்று கூறும், சொல்லதனுக்கு - பதத்திற்கு, அயிக்கம் - ஐக்கியம்(பொருளாம்), அரிதில்-பிரயாசையோடு, உணர் - அறியத் தக்க, ஏவ - ஏவ, எனும் - என்று (கூறப்படும்), இடை - மத்தியி லுள்ள, சொற்கு - பதத்திற்கு, தேற்றம்-தெளிவு (பொரு ளாம்), அத்வைதம்-அத்வைதம், எனும்-என்று கூறப்படும், மொழிக்கு - பதத்திற்கு, துவித விலக்காக, த்வைத வர்ஜித மாக, கருது பொருள் - தாத்பரிய அர்த்தம், வருதலினல் - உண்டாகின்றபடியால், இம் முறையே - இந்தக் கிரம மாகவே, மாயா கற்பனைகள்-(விஜாதிய பேத மாகிய), மாயா காரியங்கள், கடந்து-நீங்கி, நிரவயவம் ஆய் -(ஸ்வத பேத மாகிய), அவயவம் இன்றிய தாய், என்றும் - எப் பொழுதும், திரிதல் இல் - கெடாத, சிந்மயம் ஆகும் - சித்து ரூபமா யிருக்கின்ற, ஒரு பிரமம் தனக்கு - (சஜாதிய பேதம் நீங்கிய) அத்வைத மான பிரஹ்மத்திற்கு, தெரித்த - முன்னர்க் கூறிய, சுவகதம் - சுவகத (பேத)ம், முத லாயின- முதலிய,மூன்றும்-மூன்றும், இலை-இல்லையாம், எ—று. ஏ 'பிரமம் தனக்கு, என்பதில், தன்-அசை. 'சொல்லதனுக்கு' என்பதில், அது, பகுதிப் பொருள் விகுதி. அன் சாரியை.

இதற்கு உதாரணம். பஞ்ச தசி, 2. 13 "பாதவச் சுகத பேதம் பழமல ரிலையி லாந்தன், சாதிமற் றென்றூன் வேறு சாதிகல் லாதி யாலாம்". எனவும்,

13. "அப்பரி சுண்மைக் காமுப் பேதமு மடைவி னீக்கும், துப்பம ரயிக்கந் தேற்றந் தொய்தநீக் கமதி வற்ரு, லப்பொருட் குறுப்புண் டென்ன லங்கிச மன்மை

யாலே, செப்புறுப் புருப்பே ராகாச் செகித்திடா மையினிப் போதும்.'' எனவும்,

14. ''பெயருருத் தோற்ற மேயாம் பிறவியா தலி னுண் டாமுன், னயநமற் றவற்றுக் கின்று மாகைய னிரங்கி சந்தான், உயருண்மை விசும்பு போலும் உண் மையந் தரந்தன் சாதி, யியலுரு விலக்ஷ ணந்தா னிசைந் திடா மையினு லன்றே.'' எனவும்,

15. ''ஒன்றிய நாம ரூப வுபாதிபே தத்தை யன்றி, யின்றசத் தினுக்கே பேத மில்லது விசாதி யந்தான், என்றுமுண் டென்னத் தோன்று தெதிர்மறை யன்மை யாலே, பின்தபு விசாதி யத்தாற் பேதமெவ் வாறு மன்றே.'' எனவும்,

16, ''ஏகமே வாத்தொய் தஞ்சத் தென்பது சித்த மாங்கே''. எனவும் வருவனவற்றுல் காண்க. (24)

[திருசியத்தின் சாமாந்ய லக்ஷணங் கூறுகின்றுர் ]

அத்தியா ரோபமப வாதமென விரண்டா
  யறைகுவர்கற் பிதமத்தி யாரோப முள்ள
சுத்தியூ டிலாதவிர சதம்விளைத்தல் போலச்
  சொல்பிரம சத்தினில்லா வுலகதுகற் பித்த,
லெய்த்திதுதான் வெள்ளியதன் றிப்பியெனல் போலோர்ந்,
  திறைமெய்பொய் யுலகமெனத் தெளிதலப வாத,
மெய்த்தபொரு ளறியுமிலக் கணமூன்று மவைதாம்
  விளங்கதத் வியாவிருத்தி தடத்தமொடு சொரூபம். (25)

(இ—ள்) அத்தியாரோபம்- (இரண்டாவதாய திருசிய வஸ்துவை) அத்தியாரோபமும், அபவாதம் - அபவாதமும், என - என்று, இரண்டாய் - இரண்டு பிரகாரமாக, அறைகுவர் - கூறுவார்கள், கற்பிதம் - (அவ்விரண்டு) மித்தையேயாம், உள்ள - (முக்காலத்திலும்) இருக்கின்ற, சுத்தியூடு - கிளிஞ்சிலினிடத்தில், இலாத - (முக்காலத்திலும்) இல்லாத. இரசதம்-வெள்ளியை, விளை(வி)த்தல் - உண்டாக்குதல், போல- போல, சொல் - கூறுகின்ற. பிரம சத்தின் - முக்காலத்திலும் உள்ள பிரஹ்மத்தின்கண், இல்லா - (முக்காலத்திலும்) இல்லாத, உலகது - பிரபஞ்சத்தினை, கற்பித்தல் - தோற்றுவித்தல், அத்தியாரோபம் - அத்தியாரோபமாம், எய்த்து - (விசாரித்து) அறிந்து, இது வெள்ளியது-இது வெள்ளி, அன்று -அல்ல, இப்பி - கிளிஞ்சலேயாம், எனல் - என்று சொல்வது, போல் - போல, ஓர்ந்து - விசாரித் தறிந்து, இறை பிரஹ்மம், மெய் - சத்தியமாம், உலகம் - பிரபஞ்சம், பொய் - மித்தை, என - என்று, தெளிதல் - (நன்ருகத்) தெளிவடைதல், அபவாதம் . அபவாதமாம். [திருக்கு வஸ்துவின் விசேஷ லக்ஷணங் கூறுகின்ருர்], மெய்த்த- சத்தியமாயிருக்கப்பட்ட, பொருள் - (திருக்கு ரூபப்) பிரஹ்மத்தை, அறியும் - உணர்கின்ற இலக்கணம் - லக்ஷணம், மூன்ரும் - மூன்று வகையாகக் கூறப்படும், அவை - அவைகள், விளங்த - விளங்காநின்ற, அதத்வியாவிருத்தி - அதத்வியாவிருத்தி லக்ஷணமும், தடத்தம் – தடஸ்த்த (லக்ஷணமும்), சொருபம் - சொரூப (லக்ஷணமும்) ஆம். எ—று. தான் தாம் ஒடு அசை 'வெள்ளியது' என்பதில், அது பகுதிப் போருள் விகுதி. 'உலகது' என்பதில், அது பகுதிப் பொருள் விகுதி.

அபவாதம்— பாத மாம். பாதம், சாஸ்திரீயம், யௌக்திகம், பிரத்தியக்ஷம், என மூ வகைத் தாம். என உணர்க. (25)

[ஆத்மாவின், அதத் வியாவிருத்தி லக்ஷணமும், தடஸ்த லக்ஷணமும், சொரூப லக்ஷணமும், திருஷ்டாந்தத்திஞேடு கூறி, சொரூப லக்ஷணம், சத்து சித்து ஆநந்தம் நித்தியம் பூரணம் என, ஐ வகைத் தாகும் எனவும், கூறுகின்றார்.]

ஆகமுத லனநேதி யதுசெய்து நின்ற
  வாருயிரை யறிவித்த லதத்வியா விருத்தி,
சாகைநுனி மதியுளதென் றுணர்த்தலிற்பூ தாதி
  சகமாய காரணங்கொண் டறிவுணர்த்தல் தடத்த,
மாகனலி விளங்குகதிர்ச் சொரூபனெனல் போலாந்
  மாவினிச சொரூபமிது வெனவுணர்த்தல் சொரூப,
நீகடவு சொரூபநிசஞ் சச்சிதா நந்த
  நித்தியம்பூ ரணமாக நீநினைந்து கொள்ளே. (26)

(இ—ள்) ஆகம் - சரீரம், முதலன - முதலியவற்றை, நேதி (ந. இதி)யது செய்து - இஃது (ஆத்மா) அன்று இஃது (ஆத்மா) அன்று (என) நீக்கி, நின்ற-சேஷித்திருக்கின்ற, ஆர்-நிறைந்த, உயிரை - ஆத்மாவை, அறிவித்தல்- தெரிவித்தல், அதத்வியா விருத்தி - அதத்வியா விருத்தி (லக்ஷண மாம்), சாகை - கிளையின், நுனி - நுனியில், மதி - சந்திரன். உளது - இருக்கின்றான், என்று- என, உணர்தலின் - அறிவித்தல் போல, பூத ஆதி சகம் ஆய - பஞ்ச பூத முதலிய பிரபஞ்சத்திற்கு, காரணம் கொண்டு, ஏதுவா யிருத்தலைக் கொண்டு. அறிவு - ஆத்மாவை, உணர்த்தல் - அறிவித்தல், தடத்தம் - தடஸ்த்த

(லக்ஷணமா)ம் கனலி - (உஷ்ணத்தோடு கூடிய) சூரியன், விளங்கு - தோன்றுகின்ற, மா - மிகுந்த, கதிர்ச் சொரூபன் - பிரகாச சொரூபன். எனல் - என்று சொல்லுதல், போல் - போல, ஆன்மாவின் - ஆத்மாவினது, நிச சொரூபம் - யதார்த்த (சச்சிதாநந்தம் நித்தியம் பூரணம் ஆகிய), இது-இதுவே யாம், என-என்று, உணர்த்தல்-அறிவித்தல், சொரூபம்-சொரூப லக்ஷண மாம். [ஸ்வரூப லக்ஷணத்தினை விரித்து கூறுகின்றார்,] நீ-உன்றால், கடவு-கேட்கத் தகுந்த, சொரூபம் - சொரூப லக்ஷணத்தின், நிசம் - உண்மையானது, சச்சிதாநந்தம் நித்தியம் பூரணம் ஆக - சத்து சித்து ஆநந்தம் நித்தியம் பூரணமா யிருக்கின்றது என, நீ - நீ, நினைந்து கொள் —(மநத்தின்கண்) சிந்தனை செய்வா யாக. எ—று ஏ — அசை. 'நேதியது' என்பதில், அது பகுதிப் பொருள் விகுதி. (26)

[ஆத்மாவின். சத்து லக்ஷணம், சித்து லக்ஷணம், ஆநந்த லக்ஷணம் நித்திய லக்ஷணம், பூரண லக்ஷணம் கூறி, ஆத்மா, சச்சிதாநந்த நித்திய பூரண ஸ்வரூபமானால், ஆநந்த ஸ்வரூபம் எல்லா அவஸ்தைகளிலும், ஏன் விளங்கவில்லை எனச் சங்கிக்கின்றார்.]

மதித்தன்மதி யாமைமந வாதிகளிற் றனக்கோர்
வாதையிலா துண்டெனல்சத் தவத்தையனைத் தினுமே,
யுதித்தவிட யங்களைநின் றறிந்திடுதல் சித்தா
முவப்பினுக்கு விடயமாந் தன்மை யா நந்தந்,
திதித்தசதோ திதநித்த மனைத்துஞ்சா தகமாந்
திறத்திறு லனைத்தினுஞ்சம் பந்தநிறை வெனவே,
விதித்திடுக வுயிர்சச்சி தாநந்த மயமேல்
விளங்கியதி லவற்றுளா நந்தமெங்கு மெனினே. (27)

(இ—ள்) மதித்தல் (காமாதி)விருத்திகள் உண்டாம் இடத்தும், மதியாமை-(அவை) உண்டாகாத இடத்தும், நனவு ஆதிகளில் - ஜாக்கிர ஸ்வப்ந சுழுத்தி யவஸ்தைகளி லும், தனக்கு-ஆத்மா, ஓர் - எவ்வித, வாதை - பாதமும், இலாது - இன்றி. உண்டு — இருக்கின்றது, எனல் —என்று கூறுதல், சத்து - சத்தின் லக்ஷண மாம்; அவத்தை அனைத் தினும் (சாக்கிர ஸ்வப்ந சுழுத்தி முதலிய) எல்லா அவஸ்த் தைகளிலும் - உதித்த - உண்டாகின்ற, விடயங்களை - பதார்த்தங்களை, நின்று — (ஆத்மா) இருந்து, அறிந்திடுதல்— உணர்தல், சித் தாம் - சித்தின் லக்ஷண மாம், உவப்பி னுக்கு - பரமப் பிரீதிக்கு, விடயம் ஆம் தன்மை - விஷய மாகிய தன்மை, ஆநந்தம்-(ஆத்மாவின்) ஆநந்த (லக்ஷண) மாம். திதித்த - நிலை பெற்ற, சதா உதிதம் - எப் பொழு தும் உதயமா யிருக்கின்றதே, நித்தம் - (ஆத்மாவின்) நித் திய (லக்ஷண)மாம், அனைத்தும்—சர்வம், சாதகமாம் - திறத் தினுல்-சாதக மாகிய தன்மையினுல், அனைத்தினும் - சர்வ பதார்த்தங்களிலும், சம்பந்தம் - சேர்ந்திருப்பதே, நிறைவு- (ஆத்மாவின்) பரிபூரண (லக்ஷண)மாம், என - என்று, விதித்திடுக - மதிப்பா யாக, உயிர் - ஆத்மா, சச்சிதாநந்த மயமேல் - சச்சிதாநந்த (நித்திய பூரண) சொரூபமா யிருக்கு மாகில், அவற்றுள் - அவ் வைந்தனுள், ஆநந்தம் - ஆநந்த சொரூப மானது, எங்கும் —(எல்லா விருத்திகளி லும்) யாண்டும், விளங்கியது இல் - விளங்க வில்லையே, எனின்-என்று நீ கேட்பாயாகில், (சமாதாநம் கூறுவாம்.) எ—று. ஏ - ஏ - ஏ அசை.

பஞ்சதசி, கூடஸ்த திபம், 19வது "விருத்திக்கும் விருத்தி யின்முன் னின்மைக்கு முணர்தல்-வேட்கைக்கு மறிவறியே

னென் றறிவறியா மைக்குங், கரித்தன்மை யாயிருக்குஞ் சிவனைப் பொய்க் கெல்லாங் -களமாகி யிருந்தாஞ்சத் தியன் சடங்க ளெவையும், விரித்திலக்கிச் சிந்மயனு மென் றுமுவப் பினுக்கு-விடயமாந் திறத்தாலா மாநந்த சொரூப, னருத்த மெலாந் திகழ்த்துதலா லனைத்தினுஞ்சம் பந்த-மாயிருத்தல் கொண்டுபரி பூரணனு மன்றே.'', 20 ''என்று சைவ புரா ணங்க ளுயிரொடிறை யாதி யிறந்தொன்றாய்த் தன்னுளி யாங் கூடத்தன் சிவனென்''. என்னும் செய்யுளில், சத்து சித்து ஆநந்தம் நித்தியம் பூரணம் என்னும் லெக்ஷணம் கூறியிருப்பதனையும் உணர்க. (27)

[உஷ்ண பிரகாச சொரூப அக்கினியானது, விளக்கில், பிரகாசம் மட்டும் தோன்றும், ஜலத்தில், உஷ்ணம் மட்டும் தோன்றும், விறகில், பிரகாசமும், உஷ்ணமும், இரண்டும் தோன்றுவது போல, பாஷாணாதிகளில், சத்து ஒன்றும், புத்தியின் தமோ குண மூட விருத்தியிலும், புத்தியின் ரஜோ குண கோர விருத்தியிலும், சத்து சித்தும் தோன் றும், சத்துவ குணத்தின் சாந்த விருத்தியில், சத்து சித்து ஆநந்தம் மூன்றும் தோன்றும் என்று கூறுகின்றார்.]

வெம்மையொளி யுருவாய வழல்விளக்கி னொளியே
விளங்கிடும் புனலிடத்தின் வெம்மையே விரியும்,
வெம்மையொளி யிரண்டுமெழும் விறகினிலவ் வகைபோல்
விமலசத்தொன் றேதிகழுங் கன்முதலா மவற்றின்,
மெய்ம்மைதவிர் புத்தியது தமோகுணத்தின் மூட
விருத்தியினு மிராசதத்தின் கோரவிருத் தியினு,
மெய்ம்மையசச் சித்தாகுஞ் சத்துவத்திற் சாந்த
விருத்தியினிற் சச்சிதா நந்தங்க டோன்றும். (28)

(இ—ள்) வெம்மை - உஷ்ண, ஒளி - பிரகாச, உருவு ஆய - ஸ்வரூப மாகியது, அழல் - அக்நி யாம், ஒளியே - (அதனது) பிரகாச மாத்திரமே, விளக்கின் - தீபத்தினிடத்து, விளங்கியிடும் - தோற்றுகின்றது, புனலிடத்தின் - ஜலத்தில், வெம்மையே - (அதனது) உஷ்ணம் மாத்ரமே, விரியும் - தோற்றும், விறகினில் - காஷ்டத்தில், வெம்மை - (அதனது) உஷ்ணமும். ஒளி - பிரகாசமும். இரண்டும் - (ஆகிய) இரண்டும், எழும் - தோற்றும், அவ் வகை போல் - அவ் விதம் போல், கல் - பாஷாணம், முத லாம் அவற்றில் - முதலியவற்றில், விமல - நின்மல மாகிய (ஆத்மாவின்), சத்து - சத் ஸ்வரூபம் - ஒன்றே - ஒன்று மாத்ரமே, திகழும் - விளங்கா நிற்கும், மெய்ம்மை தவிர் - மித்தையாயிருக்கின்ற, புத்தியது - அந்தக்கரணத்தின், தமோ குணத்தின் - தமோ குணத்தினால் உண்டாக்கப்படும், மூட விருத்தியினும் - அஞ்ஞான விருத்தியிலும். இராசதத்தின் - (அந்தக் கரணத்தின்) ரசோ குணத்தினால் (உண்டாக்கப்படும்), கோர விருத்தியினும் - குரோத விருத்தியிலும், மெய்ம்மைய - சத்தியமாயிருக்கின்ற, சத் சித்து ஆகும் - (ஆத்மாவின்) சத் ஸ்வரூபமும் சித் ஸ்வரூபமும் தோற்றும், சத்துவத்தில் - (அந்தக் கரணத்தின்) சத்துவ குணத்தினால் (உண்டாக்கப்படும்), சாந்த விருத்தியினில் (வைராக்யம் உதாரம் பொறுமை முதலிய) சாந்த விருத்தியில், சச்சிதாநந்தங்கள் - (ஆத்மாவின்) சச்சிதாநந்தம் ஆகிய மூன்று ஸ்வரூபமும், தோன்றும் - பிரதீதி யாகும். எ—று.

'புத்தியது' என்பதில், அது ஆறும் வேற்றுமை யுருபு, கைவல்ய நவநீதம் 2 சந்தேகம் தெளிதற் படலம் 110

"சடமான மூடத்த ருக்கல்லு மண்களிற் சத்தொன்று மேதோன்றுமால், விடமான காமாதி கோரத்தி லாநந்தம் விளையாதுமற் றவைகளாம். திடமான வொழிவாதி சாந் தத்தி லேசச்சி தாநந்த மூன்றும் வெளியாம், மடமான மூடங்கள் கோரங்கள் விடுசாந்த மநமாகிலா நந்தமே." எனவும் கூறியிருப்பதை உணர்க. (28)

[சத்து சித்து ஆநந்தம் நித்தியம் பூரணம் ஐந்திற்கும், உபாதி உண்டு என்றும், சத்து, வியாவகாரிக சத்து, பிராதி பாஸிக சத்து, பாரமார்த்திக சத்து என மூ வகைப்படும் என்றும் கூறுகின்றார்.]

ஆதலினு லாநந்த மயமாமாந் மாவவ்
வைந்தினுக்கு முபாதியுள வவைமுறையே மொழியிற்,
பேதமுறுஞ் சத்துமூன் றும்வியாவ காரிகம்
பிராதிபா சிகம்பார மார்த்திகசத் தெனவே,
மூதுணர்விற் சுழுத்தியிற்றேன் றுதுநன வுற்று
முத்தியுறு மளவுமுறுங் கடாதிமுத லதுவாம்,
போதுகன வினிற்றேன்றி யழிவதிடை யதுவாம்
பொன்றுத பிரமசத்தே யிறுதியதா மன்றே

(இ—ள்) ஆதலினுல் - இக் காரணத்தினுல், ஆந்மா - ஆத்மா. ஆநந்தமயம் ஆம் - ஆநந்த ஸ்வரூப மாம் (என்று நீ அறிவா யாக), அவ் ஐந்தினுக்கும் - முன்னர்க் கூறிய (சத்து சித்து ஆநந்தம் நித்தியம் பூரணம், ஆகிய) ஐந்திற்கும், உபாதி - உபாதி, உள - இருக்கின்றது, அவை - அவை களை, முறையே - கிரம மாக, மொழியில் - சொல்லு மிடத்து, வியாவகாரிகம் - வியாவகாரிக (சத் தென்று)ம்,

பிராதிபாசிகம் - பிராதிபாசிக(சத் தென்றும், பாரமார்த்திக சத்து - பாரமார்த்திக சத்து, என - என்றும், சத்து - சத் ஸ்வருப மானது, மூன்று ஆம் பேதம் உறும் - மூன்று ஆகிய பேதத்தினைப் பொருந்தும், உணர்வு இல் - ஞானம் இன்றிய, மூது - மூர்ச்சை அவஸ்தையிலும், சுழுத்தியில் - சுழுத்தி யவஸ்தையிலும், தோன்றாது - விளங்காது, நனவு உற்று - சாக்கிர முதல் - முத்தி உறும் அளவும் - விதேக கைவல்ய பரியந்தம், உறும் - பொருந்தியிருக்கின்ற, கட ஆதி - குட முதலிய பதார்த்தங்களில் (தோற்றுவதே), முதலது ஆம் - வியாவகாரிக சத் தாம், போது - வரா நின்ற, கனவினில் - சொப்பனாவஸ்தையில், தோன்றி - பிரதீதி யாகி, அழிவது - (அந்த அவஸ்தையிலே) நாச மாகி (ப் போகும் பதார்த்தங்களில் உள்ளது) , இடையது ஆம்- பிராதிபாசிக சத் தாம், பொன்றாத-நித்தியமா யுள்ள, பிரம- பிரஹ்மத்தி லிருக்கும், சத்தே - சத்தே, இறுதியது ஆம் - பாரமார்த்திக சத் தாம், எ—று. ஏ அன்று ஏ-அசை 'முத லது' 'இறுதியது, என்பவற்றில், அது, பகுதிப் பொருள் விகுதி. (29)

[சித்து, சீவன் ஈசன் கூடஸ்தன் பிரஹ்மம் என நான்கு உபாதி உடையது என்றும், ஆநந்தம், விஷய ஆநந்தம், பிரஹ்மாநந்தம், வாசநாநந்தம், முக்கியாநந்தம், நிச ஆநந் தம், ஆந்ம ஆநந்தம், அத்வைத ஆநந்தம், வித்தியாநந்தம், என, அஷ்ட வித உபாதியோடு கூடியிருக்கின்றது என் றும், கூறுகின்றார்.]

சீவனொடீ சன்கூடத் தன்பிரம மென்னச்
சித்துநான் காங்குடநீர் கதுவுறுவெண் மீன்வான்,

றூவுபனி நீர்விம்ப வநுமிதா காசஞ்
சொல்கடா வச்சிந்நா காசமொடு மாவான்,
மேவுமிவை யவற்றினுக்குத் திட்டாந்த முறையாம்
விடயமொடு பிரமம்வா சனைமுக்கி யம்பின்,
னேவுநிச வாந்மாவோ டத்வைதம் வித்தை
யெனுமிவற்றின் பெயராமெண் வகைப்படுமா நந்தம் (30)

(இ—ள்) சீவன் - சீவன், ஈசன் - ஈசுவரன், கூடத்தன் - கூடஸ்தன், பிரமம் - பிரஹ்மம், என்ன - என்று, சித்து - சித் தானது, நான்கு ஆம் - நான்கு பேதத்தினைப் பொருந்தும், அவற்றினுக்கு — அந் நான்கிற்கும், குடம்-கடத்தில் உள்ள, நீர் - ஜலத்தில், கதுவு உறும் - பிரதிவிம்பித்திருக்கின்ற, வெண் மீன் - வெண்மை யான நக்ஷத்திரங்களோடு கூடிய வான் - (கட ஜல) ஆகாசமும், தூவு - வீசாநின்ற, பனி நீர் - குளிர்ந்த மேக ஜலத்தில், விம்ப - பிரதிவிம்பித்து, அநுமித - அநுமானப் பிரமாணத்தினால் அறியப்படும், ஆகாசம் - (மேக) ஜல ஆகாசமும், சொல்-கூறுகின்ற, கட அவச்சிந்ந ஆகாசம் - கடத்தினால் வரைந்து கொள்ளப்பட்ட(து). ஆகாசமும், மா வான் — மகாகாசமும், மேவும் - (ஆகப்) பொருந்தாநின்ற, இவை-இவைகள், முறை - கிரமமாக, அவற்றினுக்கு - அந் நான்கு சித்திற்கும், திட்டாந்தம் ஆம் - திருஷ்டாந்தங்கள் ஆம், ஆநந்தம் - ஆநந்த மானது, விடயம் - விஷயம், பிரமம் - பிரஹ்மம், வாசனை - வாசநா, முக்கியம் - முக்கியம், பின் - (அதன்)பின், ஏவும் - சொல்லாநின்ற, நிச - நிசம், ஆந்மா - ஆந்மா, அத்வைதம் - அத்வைதம், வித்தை - வித்தியா, எனும் - என்று சொல்லப்படும், இவற்

றின் பெயரால் - இந்த நாமங்களினுல், எண் வகைப்படும் - அஷ்ட விதமாம். எ-று. ஒடு ஒடு ஒடு ஒடு அசை.

கட ஜல ஆகாசம், மேக ஜல ஆகாசம், கட ஆகாசம் மஹா ஆகாசம் என, ஆகாசம் நான்கு பிரிவாம்.

பஞ்சதசி 6-9. "இனியகூ டத்தன் பிரமஞ்சீ வேச ரெனவுஞ்சித் தீரிரு வகைத்தாம், புநிதவான் கடவம் பர மகா வாநம் புனல்வெளி மேகவிண் போலும்" எனவும்,

11-5 "சுகவகை மூன்று சுகம்வித்தை விடயச் சுக மென்ப தாதியிற் பிரமச்" எனவும்,

11-41 "இதுநின்றற வெவவெணவன் விடயமிலா தின்பெய்துற மவணெவ னும்பிரம, மதுவின்பினின் வாதனை யேயுணர்க மருவில்விட யங்களி னும்விழைவாம். அதுநின்றறில் உண்முக மானமநத் தாநந்தநி மூல்பதி யும்பிரம, முதுவின்பமும் வாதனை சாயையென மூன்றின் றியி லீண்டொரு வின்பிலையே" எனவும், கூறுதலையும், ஆநந்தம் மூன்று என்றும், எட்டு என்றும், பதினென்று என்று சில இடத்துக் கூறுதலையும், பகுத் துணர்க. (30)

[விஷயாநந்தம், பிரஹ்மாநந்தம், வாசநாநந்தம், முக்கியாநந்தம், நிஜாநந்தம், ஆத்மாநந்தம் என்னும் ஆறு ஆநந்தங்களைக் கூறுகின்றுர்.]

மாதுமுதல் விடயவூ தியங்கடமிற் றேன்றி
வரல்விடய வாநந்தங் கண்படையிற் றேன்ற,
லோதுபிர மாநந்தந் துயிலொழிவிற் றேற்ற
முடையதுதான் வாசநா நந்தங்கே டின்ப,

மாதலிலா நொதுமன்மதி தோன்றுதல்முக் கியமா
மாநந்த மனோலயயோ கத்தினில்வந் துதித்த,
வேதமறு நிசாநந்தம் பிரியவிட யத்து,
னியான்பிரிய னெனத்தோன் றுதலாந்மா நந்தம். (31)

இ—ள்) மாது - ஸ்திரீ, முதல் - முதலிய, விடய - விஷய, ஊதியங்கள் தமில் - லாபத்திறல், தோன்றி வரல் - உண்டாகுதல், (அந்தக் கரண விருத்தியில் பிரியம், மோதம் பிரமோத மாகப் பிரதிபலித்து வரும் ஆநந்தம்.) விடய ஆநந்தம் - விஷயாநந்த மாம். கண் படையில் - நித்திரா காலத்தில், தோன்றல் - உண்டாகின்றது, ஓது - (சுருதி யாதிகளாற்) சொல்லப்பட்ட, பிரம ஆநந்தம் - பிரஹ்மா நந்த மாம். துயில் - நித்திரை, ஒழிவில் - நீங்குகிற காலத்தில், தோற்றம் உடையது - (சற்றுப் போது) தோற்று வது, வாசநா ஆநந்தம் - வாசநாநந்த மாம், இன்பம் - (கரும காரியங்க ளான) பிரியமும், கேடு - அப்பிரியமும், ஆதல் - உண்டாகுதல், இலா - இல்லாத நொதுமல் - உபேக்ஷா, மதி - புத்தியில், தோன்றுதல் - உண்டாவது, முக்கியம் ஆம் ஆநந்தம்- முக்கியாநந்த மாம், மனோ -மநம், லய - அடங்கியிருக்கின்ற, யோகத்தினில் - (நிதித்தியாச நத்தின் பரிபாக அவஸ்தை யாகிய நிருவிகற்ப) சமாதியில், வந்து உதித்தல் - தோன்றுவது, ஏதம் - குற்றம், அறும் - இன்றியிருக்கின்ற, நிச ஆநந்தம் - நிஜாநந்த மாம், பிரிய விடயத்துள் - விரும்பப்படும் (வநிதாதி) விஷயங்களுள், யான் - நானே, பிரியன் - (பரமப்) பிரீதிக்கு விஷயனு யிருக்கின்றேன், என - என்று, தோன்றுதல் - உண்டா வது, ஆந்ம ஆநந்தம் - ஆத்மாநந்த மாம். எ—று.

தான்-அசை. 'ஊதியங்கள் தமில்' என்பதில், 'தம்' அசை-

1. ஸ்திரீ முதலிய விஷய லாபத்தினுல் உண்டாவது, விஷயாநந்தம் ஆம்.

2. சுழுத்தி யவஸ்தையில் உண்டாவது, பிரஹ்மாநந்தம் ஆம்.

3. நித்திரை நீங்குகின்ற காலத்தில் உண்டாவது, வாசநாநந்தம் ஆம்.

4. பிரியாப்பிரியம் இன்றிய உபேக்ஷா புத்தியில் உண்டாவது, முக்கியாநந்தம் ஆம்.

5. நிதித்தியாசநத்தின் பரிபாக அவஸ்தை யாகிய நிருவிகற்ப சமாதியில் உண்டாவது, நிஜாநந்தம் ஆம்.

6. பிரிய வஸ்துக்களுள், "அகமேவ பிரிய வஸ்து" என உண்டாவது, ஆத்மாநந்தம் ஆம்,

ஆநந்தத்தினை. பிரஹ்மாநந்தம். வாசநாநந்தம், விஷயாநந்தம் என மூன்றுகவும் கூறுவர்.

கைவல்ய நவநீதம் 2 சந்தேகம் தெளிதற் படலம் 122 கவி, "ஆநந்த வகை சொலக் கேள்மைந்த னேயெட்டும் இஃதின்ன தின்ன தெனவே. போகத்தில் வருசுகம் விடயசுக நித்திரைப் போதுளது பிரம சுகமாம், மோகத்த நந்தலிற் சுகம்வாச னைச்சுகமு முப்பிரியம் ஆந்ம சுகமாம், யோகத்தில் உளதுமுக் கியசுகமு தாசீநம் உற்றசுகம் நிசசுகமதாம், ஏகத்தை நோக்கலத் துவிதசுகம் வாக்கியமெ

ழுந்தசுகம் ஞாந சுகமே.'' என்று 1. விஷயசுகம், 2. பிரஹ்ம சுகம், 3. வாசனை சுகம், 4. ஆத்ம சுகம், 5. முக்கிய சுகம். 6. நிச சுகம், 7. அத்துவித சுகம். 8. ஞாந சுகம் என வகை காண்க. கைவல்ய நவநீதம்–2 சந்தேகந் தெளிதற் படலம் 125 கவி, "தூங்கும் சுகமது பிரமச் சுகமெனல் சுருதிப் பொருள்விழி துயில்வோர்கள், தாங்கும் மலரணை நன்று கச்சிலர் சம்பா திப்பது தானாகம், தீங்கும் நன்மையும் ஆண்பெண் முறைமையும் தெரியா தமளிசெய் பொழுதேபோல், ஆங்குள் வெளிகளும் அறியா வநுபவம் அதனால் அதுபிர மாநந்தம்.'' என்று, பிரமாநந்தம், சுருதி யுக்தி அநுபவம் என்னும் மூன்றாலும் கூறப்பட்டிருக்கின்றது. பஞ்ச தசியினும், ஆநந்தம் மூன்று வகை யாகக் கூறப்பட்டிருக்கின்றது. 11 யோகாநந்தம் கவி, 6. "சுகவகை மூன்று சிவம்வித்தை விடயச் சுகமென்ப தாதியிற் பிரமச், சுகம் வகுத் திடுவாம் பிருகுநற் புதல்வன் சொல்வரு ணப்பிதா விடத்தே, சுகசிவ வடிவஞ் செவிபெறா வன்னஞ் சுழலுயிர் மநமதி துலைத்தே, சுகமறிந் தனனஞ் சுகத்திலே பிறந்து துதைந்திறந் திடுமுயி ரதனுன்.'' என்பதை உணர்க. (31)

[அத்துவிதாநந்தம், வித்தியாநந்தம், என இரண்டு ஆநந்தங்களையும் கூறி, நித்தியத்துக்கு விலக்காக, பிராகபாவம், பிரத்தொம்சாபாவம், அந்யோந்யாபாவம், அத்தியந்தாபாவமும் என நான்கு அபாவமும், பரிபூரணத்தில் பொருந்தாதன மூன்று என்றும் கூறுகின்றார்.]

விரியுமுல கனைத்தும்பொய் மெய்ம்மைதா னென்னும்
விவேகத்திற் றோன்றுவதே யத்துவிதா நந்தம்,




அரியமறை முடிவாகும் வாக்கியஞா நத்தா
லா தலது வித்தியா நந்தமென வறிக,
வுரியன முன் னின்மையொடு பின்னின்மை யன்றி
யொன்றொன்று காமையென்று மின்மையென
திரியுமபா வங்களிவை நித்தியத்துட் புகாத [நான்காய்த்,
திறத்தனவாம் பூரணத்து முறுதனமூன் றுகும். (32)

(இ—ள்) விரியும் - (சராசராத்மக மாகப்) படர்ந்திருக்கின்ற உலகு - பிரபஞ்சம், அனைத்தும் - யாவும், பொய் - மித்தை யாம், தான் - ஆத்மாவே, மெய்ம்மை - சத்திய மாம், என்னும் - என (அறிகின்ற)தாக அறையப்படும், விவேகத்தில் - விவேக காலத்தில், தோன்றுவது - உண்டாவது, அத்துவித ஆநந்தம் - அத்வைதாநந்த மாம், அரிய - அருமை யான, மறை முடிவு ஆகும் - உபநிஷத்திலுள்ள தாகிய, வாக்கிய - (மகா) வாக்கிய (ஜந்ய), ஞாநத்தால் - (அபரோக்ஷ) ஞாநத்தினுல், ஆதலது - உண்டாவது வித்யா ஆநந்தம் - வித்தியா ஆநந்த மாம். என - என்று, அறிக - உணர்வா யாக, உரியன - உரித்தா யுள்ள, முன் இன்மை - பிராகபாவம், பின் இன்மை - பிரத்வம்சாபாவம், அன்றி - அல்லாமலும், ஒன்று ஒன்று ஆகாமை - அந்யோந்யாபாவம், என்றும் இன்மை - அத்தியந்தாபாவம், என - என்று, அபாவங்கள் - அபாவங்கள், நான்கு ஆய் - சதுர்வித மாக, திரியும் - விளங்கிக்கொண்டிருக்கும், இவை - இந்த நான்கு அபாவங்களும், நித்தியத்துள் - (ஆத்மாவின்) நித்திய (ஸ்வரூப)த்தில், புகாத - பிரவேசிக்காத, திறத்தன - தன்மையினை உடையன, ஆம் - ஆகும் (நான்கு அபாவங்களும் விடுபட்டது நித்தியம் என்றபடி), பூரணத்தும் - (ஆத்மாவின்) பரிபூரண (ஸ்வ

ரூப)த்தினிடத்தும், உறுதன - (சமீபத்தில்) செல்லாதிருப் பன, மூன்று ஆகும் - (கால பரிச்சேதம், தேச பரிச்சேதம் வஸ்து பரிச்சேதம் என) மூன் றும். எ—று.

பூரணத்தும், என்ற உம்மை, இறந்தது தழீய எச்ச வும்மை, ஏ - ஒடு- அசை.

'ஆதலது' என்பதில், 'அது' பகுதிப் பொருள் விகுதி)

7. அத்துவிதாநந்தம், ஜகத் மித்தை, தான் (ஆத்மா) சத்தியம் என்னும் விவேகத்தினுல் உண்டாவது அத்வைதா நந்தம் ஆம்,

8. வித்தியாநந்தம், வேதாந்த மகா வாக்கியத்தினுல், தோன்றும் ஞாநத்தினுல், உண்டாவது, வித்தியாநந்தம் ஆம்,

இந்த வித்தியாநந்தம் (ஞாந பலம்) 1 துக்க அபாவம் 2 சர்வகாமாப்தி, 3 கிருத கிருத்யத்வம், 4 பிராப்தப் பிராப் பியம் எனவும், துக்கம்-இக லோகம், பர லோகம் எனும் பேதத்தால் இரு வகைத் தெனவும், அதன் அபாவம் இரு வகைத்து எனவும், திரிசிய விவேகத்தில் 149-155 கவி வரை, ஏழு கவிகளால் கூறப்படும் ஆண் டறிக.

பஞ்ச தசி 14 வித்தியாநந்தம்:-

2. "இடர்கெடல் காம வடைவகங் கிருத வின்கிருத் தியனடை வடைந்தோன், ஒடுவிவை நான்கு விதமதா யுரைக்கும் உறுந்துயர் இகபரம் எனவே, படுமிரு வகையா யைகிக நூக்கம் பகர்வுறும் பருவன மொழியே, திடனிஃ துளனென் றறிதரிற் றனேயே திண்ணெனதை விழைந்தெத

னைசக்காய் " என்று பஞ்ச தசியிலும் கூறியிருப்பதை உணர்க.

1. பிராகபாவம், "கடம் உண்டாகும்" என்னும் பிரதீதி, பிராகபாவத்தை அறிவிக்கின்றது. அது போன்று, "பிரஹ்மம் உண்டாகும்" என்னும் பிரதீதி உண்டாகாது, "பிரஹ்மம் இருக்கின்றது" என்னும் பிரதீதி உண்டாகின்றமையின், பிரஹ்மம், பிராகபாவம் அற்றதாம்.

2. பிரத்வம்சாபாவம், "கடம் அழிந்தது" என்னும் பிரதீதி, பிரத்வம்சாபாவத்தினை அறிவிக்கின்றது. அது போன்று, "பிரஹ்மம் அழிந்தது" என்னும் பிரதீதி உண்டாகாது, "பிரஹ்மம் இருக்கின்றது" என்னும் பிரதீதி உண்டாகின்றமையின், பிரஹ்மம் பிரத்வம்சாபாவம் அற்றதாம்.

3. அந்நியோந்நியாபாவம், "கடம் படம் அன்று" என்னும் பிரதீதி, அந்யோந்யாபாவத்தினை அறிவிக்கின்றது. அது போன்று, "பிரஹ்மம் பிரபஞ்சம் அல்ல" என்னும் பிரதீதி, விவர்த்த வாதத்தில் உண்டாகாது, "பிரபஞ்சம் பிரஹ்மமாயிருக்கின்றது" என்னும் பிரதீதி உண்டாகின்றமையின், பிரஹ்மம் அந்யோந்யாபாவம் அற்றதாம்.

4. அத்தியந்தாபாவம், "கடத்தில் படம் இல்லை" என்னும் பிரதீதி, அத்யந்தாபாவத்தினை அறிவிக்கின்றது. அது போன்று, "பிரபஞ்சத்தில், பிரஹ்மம் இல்லை" என்னும் பிரதீதி உண்டாகாது, "பிரபஞ்சத்தில், பிரஹ்மம்

இருக்கின்றது, விளங்குகின்றது, ஆநந்தமா யிருக்கின் றது'' என்னும் பிரதீதி.

முக்கா லத்தினு மொத்தியல் பொருளைச்
செப்புவர் நிகழுங் காலத் தானே''. (383) என்னும் நன்னூற் பொது வியல் 32வது சூத்திர விதிப்படி உண்டா கின்றமையின். பிரஹ்மம் அத்தியந்தாபாவம் அற்றதாம்.

இவ் வாறு, நான் கபாவங்களும் பிரஹ்மத்திற்கு இல் லாமையின், பிரஹ்மம் நித்திய மாம் என உணர்க. அபாவத் தின் விரிவும், கண்டநமும், லக்ஷணமும், வேதாந்த பதார்த்த மஞ்ஜூஷா என்னும் நூலில், 4-25. அபாவம் என்னும பிரசங்கத்தில் இருக்கிறது. அதனை இந் நூலின் ஈற்றில் காண்க.

வித்தியாநந்தம், திரிசிய விவேகத்தில், நான்கு பிரகார மாகக் கூறியிருக்கின்றது ஆண் டறிக.

வேதாந்த பதார்த்த மஞ்ஜூஷா- 2-35 ஆநந்தப் பிர சங்கம் இது வாம், மூன்று ஆநந்தத்தினைக் கூறு வாம்-விஷ யாநந்தம், வாசநாநந்தம், பிரஹ்மாநந்தம், என்னும் பேதத் தால் ஆநந்தம் மூ வகைத் தாம்.

1. விஷயாநந்தம்.

அவற்றுள், முத லதைக் கூறு வாம், பிராந்தி காலத்தில் ஸ்திரி புத்திராதிக ளாய இஷ்ட வஸ்து வின் ஸ்மரண தரிசந லாப போக சமயத்தில், அல்லது, அதன் உத்தர க்ஷணத்தில், புண்ணிய கர்மத்தால் உண்டாம் ஆத்மாபிமுக சாத்விக பரிணாம ரூப சாந்தி விர்த்தியில்

பிரதிபிம்பிக்கும் ஸ்வரூபாநந்தம் விஷயாநந்தம் ஆம். அஃது, ஏக ரசம் அன்று. எதனால், இஷ்ட விஷயத்தின் தாரதம்மியத்தால், விர்த்தி ஆநந்தத்தின் தாரதம்மியத் தன்மை, அந்தப் பக்ஷி ரூப ஆநந்த மய கோசத்தின் பிரியம் சிரசாம். மோதம் வலப் பக்ஷம் ஆம். பிரமோதம் இடப் பக்ஷம் ஆம், ஆத்மா ஆநந்தம் ஆம். பிரஹ்மம் புச்சம் ஆம்'' என்னும் சுருதியின்கண் கூறப்பட்டிருக்கின்றது. அல்லது, ஸ்வர்க்காதி ரூப அவ் அவ் இஷ்ட விஷயத்தின் லாபத்தால், அந்த அந்த இச்சையின் உபராமம் உண்டாய், உண்டாம் அந்தர் முக ஆத்மாபிமுக சாத்விக பரிணும ரூப அந்தக் கரண விருத்தியில் விளங்கும் ஸ்வப்பிரகாச ஸ்வரூபாநந்தத்தின் பிரதி பிம்பம், விஷயாநந்தம் ஆம். விர்த்தி விஷயம் என்னும் இரண்டற்கும் துக்க ரூப மாயா காரியத்தன்மையால், ஸ்வயம் ஆநந்தம் இன்மையின், இதன்கண் சம்சாரி ஜீவன் அதிகாரி யாம்.

2 வாசநாநந்தம்

சுழுப்தியின் பூர்வோத்தர க்ஷணத்திலும், தூஷ்ணீம் ஸ்திதி ரூப உதாசீந அவஸ்தையிலும், சக்ஷு இந்திரியத்தால் இஷ்ட விஷயத்தின் அநுபவம் இன்றியும், விளங்கும் சுகம், வாசநாநந்தம் எனப்படும். அது தனது பிரயத்தநம் இன்றி, ஞாநி அஞ்ஞாநிகட்குச் சாதாரணம் ஆம்.

3. பிரஹ்மாநந்தம்.

சுழுத்தியின்கண் ஞாதாதி திரிபுடி யின்றி ஸ்வப் பிரகாசத் தன்மையால், விளங்கும் ஆநந்தமும், ஜாக்ர ஸ்வப்நத்தில் விருத்தியோடு கூடிய பிர்திவிம்ப ஆநந்தத்தின்

காரண ரூபப் பிம்பமும் பிரஹ்மாநந்தம் ஆம். அது மனோ நாசாதி மூன்றோடு கூடின அப்பியாசத்தால் அடையத் தக்க தாம். இதில், ஜீவன் முக்தன் அதிகாரி ஆம்.

இம் மூன்றின் பிம்பம் ஆய ஆநந்தம் ஜகத்தின்கண் அதிகம் ஒன்றும் இல்லை. எதனால், நிஜாநந்தம், முக்யா நந்தம், ஆத்மாநந்தம். யோகாநந்தம், அத்வைதாநந்தங்கள், பிரஹ்மாநந்தத்தில் அந்தர்ப்பாவமும், விஷயாநந்தத்தில், வித்தியாநந்தம் அந்தர்பாவமும் ஆம். எதனால், மகா வாக்கிய ஐக்ய சாக்ஷாத்காரத்தின் பின் பிராந்தி சித்த கர்த்திருத்வ போக்திருத்வாதி சர்வ துக்கத்தின் நிவிர்த்தி யாய், "நான் நிர்த்துக்கன் சுக ரூபன்" என் பதாதி ஆகார அந்தக் கரண விர்த்தியில் சாக்ஷியால் பிரதீதியாகும் துக்காபாவ உபலக்ஷித சுகம் யாது, அதுவும், சவிகல்ப விருத்தி ரூபம் ஆம். அதனையே, வித்தியாநந்தம் என்பர். அதன்கண் தத்வ ஞானி அதிகாரி ஆம், இவ் வாநந்தத்தின் சவிஸ்தார நிருபணம் பஞ்ச தசியில் உள்ள பஞ்சாத்தியாய ரூப, பிரஹ்மாநந்தக் கிரந்தத்தில், வித்தியாரண்ய முநிவர்களால் செய்யப்பட்டிருக்கின்றது. ஈண்டு அதிகம் ஆகக் கூற வில்லை. அவற்றுள், விஷயாநந்தம், ஸ்திரி புத்ர தநாதி விஷயத் தோடு இந்திரிய சம்பந்தத்தின் அதீநமும், சாதிசயாதி தோஷத்தால் துஷ்டமும் ஆம். அநந்த ஆயாச சாத்தியம் ஆம். பரிணும அவஸ்தையில் பூர்வம் அநுபவிக்கப்பட்ட சஜாதீய விஷய சுக இச்சையின் உத்பாதத்தால், அதன் சாதந சிருக் சந்தநாதி ஸ்திரீ புத்ராதி விஷயங்களின் சம்பா தநத்தில் அநந்தக் கிலேசம் செய்வதும், பூர்வ ஜந்மத்தில் சம்பாதிக்கப்பட்ட புண்ணிய கர்மம் இன்றித் துஸ்ஸம் பாத்தியமும் ஆம். ஆதலால், முமுக்ஷுக்கள் இந்தச் க்ஷணிக ஆநந்தத்தின் பொருட்டுத் தீநத்தன்மையினை அடை

வது துர்ப்பாக்கியத் தன்மையின் சிந்நம் ஆம். ஆதலால், முமுக்ஷுக்கள் இதன் சம்பாதநத்தின் பொருட்டு வியர்த்தம் ஆக ஆயுளை நாசம் செய்வது உசிதம் அல்ல. எதனுல், விஷய சுகம் அதிக துக்கத்தின் கலப்பால் விஷத்தோடு கூடிய அந்நம் போன்று இருக்கின்றது. அதனுல், பூர்வாச்சாரியர் ஜிஞ்ஞாசுவின்கண் இதன் இச்சை மாத்திரத்திற்கும் ஸஹிப்ப தில்லை. ஆதலால், சரீர யாத்ரா (நிர்வாகம்) மாத்திரம் விதிக்கப்பட்ட விஷய போகத்தில் சந்துஷ்டன் ஆவது யோக்கியம் ஆம். அதுவும், மோக்ஷ சாதந சிரவணதி அநுஷ்டாநத்தின் பொருட் டாம், இந்திரியப் பிரீதியின் பொருட் டன்று. "ஹே தாத (புத்ர) நீ முக்தியினை இச்சிக்கின் விஷயங்களை விஷம் போன்று விடுக," என்பதாதி பிரமாணத்தால். வாசநாநந்தம் அநர்த்தத்தினைச் செய்வ தன்ருயினும், பிராரபத் கர்மாதீநத்தால், ஒரு காலத்ததாய் இருத்தலின். சர்வ சாம்சாரிகத் துக்க நிவிர்த்தியினை இச்சிக்கும் ஜிஞ்ஞாசுக்களால் ஆதரிக்கத்தக்க தன்ரும். பரிசேஷத்தால் (கூட்டிக் கழித்தலால்) வித்தியாநந்தப் பிரஹ்மாநந்தப் பிராப்தியின் பொருட்டு அவசியம் பெரும் பிரயத்நத்தால், பிரஹ்ம சுரோத்திரிய பிரஹ்ம நிஷ்ட குருவினையும், சத் சாஸ்திரத்தினையும், சேவிக்க பிரஹ்ம ஸ்வரூபத்தில் நிலைத்தல் ரூப மோக்ஷப் பிராப்தியின் பொருட்டு (என அறிக) என்று இவ் வாறு கூறியிருப்பதனையும் உணர்க. (32)

[கால பரிச்சேதம், தேச பரிச்சேதம், வஸ்து பரிச்சேதம் மூன்றும் கூறி, சித்தின் விரி வாகும் என்று 30வது செய்யுளில் கூறிய, ஜீவ ஈசுவர கூடஸ்த பிரஹ்மங்கட்கு, நாமாதி வியவகாரங்களையும், கூறு வாம் என்று கூறுகின்ருர்.]

உரைத்தவைதா மியாவையெனி லொருகாலத் துண்டின்
றொருகாலத் தெனுங்கால பரிச்சேத மூடனே,
தெரித்தவொரு தேயத்துண் டொருதேயத் திலையென்
றேயபரிச் சேதமுமொன் றுமாகா தென்னுங்,
கருத்தில்வரு வத்துபரிச் சேதமுமா மென்னக்
கருதிடுக வினிச்சித்தின் விரிவாகு மெனமுன்,
விரித்திடுமச் சீவாதி கட்குநா மாதி
விவகார கற்பனையீண் டெடுத்துமொழி குதுமால். (33)

இ—ள்) உரைத்த - (முன்னர்க்) கூறிய, அவை - பூரண ஸ்வரூபத்தில் பிரவேசிக்காத மூன்று, யாவை - எவை, எனின் - என்று (நீ)கேட்பாயாகில், ஒரு காலத்து - (ஒரு வஸ்து) ஒரு காலத்தில், உண்டு - இருக்கின்றது, ஒரு காலத்து - ஒரு காலத்தில், இன்று - இல்லை, எனும் - என்று கூறப்படும், கால பரிச்சேதம் - கால பரிச்சேத்தியத்தைச் செய்வதற்கு யோக்கிய மான) கால பரிச்சேதமும், தெரித்த - சொல்லா நின்ற, ஒரு தேயத்து - ஒரு தேசத்தில், உண்டு - (ஒரு வஸ்து) இருக்கின்றது, ஒரு தேயத்து-ஒரு தேசத்தில், இலை - இல்லை, என் - என்று கூறும், தேய பரிச்சேதமும் - (தேச பரிச்சேத்தியத்தைச் செய்வதற்கு யோக்கிய மான) தேச பரிச்சேதமும், ஒன்று - ஒரு வஸ்து, ஆம் - (வேறொரு வஸ்து) ஆம், ஆகாது - (ஒரு வஸ்து வேறொரு வஸ்து) ஆகாது, என்னும் - என்று, கருத்தில் வரு-மநத்தின்கண் தோற்றுகின்ற, வத்து பரிச்சேதமும் - (வஸ்து பரிச்சேத்தியத்தைச் செய்வதற்கு யோக்கிய மான) வஸ்து பரிச்சேதமும், ஆம் — ஆகும், என்ன - என்று, கருதிடுக - அறிந்துகொள்வா யாக, இனி - மேல், சித்தின் விரிவு ஆகும் - சித் ஸ்வரூபத்திற்கு நான்கு பேதம் உண்டு,

என-என்று, முன் - "சீவனொடு" என்னும் 30வது செய்யுளில், விரித்திடும் - விரி வாகக் கூறிய, அச் சீவ ஆதிகட்கு - அந்த சீவன், ஈசுவரன், கூடஸ்தன். பிரஹ்மம் என்பவர்கட்கு, ஈண்டு - இவ் விடத்து, நாம ஆதி - பெயர் முதலிய, விவகார கற்பனை — விவகார கற்பனையை, எடுத்து - எடுத்து, மொழிகுதும் - கூறுவாம் (யாம்). எ—று.

தாம்- ஏ -ஆல் உடன்-அசை.

சேதம் - துண்டித்தல், கால பரிச்சேதம் - காலம் துண்டித்தல், தேச பரிச்செதம் - தேசம் துண்டித்தல். வஸ்து பரிச்சேதம் - வஸ்து துண்டித்தல், அம் மூன்றினுல் சேதிக்கபபடும் பொருள், கால பரிச்சேத்தியம், தேச பரிச்சேத்தியம், வஸ்து பரிச்சேத்தியம் என்று பெயர் பெறும். அது போன்று, பிரஹ்மத்திற்கு மூன்று பரிச்சேத்தியமும் இன்மையின், பரிபூரண மாம்." பிரஹ்மம் இருந்தது. இருக்கின்றது, இருக்கும் என்னும் முக்காலப் பிரதீதியும் உண்டாகின்றமையின், காலம் துண்டித்தல் இன்றிய, கால அபரிச்சிந்நத் தன்மை யாகிய பரிபூரணத் தன்மை யாம்.

1. கால பரிச்சேதம், கடத்தின்கண், "இருந்தது" என்னும் பிரதீதிக்கு விஷயமாங் காலத்து, அதே கடம் "இருக்கின்றது இருக்கும்" என்னும் பிரதீதிக்கு விஷயமாகாது, கால பரிச்சேதம் உள தாதலின், கால பரிச்சேத்திய மாகிய பரிச்சிந்நத் தன்மை உடையது குட மாம்.

2. தேச பரிச்சேதம், "பிரஹ்மம் யாண்டும் இருந்தது இருக்கின்றது இருக்கும்" என்னும் முத் தேசப் பிரதீதியும் உண்டாகின்றமையின், தேசம் துண்டித்தல் என்னும் தேச பரிச்சேதம் இன்மையின், தேச அபரிச்சேத்தியம் என்னும் தேச அபரிச்சிந்ந மாகிய பரிபூரணத் தன்மை யாம்.

"குடம், ஈண்டு இருக்கின்றது" என்னும் பிரதீதிக்கு விஷயமாங் காலத்து, அதே கடம், "ஆண்டு இருக்கின்றது" என்னும் பிரதீதிக்கு விஷயம் ஆகாது, தேசம் துண்டித்த லாகிய தேச பரிச்சேதம், அத் தேச விசிஷ்ட குடத்தில் இருக்கின்றமையின், தேச பரிச்சேத்திய மாகிய பரிச்சிந்நத் தன்மை உடையது தேச விசிஷ்ட குட மாம்.

3. வஸ்து பரிச்சேதம், "பிரஹ்மம்" என்னும் பிரதீதி, சகல வஸ்த்துக்களையும் விஷயஞ் செய்தலின், வஸ்து துண்டித்தல் என்னும் வஸ்து பரிச்சேத முடைய வஸ்து பரிச்சேத்தியம் ஆகாது வஸ்து அபரிச்சேத்திய மாகிய அபரிச்சிந்நத் தன்மை உடையதா யிருக்கின்றமையின், பிரஹ்மம் பரிபூரண மாம்.

"குடம்' என்னும் பிரதீதி படத்தில். குடத்தின் சம்பந்தம் இல்லை என்பதனை விஷயமாக்குதலின், குடம் வஸ்துத் துண்டித்தல் என்னும் வஸ்து பரிச்சேதம் உடைய வஸ்து பரிச்சேத்திய மாகிய பரிச்சிந்நத் தன்மை உடையதாம். (33)

[ஜீவ பேதங்கள், விசுவன் தைஜசன் பிராஞ்ஞன் என மூன்று என்றும், விசுவன். வியஷ்டி தூல சரீர அபிமானி, வியாவகாரிக ஜீவன், புத்திப் பிரதிபிம்ப சைதந்யன், சிதாபாசன், விக்ஷேப ஸ்வரூபன், பிரமாதா, கர்த்தா, போக்தா, விஞ்ஞானமயன். குடும்பி, சரீரி, த்வம் பத முக்கியார்த்தன் என்பன வாதி துவா தச நாமத்தினை அடைகின்றான் என்றும் கூறுகின்றார்.]

சாற்றரிய சிவபே தங்கண் முறை விசுவன்
 றைசதன்பின் பிராஞ்ஞனெனப் பகர்ந்திடுவ ரவருள்,
வேற்றுமைசெய் தூலவுடல் வியட்டியபி மானி
 வியாவகா ரிகன்புத்தி கதுவுறுசை தந்யன்,
மாற்றரிய சிதாபாசன் விட்சேப ரூபன்
 வருபிரமாத் திருநுவல்கத் திருவொடுபோத் திருவே,
தோற்றியிடும் விஞ்ஞான மயன்குடும்பி சரீரி
 துவம்பதமுக் கியன்முதலா யினவிசுவ னுமம். (34)

(இ—ள்) சாற்று அரிய - சொல்லுதற்கு அருமையான, சீவ - சீவர்களுடைய, பேதங்கள் - பேதங்கள், முறை - கிரமமாக, விசுவன் - விசுவன் தைசதன் - தைசதன், பின் - (அதன்) பின், பிராஞ்ஞன் - *பிராஞ்ஞன், என - என்று (மூன்று பிரகாரமாகச் சாக்கிர சொப்பன சுழுத்தி அவஸ்தாபிமானத்தால்), பகர்ந்திடுவர் - கூறுவார்கள், அவருள் - அ(வ் விசுவ தைஜச பிராஞ்ஞராகிய மூ) வருள். வேற்றுமை செய் - பிருதக்த்வத்தை யுண்டு பண்ணுகின்ற, வியட்டி - வியஷ்டி, தூல வுடல் - தூல

* *பிரஞ்ஞை - மிகுந்த அறிவு. அதனை உடையோன் பிராஞ்ஞன் ஆவன்.*

சரீர, அபிமானி - அபிமானி, வியாவகாரிகன் - வியாவகாரிக சீவன், புத்தி - புத்தி, கதுவு உறும் - பிரதிபிம்பித, சைதங்யன் - சைதங்யன், மாற்று அரிய - நீக்க முடியாத. சிதாபாசன் - சிதாபாசன், விட்சேப ரூபன் - விக்ஷேப ரூபன். வரு - (கருமாதீந மாக) வருகின்ற, பிரமாத்திரு - பிரமாத்திரு (பிரமாதா), நுவல் - சொல்லாநின்ற, கத்திரு - கர்த்திரு (கர்த்தா), போத்திரு - போத்திரு (போக்தா), தோற்றியிடும் - உண்டாகாநின்ற, விஞ்ஞாந மயன் - விஞ்ஞாந மயன், குடும்பி - குடும்பி, சரீரி - சரீரி, துவம் பத முக்கியன் - துவம் பத முக்கியார்த்தன், முதலாயின - (என்றல்) முதலியன, விசுவன் நாமம் - (பன்னிரண்டும். ஜாக்கிராவஸ்தாபிமானி யாகிய) விசுவ சீவனது (பரியாய) நாமங்களாம். எ—று. ஒடு - ஏ - அசை.

1. விசுவன், விசுவம் என்னும் ஸ்தூல சரீர ஜகத்தைத், தான் என்று அபிமானித்தலின், விசுவன் என்றும்,

2. தைஜசன் பிரகாசம் பொருந்திய அந்தக் காரணத்தி லிருந்து கொண்டு, அந்தச் சூக்ஷும சரீர அந்தக் கரணத்தைத் தான் என்று அபிமானித்தலின், தைஜசன் என்றும்,

3. பிராஞ்ஞன், காரண சரீர ரூப அவித்தையில் இருந்துகொண்டு, சூக்ஷும சரீரத்தில் உள்ள அந்தக் கரண சகாயம் இன்றி, சுழுத்தி அவஸ்தையி லுள்ள அவித்தையாகிய விஷயத்தினை அசகாய சூர னாய் அறிதலின், பிராஞ்ஞனென்றும் ஜீவனுக்குப் பெயராம்.

விசுவன் 12 நாமம்.

"வெவ் வேருயிருக்கும் தூல சரீரத்தை தாளுகவும், தன தாகவும் அபிமாநித்தலின், வியஷ்டி தூல சரீர அபிமாநி என்றும், 2. விவகாரஞ் செய்தலின், வியாவகாரிக ஜீவந் என்றும், 3. புத்தியில் பிரதிபிம்பித்துப் பதார்த்தங்களை அறிதலின், புத்திப் பிரதிவிம்பித சைதந்யன் என்றும், 4. சித்துப் போலியா யிருத்தலின், சிதாபாச னென்றும், 5. தோற்ற ரூபமா யிருத்தலின், விக்ஷேப ஸ்வரூபன் என்றும், 6. ஞாநத்திற்குக் கர்த்தாவா யிருத்தலின், பிரமாத்திரு என்றும், 7. பந்த மோக்ஷ அதிகாரியா யிருத்தலின், கர்த்திரு என்றும், 8 சுக துக்கங்களாகிய போகங்களைப் போகிப்பவன் ஆகலின், போத்திரு என்றும். 9. ஞாந விகாரி யாய் இருத்தலின், விஞ்ஞாநமயன் என்றும், 10. தார புத்திராதி குடும்பம் உடையவனு யிருத்தலின், குடும்பி என்றும், 11. தூல சூக்ஷ்ம காரண சரீரம் உடையவனுய், இருத்தலின், சரீரி என்றும், 12. த்வம் (நீ) என்னும் பதத்திற்கு வாச்சியார்த்தமா யிருத்தலின், துவம் பத முக்கியார்த்தன், அல்லது, துவம் பத வாச்சியார்த்தன், அல்லது, துவம் பத அபிதார்த்தன் என்றும், சாஸ்திரங்களில், விசுவ சீவனுக்கு" பரியாய நாமங்கள் கூறப்பட்டிருப்பதனை அறிந்து கொள்க. (34)

[தைஜசனுக்கு, வியஷ்டி சூக்ஷ்ம சரீர அபிமாநி, பிராதிபாதிக ஜீவன், ஸ்வப்ந கற்பிதன், என மூன்று நாமங்களையும். பிராஞ்ஞனுக்கு, வியஷ்டி காரண சரீர அபிமாநி, அவித்தியோபகிதன், காரியோபாதிகன் என வரும் மூன்று நாமங்களையும், ஜீவாத்மா அந்தராத்மா பரமாத்மா, என ஆத்மாவின் மூ வித பேதங்களையும், கூறுகின்றார்.]

பெற்றவொரு சூக்குமமெய் வியட்டிபி மாநி
பிராதிபா சிகசீவன் சொற்பநகற் பிதனென்,
மற்றவைதான் முதலாய தைசதன்றன் பெயராய்
வழங்குறுவர் காரணமெய் வியட்டியபி மாநி,
யுற்றுவரு மவித்யோ பகிதன்கா ரியமா
முபாதிகனென் பனமுதலாம் பிராக்ஞ நாமங்கள்,
பற்றிவரு சீவாந்மா வந்தராந் மாமேற்
பரமாந்மா வெனப்படுமாந் மாவிதமூன் றுகும். (35)

(இ—ள்) பெற்ற - (கருமாதீந மாகக் கிடைக்கப்) பெற்ற, ஒரு - ஒப் பற்ற, வியட்டி - வியஷ்டி, சூக்கும் மெய் - சூக்ஷ்ம சரீர, அபிமாநி - அபிமாநி, பிராதிபாசிக சீவன் - பிராதிபாசிக ஜீவன், சொற்பந கற்பிதன் - சொற் பந கற்பிதன், என் - என்று கூறப்படும், அவை முத லாய - அவை முதலியன, தைசதன் - (சொப்பநாவஸ்தாபி மாநி யாகிய) தைஜச (ஜீவ)னது, பெய ராய் - (பரியாய) நாமங்க ளாக, வழங்குறுவர் — விவகரிப்பார்கள், வியட்டி- வியஷ்டி, காரண மெய் - காரண சரீர, அபிமாநி - அபி மாநி, உற்று வரும் - பொருந்தி வருகின்ற, அவித்யா உபகி தன் - அவித்யோபகிதன், காரியம் ஆம் உபாதிகன் - காரி யோபாதிகன், என்பன — என்று கூறப்படும், முத லாம் - (இவை) முதலியன, பிராச்ஞன் - (சுழுப்தி அவஸ்தாபி மாநி யாகிய) பிராக்ஞ (சீவ)னது, நாமங்கள் - (பரியாய) நாமங்க ளாம், பற்றி வரும் - (இம் மூன்று ஜீவர்களுக்கும் அதிஷ்டாந மாகப்) பொருந்தி வருகின்ற. ஆந்மா விதம் - ஆத்மாவின் பேதம், சீவ ஆந்மா-சீவாத்மா, அந்தர் ஆத்மா அந்தராத்மா, மேல் - (அதன்)பின் (வருகின்ற), பரம

ஆந்மா-பரமாத்மா, எனப்படும் - என்று, மூன்று - மூன்று (பிரகார மாக), ஆகும் - கூறப்படும். (எ—று)

மற்று - தான் - தன் - அசை.

1. வெவ் வேறு யிருக்கும் சூக்ஷ்ம சரீரத்தைத் தா னு கவும், தன தாகவும், அபிமானித்தலின், வியஷ்டி சூக்ஷ்ம சரீர அபிமானி என்றும், 2. தோற்றம் மாத்திர ஸ்வரூபமா யிருத்தலின், பிராதிபாசிக ஜீவன் என்றும், 3 சொற்பனத் தால் கற்பிக்கப்படுதலின், சொப்பன கற்பிதன் என்றும், சொப்பனாவஸ்தாபிமானி யாகிய தைஜச ஜீவனுக்குப் பரி யாய நாமங்கள் ஆகச் சாஸ்திரங்களில் கூறப்பட்டிருக்கின் றதனை உணர்க.

1. வெவ் வேறு யிருக்கும் காரண சரீரத்தைத் தா னுகவும், தன தாகவும், அபிமானித்தலின், வியஷ்டி காரண சரீர அபிமானி என்றும், 2. அவித்தையை உபாதி யாகக் கொண் டிருத்தலின், அவித்யோபகிதன் என்றும், 3. காரி யமாகிய அந்தக்கரணத்தை உபாதி யாகக் கொண்டிருத்த லின், காரியோபாதிகன், காரியோபகிதன், அந்தக்கரணோ பாதிகன், அந்தக் கரணோபகிதன்; என்றும், சுழுத்தி அவஸ்தாபிமானி யாகிய பிராஞ்ஞனுக்குப் பரியாய நாமங் கள் சாஸ்திரங்களில் கூறப்பட்டிருப்பதை உணர்க. (35)

[ஜீவாத்மா, அந்தர் ஆத்மா, பரமாத்மா என மூன்று ஆத்மக்களைக் கூறுகின்றார்.]

எழுசீர்க் கழி நெடில் அடி ஆசிரிய விருத்தம்.

காயந்துள விரும்பு போலுடம் பாதி
கலந்துறு குடும்பமென் வழக்கிற்,
சார்ந்துளன் சீவாந் மாவெனப் படுவான்

ருமரை யிலையினீர் போலத்,
தோய்ந்துள குடும்பப் பெருவிவ காரந்
தோய்வில னந்தராந் மாவாம்,
போந்துல கிற்குப் பரிதிபோற் சான்ருய்ப்
பொருந்திஞேன் ருன்பர மாந்மா. (36)

(இ—ள்) காய்ந்து - (அக்கிநியில் வைத்துக்) காய்ச்சப் பட்டு, உள-இருக்கின்ற, இரும்பு - அயப் பிண்டம் (அக்கிநி யோடு அபேதப்பட்டிருப்பது), போல் - போல, உடம்பு-சரீரம், ஆதி – முதலியவற்றில், கலந்து உறு - சம்பந்தித்து, குடும்பம் – சம்சாரம், என் - என்று (கூறப்படும்), வழக்கில் – விவகாரத்தில், சார்ந்து – பொருந்தி, உளன் - இருப்பவன், சீவ ஆந்மா – ஜீவாத்மா, எனப்படுவான் - என்று சொல்லப்படுவான், தாமரை இலையில் - கமல பத்திரத்தில், நீர் - ஜலம் (சம்பந்தம் இன்றி இருப்பது), போல - போல. தோய்ந்து - பொருந்தி, உள - இருக்கின்ற, குடும்பம் - குடும்பம் (என்று சொல்லப்பட்ட), பெரு விவகாரம் - பெரிய விவகாரத்தில், தோய்விலன் - சம்பந்தியாது இருப்பவன், அந்தர் ஆந்மா ஆம் - அந்தராத்மா எனப்படுவன், போந்து - (கருமாதீந மாக) வருகின்ற, உலகிற்கு - பிரபஞ்சத்திற்கு (சாக்ஷியா யிருக்கும்), பருதி - சூரியனை, போல் - போல, சான்று ஆய் - (ஜீவாத்ம அந்தராத்ம வியவகாரத்திற்குச்) சாக்ஷி மாத்திர மாய், பொருந்திஞேன் - சம்பந்தித்திருப்பவன், பரம ஆந்மா - பரமாத்மா (என்று சொல்லப்படுபவன்). எ-று. தான் - அசை.

"போந்துலகிறந்து" என்றதால், சுழுத்தியும், "தோய்ந்து" என்றதால், சாக்கிரமும், "தோய்விலன்"

என்றதால், சொப்பநமும் கொள்ளக் கிடந்தன. ஜீவனைப் போல, வியவகரித்தலால், "சீவாத்மா" எனவும், ஜாக்கிர சுழுத்திகளின் மத்திய மான சொப்பநாவஸ்தையின் அபி மானி யாவதால், "அந்தராத்மா" என்றும், இவ் விருவருக் கும் மேலோனதலால், "பரமாத்மா" என்றும் கூறினர். (36)

[சூரியன், ஜலத்தில் விழுந்து அலைகின்றான், மேகம், விரைந்து செல்ல, சந்திரன் செல்கின்றான், என்பன போன்று, ஞாந ஆத்மாவிற்கு, சரீராதி உபாதிகளினால், கல்பனு நாமங்கள் உண்டாகின்றன எனக் கூறுகின்றார்.]

நீரவிழுந் தொருவெங் கதிர்தடு மாறி
நின்றதென் றுரைப்பது போலுங்,
கார்விரைந் தோட வோடுகின் றதுதண்
கலைமதி யென்பது போலு,
யோர்வருந் திரிவிற் போதவாந் மாவிற்
குடன்முத லாகிய வுபாதிப்,
பேர்வருஞ் சீவ பாவனை யுலகப்
பெருவிவ கார மென் றறிலே. (37)

இ—ள் ஓர்வு - அறிதற்கு, அரும் - அருமை யான, திரிவு - மாறுபடுதல், இல் - இல்லாத, போத - ஞாந ரூப, ஆத்மாவிற்கு - ஆத்மாவிற்கு, நீர் - ஜலத்தின் கண் விழுந்து - விழுந்து, ஒரு - ஒப்பற்ற, வெம் - உஷ்ண மான கதிர் - கிரணங்களை யுடைய (சூரியன்), தடுமாறி நின்றது- தத்தளிக்கின்றான், என்று - என, உரைப்பது-கூறுவது, போலும் - போலவும், கார் - மேகம், விரைந்து - விரை வாக, ஓட - செல்ல, தண் - குளிர்ந்த, கலை - (சோடச)

கலைகளை யுடைய, மதி - சந்திரன், ஓடுகின்றது - கடிதிற் செல்லுகின்றான், என்பது - என்று சொல்வது, போலும் - போலவும், உடல் - (தூல, சூக்ஷும, காரண) சரீரம், முதல் ஆகிய - முதலிய, உபாதி - உபாதிகளினால், பேர், (ஜீவாத்மா, அந்தராத்மா, பரமாத்மா என்னும்) நாமங்கள், வரும் - உண்டாகின்றன (ஆதலின்), பெரு - பெரிய, உலக விவகாரம் - சம்சார விவகாரம், சீவ பாவனை - ஜீவர்களு டைய கற்பனையினால் உண்டாகின்றது, என்று - என, அறி-(நீ) உணர்ந்து கொள்வா யாக, எ—று ஏ-அசை,

இங்ஙனங் கூறியவற்றால், பரமார்த்தத்தில் இவை இல்லை என்று பெறப்படுகின்றது, (37)

[ஈசுவரன், விராட் புருஷன், ஹிரண்யகர்ப்பன், அந்தரியாமி என மூ வித மாவான் என்பதையும், விராட் புருஷ னுடைய சமஷ்டி ஸ்தூல சரீர அபிமானி, வைசுவா நரன் என்னும் இரு பெயரையும், சமஷ்டி சூக்ஷ்ம சரீர அபிமானி மகா பிராணன் என இரண்ய கர்ப்ப னுடைய நாமத்தினையும் கூறுகின்றார் ]

அருவிராட் புருட னிரணிய கர்ப்ப
 னந்தரி யாமியென் றீசன்,
றிரிவித மவருட் டூலவா கத்துச்
 சமட்டியா கியவபி மானி,
விரிவுறும் வைசுவா நரனெனன் முதலா
 விராட்புரு டன்பெய ராகு,
மருவுறு மிலிங்க மெனுமுடற் சமட்டி
 மானிமாப் பிராணனே யன்றி. (38)

(இ—ள்) ஈசன் - பரமேசுவரன், அரு - அருமை யான, விராட் புருடன் - விராட் புருஷன், இரணியகர்ப்பன் - இரண்யகர்ப்பன், அந்தரியாமி - அந்தர்யாமி, என்று - என, திரி விதம் - மூன்று பிரகாரம் ஆவன், அவருள் - அவ் விராட் புருடன் - இரண்யகர்ப்பன். அந்தர்யாமி என்னும் மூவருள், (விராட் புருடன் - விராட் புருஷ ஞகிய ஈசுவர) னுக்கு, சமட்டி ஆகிய - சமஷ்டி, தூல - தூல, ஆகத்து - சரீர, அபிமானி - அபிமானி, விரிவு உறும் - விரி வாகப் பொருந்தி யிருக்கின்ற, வைசுவாநரன் - வைசுவாநரன், எனல் - என்று கூறுதல், முதல் ஆக - முதலியன, பெயர் - (பரியாய) நாமங்கள், ஆகும் - ஆம், [ஹிரண்ய கர்ப்ப ஈசுரனுடைய பரியாய நாமங்களைக் கூறுகின்ருர் ] மருவு உறும் - பொருந்தாநின்ற, சமட்டி - சமஷ்டி, லிங்கம் உடல் - சூக்ஷ்ம சரீர, மானி - அபிமானி, எனும் - என் றும், மாப் பிராணன் - மகாப் பிராணன் (என்றும்), அன்றி – அல்லாமலும். எ—று

ஏ - அசை. இச் செய்யுள் குளகம். 'அபிமானி' என்பது, 'மானி' என, அபி, என்னும் முதல் குறைந்து நின்றது.

1. பெரிய சரீரம் உடைமையின், விராட் புருடன் என்றும், 2. ஸ்வர்ணம் போன்ற சூக்ஷ்ம சரீரத்தை உடைமையின், ஹிரண்ய கர்ப்பன் என்றும், 3. உள்ளே இருந்து ஆட்டுதலின். அந்தர் யாமி என்றும், ஈசுவரனுக்கு, ஸ்தூல சூக்ஷ்ம காரண சரீர சம்பந்தத்தினுல், மூன்று நாமங்கள் உண்டாகின்றன. 1. எல்லாத் தூல சரீரங்களையும் தனதாக அபிமானித்தலின், சமஷ்டி தூல சரீர அபிமானி என்றும், 2 ஜகத்தி லுள்ள ஜீவர்களை யெல்லாம் தன

தாகப் பாவித்தலின், வைசுவாநர னென்றும், விராட் புருட ஈசுரனுக்குப் பெய ராம்.

1. எல்லாச் சூக்ஷ்ம சரீரங்களையும் தன தாக அபிமானித்தலின், சமஷ்டி சூக்ஷ்ம சரீர அபிமானி என்றும், 2 எல்லாப் பிராண ஸ்வரூபமா யிருத்தலின், மஹாப் பிராணன் என்றும், 3. கயிறு ரூபமா யிருந் தாட்டுதலின், சூத்ராத்மிகன் என்றும், இரண்யகர்ப்ப ஈசுரனுக்குப் பெய ராம். (38)

[ஹிரண்யகர்ப்பன், சூத்ராத்மிகன் என்பன முதலிய பெயர் பெறுதலையும், அந்தரியாமி-சமஷ்டி காரண சரீர அபிமானி, அவ்வியக்தன், காரணோபாதிகன், அநந்தமயன் பரதேவதை பரமன், தற் பத முக்கியார்த்தன் என ஏழு நாமங்களைப் பெறுதலையும் கூறுகின்றார். ]

சூத்திராத் மிக்னென் பெயர்முத லாகச்
சொற்றன ரிரணிய கர்ப்பர்க்.
கேத்துகா ரணமா முடம்புறு சமட்டி
யெனுமபி மாநியவ் வியத்தன்,
வாய்த்தகா ரணமா முபாதிக னநந்த
மயன்பர தேவதை பரம,
னுத்ததற் பதமுக் கியார்த்தனென் பெயர்மு
னந்தரி யாமிபெற் றிடுமே. (39)

இ—ள் இரணியகர்ப்பற்கு - இரண்யகர்ப்ப (ஈசுவர) னுக்கு. சூத்திராத்மிகன் - சூத்திராத்மா, என் — என்றல், முதல் ஆக — முதலிய, பெயர் - (பரியாய) நாமங்களை, சொற்றனர் - (பெரியோர்) கூறினார்கள், அந்தரியாமி —

அந்தர்யாமி (யாகிய ஈசுவரன்), ஏத்து - (யாவராலும்) துதிக்காநின்ற சமட்டி - சமஷ்டி, எனும் — ஆகிய, காரணம் ஆம் உடம்பு உறு - காரண சரீர, அபிமானி-அபிமானி, அவ்வியத்தன் - அவ்வியக்தன், வாய்த்த -கிடைக்கப்பட்ட, காரணம் ஆம் உபாதிகன் - காரணோபாதிகன், ஆநந்த மயன் - ஆநந்தமயன், பரதேவதை - பரதேவதை, பரமன் - பரமன், ஆத்த - விரும்பாநின்ற, தற் பத முக்கியார்த்தன் - தத் பத வாச்சியார்த்தன், என் மூன் - என்றல் முதலிய, பெயர் - (பரியாய) நாமங்களை, பெற்றிடும் - அடைவன். எ—று. ஏ - அசை.

1 எல்லாக் காரண சரீரங்களையும் தன தாக அபிமானித்தலின், சமஷ்டி. காரண சரீர அபிமானி என்றும், 2 வெளிப்படாத மாயையினை உபாதி யாக உடைமையின், அவ்வியக்தன் என்றும், 3 ஜகத் காரண மாகிய மாயையை உபாதி யாக உடைமையின், காரணோபாதிகன் என்றும், காரணோபகிதன், மாயோபகிதன், என்றும், 4 ஆநந்த ஸ்வரூப மாகலின், ஆநந்த மயன் என்றும், 5 மே லான தேவதா ரூபமா யிருத்தலின், பரதேவதை என்றும், 6 எல்லாவற்றிற்கும் மேலா யிருத்தலின், பரமன் என்றும், 7 தத் (அது என்னும்) பதத்திற்கு முக்கியார்த்தமா யிருத்தலின், தத் பத முக்கியார்த்தன் என்றும், அல்லது, தத் பத அபிதார்த்தன் என்றும், அந்தர்யாமி யாகிய ஈசுவரனுக்குப் பெயராம். (39)

[பிரஹமம், சித்து எனும் பெயரை எதிர்மறை முகத்தால் பெறும் என்று கூறுவான் தொடங்கி, சித்திர படம், தௌத படம், கடித படம், லாஞ்சித படம், ரஞ்சித படம்,

என நான்கு அவஸ்தைகளை அடைவது போன்று, மாயா காரியங்கள் இன்றிய நிலையில், சித்து என்னும் பெயர் பூண்டு விளங்கும் என்கின்றார்.]

சித்திர படமோர் பொருளொடுங் கூடாத்
திகழ்வினிற் றௌதமே யெனவு,
நெய்த்தகூழ் வருடக் கடிதமே யெனவு
நீனிறத் திலாஞ்சித மெனவும்,
பத்தியோ வியஞ்சேர்ந் திரஞ்சித மெனவும்
படுதல்போற் பிரமமு மாயை,
வைத்தகா ரியங்கள் கடந்துறு நிலையில்
வயங்குஞ்சித் தெனும்பெயர் புனைந்தே, (40)

(இ—ள்) சித்திர - (இராம கிருஷ்ணாதி) உருவங்களை (எழுதப்பட்ட), படம் - வஸ்திர மானது, ஓர் - ஒரு, பொருளொடும் - (நீலாதி வர்ண) பதார்த்தங்களோடும், கூடா - சேராது, திகழ்வினில் - (தான் மாத்திர மாகச் சுத்த மாக) விளங்குங் காலத்தில், தௌதம் - வெண்மை வஸ்திரம். எனவும் - என்றும், நெய்த்த - பசையோடு கூடிய, கூழ் — கூழை, வருட - தடவினால், கடிதம் - கெட்டி வஸ்திரம், எனவும்- என்றும், நீல் - நீல, நிறத்து - வர்ணத்தினால் (அச்சுக் கட்டிய காலத்து), இலாஞ்சிதம் - அச்சுக் கட்டிய வஸ்திரம், எனவும் - என்றும், பத்தி - வரிசை யாக, ஓவியம் - சித்திரங்கள், சேர்ந்து - வரைந்த பின், இரஞ்சிதம் - (வர்ணம் இடப்பட்டு) பூர்த்தி யான வஸ்திரம், எனவும் - என்றும், படுதல் - சொல்லப் படுதல், போல் - போல, பிரமமும்-(ஜகத் காரண மாகிய), பிரஹ்மமும், மாயை - மாயையினால், வைத்த - உண்டாக்

கப்பட்ட, காரியங்கள் - (ஜக தாதி) காரியங்கள், கடந்து உறும் நிலையில் - நீங்கியிருக்கின்ற (துரியாதீத) அவஸ்தை யில், சித்து - சித்து, எனும் - என்று சொல்லப்படும், பெயர் - நாமத்தினை, புனைந்து - பொருந்தி, வயங்கும் - விளங்கும். (எ—று) ஏ-ஏ-ஏ அசை,

தௌ: - வெண்மை; கடித: - சேர்க்கப்பட்ட, லாஞ் சித: - அடையாளம் இடப்பட்ட, ரஞ்சித; வர்ணம் இடப் பட்ட, என்பது பொரு ளாம்.

பஞ்ச தசி 6 சித்திர தீபம்.

1 சித்திர படத்திற் றவதங்கட் டிதமுந்
திகழிலாஞ் சிதமிரஞ் சிதமென்,
றெத்திற மவத்தை நால்வகை தோற்று
மிணையிலாப் பரம்பொரு ளிடத்து,
மத்திரஞ் சித்தோ டந்தரி யாமி
யணிதிகழ் சூத்திராந் மாவோ,
டொத்திடு விராட்டிவ் வவத்தைநால் வகையு
மொளிருமென் றுணர்ந்திடல் வேண்டும்.

2 இங்குத்தன் னியல்பின் வெண்மைகாண் டவுத
மிணைதலி னங்கட் டிதமாம்,
அங்குறு மசிமே னியிலிலாஞ் சிதமாம்
வந்நங்க ணிறைந்திரஞ் சிதமாம்,
அங்குநற் பரந்தா னியல்பினிற் சித்தா
மந்தரி யாமிமா யாவி,
தங்குறச் சூக்கஞ் சூத்திராந் மாவாந்
தடிப்புட லான்விராட் டாமே.

3 திரத்தினிற் பிரமன் முதற்றம்ப மீருஞ்
சேதநங் களுஞ்செடங் களும்வத்,
திறத்திலோ வியம்போ லுத்தம வதமத்
திறத்தி லுறைவன வாஞ்சித்,
திறத்தினிற் கோட்டு மாநுடர்க் குறவத்
திரத்துடைப் போலிவே ருச்சித்.
திரத்தினுக் கிடவத் திரத்திலே டுறழ்வாய்த்
திகழ்வபோற் செய்யப்பட்ட வன்றே.
என வரும் செய்யுளான் உணர்க. (40)

[அந்தரியாமி, இரணியகர்ப்பன், விராட் புருஷன் என மூ வகை யாகச் சேதநம், தூல சூக்ஷ்ம காரண சரீரங்களால், மூ வகை நாமங்களை அடைகின்ற தென்று கூறுதலுடன், சித்திர படம் போன்ற பிராஹ்மத்தினிடத்தில், தோன்றும் சித்திரம் யா தென்னும் வினவலையும் செய்கின்றார்.]

அகிலகா ரணமா மாயையை மருவி
யந்தரி யாமியா மாயை,
சகலகா ரியமாஞ் சூக்கும வுடம்பு
சார்ந்துபொன் கர்ப்பனென் ருகி,
விகலமி றூல வுடம்பினை மேவி
விராட்டென நிற்குமென் றறிவாய்,
திகழுறு பிரமஞ் சித்திர படமேற்
சித்திர மியாதென வினவில். (41)

(இ—ள்) அகில - சர்வ, காரணம் ஆம் - காரண மாகிய, மாயையை - மாயையினை, மருவி - (சகல அவஸ் தைகளும் கடந்து சித் தென்னும் பெயரோடு கூடிய பிரம மம்) பொருந்தி, அந்தரியாமி ஆம் - அந்தர் யாமி (என்னும்

பெயரைப்) பொருந்தும், மாயை - மாயையினது, காரியம் ஆம் - காரிய மாகிய, சகல - சர்வ, சூக்கும உடம்பு - சூக்ஷ்ம சரீரத்தினையும், சார்ந்து - பொருந்தி, பொன் கர்ப்பன் - இரணிய கர்ப்பன், என்று - என்னும் (பெயரினை), ஆகி - அடைந்து, விகலம் இல் - சகல, தூல உடம்பினை - தூல சரீரத்தினை(யும்), மேவி - பொருந்தி, விராட்டு - விராட், என - என்னும் (பெயரினைப் பெற்று), நிற்கும் - இருக்கும், என்று - என, அறிவாய் - உணர்ந்து கொள்வா யாக, திகழ் உறு - விளங்காநின்ற, பிரமம் - பிரம மானது, சித்திர படமேல் - சித்திரங்கள் எழுதப் பட்ட வஸ்திரத்துக்குச் சமாநம் ஆகு மாயின், சித்திரம் - (பிரஹ்ம ரூப வஸ்திரத்தி லுள்ள) சித்திர மானது, யாது - எது, என - என்று, வினவில் - (நீ) கேட்பாயாகில்- (சமாதாநம் கூறு வாம்) எ—று. (41)

[சேதந அசேதந மாகப் பொருந்திய பிரபஞ்சம், சித்தி ரம் என்று சமாதாநம் கூறி, ஒரே படித் தான சேதந ரூபப் பிரஹ்மத்தில், சேதந அசேதநப் பிரபஞ்சம், எவ் வாறு தோற்ற மாம் எனச் சங்கித்துச் சமாதாநமும் கூறுகின்றார்.]

விரிஞ்சனே முதலாஞ் சேதந மோடு
வெற்றெழு வாயசே தநமாய்ப்,
பரந்துள வுலகஞ் சித்திர மென்பர்
பரம்பொரு ளாமொரு பிரமத்,
திருஞ்சடா சடமா முலகது தோற்ற
மெவ்வண மெனிற்படந் தன்னில்,
வரைந்தபன் னிறமாய்க் குளிர்முதன் மாற்ற
வல்லன வலதுகிற் போலி. (42)

(இ—ள்) விரிஞ்சன் - பிரம்மா. முதல் ஆம் - முதலிய, சேதநம் ஓடு - (ஸ்தம்ப பரியந்த) சேதநங்களும், வெற்பு - மலை, எழுவாய் - முதலிய, அசேதநம் - அசேதநங்களும், ஆய் - ஆக, பரந்து - விரிந்து, உள - இருக்கின்ற, உலகம் - பிரபஞ்சம், சித்திரம் - (பிரஹ்மத்தி லுள்ள) சித்திரமாம், என்பர் - என்று கூறுவார்கள், பரம் பொருள் ஆம்- மேலான வஸ்து வாகிய, ஒரு - ஒப் பற்ற, பிரமத்து - பிரஹ்மத்தில், இரும் - பெரிய. சட அசடம் ஆம் - சடா சட மாகிய, உலகது - பிரபஞ்சத்தின், தோற்றம் - பிரதீதி, எவ் வண்ணம் - எப்படிப் பொருந்தும், எனில் - என்று நீ கேட்பாயாகில், படம் தன்னில் - (சித்திர ஆதார) வஸ்திரத்தில், பல் - பல, நிறம் ஆய் - நிறங்களை யுடைய தாய், வரைந்த - (உள்ள மநுட சரீரத்தில்) எழுதப்பட்ட. குளிர் - சீதம் (உஷ்ணம்) முதல் - முதலியவற்றை, மாற்ற- நிவிர்த்திக்க, வல்லன - சாமார்த்தியம் உடையன அல - இன்றிய, போலி துகில் - போலி வஸ்திர மானது. எ—று.

ஏ-அசை. 'படம் தன்னில்', 'தன்' அசை, 'உலகது' என்பதில், அது பகுதிப் பொருள் விகுதி. (இச் செய்யுள் குளகம்) (42)

[சித்திரம் எழுதிய வஸ்திரத்தில் சமான மான போலி வஸ்திரமும், சமாந மின்றிய மலை முதலியனவும், தோற்று வது போல, அறிதற் கரிய பிரஹ்மத்தினிடத்தில், ஜீவர்கள் சமாந மாகவும், பார் முதலிய ஜட பதார்த்தங்கள் சமாநம் இன்றியும் உண்டாக லாம் என்று திருஷ்டாந்த வாயிலாகச் சமாதாநமும் கூறுகின்றார்.]

ஓர்வடி வாகிக் குளிர்முதன் மாற்று
முண்மையாஞ் சித்திர படம்போன்,
றூர்வுற வெழுதுங் கிரிமுத லாய
வதனெடொப் புறுகிலா வாபோற்,
றேர்வரும் பிரமத் தெழுந்துபற் பலவாஞ்
சீவர்கள் சித்தொடப் பாகப்,
பார்முத லொவ்வாச் சடங்களா தலினுற்
பரத்திலாஞ் சடாசட வுலகம், (43)

(இ—ள்) குளிர் - சீதம் (உஷ்ணம்), முதல் - முதலிய வற்றை, மாற்றும் - நிவிர்த்திக்கின்ற, உண்மை ஆம் - சத்திய மாகிய, சித்திர படம் - சித்திரங்கள் எழுதப்பட்ட (அதிஷ்டாந) வஸ்திரம், போன்று - போல, ஓர் வடிவு ஆகி - சமாந ஸ்வரூப முடைய தாயும், ஆர்வு உற - பொருந்தும்படி, எழுதும் - வரைந்திருக்கின்ற, கிரி -மலை, முதல் ஆய - முதலியன, அதனொடு - அதிஷ்டாந வஸ்திரத் திநோடு, ஒப்பு உறுகு இலா ஆ(று) - சமாந ஸ்வரூபம் இன்றிய தாயும் இருக்கின்ற ஆறு, போல் - போல, தேர்வு அரும் - அறிதற் கரிய, பிரமத்து - பிரஹ்மத்தினிடத்து, எழுந்து - உண்டாய், (உத்தம மத்திம அதம மென்றும் சொல்லும்படிக்கு), பல் பல ஆம் ஜீவர்கள் - நாநா வாகிய ஜீவர்கள், சித்து ஒடு-(அதிஷ்டாந மாகிய) சித் ரூபப் பிரஹ்மத்தோடு, ஒப்பு - சமாந ஸ்வரூபம், ஆக - ஆகவும், பார் - பூமி, முதல் - முதலிய, சடங்கள் - சட பதார்த்தங்கள். ஒவ்வா - (அதிஷ்டாந சித் ரூபப் பிரஹ்மத்தோடு) சமாந ஸ்வரூபம் இன்றிய தாயும், ஆதலின் - உண்டாகி யிருக்கின்றபடியால், சட அசட - சேதநாசேதநமாகிய,

உலகம் - பிரபஞ்சம், பரத்தில் - பிரஹ்மத்தில், ஆம்-(உண்டாதல்) கூடும், எ—று (43)

[கூறி வந்த ஈசுரனது, குணாதிசயமும், பிரபுத்துவ சாமர்த்தியமும், பஞ்ச கிருத்தியமும், கூறுகின்றார்.]

இத்திறத் தீசன் முக்கிய குணங்க
ளெல்லாமறி தன்முத லனவாங்,
கத்திருத் துவமோ டகத்திருத் துவம்பி
னங்கிதா கர்த்திருத் துவமே,
யத்தன்மெய்ப் பிரபுத் துவவலி யாக்க
லளித்தல்போக் குதனிய மநந்தா,
னெய்த்திட லகற்று மநுப்பிர வேச
மென்பன வீசனைந் தொழிலே. (44)

(இ—ள்) இத் திறத்து - (சேதநாசேதநப் பிரபஞ்சத்தினை உண்டாக்கும்) சாமார்த்தியத்தினை யுடைய, ஈசன் - பரமேசுவரனது, முக்கிய குணங்கள் - பிரதாந குணங்களாவன, எலாம் அறிதல் - சர்வக்ஞத் தன்மை, முதலன - சர்வேசுவரத் தன்மை, சர்வ நியந்திருத் தன்மை, சர்வ அந்தர்யாமித் தன்மை, சர்வ கர்த்திருத் தன்மை, சர்வ சக்தித் தன்மைகள், ஆம் - ஆகும், அத்தன் - பரமேசுவரனது, மெய் - சத்திய மான. பிரபுத்துவ வலி - பிரபுத் தன்மைச் சாமார்த்தியம், கத்திருத்துவம் - கர்த்திருத் தன்மையும், அகத்திருத்துவம் - அகர்த்திருத் தன்மையும், பின் - (அதன்)பின், அங்கிதா கர்த்திருத்துவம்-அங்யதா கர்த்திருத் தன்மையும் ஆம், ஈசன் - பரமேசுவரனது, ஐந் தொழில் - பஞ்ச கிருத்தியங்கள், ஆக்கல் - சிருட்டித்தலும், அளித்தல் - இரக்ஷித்தலும், போக்குதல்-சம்மரித்தலும், நியமநம் -

திரோபவித்தலும், எய்த்திடல் - சிரமத்தினை, அகற்றும் - நீக்குகின்ற, அநுப்பிரவேசம் - அநுக்கிரமும், என்பன - என்று கூறுவன ஆகும். எ—று.

ஏ-தான்-ஏ-ஓடு-அசை,

1. சர்வ பதார்த்தங்களையும் அறிதலின், சர்வக்ஞத் தன்மை என்றும், 2 சர்வ பதார்த்தங்களும், ஈசன் வசமாயிருத்தலின், சர்வேசுவரத் தன்மை என்றும், 3 சர்வ பதார்த்தங்களையும் நியமஞ் செய்தலின், சர்வ நியந்திருத் தன்மை என்றும், 4 சர்வ பதார்த்தங்களின் உள்ளிலிருந்து ஆட்டுவிக்கின்றமையின், சர்வாந்தர்யாமித் தன்மை என்றும், 5. சர்வ பதார்த்தங்களின் கர்த்தாவா யிருப்பதால், சர்வ கர்த்திருத் தன்மை என்றும், சர்வ சக்தியும் இருக்கின்றமையின், சர்வ சக்தித் தன்மை என்றும், ஈசுவரனுக்கு ஷட் குணங்கள் பிரதான மாகச் சொல்லப்படுகின்றன. 1 ஒன்றைச் செய்கின்றமையின், கர்த்தா என்றும், 2 ஒன்றைச் செய்யாதிருக்கின்றமைன் அகர்த்தா வென்றும், 3. ஒருவன் செய்ததைத், தான் வேறு பிரகார மாகச் செய்கின்றமையின், அந்யதா கர்த்தா வென்றும், ஈசுவரனுக்கு மூன்று சாமர்த்தியங்கள் கூறப்படுகின்றன. (44)

[நிர்விகாரப் பிரஹ்ம ரூப ஈசுவரன், பஞ்ச கிருத்தியஞ் செய்தல் தகுமோ என்று சங்கித்து, சூரியன், இச்சையின்றி வாரி பொழிந்து, அதில் பிரதிவிம்பித்து, மேக கிரணத்தால் மறைத்து, பனிக் கிரணத்தால் காத்து, உஷ்ண கிரணத்தால் ஜலத்தை வற்றச் செய்து, தன்னோடு ஐக்யப் படுத்துதல் போல, கூடும் என்று சமாதானமும் கூறுகின்றார்.]

நீங்கிய விகாரப் பிரமமா மீச
    னிகழ்த்துமோ தொழில்பல வென்னிற்,
பூங்கதி ரிச்சை யின்றியே வாரி
    பொழிமழைக் கதிரினாற் பொழியா,
வாங்கதி னிழலாய்ப் பொருந்தியந் நிழலை
    யலர்முகி லான்மறைத் தளித்தே,
தூங்கிம கரத்தால் வெங்கதி ரானீர்
    தொலைத்ததைத் தன்னொடாக் குதல்போல். (45)

(இ—ள்) விகாரம் நீங்கிய - நிர்விகார ரூப, பிரமம் ஆம் - பிரஹ்மம் ஆகிய, ஈசன் - பரமேசுவரன், பல தொழில் - (சிருஷ்டி முதலிய) நாநா கிருத்தியங்களை, நிகழ்த்துமோ - செய்வனோ, என்னில் - என்று நீ கேட்பாயாகில், [அதற்குச் சமாதானங் கூறுவாம்.] பூம் - அழகிய, கதிர் . (ஆயிரம்) கிரணங்களை யுடைய (சூரியன்), இச்சை யின்றி - விருப்பம் (யத்நம்) இல்லாமல், பொழி - பெய்யுந் தன்மை யுடைய, மழைக் கதிரினால் - (முந் நூறு) வருஷா கிரணத்தினால், வாரி - ஜலத்தினை, பொழியா - வர்ஷித்து, அதில் - அச் சலத்தில், நிழல் ஆய் பொருந்தி - பிரதிபிம்பித்து, அந் நிழலை - அந்தப் பிரதிபிம்பத்தினை , அலர் - விரிந்த, முகிலால் - மேகத்தினால், மறைத்து - திரோபவிக்கச் செய்து, தூங்கு - தணிந்து வருகின்ற, (பனிக்குந் தன்மை யுடைய) இணத்தால் - (முந் நூறு) பனிக் கிரணத்தினால், அளித்து – (அதனை) இரக்ஷித்து, வெம் கதிரால் - (நால் நூறு) உஷ்ண கிரணத்தினால், நீர் - ஜலத்தினை, தொலைத்து - சம்மரித்து, அதை - அந்தப் பிரதிபிம்பத்தை, தன்னொடு - தனது ஸ்வரூபத்தோடு, ஆக்குதல் - (ஐக்கியம்) செய்து கொள்ளுதல், போல் - போல். எ—று. (45)
ஏ- ஏ- அசை. (இச் செய்யுள் குளகம்)

[சைதந்யம் மாயா சத்தியோடு சம்பந்தப்பட்டுச் சகுணம் ஆகி, சித் பிரதாநத் தன்மையினால், நிமித்த காரணனும், ஜடப் பிரதாநத் தன்மையினால், உபாதாந காரணனும் ஆகி, புத்தியில் பிரதிபிம்பித்து போக்தா வாக இருந்து என்றும், கூறுகின்றார்.]

போற்றிறை மாயா சத்தியோ டொன்றிப்
பொலிந்தசிற் பிரதாந மதனாற்,
சாற்றரு நிமித்த காரண னாகித்
தகுஞ்சடப் பிரதாந மதனா,
லாற்றுபா தாந காரண னெனநின்
றாக்கிய புத்தியா திகளிற்,
றோற்றுபு சீவ ரூபமாய் வினையாற்
சொற்றபோத் திருவென நின்றே. (46)

(இ—ள்) போற்று-(யாவரும்) துதிக்கின்ற, இறை - பரமேசுவரன், மாயா சத்தியோடு - மாயா சக்தியோடு, ஒன்றி - பொருந்தி, பொலிந்த - விளங்காநின்ற, சிற்பிரதாநமதனால் - சித் பிரதாநத் தன்மையினால், சாற்று அரும் - சொலற் கரிய, நிமித்த காரணன் - நிமித்த காரணன், ஆகி - ஆயும், தகும் - தகுதி யான, சடப் பிரதாநமதனால்- சடப்பிரதாநத் தன்மையினால், ஆற்று - செய்வதற் குரிய, உபாதாந காரணன் - உபாதாந காரணன், என - ஆயும், நின்று - இருந்து (புத்தி முதலிய பதார்த்தங்களை பிரஹ்மா ரூபத்தால் சிருஷ்டித்து), ஆக்கிய - தன்னால் உண்டாக்கப் பட்ட, புத்தி ஆதிகளில் - புத்தி முதலிய பதார்த்தங்களில், ஜீவ ரூபம் ஆய் - ஜீவ ரூப மாக, தோற்றுபு - பிரதிபிம் பித்து, வினையால் - கர்மத்தினால், சொற்ற - சொல்லாநின்ற, போத்திரு - போக்தா, என - என்று, நின்று -

பரமேசுவர ரூபத்தால் மறைப் புற்று) இருந்து. எ—று. ஏ-அசை. (இச் செய்யுள் குளகம்),

"சிற் பிரதான மதனுல்" என்பதில், சிற்பிரதானமது, என்பதில், "அது" பகுதிப் பொருள் விகுதி. "சடப் பிர தான மதனுல்" என்பதில், "சடப் பிரதானமது" என்பதில், "அது" பகுதிப் பொருள் விகுதி. (46)

[நியாமக சக்தியினுல், போகம் போக்கியம் போக்தாக் களை நியமித்து, ருத்திர ரூபத்தினுல் மாயா காரியத்தை, அழித்து, ஆசாரிய ரூப மாக வந்து, அஞ்ஞன் ஆகிய ஜீவனை தன்னேடு அபேதப்படுத்திக்கொள்வான் என்று கூறலோடு, சமஷ்டி வியஷ்டியினுல், ஜீவேசுவரர்களுக்கு பேதம் உண்டு என்றும், கூறுகின்றுர்.]

நியமசத் தியினுற் போகபோத் திருவை
நியமஞ்செய் துருத்திர வுருவான்,
மயமுறு மாயா காரியஞ் சிதைத்து
வந்தரு ளாரிய வுருவா,
லயர்வுறு சீவன் றன்னையே தன்னே
டயிக்கமாக் குவனென வறிக,
வுயர்வுறு சமிட்டி வியட்டியென் பனவா
லுயிரிறை கட்குறும் பேதம், (47)

(இ—ள்) நியம சத்தியினுல் - (விஷ்ணு ரூப) நியாமக சத்தியினுல், போக - போகங்களையும், போத்திருவை - போக்தாக்களையும், நியமஞ் செய்து - நியமித்து, உருத்திர உருவால் - ருத்திர ஸ்வரூபத்தினுல், மயம் உறும் - விகா ரம் பொருந்தி யிருக்கின்ற, மாயா காரியம் - மாயா காரி

யங்கள் (யாவற்றையும்), சிதைத்து - சம்மரித்து, ஆரிய உருவால் - (சதா சிவ ஞகிய) ஆசாரிய ரூப மாக, வந்து - (எழுந்தருளி) வந்து. அருள் - அநுக்கிரகஞ் செய்து, அயர்வு உறு - மறதியோடு கூடியிருக்கின்ற, சீவன் தன்னை - ஜீவனை, தன்னேடு - (பிரஹ்ம மாகிய) தனது ஸ்வரூபத்தோடு, அயிக்கம் - ஒன்ருக, ஆக்குவன் -செய்து கொள்ளுவன், என — என்று, அறிக - உணர்ந்து கொள்வாயாக, [ஜீவேசுவர பேத காரணங் கூறுகின்ருர்], உயிர் இறைகட்கு - சீவேசுவரர்களுக்கு, உயர்வு உறு — சிரேஷ்டம் பொருந்திய, சமட்டி - சமஷ்டி, வியட்டி - (தாழ்வு பொருந்திய) வியஷ்டி. என்பனவால் - என்று சொல்லப் படும் ஏதுக்களால், பேதம் உறும் - வேற்றுமை (வந்து) பொருந்தும். எ—று.

ஏ-அசை 'சீவன் தன்னை' என்பதில், 'தன்'அசை,

மாயாசத்தியோடு கூடிய சேதநம். சித் பிரதாநத்தால், நிமித்த காரண மாயும், சடப் பிரதாநத்தால், உபாதாந காரண மாயும், இருந்து, பிரஹ்மா ரூபத்தால், புத்தி முதலியவற்றைச் சிருஷ்டித்து, அதில் ஜீவ ரூப மாகப் பிரவேசித்து, அச் சீவனை. கரும வசத்தால் போக்தா வாக இருக்கும்படி, மஹேசுவர ரூபத்தால், திரோபவஞ் செய்து, நியாமக சக்தி யாகிய விஷ்ணு ரூபத்தால், போக போக்தாக்களை ரக்ஷித்து, ருத்திர ரூபத்தினல். மாயா காரியங்களைச் சம்மரித்து, சதா சிவ ரூப மாகிய ஆசாரிய ரூபத்தால், அநுக்கிரகஞ் செய்து, அந்தப் பிரதிபிம்பத்தைத் தன்னேடு, ஐக்கிய மாக்கிக் கொள்ளுகின்றது என்று உணர்க. (47)

[மரக் கூட்டத்தினை வநம் என்று சொல்லுவது போல, சகல ஜீவர்களையும், நான் என்று அபிமாநம்

செய்வது, ஈசுவா சமஷ்டி அபிமாநம் என்றும், ஒவ்வொரு மரத்தின் பெயரைச் சொல்வது போல, ஒவ்வொரு சரீரத்தினிடத்தும், பிந்ந பிந்ந மாக வைக்கின்ற அபிமாநம், வியஷ்டி ஜீவ அபிமாநம் என்றும், கூறுகின்ருர்.]

மிகுமரப் பன்மை தண்டலை யெனல்போன்
  மிகுமுயி ரெலாமுன் னெனுமோர்,
தகுமபி மாந மிறைசமட் டியதாந்
  தனித்தனி மரம்பெயர் கொளல்போற்,
பகுமுட ரேறும் வேறுவே ருகப்
  படுமபி மாநமோர்ந் துரைப்பிற்,
ருெகுமுயிர் வியட்டி யுருவமென் குவர்மேற்
  ருெம்பத விலக்கிய முரைப்பாம். (48)

(இ—ள்) மிகும் - அதிக மாக (இருக்கின்ற), மரப் பன்மை - மரக் கூட்டங்களை, தண்டலை - வநம், எனல் - என்று சொல்லுதல், போல் - போல, மிகும் - அதிகமாயுள்ள, எலாம் உயிர் - எல்லாச் சீவர்களையும், முன் - முதலில், நான் - தன் ஆத்மா (நான்), எனும் - என்று அபிமாநிக்கின்ற, ஓர் - ஒப் பற்ற, தகும் - தகுதி யான, அபிமாநம் , அபிமாநம் ஆனது, இறை - பரமேசுவரனது, சமட்டியது ஆம் - சமஷ்டி (அபிமாநம்) ஆம், தனி தனி- வெவ் வே ருக, மரம் - மரத்தின், பெயர் - நாமங்களை, கொளல் - (சொல்லிக்) கொள்ளுதல், போல் - போல, பகும் - வெவ் வே ருய் (உள்ள), உடல் தோறும் - சரீரங் கள் தோறும், வேறு வேறு ஆகப்படும் - பிருதக் பிருதக் காக உண்டாகின்ற, அபிமாநம் - அபிமாநத்தினை, ஓர்ந்து- விசாரித்து, உரைப்பில் - சொல்லுமிடத்து, தொகும் -

நெருங்கி யிருக்கப்பட்ட, உயிர் - ஜீவர்களின், வியட்டி உருவம் - வியஷ்டி (அபிமாந) ஸ்வரூப மாம், என்குவர் - என்று சொல்லுவார்கள், மேல் - பின்னர், தொம் பத இலக்கியம் - இலக்ஷியார்த்த மாகிய (கூடஸ்தனது பரியாய நாமங்களை), உரைப் பாம் - கூறு வாம் (யாம்). எ—று.

'சமட்டியது' என்பதில், 'அது, பகுதிப் பொருள் விகுதி. (48)

[துவம் பத லக்ஷியார்த்தம் கூறுவான் தொடங்கி, கூடஸ்தனுக்கு துவாதச நாமங் கூறுகின்றார் ]

சீவனென் றிடுமூ வகையதிட் டாநன்
சேதந னந்தரி யாமி,
யாவலி னநுசந் தாத்திருச் சுயஞ்சத்
தார்த்தனே டவச்சிந்ந சீவன்,
தாவரும் பார மார்த்திகன் றுரியன்
சான்றினன் பிரத்திகாந் மாவா,
லேவமி ரெும்ப தத்திலக் கியார்த்த
னென்பகூ டத்தனு மங்கள். (49)

(இ—ள்) ஒன்றிடும் - (விசுவ, சைஜச, பிராஞ்ஞ ரூப மாகப்) பொருந்தியிருக்கின்ற, சீவன் மூ வகை - ஜீவத் திரய, அதிட்டாநன் - அதிஷ்டாநன். சேதநன் - சேதநன், அந்தரியாமி - அந்தர் யாமி, ஆவலின் - விரும்பத் தக்க, அநுசந்தாத்திரு - அறிபவன், சுயம் சத்தார்த்தன் - ஸ்வயம் சப்த அர்த்தன், அவச்சிந்ந சீவன் - அவச்சிந்ந சீவன், தாவு

அரும் - செல்லுதற் கரிய, பாரமார்த்திகன் - பாரமார்த்தி கன், துரியன் - துரியன், சாற்றினன் - சாக்ஷி, பிரத்தியத் ஆத்மா - பிரத்தியகாத்மா, (ஏவம்இல்) எவ்வமில் - குற்றம் அற்ற, துவம்-தவம் (நீ என்னும்), பதத்து - பத. இலக்கிய அர்த்தன் - லக்ஷியார்த்தன் (என்றல் முதலியவற்றை), கூடத்தன் - கூடஸ்த (சேதநத்தி)ன். நாமங்கள் -(பரியாய) நாமங்கள், என்ப - என்று (பெரியோர்) கூறுவார்கள். எ—று, ஆல் - ஒடு - அசை.

விசுவ தைஜச பிராஞ்ஞ ராகிய மூன்று ஜீவர்களுக் கும் அதிஷ்டாநமா யிருத்தலின், ஜீவத் திரய அதிஷ்டாநன் என்றும், ஞாந ஸ்வரூபமா யிருத்தலின், சேதநன் என்றும், ஜீவர்களின் உள்ளே யிருந்து ஆட்டுவித்தலின், அந்தர் யாமி என்றும், அறிபவனு யிருத்தலின், அநுசந்தாத்திரு (அநுசந்தாநம் - அறிதல்) என்றும், தான் என்னுஞ் சொல் லுக்குப் பொருளா யிருத்தலின், ஸ்வயம் சப்த அர்த்தன் என்றும், தேகத்தால் வரையப்பட்டிருத்தலின், அவச்சிந் நம் என்றும், ஜீவித்திருத்தலின் ஜீவன் என்றும், யதார்த்த மாகலின், பரமார்த்தன் என்றும். சாக்கிர சொப்பந சுழுத்தி கடந்த, நான் காவ தாகிய துரியாவஸ் தையில் விளங்குதலின், துரியன் என்றும், சேதநாசேதநப் பிரபஞ்சத்திற்குச் சாக்ஷியா யிருத்தலின். சாக்ஷி என்றும், உள்ளே இருக்கிற ஆத்மா வாய் இருத்தலின், பிரத்திய காத்மா என்றும், துவம் பதத்தின் லக்ஷியப் பொருளா யிருத்தலின், த்வம் பத லக்ஷியார்த்தன் என்றும், கூடஸ் தனுக்கு, அநேக நாமங்கள் ஏற்பட்டிருக்கின்றனே உணர்க. (49)

[தத் பத லக்ஷியார்த்த பிரஹ்மத்தினைக் கூறுவான் றொடங்கி, பிரஹ்மத்தினுக் குள்ள ஷண் ணுமங் கூறுகின் றூர்,]

ஈசனென் றிடுமூ வகையதிட் டாந
    னியம்பரு மொருபரப் பிரமம்,
பாசமில் பரதத் துவம்பர மாந்மாப்
    படியிலா விசுத்தசித் தன்றிப்,
பேசுதற் பதலக் கியார்த்தனென் பனமுற்
    பெறுபரி யாயநா மங்க,
டேசுறு பிரமந் தனக்கென வுரைப்பர்
    திருந்துநூ றெரிதரும் புலவர், (50)

(இ—ள்) ஒன்றிடும் - (விராட்டு, ஹிரண்யகர்ப்பன், அந்தர்யாமி யாகப்) பொருந்தி யிருக்கின்ற. ஈசன் - ஈசுவர, மூ வகை - திரய, அதிட்டாநன் - அதிஷ்டாநன், இயம்பு அரும் - சொலற் கரிய, ஒரு - ஒப் பற்ற, பரப் பிரமம் - பரப் பிரஹ்மம், பாசம் இல் - அஞ்ஞாநம் இன்றிய, பர தத்துவம் - பரதத்வம். பரம ஆந்மா - பரமாத்மா, படி(று) இலா - குற்றம் இன்றிய, விசுத்த சித்து - சுத்த சேதநம், அன்றி — அல்லாமலும், பேசு - சொல்லாநின்ற, தத் பத - தத் பத, லக்கிய அர்த்தன் - லக்ஷியார்த்தன், என்பன முன் - என்றல் முதலியன, தேசு உறு - பிரகாசம் பொருந்திய, பிரமம் தனக்கு - பிரஹ்மத்திற்கு, பெறு, அடையாநின்ற, பரியாய நாமங்கள் - பரியாய நாமங்கள், என - என்று, திருந்து - சிறந்த. நூல் - (அத்யாத்ம) சாஸ்திரங்களை, தெரிதரும் - அறிந்திருக்கின்ற, புலவர் - வித்வான்கள், உரைப்பர் - கூறுவார்கள். எ—று.

'பிரமம் தனக்கு' என்பதில், தன் - அசை.

விராட்டு, ஹிரண்யகர்ப்பன், அந்தர்யாமி ஆகிய ஈசுவரத் திரய அதிஷ்டாந மாய் இருத்தலின், ஈஸ்வரத் திரய அதிர்ஷ்டாநன் என்றும், அரசு முதலிய ஏழு பிரஹ் மங்களுக்கும் மே லான பிரஹ்ம்மா யிருத்தலின், பரப் பிரஹ்மம் என்றும், தத்துவங்கள் யாவற்றுக்கும் மே லான தத்துவமா யிருத்தலின், பர தத்துவ மென்றும், ஆத்மாக் கட் கெல்லாம் மே லான ஆத்மாவா யிருத்தலின், பர மாத்மா என்றும், அநாத்மாக்களால் உண்டாகப்பட்ட அசுத்தங்கள் இன்றிய அறிவு ரூபமா யிருத்தலின், சுத்த சித்து என்றும், அது என்னுஞ் சொல்லின் இலக்கியப் பொருளாய் இருத்தலின், தத் பத இலக்ஷியார்த்தன் என் றும், பிரஹ்மத்திற்கு, அநேக நாமங்கள் சாஸ்திரங்களில் கூறியிருப்பதனை உணர்க. (50)

[மண், நாம ரூப வேற்றுமையினுல், குட முத லாகப் பல விகாரங்களை அடைவது போலவும், தங்கம் கிரியை யினுல், நாநா ஆபரண ஆகாரத்தினை அடைவது போலவும், சுத்த சித்தே. முற் கூறிய சீவ ஈசுவர ஜகத் தாம் என்பது முதலியவற்றை யாராய்தலே உள்ள சாஸ்திரங்கள் திருக்கு விவேகம் என்று சொல்லு மென்று கூறுகின்றூர்.]

வடிவொடு பெயராற் குடமுத லாக
மண்பல வகைப்படு மதுபோற்,
சுடுபசும் பொன்னே செய்கையாற் பலவாஞ்
சுடரிழை யுருவுகொள் வதுபோற்,
படியறு சித்தே முன்சொல்சீ வாதி
பலவுமா மெனன்முத லாக,
விட லரு மறிஞர் நூல்பல திருக்கு
விவேகமென் றியம்புறு மன்றே. (51)

(இ—ள்) மண் - மண் (ஒன்றே), வடிவு பெயரால் - நாம ரூப வேற்றுமையினால், குடம் - கடம்-(கலசம்) முதல் ஆக-முதலியன வாக, பல வகைப்படும்-நாநா வித வேறு பாடுகளை அடையாநிற்கும, அது போல் - அதனைப் போல வும், சுடு - (நெருப்பில் வைத்துக்) காய்ச்சப்பட்ட, பசும் பொன்னே - பசுமை யாகிய ஸ்வர்ணம் ஒன்றே, செய்கை யால் - (கம்மிய) கிருத்தியத்தினால், சுடர் - பிரகாசம் பொருந்திய, பல ஆம் - நாநா வாகிய, இழை - ஆபரண, உருவு - ஸ்வரூபத்தினை, கொள்வது — அடைவது, போல்- போலவும், படி(று)அறு.குற்றம் அற்ற, சித்தே - சித் ரூப சேதநம் ஒன்றே, முன் சொல் - பூர்வம் பிரதிபாதிக்கப் பட்ட, சீவ ஆதி பலவும் ஆம் — ஜீவன், ஈசுவரன், கூடஸ் தன், பிரஹ்மம் என (உபாதி வசத்தால்) நாநா வேறுபாடு களை அடையாநிற்கும், எனல் முதல் ஆக - (திருந்திய வேதாந்த நூல்) என்னும் (22வது செய்யுள்) முதலாக (இது பரியந்தமான 30 சாஸ்திரத்தை செய்யுட் களால் ஆராய்ந்து) கூறியவற்றை, விடல் அரும் - (தனது சொரூபத்தை) விட்டு நீங்காத, அறிஞர் - பெரியோர்கள் (செய்த) பல நூல்-பலசாஸ்திரங்களும், திருக்கு விவேகம்- திருக்கு விவேக சாஸ்திரம், என்று - என, இயம்புறும் - கூறுவார்கள். எ—று. அன்று - ஏ - ஒடு - அசை. (51)

## 2 திருசிய விவேகம்.

[திரிசிய விவேகம் கூறுவான் றொடங்கி, சந்திரனை களங்கம் அநாதி யாகப் பொருந்தி, ஆதாரத்தினையும், தன்னை யும் மறைக்காமல், இரண்டும் விளங்குவது போல, (மாயா சத்தி) "என்னை யான் அறியேன்" என லோக வியவகாரத் தில் ஜீவனை ஆசிரயித்து, அத்தியந்தம், அதனை மறைக்காம

லும், அதனுல் தான் விளங்கப்பட்டு, அக்நி ஸ்தம்பநம் செய்யும் மந்திரம் போல, இருக்கும் எனக் கூறுகின்ருர்.]

அறுசீர்க் கழி நெடி லாசிரிய விருத்தம்.

இந்துவினை யநாதியடைந் ததைமுழுது
மறையாம லிந்து தன்ருல்,
லந்திறனை யொளிர்வித்துக் கொள்களங்க
மெனவெனையா னறியே னென்னும்,
முந்துலக விவகாரந் தனிலுயிரை
யடைந்ததனை மூடா தென்றும்,
மந்தவுயி ராலறியப் பட்டுமனற்
றம்பிக்கு மந்தி ரம்போல், (52)

(இ—ள்) இந்துவினை - சந்திரனை, அநாதி - அநாதியாகவே, அடைந்து - (போய்ப்) பொருந்தி, அதை - அந்தச் சந்திரனை, முழுதும் - சம்பூரண மாக, மறையாமல்- ஆவரணஞ் செய்யாமலும், தனை - தனது (களங்க ஸ்வரூபத்தினை); இந்து தன்ருல் - அந்தச் சந்திரனுல், ஒளிர் வித்துக் கொள் – விளக்கி கொண்டும் (இருக்கின்ற), களங்கம் - களங்கத்தினை, என - போல, யான் - நான், எனை - எனது ஸ்வரூபத்தினை, அறியேன் - உணர்ந்திலேன், என்னும் - என்று, முந்து - அநாதி யாக வருகின்ற, உலக- லோகப் பிரசித்த, விவகாரம் தனில் - விவகாரத்தினுல், உயிரை - ஆத்மாவினை, அடைந்து - (போய்ச்) சேர்ந்து, அதனை - அந்த ஆத்மாவை, மூடாது - (சம்பூரண மாக) ஆவரணஞ் செய்யாமலும், என்றும் - எப் பொழுதும், அந்த உயிரால் - அந்த ஆத்மாவால், அறியப்பட்டும் -

(தனது ஸ்வரூபம்) உணரப்பட்டும், மந்திரம் - மந்திரம் (மணி ஔஷதங்களால்), தம்பிக்கும் - கட்டப்பட்டிருக்கின்ற, அனல் - (அக்நியின்) உஷ்ண சக்தி (அக்நியோடு அபிந்நமும் பிந்நமும் ஆகாமல் இருப்பதனை) போல் - போல, எ—று.

அந்தில் - 'இந்துதன்றால்' என்பதில், தன் - 'விவகாரம் தனில்', என்பதில், தன் - அசைகள்.

"அந்திலாங் கசைநிலை" என, நன்னூல் 437வது (இடையில் 18வது) சூத்திரம் கூறுகிறது. (இச் செய்யுள் குளகம்). (52)

[ஆத்ம ஸ்வரூபம் அல்லாமலும், ஆத்மாவுக்குப் பிந்நம் அல்லாமலும், ஆகாசாதி காரியப் பிரபஞ்சங்கள் வெளிப்படாமல், தன்னகத்தே அடக்கிக் கொண்டு, அகடித கடநா சாமர்த்தியம் உடைய தாய், ஆகாசாதி பதார்த்தங்களை உண்டுபண்ணுவதற்குக் காரண மாய் உள்ளது, திரிசிய மாகிய மாயா சத்தி என்று கூறுகின்றார்.]

விளங்குறுமாந் மாவுருவு மல்லாம
   லாந்மாவின் வேறாய்த் தோன்றா,
துளங்கொள்விய தாதிகா ரியங்கடமைத்
   தோன்றாம லொடுக்கி நின்றந்,
துளங்கலக டிதகடனை யெனுஞ்சமர்த்தை
   யாகியுமே தோன்றா நின்ற,
வளங்கடரு காரணமா யதுவாகுந்
   திருசியமா மாயா சத்தி. (53)

(இ—ள்) விளங்குறும் - விளங்காநின்ற, ஆந்மா - ஆத்மாவின், உருவு அல்லாமல் உம் - ஸ்வரூபம் ஆகாம

லும், ஆத்மாவின் - ஆத்மாவின், வேறு ஆய்- அந்நிய மாய் (பதார்த்த ரூப மாக), தோன்றாது - விளங்காமலும், உளம் கொள் - மநத்தின்கண் (அறிந்து) கொள்ளும்படி யான, வியத் ஆதி காரியங்கள் தமை - ஆகாசாதி காரியங்களை, தோன்றாமல் - வெளிப்படுத்தாமல், ஒடுக்கி - (தன் அகத்தே) அடக்கிக்கொண்டு, நின்றும்-(அவ்யக்த ரூப மாக) இருந்தும், துளங்கல் - விளங்காநின்ற, அகடித - கூடா ததை, கடனை - கூட்டுவிக்கின்றது, எனும் - ஆகிய, சமர்த்தை ஆகியும் - சாமாத்தியம் உடைய தாகியும், தோன்றாநின்ற-(வெளிப்படை யாக) விளங்குகின்ற, வளங் கள் - (ஆகாசாதி) பதார்த்தங்களை, தரு - உண்டாக்கு தற்கு, காரணம் ஆயது - ஏது வாயும் உள்ளது, திருசியம் ஆம் -திருசிய மாகிய, மாயா சத்தி - மாயா சத்தி, ஆகும் - ஆம். எ—று.

ஏ—'காரியங்கள் தமை' என்பதில், தம் - அசை. 'வளம்' என்பது, பதார்த்தங்கட் காம். (53)

[மாயையின் லக்ஷணம் கூறுவான் றொடங்கி, அசத்து ஜடம் துக்கம் அநித்தம் கண்டம் என பஞ்ச லக்ஷ ணம் கூறி, ஐந்தும் இருக்கும் இடத்தை திருஷ்டாந்த பூர்வகம் கூறுகின்றார்.]

அனையதொரு மாயையிலக் கணமசத்துச்
சடந்துக்க மநித்தங் கண்ட,
மெனுமிவையுண் முயற்கோடு முதலசத்துச்
சடவுருக்கல் லெழுவாய் புத்தி,

தனையடையுங் கோரமொடு மூடவிருத்
திகடுக்கந் தபுமெய் யாதி,
முனமுரைசெய் யநித்தங்கண் டிதங்கால
பரிச்சேத முதல வாகும். (54)

(இ—ள்) அனையது - திருஷ்ய மாகிய, ஒரு - ஒப்பற்ற, மாயை - மாயா சத்தியின், இலக்கணம் - இலக்ஷணமானது, அசத்து - அசத்தும். சட - சடமும், துக்கம் - துக்கமும் அநித்தம் - அநித்தமும். கண்டம்-கண்டிதமும். எனும் - என்று (ஐந்து பிரகார மாகச்) சொல்லப்படும், இவையுள் —இந்த ஐந்தனுள். அசத்து - அசத்து லக்ஷணம், முயல் கோடு - முயற் கொம்பு, முதல் - முதலிய (பதார்த்தங்களில் இருக்கின்றது), சட உரு-சட லக்ஷண மானது, கல் - பாஷாணம், எழுவாய் - முதலிய (பதார்த்தங்ளில் இருக்கின்றது), துக்கம் - துக்க லக்ஷண மானது, புத்தி தனை — அந்தக்கரணத்தில், அடையும் - பொருந்தியிருக்கா நின்ற, கோரம் மூட விருத்திகள் - கோர மூட விருத்திகளில் (இருக்கின்றது), முனம் — பூர்வம், உரை செய் - சொல்லப்பட்ட, அநித்தம்-அநித்ய லக்ஷண மானது, தபும்-(அக்நியில் வைத்துக் கொளுத்தப் பட்டு நாச மாகின்ற); மெய் ஆதி - சரீர முதலியவற்றில் (இருக்கின்றது), கண்டிதம் - கண்டித லக்ஷண மானது. கால பரிச்சேதம்-கால பரிச்சேதம் (உடைய கால பரிச்சேத்திய மாகிய பதார்த்தம்), முதல - வஸ்து பரிச்சேத்திய. தேச பரிச்சேத்திய, பதார்த்தங்களில், ஆகும் - இருக்கின்ற தாம் எ—று.

ஒடு - அசை. கண்டிதம் என்பது, கண்டம் என கண்டிக்கப்படும் பதார்த்தத்தின் பேரில் நின்றது கால

பரிச்சேதம் என்பது, கால பரிச்சேத்தியத்தின் மேல் நின்றது.

'அனையது' என்பதில், அது பகுதிப் பொருள் விகுதி, 'புத்திதனை' என்பதில், தன் அசை. (54)

[மாயை, சத்து அசத்து சதசத்து, சாவயவம் நிரவயவம் சாவயவ நிரவயவம், பிந்நம் அபிந்நம் பிந்நாபிந்நம் என்னும் நவ வித லக்ஷணமும், நீங்கிய அநிர்வசநீயத் தன்மையினை அடையும் எனவும், சுருதி சம்பந்த ஞாநம், யுக்தி சம்பந்த ஞாநம், உலக சம்பந்த ஞாநம், என்னும் மூ வித ஞாநத்தினுல் பொருந்தி யிருக்கும் எனவும் கூறுகின்றார்.]

பிந்நமொட சத்துச்சா வயவமுமெதிர்
மறையுமவை பிரிந்து தம்மின்,
மன்னியவு மொழிந்தநிர்வாச் சியமாகு
நவவிதமம் மாயை யெய்து,
முன்னலருஞ் சுருதிசம் பந்தமுத்தி,
சம்பந்த முலக பந்த,
மென்னவரு ஞாநங்கண் முறையேயம்
மாயைபடு மியல்பு கூறில், (55)

(இ—ள்) அம் மாயை - அந்த மாயா சத்தி யானது, பிந்நம் - பிந்நமும், அசத்து - அசத்தும் சாவயவம் - சாவயவமும், எதிர் மறையும் - (அம் மூன்றற்கும்) விரோதியான (அபிந்நமும், சத்தும், நிரவயவமும்), அவை - அவ் ஆறும், பிரிந்து - (வெவ் வேருகப்) பிரிந்து, தம்மில் - தத்தம் இன மானவற்றில், மன்னியவும் - பொருந்தி யிருக்கின்ற (பிந்நாபிந்நமும், சதசத்தும், சாவயவ நிரவயவமும்,) ஆகும் - ஆகின்ற, நவ விதம் - ஒன்பது விதமும், ஒழிந்து

நீங்கி (இருக்கின்ற), அநிர்வாச்சியம் - அநிர்வசநீயத் தன்மையினை, எய்தும் - அடையாநிற்கும், அம் மாயை - அந்த மாயா சத்தியானது, உன்னல் - கருதுதற்கு, அரும்- அருமை யான, சுருதி சம்பந்தம் - சுருதி சம்பந்தமும், உத்தி சம்பந்தம் - யுக்தி சம்பந்தமும், உலக பந்தம் - லோக சம்பந்தமும், என்ன - என்று, வரும் - உண்டாகின்ற, ஞானங்கள் - ஞானங்களை, முறை — கிரமமாக, படும் - பொருந்தும், இயல்பு - (அந்த மூன்று ஞானங்களின்) தன்மையினை, கூறில் - சொல்லுமிடத்து. எ—று. ஏ - ஒடு - அசை. "உலக சம்பந்தம்" என்பது, "உலக பந்தம்" எனச், "சம்" என்னுஞ் சொல் குறைந்து நின்றது. (இச் செய்யுள் குளகம்)

## பஞ்ச தசி 6 சித்திர தீபம்.

61 "சுருதி யுத்தியோ டுலகுடைத்
தொந்தஞா னந்தான்,
மருவு துச்சமோ டநிர்வச
நீயம்வாத் தவமென்,
றொருமுப் பேதமா மாயையென்
றுணர்வுறற் பாற்றும்,
வருமி தற்குண்மை யின்மையுங்
காட்டுறு மாயை".

எனக் கூறல் கொண்டுணர்க. (55)

[மூ வித ஞானத்திினுக்கும், ஆகாயத் தாமரை, சுக்தி ரஜத, ஜீவந் போல எனத், துச்சம், அநிர்வசநீயம், நித்தியம் என்னும் மூ வித ஞானத்தினை பொருந்தியிருக்கும் என்றும், மாயை யானது, தமம், மாயை, மோகம், அவித்தை,

மித்தியா ஸ்வரூபி என்னும் பஞ்ச நாமாக்களை அடையும் என்றும், கூறுகின்றார்.]

விண்ணின்மல ரெனத்துச்ச மேயெனவு
மிப்பிவரு வெள்ளி போல,
வெண்ணுமநிர் வாச்சியமா மெனவுமுயிர்
போனித்த மெனவு நிற்கு,
முண்ணிலவு தமமாயை மோகமுட
னவித்தைபொய் யுருவி யென்றே,
நண்ணுமிவை மாயாபஞ் சகமாகு
மெனவறிஞர் நவில்வ ரன்றே (56)

(இ—ள்) விண்ணில் மலர் - ஆகாச தாமரையை, என - போல, துச்சம் - (சுருதி சம்பந்த ஞானத்தினால் அம் மாயா சத்தி) துச்ச மாம், எனவும் - என்றும், இப்பி - கிளிஞ்சிலினிடத்தில், வரும் - தோற்றுகின்ற, வெள்ளி - இரசதத்தினை, போல - போல, எண்ணும் - கருதாநின்ற, அநிர்வாச்சியம் ஆம் - (யுக்தி சம்பந்த ஞானத்தினால்) அநிர் வாச்சிய மாம், எனவும் - என்றும், உயிர் - ஆத்மாவினை. போல் - போல, நித்தம் — (லோக சம்பந்த ஞானத்தினால்) நித்திய மாம், எனவும் - என்றும் நிற்கும் - இருக்கும், மாயா - (அந்த) மாயா சத்தி யானது, உள் நிலவு - அந்தக் கரணத்தில் விளங்காநின்ற, தமம் - தமமும், மாயை - மாயையும், மோகம் - மோகமும், அவித்தை - அவித்தை யும், பொய் உருவி - பொய்யுருவி (மித்யா ஸ்வரூபி)யும், என - என்று, நண்ணும் - பொருந்தாநின்ற. இவை பஞ்சகம் - இப் பெயர் ஐந்தையும். ஆகும் - அடையாநிற்கும், என்று - என, அறிஞர் - பெரியோர், நவில்வர் - கூறுவார்கள். எ—று. உடன் - ஏ - ஏ அன்று - ஏ - அசை. (56)

[மாயையின் ஐந்து பெயர்ப் பொருளை விரித்துக் கூறி, மாயைக்கு, சங்கோசம், விகாசம் என இரு தருமம் உள எனவும், கூறுகின்றார்.]

சீவசே தநமறைத்துத் தமமயலா
 கியவ்வுலகத் திறத்திற் கெல்லா,
மேவுகா ரணமாகி மாயைவிப
 ரீதஞாநம் விளைத்து மோக,
மோவவுணர் வழிந்தவித்தை சத்தின்வே
 றுகிப்பொய் யுருவி யாகும்,
வீவிலா மாயையதற் கிருதருமஞ்
 சங்கோச விகாச மென்றும். (57)

(இ—ள்) சீவ சேதநம் - ஜீவ சைதந்யத்தை, மறைத்து - மறைக்கின்றபடியால், தமம்-தம மாம், அயல் ஆகி - (பிரஹ்மத்திலும்) அந்நிய ரூப மாகி, அவ் உலகத் திறத்திற்கு எல்லாம் - (விளங்காநின்ற) அந்தச் சகல பிர பஞ்சத்திற்கும், மேவு - பொருந்தாநின்ற, கர்ரணம் ஆகி - (உபாதாந) காரணமா யிருத்தலால், மாயை-மாயை யாம், விபரித ஞாநம் - விபரீத மான ஞாநத்தினை, விளைத்து - உண்டாக்குதலால், மோகம்- மோக மாம், ஓவா உணர்வு- நீங்காத ஞாநத்தினால், அழிந்து - கெட்டுப் போகின்றமை யின், அவித்தை - அவித்தை யாம், சத்தின் - சத் ரூபப் (பிரஹ்ம)த்தின், வேறு ஆகி - விலக்ஷணமா யிருத்தலின், பொய் உருவி ஆகும் - மித்தையா ஸ்வரூபி யாம், வீவு இலா - (பிரஹ்ம ஞாநத்தா லன்றி) நாச மாகாத, மாயை யதற்கு - (அந்தத் திருசிய மாகிய) மாயா சத்திக்கு, சங் கோசம் - குவிதல், விகாசம் - விரிதல், என்று - என, இரு

தருமம் - இரண்டு தருமங்கள், ஆம் - இருக்கின்றன. எ—று. 'மாயை யதற்கு' என்பதில், அது பகுதிப் பொருள் விகுதி. 'ஓவா' என்பது, ஓவ - எனக் குறைந்தது. மயல் ஆகிய உலகத்திறத்திற்கு எனக் கொண்டு. மயக்க ரூப மான பிரபஞ்சத்திற்கு'' எனக் கூறினும் அமையும்.

''விபரீத ஞாநம்'' என்றது. அநாத்மா வான தேகாதி களில், ஆத்மத்துவ புத்தியும், அரம்மிய வஸ்துக்களில், ரம்மியத்துவ புத்தியும் ஆம். (57)

[விகாச சங்கோச தருமங்களை (பட) வஸ்திர திருட் டாந்தத்தில் அறிவித்து, மாயைக்கு, சுதந்திரம், அசுதந்தரம் என இரு குணங்கள் உள எனவும் கூறுகின்றார்.]

விரிந்தபட மோவியங்கள் பலதிகழ்த்திக்
குவித்தொடுக்கும் விதமே போல,
வரந்தைதரு மாயையுந்தன் விகாசதரு
மத்திற லகிலங் காட்டிப்,
பரந்தவைகள் சங்கோச தருமத்தா
லடக்குமெனப் பகர்வர் மாயைக்,
கிருந்தகுண மிரண்டுளவில் சுதந்தரமுஞ்
சுதந்தரமு மென்ன வன்றே. (58)

(இ—ள்) அரந்தை - துக்கத்தை, தரும் - கொடுக் கின்ற, மாயையும் - (அந்த) மாயா சத்தியும், விரிந்த - விரிக்கப்பட்ட, படம் - வஸ்திர மானது, பல ஓவியங்கள் - நாநா சித்திரங்களை, திகழ்த்தி - (பார்க்கும் ஜீவர்களுக்கு) அறிவித்து, குவித்து - சுருட்டிக் கொண்டு, ஒடுக்கும் - (நாநா சித்திரங்களை) அடக்கிக் கொள்ளும், விதம் - தன்மை, போல - போல், தன் - தனது, விகாச

தருமத்தினுல், விரிக்கின்ற தருமத்தினுல், அகிலம் - பிரபஞ்சத்தை, காட்டி - (யாவருக்கும்) அறிவித்து, சங்கோச தருமத்தால் - குவித்துக் கொள்ளும் தருமத்தினுல், பரந்த - விரிந்திருக்கின்ற, அவைகள் - அந்தப் பிரபஞ்ச பதார்த்தங்களை, அடக்கும் - ஒடுக்கிக் கொள்ளும், என - என்று, பகர்வர் - (ஞானிகள்) கூறுவார்கள், மாயைக்கு - (அந்த) மாயா சத்திக்கு, இல் சுதந்தரமும் - அசுதந்தரத் தன்மையும், சுதந்தரமும் - சுதந்தரத் தன்மையும், என்ன - என்று, இருந்த - இருக்கப்பட்ட, குணம் - குணங்கள், இரண்டு - இரண்டு, உள - இருக்கின்றன. எ—று. ஏ - அன்று - ஏ - அசை.

பஞ்சதசி 6 சித்திர தீபம்.

62 விரிவிற்குவி வாலுமோ வியப்படம் போலுந்,
தெரிபடாமையாற் சித்தைவிட் டில்சுதந் தரையாம்,
அரிய சங்கமி லான்றனை யசியமாக் குதலின்,
வரிசை சார்சுதந் தரையுமவ் வண்ணமா மாயை.

63 மாயை யீதுதான் கூடத்த வசங்கவாந் மாவை-
மேய சாட்டிய மாக்குஞ்சீ வேசரை வெறுஞ்சிற்,
சாயை யாகவும் வகுக்குங்கூ டத்தனைச் சாரா
தோயு மிச்சக முதலெலா முஞற்றுறு மன்றே.

எனக் கூறுதல் கொண்டு உணர்க. (58)

[அசுதந்தரத் தன்மை சுதந்தரத் தன்மைகளை விளக்கிக் கூறி, மாயை மித்தை என்று கூறுவது, ஆகாய புஷ்பம் போல, அத்தியந்தம் துச்சம் எனக் கூறுவது அன்று எனக் கூறுகின்றூர்.]

பொய்யாகிச் சத்துருவப் பொருளின்வே
றுகியொரு பொருளாய்த் தோற்றல்.
செய்யாமை யாலுளதில் சுதந்தரஞ்சான்
றுயவொரு சேதநன்பா
லுய்யாத சீவாதி யாக்குதலாற்
சுதந்தரமு முளது மாயை,
மெய்யான தலதென்றல் விசும்பலர்போ
லில்லையென விளம்ப லன்றே. (59)

(இ—ள்) பொய் ஆகி-மித்தை யாய், சத்து உருவப் பொருளின் - சத் ரூபமா யிருக்கப்பட்ட பிரஹ்மத்திற்கு, வேறு ஆகி - அந்நிய மாய், ஒரு பொருள் ஆய் - ஒரு வஸ்து வாக, தோற்றல் செய்யாமையால் - பிரதீதியாகாமையின், இல் சுதந்தரம் - அசுதந்தரத் தன்மை, உளது - (மாயைக்கு) இருக்கின்றது, சான்று ஆய - (சூரியன் போன்று உலக) சாக்ஷி யாய் இருக்கப்பட்ட, ஒரு - ஒப்பற்ற, சேதநன்பால் - பிரஹ்மத்தி னிடத்தில், உய்யாத - ஈடேற முடியாத, சீவ ஆதி — ஜீவேசுவரர் முதலிய வற்றை, ஆக்குதலால் - உண்டுபண்ணுதலால், சுதந்தரமும், சுதந்தரத் தன்மையும், உளது - (மாயைக்கு) இருக்கின்றது, [அவதாரிகை] [மாயை மித்தை என்பதன் பாரிபாஷிகப் பொருளை யுணர்த்துகின்றார்] மாயை - மாயையை, மெய் ஆனது - சத்தியம், அலது - இல்லை, என்றல்—எனக் கூறுவது, விசும்பு அலர்-ஆகாய புஷ்பம், போல் - போல, இல்லை - (அத்தியந்தம்) துச்ச மாம், என - என்று, விளம்பல் - கூறுவது, அன்று-அல்ல வாம். எ—று. ஏ - அசை. 'சுதந்திரமும்' என்ற உம்மை, இறந்தது தழீஇய தாகும், அசுதந்தரத் தன்மையைத் தழுவுதலால். (59)

[ஸ்திர விஷய ஞாந மில்லாத ஸ்வப்ந அவஸ்தையில், தோன்றும் யானை போன்று, பிரதீதியாகி விசாரம் உண்டாயின் மித்தையாம், எனவும், மாயைக்கு, சுத்த சத்துவ வடிவ மாயை எனவும், மலிந சத்துவ வடிவ அவித்தை எனவும், தமப் பிரதாந ரூப பிரகிருதி எனவும், மூன்று விருத்தி உண் டெனவும், கூறுகின்றார்.]

புலமில்கந விடைக்கரிபோற் றோன்றிவிசா
ரந்தோன்றப் பொன்றும் பொய்யா,
நிலவுதல்செய் சுத்தசத் துவவடிவ
மாயையொடு நிகழ்த்து கின்ற,
மலிநசத் துவவடிவ வவித்தைதமப்
பிரதாந வடிவ மாகு,
நல்மில்பிர கிருதியென விருத்திமூன்
றுடைத்துமுன நவின்ற மாயை. (60)

(இ—ள்) புலம் இல் - (திர) விஷய (ஞாந)ம் இல்லாத, கநவிடை - சொப்பநாவஸ்தையில் (தோற்றுகின்ற), கரி - யானையினை, போல் போல தோன்றி - (அவிசார தசையில் மாயையும், மாயா காரியங்களும்) உண்டாகி, விசாரம் - விசார மானது, தோன்ற - உண்டானவுடன், பொய்யா - மித்தை யாக, பொன்றும் - போவ தாம், நிலவுதல் செய் - விளங்காநின்ற, முனம் - பூர்வம், நவின்ற- கூறிய, மாயை - மாயையானது, சுத்த சத்துவ வடிவ மாயை - சுத்த சத்வ ரூப மாயையும், நிகழ்த்து கின்ற - சொல்லாநின்ற, மலிந சத்துவ வடிவ அவித்தை - மலிந சத்வ ரூப அவித்தையும், நலம் இல் - நன்மை யில்லாத,

பிரகிருதி தமப் பிரதான வடிவம் பிரகிருதி ஆகும் - தமப் பிரதான ரூப பிரகிருதியும், என - என்று, மூன்று - மூன்று, விருத்தி - விருத்தியை, உடைத்து - உடையதா(ய் இருக்) கின்றது, எ—று. ஒடு - அசை. "விருத்தி" என்றது, பரிணாமம்.

இராசத தாமதங்களால் அழுத்தப்படாத சத்துவம், சுத்த சத்துவ வடிவ மாயை. இராசத தாமதங்களால் அழுத்தப்பட்ட சத்துவம், மலிந சத்துவ வடிவ அவித்தை ஆகும். (60)

[சத் ரூபப் பிரஹ்மத்தில், சுழுத்தி காலத்திலும், பிரளய காலத்திலும், மாயை அத்தியாச ஐக்கிய மாய் இருந்து, ஜாக்கிர அவஸ்தையிலும் சிருஷ்டி காலத்திலும், பேத்தினை அடையும், அதில் பிரஹ்ம சைதந்யம் பிரதிபிக்கும், அந்தப் பிரதிபிம்ப சைதந்யமே ஈசுவரன் என்றும், பதி என்றும், கூறப்படும் என்றும், கூறுகின்றார்.

மாயைவரு சுழுத்திலயங் களினத்தி
யாசயிக்க மாயிற் றுண்மை,
யாயபிர மத்தினாடு வொடுபடைப்பி
னிதுபேத வவத்தை யெய்து,
மேயவதிற் பிரமசை தந்யம்விம்
பித்துவே விளங்கு ஞானத்,
யதூசைதந் நியவீச னற்பதியென்
றிடநிற்குந் துணிவு தன்னால். (61)

(இ—ள்) மாயை - (முன்னர்க் கூறிய) மாயை யானது, வரு - (கரும க்ஷயத்தில்) வருகின்ற, சுழுத்தி - சுழுத்தி (காலத்திலும்), லயங்களில் - பிரளய காலத்திலும், உண்மை ஆய-சத்தியமா யிருக்கின்ற, பிரமத்தில்-பிரஹ்மத்

தில், அத்தியாச - அத் தியாசத்தோடு கூடவே, அயிக்கம் ஆயிற்று - ஏக மாய் இருந்தது, நனவு - ஜாக்ரத்திலும், படைப்பின் - சிருஷ்டி காலத்திலும், இது - இந்த மாயை, பேத அவத்தை - வேறுபடுந் தன்மையை. எய்தும் - அடையாநிற்கும், மேய - தகுதி யான, அதில் - (பேத அவஸ்தையை அடைந்த) மாயையில், பிரம சைதந்நியம் - பிரஹ்ம சேதந மானது, விம்பித்து - (பிரதி) பிம்பித்து, இதுவே - இந்த மாயாப் பிரதிபிம்ப சேதநமே, விளங்கும் - விளங்காநின்ற, தூய - பரிசுத்த மான, ஞாந சைதந்நிய ஈசன் - சர்வக்ஞத்வாதி கல்யாண குணங்களை உடைய சேதந ஞகிய ஈசுவரன் (என்றும்), நல் - உயர்ந்த, பதி - பதி (பதார்த்தன்), என்றிட - என்றும் சொல்லும் படி யாக, துணிவு தன்ஞல் - நிச்சய மாக, நிற்கும் - இருக்கும்; எ—று. 'துணிவு தன்ஞல்' என்பதில், தன் - ஒடு - அசை. (61)

[மாயை, அந்த ஈசுவரனுக்கு உபாதி யாக இருந்து, மோகம், செய்யாதவ ளாகி இருப்பாள் எனவும், அவித்தை, உயர்வு தாழ் வான ஜீவர்கட்கு, உபாதி யாக இருந்து, மோகிக்கச் செய்யும் எனவும், தமப் பிரதாநப் பிரகிருதி ஆனது, பாசம் எனப் பெய ருடைத் தாய் திரி குண சாம் யாவஸ்தையினை அடைந்து, (மகத் தத்துவம் எனும் பெய ருடைய தாக இருக்கும் எனவும்,) கூறுகின்ருர் ]

அப்பரற் குபாதி யாகி யமோககா ரணியா மாயை,
பொய்ப்புறு மவித்தை யெண்ணிற் போத்திருப் பசுவென் ருேது,
மொப்பருஞ் சீவர்க் கெல்லா முபாதியாய் மோகஞ் செய்யு,
மெய்ப்புறு பகுதி பாச மெனக்குணச் சமமாய் நின்று. (62)

(இ—ள்) அப் பரற்கு - (பிரஹ்மத்தினின்றும் பிந்நாவஸ்தையை யடைந்த மாயையால் பிரதிபிம்பித்திருக்கின்ற) ஈசுவரனுக்கு, மாயை - (சுத்த சத்துவ குண) மாயை யானது, உபாதி ஆகி - உபாதியாக இருந்து), அமோக காரணி ஆம் - மோகஞ் செய்யாது இருப்பவள் ஆம், பொய்ப்பு உறும் - மித்தை யான, அவித்தை – (மலிந சத்துவ குண) அவித்தை யானது, போத்திரு - போத்தா (என்றும்), பசு - பசு, என்று - என்றும், ஓதும் - சொல்லாநின்ற, ஒப்பு அரும்- (வாசனையின் ஏற்றத் தாழ்வால்) சமாநம் இன்றிய, எண் இல் - அளவு இல்லாத, ஜீவர்க்கு எல்லாம் - ஜீவர்கட்கு எல்லாம், உபாதி ஆய் - உபாதி யாக (இருந்து), மோகஞ் செய்யும் –(தேக தார புத்திர தந ஆதிகளில், யான், எனது, என்று) மயக்கத்தை உண்டாக்காநிற்கும், எய்ப்பு உறு - மித்தை யான, பகுதி - (தமப் பிரதாந ரூபப்) பிரகிருதி யானது, பாசம் - பாசம், என - என்று சொல்லப்பட்டு, குணச் சமம் ஆய் நின்று - (திரி) குண சாமியாவஸ்தை யினைப் பொருந்தி யிருந்து. எ—று. (இச் செய்யுள் குளகம்) எய்ப்பு - மெலிதல், ஈண்டு மித்தை என்னும் பொருளிடத்து வந்தது.

"அமோக காரணி ஆம்" என்றது, தன்னிடத்து ஆவரணம் இன்மையின், தன்னிலும், தன் குண மான சர்வஞ்த்வாதிகளிலும், தாதாத்மியம் உண்டு பண்ணுமையின் என்க. (62)

அவித்தையின் விம்பித் துள்ள வாருயிர் நுகர்ச்சிக் காகத்,
துவக்குறு காரியங்க டோற்றிட வெதிர்கு றித்த,
வுவப்புறு மீச னீக்க மாத்திரத் துற்ற லர்ந்து,
பவப்படு கால மாகி யதுகொடு பரிணு மித்து. (63)

(இ—ள்) அவித்தையின் - (மலிந சத்துவ குண) அவித்தையில், விம்பித்து உள்ள - பிரதிபிம்பித்து இருக்கின்ற, ஆர் உயிர் - நிறைந்த ஜீவர்களின், நுகர்ச்சிக்கு ஆக - போகத்தின் பொருட்டு, துவக்கு உறு - சம்பந்தித்து வராநின்ற, காரியங்கள் - (சகல) காரியங்களையும், தோற்றிட - உண்டாக்கும் பொருட்டு, எதிர் குறித்த - சந்நதியில் உள்ள, உவப்பு உறும் - சந்தோஷத்தோடு கூடிய, ஈசன் - பரமேசுவரனது, நோக்கம் - ஈக்ஷணம், மாத்திரத்து - மாத்திரத்தை, உற்று -பொருந்தி, அலர்ந்து- (சந்நிதான ஈசுவர ஈக்ஷண மாத்திரத்தைப் பொருந்திய காரணத்தினால்) வியாகிருதம் ஆய், பவப்படு - (பிராணிகள் ஜநிக்கும்படி யான கருமங்கள்) பரிபவப்படுகின்ற, காலம் ஆகி - கால (தத்துவ)ம் ஆகி, அது கொடு அந்த(க் கர்ம) பரிபவ காலத்தால், பரிணமித்து - வேற்றுத் தன்மையை அடைந்து, (காரியாபிமுகாவஸ்தையை அடைந்து) எ—று. (இச் செய்யுள் குளகம்). (63)

[அந்த மகத் தத்துவம் ஆனது, விதை உச்சூநாவஸ்தையினை அடைவது போல், பிரகிருதியும் ஆகாமல், அகங்காரமும் ஆகாமல், மித்தியா ஞாநத்தினை பொருந்தி, நிருவிகற்ப ஸ்வரூப மத்யகத அவஸ்தை யுடையது என, அதன் ஸ்வரூபம் கூறுகின்றார்.]

இருமக தத்து வந்தா னெனநிற்கு மதுதா னீர்பெய்.
தரும்விதை முளையா மன்முன் போலிரா தமரர்தல்
போலக்,
கருவெனும் பகுதி போடாங் காரமு மாகா மற்பொய்,
யுரமுறு நிருவி கற்ப வுருநடு வவத்தை யாகும். (64)

(இ—ள்) இரும் - பெருமை பொருந்திய. மகத த்து வம் - மகத் தத்துவம், என - என்னும் பெயரோடு, நிற் கும் - கூடி இருக்கும், அது - அந்த மகத் தத்வ மானது, நீர் - ஜலத்தினை, பெய்து - விட்டு (வீறிய). அரும்-சூக்ஷ்ம மான, விதை - வித் தானது, முளையாமல் - அங்குரியாம லும், முன் - முன் னுள்ள (பீஜம்). போல் - போல, இராது - இல்லாமலும், அமர்தல் - (பீஜா வஸ்தைக்கும், அங்குராவஸ்தைக்கும், இடையில், உள்ள, உத்சூநா வஸ்தை மத்யகதாவஸ்தையைப்) பொருந்தி இருத்தல், போல - போல, கருவு - பீஜம், எனும் - என்று சொல்லப் பட்ட, பகுதி - (தமப் பிரதாந) பிரகிருதியும் (ஆகாமல், ஆங்காரமும் - (அங்குர அவஸ்தா ரூப, காரிய சவிகற்ப) அகங்காரமும், ஆகாமல் — ஆகாமல், பொய் - மித்தையா, உரம் - ஞாநத்தினை, உறு - பொருந்தியிருக்கின்ற, நிருவி கற்ப உரு - நிருவிகல்ப ஸ்வரூபம் ஆகிய நடு அவத்தை — மத்தியகத அவஸ்தை, ஆகும் - உடையது ஆம். எ—று

ஒடு - தான் - தான் - அசை. பெரிய தத்வமா யிருத் தலின், 'மகத் தத்வம்' என்று சொல்லப்படும். (64)

[மகத் தத்துவம் ஆனது. குண பேதத்தினைப் பொருந்தி, மித்தியா ஞாநத்தினை அடைந்து, தன்னி, (மகத் தத்துவத்தி)னின்றும், சவிகற்ப மாக வருகின்ற பிரதமாத் தியாசம் எனக் கூறும். மூலாகங்காரம். உண்டாகின்றது. என்றும், மூல அகங்காரம், சத்துவ குணம், ரஜோ குணம், தமோ குணம் என்னும் முக் குணத்தோடு கூடியது என் றும் கூறுகின்றார்.]

கொன்மக தத்து வந்தான் குணபேத முறுப்பொய் ஞாந,
மன்சவி கற்ப மாக வருமுத லத்தி யாச,

மென்முத லாங்கா ரந்தோன் றிடுங்குண சத்து வந்தான்,
பின்வரு மிராச தஞ்சொற் பெருந்தமோ குணமென்
றாகும். (65)

(இ—ள்) மகதத்துவம் - (மத்திய கதாவஸ்தா ரூப மான) மகத் தத்துவத்தினின்றும், குண பேதம்-(திரி குண சாமியாவஸ்தை ஆகிய அவ்யாகிருத காரண ரூபத்தை விட்டு, முக் குண வேறுபா டாகிய வியாகிருத) குண பேதத்தினை, உறு - பொருந்தி, பொய் ஞானம் மன் - (அவ் வாறு குண பேதத்தினை அடைந்த மகத் தத்வத்தினின் றும்) மித்தையா ஞானத்தினை அடைந்து, சவிகற்பம் ஆக - சவிகல்ப ஸ்வரூப மாக, வரும் - உண்டாகின்ற, முதல் அத்தியாசம் - பிரதம அத்தியாசம், என் - என்று சொல் லப்பட்ட, முதல் ஆங்காரம் - மூலாகங்காரம், தோன்றி டும் - உண்டாகாநிற்கும், குண - (அந்த மூலாகங்காரத் தின்) குணங்கள் ஆவன, சத்துவம் - சத்துவ (குணமு)ம், பின - (அதன்)பின், வரும் - வருகின்ற, இராசதம் - இர ஜோ குணமும், சொல் - கூறுகின்ற, பெரும் - பெரிய, தமோ குணம் - தமோ குணமும், என்று - என, ஆகும் - (மூன்று பிரகார மாகச்) சொல்லப்படும். எ—று. கொல் - தான் - தான் - அசை. (65)

[சத்துவாதி குணங்களின் ஸ்வரூபங்கள், பிரகாசம் பிரவிருத்தி மோகம் என்றும், அவற்றின் பெயர், வைகரி அகங்காரம் என்றும், தைஜச அகங்காரம் என்றும், பூதாதி அங்காரம் என்றும், கூறுவர் என்றும், முக் குணங் களினின்றும் உண்டாவனவற்றைக் கூறுவாம், என்றும், கூறுகின்றார்.]

உரைப்பருஞ் சத்து வாதி யுருவங்கள் பிரகா சம்பின்,
புரைப்பிர விருத்தி மோக மென்குவர் புகல்கு ணங்க,
ணிரைப்பெயர் தான்வை காரி நிகழுந்தை சதம்பூ தாதி,
விரிப்பருங் குணங்கண் மூன் றுந் தருவமேல் விளம்ப
லுற்றும். (66)

(இ—ள்) உரைப்ப - சொல்லுதற்கு, அரும் - அரிய, சத்துவ ஆதி-சத்துவ குண முதலியவற்றின், உருவங்கள்- ஸ்வரூபங்கள், பிரகாசம் - பிரகாசம் (என்றும்), பின் (அதன்) பின், புரை - குற்றம் (பொருந்திய), பிரவிருத்தி - பிரவிருத்தி (என்றும்), மோகம் - மோகம், என்குவர் - என்றும் கூறுவார்கள், புகல் - சொல்லாநின்ற, குணங்கள் - (அம் மூன்று) குணங்களுக்கும், வைகாரி - வைகாரி (அகங்காரம் என்றும்), நிகழும்-விளங்காநின்ற, தைசதம்- தைஜசம் (அகங்காரம் என்றும்). பூத ஆதி - பூதாதி (அகங்காரம் என்றும்), நிரை-கிரம மாக, பெயர் - நாமங்க ளாம், விரிப்பு அரும் - சொலற் கரிய, மூன்று குணங்களும் - (சத்துவ ரஜஸ் தமஸ் என்னும்) மூன்று குணங்களும், தருவ - உண்டாக்குவனவற்றை, மேல் — (இனி) மேல், விளம்பல் உற்றும் - கூறுவாம் (யாம்). எ—று.

விகாரம் உடைமையின், வைகாரி அகங்காரம் என்றும், பிரகாசம் உடைமையின், தைஜச அகங்காரம் என்றும், பஞ்ச பூத முதலியவற்றிகுக் காரணமா யிருத்தலின், பூதாதி அகங்காரம் என்றும், மூலாகங்காரத்தின், சத்துவ குண, ரஜோ குண, தமோ குணங்களுக்குப் பெய ராம். (66)

[வைகரி அங்காரம் என்னும் சத்துவ குணத்தினின் றும், அந்தக் கரண சதுஷ்டயமும், ஞாந இந்திரிய பஞ்சக

மும் உண்டாம் என்றும், தைஜஸ அகங்காரம் என்னும் ரஜோ குணத்தினின்றும், பிராணாதி பஞ்ச வாயுக்களும், வாக்காதி கர்மேந்திரியங்கள் ஐந்தும் உண்டாம் என்றும், பூதாதி அகங்காரம் என்னும் தமோ குணத்தினின்றும், ஆகாசாதி பஞ்ச பூதங்கள் உண்டாம் என்றும், கூறுகின்றார்[

சத்துவ குணத்திற் றோன்றுந் தயங்குமுட் கரண நான்கும்,
புத்தியிந் தியங்க ளைந்தும் போந்துதித் திடுமி ராச,
தத்தில்வாக் காதி யைந்துந் தகும்பிரா ணாதி யைந்து,
மத்தமோ குணத்திற் றோன்று மகல்விசும் பாதி பூதம்.
(67)

(இ—ள்) சத்துவ குணத்தில் - (மூலாகங்காரத்தின் வைகாரி என்னும் நாமம், பிரகாசம் என்னும் ரூபம், பொருந்திய) சத்துவ குணத்தினின்றும், தயங்கும் - விளங்காநின்ற உள் கரணம் - அந்தக்கரண, (மநம் புத்தி சித்தம் அகங்காரம் என்னும்) நான்கும் - சதுஷ்டயமும், புத்தி - ஞாந, இந்தியங்கள் - இந்திரிய. ஐந்தும் - (சுரோத்திரம், த்வக் சக்ஷு சிங்ஙவை கிராணம் என்னும்) பஞ்சகமும், தோன்றும் - (ஆகிய ஒன்பது தத்துவங்களும்) உண்டாகின்றன, இராசதத்தில் - (மூலாகங்காரத்தின் தைஜசம் என்னும் நாமம் பிரவிருத்தி என்னும் ரூபம், பொருந்திய) இரஜோ குணத்தினின்றும், தகும் - தகுதியான, பிராண - பிராண, ஆதி - (அபாந சமாந உதாந வியாந வாயு) முதலிய, ஐந்தும் - பஞ்சகமும், வாக்கு - வாக். ஆதி - பாணி பாத பாயுரு உபஸ்த இந்திரிய, ஐந்தும் - பஞ்சகமும், போந்து உதித்திடும் - (ஆகிய பத்துத் தத்துவமும்) உண்

டாகி வந்து தோன்றும், அத் தமோ குணத்தின்-(மூலாகங் காத்தின் பூதாதி என்னும் நாமம், மோகம் என்னும் ரூபம், பொருந்திய) தமோ குணத்தினின்றும், அகல் - (பஞ்ச தன் மாத்திரை ரூப சூக்ஷ்ம பூதங்க ளாகிய) விரிந்த, விசும்பு - ஆகாச, ஆதி - வாயு அக்கினி ஜல பிருதிவி என்னும், பூதம் - (பஞ்ச) பூதங்களும், தோன்றும் - உண்டாகின்றன. (உண்டாகும்) எ-று) (67)

[அந்தச் சூக்ஷ்ம பூதங்கள் பஞ்சீகரணம் செய்யப்பட்டு, பிரபஞ்சம் ஆகி யிருக்கும் என்றும், அந்தக் கரண சதுஷ்டயத்தின் கிரியைகள், ஒரு பொருளை சங்கற்பித்தல், நிச்சயித்தல், அபிமானித்தல், சிந்தித்தல் என்றும், அதிதேவதை சந்திரன் பிரஹ்மா க்ஷேத்திரஞ்ஞன் ருத்திரன் என்றும், கூறுகின்றார்.]

அப்பெரும் பூதம் பஞ்சீ கரித்துல காகி நிற்குஞ்,
செப்பிய கரண நான்கின் செயல்களா நினைத்த லந்தப்,
பொய்ப்பொரு டுணிதன் மானம் புரிதல்சிந் தித்த றிங்க,
டிப்பிய நான்மு கன்சேத் திரிபுராந் தகன்றே வன்றே. (68)

(இ-ள்) அப் பெரும் பூதம் - (மூலாகங்காரத்தின் தமோ குணத்தினின்றும் உண்டான சூக்ஷ்ம மான) பெரிய (பஞ்ச) பூதங்கள், பஞ்சீகரித்து - (பரமேசுவரனால்) ஒன்றோ டொன்று சேர்க்கப்பட்டு (தூல பஞ்ச பூதங்க ளாய்), உலகு - பிரபஞ்சம், ஆகி - ஆகி, நிற்கும் - இருக்கும், செப்பிய - (மூலாகங்காரத்தின் சத்துவ குணத்தினின்றும், உண்டான தாகக்) கூறிய, கரணம் நான்கின் - அந்தக் கரண சதுஷ்டயத்தின், செயல்கள் - கிரியைகள் ஆவன, நினைத்தல் - (மநம் ஒரு பொருளைச்) சங்கற்பித்தலும், அந்

தப் பொய்ப் பொருள் - மநம் சங்கற்பித்த மித்தையா பதார்த்தத்தினை, துணிதல் - (புத்தி) நிச்சயித்தலும், மாநம் புரிதல் - (அந்த வஸ்துவில் அகங்காரம்) அபிமாநம் வைத்த லும், சிந்தித்தல் - (அந்த வஸ்துவைச் சித்தம்) சிந்தித் தலும், ஆம் -ஆகும், திங்கள் - (அம் மநம், புத்தி, அகங் காரம், சித்தம், என்னும், அந்தக் கரண சதுஷ்டயத்துள்) (மநத்திற்கு) சந்திரனும், திப்பிய - (புத்திக்கு) திவ்விய மான, நான் முகன் - பிரஹ்மாவும், சேத்திரி (அகங்காரத் திற்கு) க்ஷேத்திரஞ்ஞனும், புராந்தகன் - (சித்தத்திற்கு) ருத்திரனும், தேவு - அதிதேவதைகள் ஆவார்கள், எ—று. அன்று-ஏ- அசை. (பிரஹ்ம கீதை 5-38)

"தன்மாத் திரைக ளைந்தினையு
மோரொன் றிரண்டாய்ப் பகுத்தொன்றை,
நன்று லாக்கித் தன்பாதி
யொழிந்த நாலி னுடன்கூட்டி,
யின்னே யல்லா தவைநான்கி
னியல்பிற் கூட்ட வாறுதி,
பின்னே தூல பூதமெனப்
பிறக்கு மெனவே பெயர்த்துரைத்தான்,"

என்பதனுல் உணர்க. (68)

[அந்தக் கரணம் இருக்கும் இடம் ஹிருதயம் என் றும், ஞாந இந்திரியக் கிரியைகள், சப்தத்தினைக் கேட்டல், சீதோஷ்ண பரிசங்களை அறிதல், எழு வகை ரூபங்களை அறிதல், ஷட் ரசங்களை புசித்தல், நற் கந்த துர்க்கந்தங்களை கவர்தல் என்றும், திக்கு காற்று சூரியன் வருணன் அசு விநி குமாரர்கள் அதிதேவதைகள் என்றும், இருக்கும்

இடம், காது தோல் கண் நாவு மூக்கு என்றும், கூறுகின்ருர்.]

இக்கர ணங்க டாந மிதயஞா நேந்தி யங்கட், [மோத்த,
குய்க்குறுந் தொழிலாங் கேட்ட லுறல்காண்ட லுண்டன்
றிக்குமா ருதமே நன்மித் திரனுயர் வருண னோடு,
தக்கசு விசியாந் தெய்வந் தாநங்கா தாதி யாமே. (69)

(இ—ள்) இக் கரணங்கள் - இப்பொழுது கூறிய அந்தக்கரண சதுஷ்டயத்திற்கு, தாநம் - (இருக்கும்) இடம், இதயம் - ஹிருதயம் (கண்டம், நாபி. சர்வாங்கமும்) ஆம், உய்க்கு உறும் - சீவிக்காநின்ற, ஞாநேந்தியங்கட்கு - (சுரோத்திரம், தவக், சக்ஷு, ஜிஹ்வை, கிராணம் என்னும்) ஞாநேந்திரிய பஞ்சகத்தின், தொழில் - கிரியைக ளாவன, கேட்டல் - (சுரோத்திரம், த்வந்யாத்மக வர்ணாத்மக, அதாவது, ஒலி வடிவ, எழுத்து வடிவ, சப்தங்களைக்) கேட்டலும், உறல் — (த்வக், சீதோஷ்ண பரிசங்களை) பொருந்தி (அறிதலும்), காண்டல் - (சக்ஷு, சுவேத ரக்த பீத நீல அரித, அதாவது, வெண்மை, சிவப்பு, மஞ்சள், கருப்பு பச்சை வர்ணங்களை) அறிதலும், உண்டல் - (ஜிஹ்வை, இனித்தல், புளித்தல், உவர்த்தல், துவர்த்தல், கார்த்தல், கசத்தல், ஆகிய ஷட் ரசங்களைப்) புசித்தலும். மோத்தல் - (கிராணம், நற் கந்த. துர்க் கந்தங்களைக்) கவர் தலும், ஆம் - ஆகும், திக்கு - (சுரோத்திரம் த்வக் சக்ஷு ஜிஹ்வை கிராணம் என்னும் ஞாநேந்திரிய பஞ்சகத்திற்கு), திசையும், மாருதம் - காற்றும், நல் — நல்ல, மித்திரன் - சூரியனும், உயர் — சிரேஷ்டம் (பொருந்திய), வருணன் - வர்ணனும், தக்க-தகுதி யான, அசுவிசி - அசுவினி குமாரர்

களும், தெய்வம் - தேவதைகள், ஆம் - ஆவார்கள். தாநம் - (இப் பொழுது கூறிய ஞாநேந்திரிய பஞ்சகங்கள். இருத்தற்கு) இடம், காது - சுரோத்திரம். ஆதி - (த்வக்) கண், நாவு, மூக்கு) முதலியன, ஆம் - ஆகும். எ—று, ஒடு - ஏ - ஏ - அசை.

1. சப்தம், அநுகூலம் பிரதிகூல பேதத்திஞல், இரு வகைத்தாம். 1 ஸ்துதி முதலியவற்றினைப் போதிக்கும் சப் தம் அநுகூலம் ஆம். 2. நிந்தை முதலியவற்றை அறிவிக் கும் சப்தம் பிரதிகூலம் ஆம்.

2. ஸ்பரிசம் - சீதம் உஷ்ணம் கோமலம் கடிநம் என்னும் பேதத்திஞல் நான்கு வகைத் தாம்.

3. ரூபம் - சுக்லம் முதலிய பேதத்திஞல் எழு வகைத் தாம்.

4. ரஸம் - மதுரம் புளிப்பு முதலிய பேதத்தில் அறு வகைத் தரம்.

5. கந்தம் - சுகந்தம் துர்க்கந்தம் என்னும் பேதத் திஞல், இரு வகைத் தாம். என வேதாந்த பதார்த்த மஞ்ஜூஷா கூறுகின்றது என உணர்க. (69)

[ஞாந இந்தரியங்கள் பாஹ்ய விஷயங்களை அறிவது போல, ஆந்திர விஷயங்களை உணரும் என்றும், காதினை மூடிக்கொள்ளும் போது, பிராணுதி சப்தம் கேட்டல், அந்நாதிகளை புஜிக்கும் போது, சீதோஷ்ணத்தினை அறிதல், நேத்திரத்தினை மூடிக் கொண்டால் உள் இருட்டை அறி தலும். வாந்தி முதலியவற்றில், ரசமும், கந்தமும், அறிதலும்,

உண்டாகின்ற தெனவும், கர்மேந்திரியக் கிரியை வசந கமந ஆதாந விஜர்ஜ்ஜந ஆநந்தித்தல் என்றும், கூறுகின்றார்.]

எண் சீர்க் கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்.

புத்தியிந் திரியங்க டாமுணரும் விடயம்
புறமெனவே யுள்ளுமுணர்ந் திடுஞ்செவிகள் புதைப்பி,
னுய்த்தபிரா ணாதியொலி கேட்கையந்நா திகளை
யுண்ணும்போ தழல்குளிர்ச்சி யறிதல்விழி மூடின்,
மெத்துமக விருளறித லுத்காரா திகளின்
விளங்குசுவை கந்தமறிந் திடன்முறையே யாகும்,
வைத்தகரு மேந்திரியத் தொழிலுரைத்த னடத்தல்
வழங்கல்விட லாநந்தித் தடுதலென வறியே. (70)

(இ—ள்) புத்தி - ஞாந, இந்திரியங்கள் - இந்திரியங்களானது, புறம் - (தேகத்திற்குப்) பாஹியத்தி லுள்ள. விடயம் - (சப்தாதி) விஷயங்களை, உணரும் - அறிகின்றது, எனவே - போலவே, உள்ளும் - (தேகத்திற்கு) ஆந்திரத்தி லுள்ள (விஷயங்களையும்) உணர்ந்திடும் - அறியாநிற்கும், செவிகள் - (அவை யாவன இரண்டு) காதுகளையும், புதைப்பின் - (விரலால்) மூடிக்கொள்ளும் இடத்து. உய்த்த - ஜீவித்திருக்கின்ற, பிராண ஆதி - பிராண வாயுவி னிடத்திலும், ஜாடராக்கினியிலும் உள்ள, ஒலி - சப்தங்களை, கேட்கை - (சுரோத்திர இந்திரியம்) கேட்டலும், அந்ந ஆதிகளை - அந்ந பாநமுதலியவற்றை, உண்ணும் போது - புசிக்கும் போதும் (குடிக்கும் போதும்), அழல் - உஷ்ணத்தினையும், குளிர்ச்சி - சீதத்தினையும், அறிதல் - (த்வக் இந்திரியம்)

அறிதலும், விழி - கண்களை, மூடின் - மூடிக்கொள்ளு மிடத்து, மெத்தும் - (கண்களின் சமீபத்தில்) மிகுந்திருக் கப்பட்ட, அக இருள் - உள்ளே இருக்கும் இருட்டை, அறிதல் - (சக்ஷு இந்திரியம்) உணர்தலும், உத்கார ஆதி களில் - வந்தி, காரி உமிழ்தல் முதலியன செய்யுமிடத்து, விளங்கு - விளங்காநின்ற, சுவை - (ஜிஹ்வேந்திரியம் மது ரம் முதலிய) ரசத்தினையும், கந்தம் - (கிராண இந்திரியம்) நற் கந்த துர்க் கந்தங்களையும், அறிந்திடல் - உணர்தலும், முறையே - கிரம மாக. ஆகும் - (ஞானேந்திரிய பஞ்சகங் களுக்கு) உண்டாகாநிற்கும், வைத்த - (கிரியா சாதந மாக) ஏற்படுத்திய. கரும இந்திரிய - (வாக் பாணி பாதம் பாயுரு உபஸ்தம் என்னும்) கர்மேந்திரிய (பஞ்சக)த்தின், தொழில் - கிரியைகள், உரைத்தல் - (வாக் இந்திரியம், இருதயம், கண்டம், உச்சி, மூக்கு, இதழ், நா, பல், அண் ணம் என்னும் அஷ்ட ஸ்தாநங்களைப் பற்றி நின்று, லௌகிக வைதிக சப்தங்களை) வசநித்தலும், வழங்கல் - (பாணி இந்திரியம், ஒரு பதார்த்தத்தைக்) கொடுத்தலும், நடத்தல் - (பாத இந்திரியம்) செல்லுதலும், விடல் - பாயு இந்திரியம் மல ஜலங்களை) விடுதலும், ஆநந்தித்திடுதல் - (உபஸ்த இந்திரியம் ஸ்திரீ முதலிய சம்போக வாயி லாய்ச்) சுகத்தைச் செய்தலு மாம். என - என்று, அறி - உணர்வா யாக. எ—று. தாம் - ஏ - ஏ - அசை. 'ஆநந்தித்திடுதல்' என்பது, மைதுநாதிகளில், கிராமிய தரும சுகம் ஆம்.

பஞ்ச தசி 2 பஞ்ச பூத விவேகம்.

5 சிரவமே புதைக்கி ளோர்காற் செடரவக் கிநிபி ராணன்
மருவக வொலிநீ ரந்ந மாந்திடி னுண்ணி னூறு

உண்டாகின்ற தெனவும், கர்மேந்திரியக் கிரியை வசந கமந ஆதாந விஜர்ஜ்ஜந ஆநந்தித்தல் என்றும், கூறுகின் ருர்.]

எண் சீர்க் கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்.

புத்தியிந் திரியங்க டாமுணரும் விடயம்
புறமெனவே யுள்ளுமுணர்ந் திடுஞ்செவிகள் புதைப்பி,
னுய்த்தபிரா ணுதியொலி கேட்கையந்நா திகளை
யுண்ணும்போ தழல்குளிர்ச்சி யறிதல்விழி மூடின்,
மெத்துமக விருளறித லுத்காரா திகளின்
விளங்குசுவை கந்தமறிந் திடன்முறையே யாகும்,
வைத்தகரு மேந்திரியத் தொழிலுரைத்த னடத்தல்
வழங்கல்விட லாநந்தித் தடுதலென வறியே. (70)

(இ—ள்) புத்தி - ஞாந, இந்திரியங்கள் - இந்திரியங் களானது, புறம் - (தேகத்திற்குப்) பாஹியத்தி லுள்ள. விடயம் - (சப்தாதி) விஷயங்களை, உணரும் - அறிகின் றது, எனவே - போலவே, உள்ளும் - (தேகத்திற்கு) ஆந்திரத்தி லுள்ள (விஷயங்களையும்) உணர்ந்திடும் - அறியாநிற்கும், செவிகள் - (அவை யாவன இரண்டு) காதுகளையும், புதைப்பின் - (விரலால்) மூடிக்கொள்ளும் இடத்து. உய்த்த - ஜீவித்திருக்கின்ற, பிராண ஆதி - பிராண வாயுவி னிடத்திலும், ஜாடராக்கினி யிலும் உள்ள, ஒலி - சப்தங்களை, கேட்கை - (சுரோத்திர இந்திரியம்) கேட்டலும், அந்ந ஆதிகளை - அந்ந பாநமுத லியவற்றை, உண்ணும் போது - புசிக்கும் போதும் (குடிக்கும் போதும்), அழல் - உஷ்ணத்தினையும், குளிர்ச்சி - சீதத்தினையும், அறிதல் - (த்வக் இந்திரியம்)

அறிதலும், விழி - கண்களை, மூடின் - மூடிக்கொள்ளு மிடத்து, மெத்தும் - (கண்களின் சமீபத்தில்) மிகுந்திருக் கப்பட்ட, அக இருள் - உள்ளே இருக்கும் இருட்டை, அறிதல் - (சக்ஷுர் இந்திரியம்) உணர்தலும், உத்கார ஆதி களில் - வந்தி, காரி உமிழ்தல் முதலியன செய்யுமிடத்து, விளங்கு - விளங்காநின்ற, சுவை - (ஜிஹ்வேந்திரியம் மது ரம் முதலிய) ரசத்தினையும், கந்தம் - (கிராண இந்திரியம்) நற் கந்த துர்க் கந்தங்களையும், அறிந்திடல் - உணர்தலும், முறையே - கிரம மாக. ஆகும் - (ஞானேந்திரிய பஞ்சகங் களுக்கு) உண்டாகாநிற்கும், வைத்த - (கிரியா சாதந மாக) ஏற்படுத்திய. கரும இந்திரிய - (வாக் பாணி பாதம் பாயுரு உபஸ்தம் என்னும்) கர்மேந்திரிய (பஞ்சக)த்தின், தொழில் - கிரியைகள், உரைத்தல் - (வாக் இந்திரியம், இருதயம், கண்டம், உச்சி, மூக்கு, இதழ், நா, பல், அண் ணம் என்னும் அஷ்ட ஸ்தாநங்களைப் பற்றி நின்று, லௌகிக வைதிக சப்தங்களை) வசநித்தலும், வழங்கல் - (பாணி இந்திரியம், ஒரு பதார்த்தத்தைக்) கொடுத்தலும், நடத்தல் - (பாத இந்திரியம்) செல்லுதலும், விடல் - பாயு இந்திரியம் மல ஜலங்களை) விடுதலும், ஆநந்தித்திடுதல் - (உபஸ்த இந்திரியம் ஸ்திரீ முதலிய சம்போக வாயி லாய்ச்) சுகத்தைச் செய்தலு மாம், என - என்று, அறி - உணர்வா யாக. எ—று. தாம் - ஏ - ஏ - அசை. 'ஆநந்தித்திடுதல்' என்பது, மைதுநாதிகளில், கிராமிய தரும சுகம் ஆம்.

பஞ்ச தசி 2 பஞ்ச பூத விவேகம்.

5 சிரவமே புதைக்கி ஞேர்காற் செடரவக் கிநிபி ராணன்
மருவக வொலிநீ ரங்ந மாந்திடி னுண்ணி னூறு

மிருவிழி மூடி னுள்ளா ரிருளுமுக் காரஞ் செய்யிற்
றெரிதலிற் சுவையே கந்தம் பொறிக்சுகத் தெரிவு
முண்டே. (70)

எனக் கூறி யிருத்தலே உணர்க.

[கர்மேந்திரிய அதிதேவதைகள், அக்கிநி இந்திரன் சூரியன் யமன் பிரசாபதி என்றும், இருக்கும் இடம், வாய் கை கால் குதம் லிங்கம் என்றும், அந்தக்கரண சதுஷ்டயம், ஞாநேந்திரிய பஞ்சகம், கர்மேந்திரிய பஞ்சகம் என்னும் 14 தத்துவமும், அத்யாத்மம் என்றும், 14 விஷயங்கள், ஆதிபௌதிகம் என்றும், 14 அதிதேவதைகள், ஆதி தெய்வீகம் என்றும், இந்த 14 அதிதேவதைகளே விராட் புருடனுக்கு இந்திரியம் என்றும், விராட் புருஷ இந்திரியமே, ஹிரண்ய கர்ப்பருக்கு சூக்ஷும சரீரம் என்றும், அந்த சூக்ஷும சரீரம், அந்தரியாமிக்கு காரண சரீரம் என்றும் கூறுகின்றார்.]

அங்கிமக பதியிரவி யுடன்மிருத்து பிரசா
பதிதெய்வம் வாய்முதலாங் கோளகைகடாந,
மிங்கிவையு ளுட்கரண மிருவகையிந் திரிய
மென்னவரு பதினன்கு மத்தியாத் மிகமாந்,
தங்குமிவற் றுறுவிடய மாதிபௌ திகமாந்
தகுமதிதே வதையாதி தைவீக மாமிப்,
புங்கவரே யிந்திரியம் விராட்புருடற் கதுமெய்
பொன்கர்ப்பற் கதுமறைப்பா மந்தரியா மிக்கே. (71)

(இ—ள்) அங்கி - (அந்தக் கர்மேந்திரிய பஞ்சகத்திற்கும்) அக்கிநியும். மக பதி - இந்திரனும், இரவி - சூரியனும், மிருத்து - யமனும், பிரசாபதி — பிரஜாபதியும், தெய்வம் -

அதிதேவதைகள் ஆவார்கள், தாநம்-(அந்தக் கர்மேந்திரிய பஞ்சகம் இருக்கும்) இடம், வாய்-வாயும், முதல் ஆம் - கையும் காலும் குதமும் ஆண் பெண் குறிகளும் ஆகிய, கோளகைகள் - கோளகங்களாம், இங்கு - இவ்விடத்துக் கூறிய இவையுள் - (பிரஹ்மம், ஈசுவரன், கூடஸ்தன், ஜீவந், பிரகிருதி, மகத் தத்வம், மூலாகங்காரம், அந்தக் கரண சதுஷ்டயம், ஞானேந்திரிய பஞ்சகம், பிராணாதி வாயு பஞ்சகம், கர்மேந்திரிய பஞ்சகம், பூத பஞ்சகம் என்னும்) 31 தத்துவங்களுள், உள் கரணம் - அந்தக் கரண சதுஷ்டயமும், இரு வகை இந்திரியம் - ஞானேந்திரிய பஞ்சகமும், கர்மேந்திரிய பஞ்சகமும், என்ன - என்று, வரும் - வருகின்ற, பதின் நான்கும், பதினான்கு (தத்துவங்களும்), அத்தி ஆந்மிகம் ஆம் - அத்தியாத்மீகம் என்று சொல்லப் படும், தங்கும் - பொருந்தாநின்ற, இவற்று உறு - இந்தப் பதினான்கு தத்துவங்களின், விடயம் - விஷயங்கள், ஆதி பௌதிகம் ஆம் - ஆதி பௌதிகம் என்று சொல்லப் படும், தகும் - தகுதியா யுள்ள, அதி தேவதை - (இந்தப் பதினான்கு தத்துவங்களின்) அதிதேவதைகள், ஆதி தைவீகம் ஆம் - ஆதி தைவீகம் என்று சொல்லப்படும், இப் புங்கவரே - (இந்தப் பதினான்கு) தேவதைகளே, விராட் புருடற்கு - (சமஷ்டி தூல சரீர அபிமானி யாகிய) விராட் புருட ஈசுவரனுக்கு, இந்திரியம் (சக்ஷுராதி) இந்திரியங்களாம், அது - (விராட் புருட ஈசுவரனுக் குள்ள பதினான்கு தேவதா ரூப) இந்திரியங்களே, பொன்கர்ப்பற்கு- (சமஷ்டி சூக்ஷும சரீர அபிமானி யாகிய) இரணிய கர்ப்ப ஈசுவரனுக்கு, மெய் - (சூக்ஷும) சரீர மாம், அது - அந்தச் (சூக்ஷும) சரீரமே, அந்தரியாமிக்கு - (காரண சரீர அபி

மாநி யாகிய) அந்தரியாமி ஈசுவரனுக்கு, மறைப்பு ஆம் - ஆவரணம் (காரண சரீரம்) ஆம் எ—று. உடன் - ஏ - அசை-"அந்தரியாமிக்கு (மறைப்பு) ஆவரணம்" என்றது, "அவ்வியாகிருத காரண சரீரத்தை" என உணர்க. (71)

[பிராண வாயுவு, இருக்கும் இடம் கிரியை, அபான வாயுவு. இருக்கும் இடம் கிரியை, சமான வாயு, இருக்கும் இடம் கிரியை, உதான வாயு, இருக்கும் இடம் கிரியை, வியான வாயு, இருக்கும் இடம் கிரியை, நாக வாயு, கிரியை, கூர்ம வாயு கிரியை என்னும் ஏழு வாயுக்களைக் கூறுகின்றார்]

நின்றிதயந் தனையடைந்து பிராணனுசு வாச
 நிசுவாச மியற்றுமபா னன்குதத்தி னுற்றுச்,
சென்றொழிய மலசலங்க ளொழித்தலுறுஞ் சமானன்
 சேர்ந்துந்தி யந்நரச முறுப்பனைத்தும் பகுக்கு,
மென்றுமுதா னன்களமுற் றுத்காரம் புரியு
 மிருந்தங்க மெங்கும்வியா னன்பரிக்கு முடம்பைக்,
குன்றுதலி னுகன்சோம் பாவித்தல் விளக்குங்
 கூர்மனுல் விக்கலொடு தேக்குளவா மன்றே (72)

(இ—ள்) பிராணன் - பிராண வாயு, இதயந்தனை- ஹிருதய ஸ்தானத்தை, அடைந்து - பொருந்தி, நின்று - இருந்து, உசுவாசம் - (உள்ளே) இழுத்தலையும், நிசுவாசம் - (வெளியில்) விடுதலையும், இயற்றும் - செய்யும், அபானன் - அபான வாயு, குதத்தின் - குத ஸ்தானத்தை, உற்று - பொருந்தி இருந்து, மல சலங்கள் - மல சலங்களை, சென்று ஒழிய - (வெளியில்) போகும்படி, ஒழித்தல் உறும் - கழிக்கும், சமானன் - சமான வாயு, உந்தி - நாபி

ஸ்தாநத்தை, சேர்ந்து - பொருந்தி இருந்து, அந்ந ரசம் - (புசித்த) அந்நத்தினு லுண்டாகிய (ஷட்) ரசங்களையும், அனைத்தும் உறுப்பு - எல்லா அவயவங்களிலும், பகுக்கும்- பிரித்துக் கொண்டு போய்ச் சேர்க்கும், உதாநன் - உதாந வாயு, களம் - கண்ட ஸ்தாநத்தை உற்று - பொருந்தி இருந்து, உத்காரம்-வாந்தியை, என்றும்-எப்பொழுதும், புரியும் - செய்விக்கும், வியாநன் - வியாந வாயு, அங்கம் எங்கும் - (நக முதல் சிகை பரியந்த மான) சரீர முழுவதை யும், (ஸ்தாந மாகப் பொருந்தி), இருந்து - இருந்து, உடம்பை - சரீரத்தை, பரிக்கும் - தாங்கிக் கொண்டிருக் கும், நாகன் - நாக வாயு, குன்றுதல் இல் - நிறைந்த, சோம்பு - சோம்பலையும், ஆவித்தல் - கொட்டாவி விடுத லையும், விளைக்கும் - உண்டாக்கும், கூர்மனால் - கூர்ம வாயுவால், விக்கல் - விக்கலும், தேக்கு - தெவிட்டலும், உள ஆம் - உண் டாம். எ—று.

அன்று - ஏ - ஒடு ' இதயம் தனை'' என்பதில் - தன் அசை.

நாகாதி வாயுக்கட்குத் தாநங் கூற வில்லை யென வும், வாயுக்கள் யாவற்றிற்கும் அதிதேவதை கூற வில்லை யெனவும் அறிக. (72)

[கிரிகர வாயு கிரியை, தேவ தத்த வாயு கிரியை, தநஞ்செய வாயுக் கிரியை, என்பதைக் கூறி, தநஞ்ஜய வாயு மரணத்தின் பின் ஐந்து நாள் வரை சரீரத்திலிருந்து, சரீரத்தை வெடிக்கச் செய்து போகும் என்றும், நாகாதி பாஹ்ய வாயுக்கள், கருமேந்திரியங்களை நடாத்தும் என்

றும், பிராணுதி வாயுக்கள், ஞானேந்தியங்களைத் தொழில் படுத்தும், என்றும் கூறுகின்ருர் ]

தும்மலுட னிருமல்வருங் கிரிகரனு னகுதல்
சொல்லுதலாந் தேவதத்த னுற்சோக ராக,
மிம்மைதருந் தநஞ்செயனத் தநஞ்செயனும் வாயு,
விறந்தவைந்து நாள்காறு மிருந்துநனி வீங்கி.
மெய்ம்முழுதும் வெடித்திடச் செய் தகலுநா காதி,
விளம்புபுற வாயுக்க டாங்கருமேந் தியங்க,
டம்மைமிக வியக்கலுறும் பிராணுதி வாயுத்
தாமியக்கும் விடாமன்ஞா னேந்திரியங் களையே. (73)

(இ—ள்) கிரிகரனுல் - கிரிகர வாயுவால், தும்மல் - தும்மலும், இருமல் - இருமலும், வரும் - உண்டாம், தேவதத்தனுல் - தேவதத்த வாயுவால். நகுதல் - சிரித்தலும், சொல்லுதல் — வசநித்தலும், ஆம் - உண்டாம், தநஞ்சயன் - தநஞ்சய வாயு, சோக - சோகத்தையும், ராகம் - ராகத்தையும், இம்மை - இப்பொழுதே (முன்னர்), தரும் - உண்டாக்கும், அத் தநஞ்சயன் ஆம் வாயு - அந்தத் தநஞ்செய வாயு, இறந்த - மரணமான பின் (சரீரத்தின்கண்), ஐந்து நாள்காறும் - ஐந்து நாள் வரை, இருந்து - இருந்து, நனி வீங்கி - (சரீரத்தினை) நன்ருக வீங்கச் செய்தும். மெய் - சரீரம், முழுதும் - முழுமையும், வெடித்திடச் செய்து - பிளக்கும்படி செய்தும் அகலும் - (சரீரத்தினை) விட்டு நீங்கும், விளம்பு - (முன்னர்க்) கூறிய, நாக ஆதி - நாகன் முதலிய, புற வாயுக்கள் - பாஹிய வாயுக்கள், கரும இந்தியங்கள் தம்மை - கரும இந்திரியங்களை, மிக - நன்ருக, இயக்கல் உறும் - நடாத்துதலைப் பொருந்தும்,

பிராண ஆதி வாயு - பிராணன் முதலிய (ஆந்தர) வாயுக்கள், ஞாந இந்திரியங்களை - ஞாந இந்திரிய (பஞ்ச)கங்களை. விடாமல் - நீங்காமல் (நின்று), இயக்கும் . நடத்தும். எ—று. உடன் - தாம் - தாம் - ஏ - "கருமேந்தியங்கள் தம்மை" என்பதில் - தம் - அசை. (73)

[வைரம்பன், முக்கியன், பிரபஞ்சநன், அந்தரியாமி, மகாப் பிராணன், என்று கூறும் வாயுக்கள் ஐந்தும், ஜீவனைச் சம்பந்தித்து, அந்தக் கரணத்திரனைச் சலிப்பிக்கச் செய்யும் என்றும், பஞ்ச பூத வியாபாரம் இன்னது என்றும், பஞ்ச பூத தருமம் இன்னது என்றும், பஞ்ச பூத அதி தேவதை இன்னது என்றும், இதில், நான்கு விஷயங்கள் கூறுகின்றார் ]

சாற்றின்வை ரம்பன்முக் கியன்பிரபஞ் சநனந்
தரியாமி யொடுமகாப் பிராணனெனும் பெயர்கொள்,
காற்றிவைகள் சீவசம் பந்தமா யேயுட்
கரணங்க ளியக்கியிடு மண்முதலைந் திற்கும்,
பாற்றிகழும் வியாபாரம் பொறைபிண்டி கரணம்
பாகமொடு விரகமிடங் கொடையாகுந் தருமம்.
மாற்றலுறு திண்மைநெகிழ் வழற்சிபரி வெளியா
மயனெடரி யரனீசன் சதாசிவன்றே வதைகள். (74)

(இ—ள்) சாற்றின் - சொல்லுமிடத்து, வைரம்பன் - வைரம்பன், முக்கியன் - முக்கியன், பிரபஞ்சநன் - பிரபஞ் சநன், அந்தரியாமி - அந்தரியாமி, மகாப் பிராணன் -மகாப் பிராணன், எனும் - என்னும், பெயர் - நாமத்தினை, கொள் - கொண்டிருக்கின்ற இவைகள் காற்று - இவ் வாயுக்கள், சீவ சம்பந்தம் ஆய் - ஜீவனைச் சம்பந்தித்து

இருந்து, உள் கரணங்கள் - அந்த்க்கரண சதுஷ்டயத்தை, இயக்கியிடும் - நடாத்துவிக்கும், [பஞ்ச பூதங்களின் வியாபாரம், தருமம், தேவதை, என்பவற்றைக் கூறுகின்றார்] மண் முதல் - பிருதுவி முதலிய, ஐந்திற்கும் - ஐந்து பூதங்களினிடத்தும், பால் - இயல் பாக, திகழும் - விளங்காநின்ற, வியாபாரம் - வியாபார மானது, பொறை - (பிருதுவி) தாங்குதலும், பிண்டிகரணம் - (சலம்) உண்டையாக்கலும், (திரட்டுதலும்), பாகம் -(அக்கினி) பாகஞ் செய்தலும், விரகம் - (வாயு) உலர்த்தலும், இடங் கொடை ஆகும் - (ஆகாசம்) இடங் கொடுத்தலும் ஆம், தருமம் - (பஞ்ச பூதங்களின்) தரும மானது. ஆற்றல் உறு - வலிமை பொருந்திய, திண்மை - உறுதியும், நெகிழ்வு - நெகிழ்ச்சியும், அழற்சி - உஷ்ணமும், பரி - பரிசமும், வெளி - வெளியும் ஆம், அயன் - பிரஹ்மாவும், அரி - விஷ்ணுவும், அரன் - ருத்திரனும், ஈசன் - மஹேசுவரனும், சதாசிவன், சதாசிவனும், தேவதைகள் - (பஞ்ச பூதங்கட்கும் கிரம மாகத்) தேவதைக ளாம். எ—று. ஒடு - ஒடு - ஏ - ஒடு அசை. (74)

[பஞ்ச பூத குணங்கள் இன்னன என்றும், பிருதிவிக்கு, ஐந்து, அப்புவுக்கு நான்கு, அக்கினிக்கு, மூன்று, வாயுவுக்கு, இரண்டு, ஆகாயத்தினுக்கு, ஒன்று என்றும், ஞாதிரு ஞானம் ஞேயம், திரி புடி என்றும், ஞாதிரு இன்னது என்றும், ஞானம் இன்னது என்றும், ஞேயம் இன்னது என்றும், கூறுகின்றார்.]

கந்தமுத லாயினவே குணங்களவை தம்முட்
ககநத்திற் கொலியொன்றே வளிக்கிரண்டு றுடனே,

யந்தழலுக் கொளியொடுமூன் றறற்கிரத மொடுநான்
கைந்துமண மொடுபுவிக்கென் றறிகதிரி புடிதான்,
முந்துஞா திருஞாந ஞேயமா மவற்றுண்
மூலவகங் காரஞ்சேர் சீவசை தந்நிய,
நந்துஞா திருமநத்திற் கதுவறிவு ஞாந
நவின்றபௌ திகவிடய ஞேயமென வறியே. (75)

(இ—ள்) குணங்கள் - (பஞ்ச பூதங்களின்) குணங்கள், கந்தம் - கந்தம், முதல் ஆயின - (ரசம், ரூபம், பரிசம், சப்தம்) முதலியன ஆம், அவை தம்முள் - அவ்வைந்தனுள், ககநத்திற்கு - ஆகாசத்திற்கு, ஒலி - சப்தம், ஒன்றே - ஒன்று (மாத்திர மாம்), வளிக்கு - வாயுவிற்கு, ஊறுடன் - பரிசத்தோடு, இரண்டு - (சப்த ஸபரிசம் என்னும்) இரண்டு (குண மாம்), அம் - அழகிய, தழலுக்கு - அக்நிக்கு, ஒளி ஒடு - பிரகாசத்தோடு, மூன்று (சப்த ஸபரிச ரூபம் என்னும்) மூன்று (குண மாம்), அறற்கு - ஜலத்திற்கு, இரதம் ஒடு - ரசத்தோடு, நான்கு - (சப்த ஸ்பரிச ரூப ரசம் என்னும்) நான்கு (குண மாம்), புவிக்கு- பிருதிவிக்கு, மணம் ஒடு - கந்தத்தோடு, ஐந்து - (சப்த ஸ்பரிச ரூப ரச கந்தம் என்னும்) ஐந்து (குண மாம்), என்று - என, அறிக - உணர்வா யாக, [திரி புடியைக் கூறுகின்றார்.] திரி புடி - திரி புடி யாவது, முந்து - முதன்மை யான, ஞாதிரு - ஞாதிருவும், (ஞாதா அறி பொருள்) ஞாநம் - ஞாநமும். (அறிவும்) ஞேயம் ஆம் - ஞேயமும் ஆம், (அறிபடுபொருளும்) ஆம், அவற்றுள் - அம் மூன்றனுள், மூல அகங்காரம் - மூலாகங்காரத்தினை, சேர்-பொருந்தி யிருக்கின்ற, சீவ சைதந்சியம்-ஜீவ சேதநமே, நந்து- கெட்டுப் போகாநின்ற, ஞாதிரு - ஞாதா வாம், மநத்தில் -

மாநத்தின்கண், கதுவு - சம்பந்தித்திருக்கின்ற, அறிவு - அறிவே, ஞானம் - ஞான மாம், நவின்ற - (முன்னர்க்) கூறிய, பௌதிக விடயம் - பூத காரிய மான விஷயங்கள், ஞேயம் - ஞேய மாம், என - என்று, அறி - தெளிவா யாக- எ—று. ஏ - ஏ - ஏ - தான் - அசை.

"அவை தம்முள்" என்பதில் - தம் - அசை. திரி - மூன்று, புடி-சேர்ந்தது, என்பது, திரிபுடி என்னும் பதப் பொரு ளாம். ஞாதா - சேதநம், ஞாநம் - (விருத்தி) சேதநம், ஞேயம் - (விஷய) சேதநம் என உணர்க. (75)

[தத்துவம் இன்னது எனக் கூறுவான் றொடங்கி, இருபத் தொன்பது தத்துவ மாகக் கூறுகின்றார்.]

ஈங்குமாந மிருபத்து நான்காவ தாகு
மிருபத்தைந் தாவதுதான் மூலவகங் கார,
மாங்கதனை யடைதலுறுஞ் சிதாபாச சீவ
னறையுமிரு பத்தாறு மவன்மாயை மருவு,
மோங்கொளியா மீசனிரு பத்தேழா மவனவ்,
வுயிர்முதலாந் துரியனிரு பத்தெட்டா மவனு
நீங்கலரு மீசனதிட் டாத்திருவாம் பிரம
நிகழ்த்திலிரு பத்தொன்ப தாவதுவா மன்றே. (76)

(இ—ள்) ஈங்கு - இவ் விடத்து, மாநம் - மாநம், இரு பத்து நான் காவது ஆகும் - (பூதம் ஐந்து, அந்தக்கரணம் நான்கு, ஞானேந்திரியம் ஐந்து, பிராணாதி வாயுக்கள் ஐந்து, கருமேந்திரியம் ஐந்து, ஆக) இருபத்து நான் காவது தத்துவ மாம், மூல அகங்காரம்-மூலாகங்கார மானது, இரு பத்து ஐந் தாவது - இரு பத்து ஐந் தாவது

(தத்துவம் ஆம்), அதனை - மூலாகங்காரத்தினை, அடைதல் உறும் - பொருந்தியிருக்கின்ற. சிதாபாச சீவன்- சிதாபாச முகிய ஜீவன், அறையும்-கூறுகின்ற, இருபத்து ஆறுமவன்- இருபத்து ஆறுவது - (தத்துவம்) ஆவன், மாயை-மாயை யின்கண், மருவும்-பிரதிவிம்பித்திருக்கின்ற, ஓங்கு-மிகுந்த, ஒளி ஆம் - பிரகாச மாகிய, ஈசன் - பரமேசுவரன், இரு பத்து ஏழாமவன் - இரு பத்து ஏழாவது (தத்துவம்) ஆவன், அவ் உயிர் - அந்தச் சீவ, முதல் ஆம் - அதிஷ்டாந மாகிய, துரியன் - கூடஸ்தன், இரு பத்து எட்டாமவன் ஆம் - இரு பத்து எட்டாவது (தத்துவம்) ஆவா முகும், நீங்கல் அரும் - கொள்ளத் தகுந்த, (நீக்கமற நிறைகின்ற), ஈசன்-ஈசுவர, அதிட்டாத்திரு ஆம் - அதிஷ்டாதா வாகிய, பிரமம் - பிரஹ்மம், நிகழ்த்தில் - சொல்லுமிடத்து, இரு பத்து ஒன்ப தாவது ஆம்-இரு.பத்து ஒன்ப தாவது (தத்து வம்) ஆம். எ—று தான் - ஆங்கு - அன்று - ஏ - அசை. வைசேஷிகர் ஏழுதத்துவம் என்றும், நையாயிகர் பதினாறு தத்துவம் என்றும் கூறுவர். (76)

[காரியப் பிரபஞ்ச சிருஷ்டி, கிரம சிருஷ்டி, யுகப்த் சிருஷ்டி, என இரு பிரகாரம் எனவும், மூலப் பிரகிருதி, மகத் தத்துவம், பஞ்ச தன் மாத்திரை யாகிய சப்த (ஏழு) பிரகிருதியினால், பஞ்ச பூதமும், அவற்றால், பிரஹ்மாண்ட பிண்டம், உலக உத்பத்தியே, கிரம சிருஷ்டி என்றும், பூரண சமுத்திரத்தில், வாயுவின் வசத்தினால், அலை முதலிய யன போல், பிரஹ்மத்தினிடத்தில் மாயாமய நாம ரூப உத் பத்தி, யுகப்தி சிருஷ்டி என்றும், கூறுகின்றார்.]

தெரித்தகா ரியத்தோற்ற மிருவகையாங் கிரம
சிருட்டியுக பத்சிருட்டி யெனமூலப் பகுதி,
விரித்தமக தத்வமக முந்தன்மாத் திரையாம்
விளங்குசத்தப் பிரகிருதி யாற்பஞ்ச பூத,
முரைத்தவற்ருற் பிரமாண்ட பிண்டமுத லாய
வுலகுதயந் தான்கிரம சிருட்டிநிறை கடலின்,
மருத்துவசத் தலையாதி போற்சிவத்தின் மாயா
மயநாம வுருவநிகழ் வாமுகபத் சிருட்டி. (77)

(இ—ள்) தெரித்த - (முன்னர்க்) கூறிய, காரியத் தோற்றம் - காரியோற்பத்தி யானது, கிரம சிருட்டி - கிரம சிருஷ்டி (என்றும்), உகபத் சிருட்டி - யுகபத் சிருஷ்டி, என- என்றும், இரு வகை ஆம் - இரண்டு பிரகார மாம். மூலப் பகுதி - (அவ் விரண்டனுள்) மூலப் பிரகிருதி, விரித்த - உண்டுபண்ணிய, மக தத்வம் - மகத் தத்துவமும், அகமும் - (மூல) அகங்கார தத்துவமும், தந் மாத்திரை ஆம் - (பஞ்ச) தந் மாத்திரையும் ஆகிய, விளங்கு- விளங்காநின்ற. சத்தப் பிரகிருதியால் - சப்தப் பிரகிருதிகளால், பஞ்ச பூதம் - (தூல) பஞ்ச பூதங்களும், உரைத்த - கூறிய, அவற்ருல் - (தூல) பஞ்ச பூதங்களால், பிரம அண்ட பிண்டம் - பிரம அண்ட பிண்டங்கள், முதல் ஆய - முதலிய, உலகு - பிரபஞ்ச, உதயம் - தோற்றம், கிரம சிருட்டி - கிரம சிருஷ்டி யாம், நிறை - பூரண மான, கடலில் - சமுத்திரத்தில், மருத்து வசத்து - வாயுவின் வசத்தினுல், அலை ஆதி-அலை, திவலை, நுரை, குமிழி முதலியன உண்டாகின்றன, போல் - போல, சிவத்தின் - பிரஹ்மத்தினுல், மாயா மய - (மாயையி னிடத்து) மாயா சொருப மாகிய, நாம உருவம் - நாம ரூபங்களினது,

நிகழ்வு - தோற்றம், உகபத் சிருட்டி – யுகபத் சிருஷ்டி, ஆம் - ஆகும். எ—று தான் - ஆல் - அசை.

சப்தப் பிரகிருதி ஆவன - சத்துவம் ரஜஸ் தமஸ் என்னும் இம் மூன்று குணங்களின் சாமியாவஸ்தைக்குப் பிரதாநம் என்று பெயர். அந்தப், பிரதாந மானது ஜகத்துக்கு மூல காரணம் ஆவதால், மூலப் பிரகிருதி எனப் படும்.

பஞ்ச தசி 6. சித்திர தீபம்.

99 இந்தவுல காதலிரு வகைசுருதி யுடைமையா
வீயலாக வேனுமொன்ருய்,
வந்ததென வெனுமறை முறையுணர்தல் வேண்டுமிரு
வகைமையினை யுங்கண்டநம்.
என உணர்க. (77)

[வேத சித்தமா யிருத்தலினல், கிரம சிருஷ்டி யுகபத் சிருஷ்டி இரண்டும் அங்கீகாரம் என்றும், நிர்விகாரப் பிரஹ்மத்தினிடத்தி லிருந்து, சடப் பிரகிருதி யாகிய காரியங்களை உண்டாக்குதல், எப்படிக் கூடும் என்று சங்கித்து, முயற்சி யின்றிய சூரியகாந்தக் கல்லினிடத்து. இச்சை யின்றி உதய மாகி வந்த சூரியனல், அக்நி உண்டாதல் போல். பிரஹ்மத்தினிடத்தில், மூலப் பிரகிருதி யினிடத்து மகத் தத்துவம் முதலிய காரிய வர்க்கங்கள் உண்டாவதற்கு முரண் இல்லை என்றும், காரிய உத்பத்தி நான்கு பிரகாரம் என்றும், கூறுகின்ருர்.

சுருதிசித்த மாதலினு லிவையுடம்பா டாகுந்
தூயபரப் பிரமமாம் விகாரமிலா விறையாற்,

றருதலெங்ஙன் காரியங்கள் சடப்பகுதி யென்னிற்
றாளிலாக் கதிர்ச்சிலையி லிச்சையிலா தெழுந்த,
பருதியினு லழல்வரல்போற் பரசிவனுன் மூலப்
பகுதியிடை மகதாதி காரியங்கள் வரற்குக்,
கருதின்முர ணிலையாகு மெனப்புகல்வ ரறிஞர்
காரியங்க டோற்றுதலுல் வகையவையீண் டுரைப்பாம். (78)

(இ—ள்) சுருதி சித்தம் ஆதலினுல் - சுருதி சித்த மாயிருத்தலினுல், இவை - கிரம சிருஷ்டி யுகபத் சிருஷ்டிகள், உடம்பாடு ஆகும் - அங்கீகார மாகும், [நிர்விகாரப் பிரம்மத்தி னிடத்தில், சிருஷ்டி பொருந்தா தெனச் சங்கித்துத், திருஷ்டாந்த வாயிலாகச் சிருஷ்டி பொருந்து மெனச் சமாதாநம் கூறுகின்ருர்] தூய - பரிசுத்த மான, பரப் பிரமம் ஆம் - பரப்பிரம மாகிய, விகாரம் இலா - நிர்விகார, இறையால் - ஈசுவரனுல், சடப் பகுதி - சட மான பிரகிருதியி னிடத்து, காரியங்கள் - காரியங்களை, தருதல் - உண்டாக்குதல், எங்ஙன் - எவ் வாறு (பொருந்தும்), என்னில் - என்று கேட்கில், [சமாதாநம் கூறுகின்ருர்.] தாள் இலா - முயற்சி யின்றிய, கதிர் சிலையில் - சூரிய காந்தக் கல்லினிடத்து, இச்சை இலாது - இச்சை யின்றி, எழுந்த - உதய மாகி (வந்த), பருதியினுல் - ஆதித்தனுல், அழல் - அக்கி, வரல் - உண்டாகுதல், போல் - போல, பரசிவனுல் - பரம சிவத்தினுல், மூலப் பகுதியிடை-மூலப் பிரகிருதியி னிடத்து, மகத் ஆதி - மகத் தத்துவம் முதலிய, காரியங்கள் - காரிய (வர்க்க)ங்கள், வரற்கு - உண்டு பண்ணுவதற்கு, கருதில் - விசாரஞ் செய்து பார்க்கு மிடத்து, முரண் இலை ஆகும் - விரோதம் இல்லை யாம், என - என்று, அறிஞர் - பெரியோர்கள், புகல்வர் - கூறு

வார்கள், [காரிய வகையினைக் கூறுகின்றார்.] காரியங்கள் - காரியங்கள், தோற்றுதல் - உண்டாகுதல், நால் வகை - நான்கு பிரகார மாம், அவை - அவற்றினை, ஈண்டு - இவ்விடத்து, உரைப்பாம்-கூறு வாம். (எ—று)

சுருதி - ''தஸ்மாத் வா ஏதஸ்மாத் ஆத்மந: ஆகாச: சம்பூத: அந்த இந்த (அதனின்றும், இதனினின்றும், ஆத்மாவினின்றும், ஆகாசம் உண்டாயிற்று. (78)

[காரிய உத்பத்தி, விருத்தி பக்ஷம், பரிணாம பக்ஷம், ஆரம்ப பக்ஷம், விவர்த்த பக்ஷம் என நான்கு பிரகாரம் என்றும், அவற்றிற்கு, திருஷ்டாந்தம், வஹ்நிரம் கூடார பாவம் அடைதல், பால் தைர் ஆகப் பரிணமித்தல், நூல் வஸ்திரம் ஆதல், ரஜ்ஜு சர்ப்பம் ஆதல் ஆம் என்றும், சத்திய வஸ்துவில், கெட்டுப் போகாநின்ற மித்தியா வஸ்து, கற்பிதம் ஆவதற்கு, ரஜ்ஜு சர்ப்பம், கந்தர்வ பட்டணம், ஸ்தாணு புருஷன், ஸ்பநம், இந்திர ஜாலம், சுக்திகா ரஜதம் என்னும் ஆறும் திருஷ்டாந்தம் என்றும் கூறுகின்றார்.]

விருத்திபரி ணாமமா ரம்பம்விவர்த் தமதாம்
விரிந்தபடங் குடிபாவம் பாறயிரா கார,
முரைத்தலுறு தந்துபட நியாயம்வன் பழுதை
யுரகவுரு முறையவற்றின் றிட்டாந்த மாகும்,
வருத்துகயிற் றரவங்கந் தருவநகர் குற்றி
மகன்கநவிந் திரசாலஞ் சுத்திகா ரசதந்,
தெரித்தவிவை முதலனவாந் திரிதலின்மெய்ப் பொருளிற்
றிரிந்திடுபொய்ப் பொருளதுகற் பிமாதற் குவமை. (79)

(இ—ள்) விருத்தி - விருத்தியும், பரிணமம் - பரிணமமும், ஆரம்பம் - ஆரம்பமும், விவர்த்தமது ஆம் - விவர்த்தமும் என நான்கு பிரகாரம் ஆகும், அவற்றின் - அவற்றிற்கு, முறை - கிரம மாக, திட்டாந்தம்-திருஷ்டாந்தம், விரிந்த - விரிக்கப்பட்ட, படம் - வஸ்திரம், குடிபாவம் - கூடாரத் தன்மையினை அடைதலும், பால்-க்ஷீரம், தயிர் ஆகாரம் - ததி ஆகாரத்தினை அடைதலும், உரைத்தல் - சொல்லுதலை, உறு - பொருந்துகின்ற, தந்து - நூல், பட நியாயம் - வஸ்திராகாரத்தை அடைதலும், வல் - வலிய, பழுதை - கயிறு, உரக உரு - பாம்பாகாரத்தினை அடைதலும், ஆகும் - ஆம், [சத்திய வஸ்துவில், மித்தியா பதார்த்தம் கற்பிதம் ஆவதற்கு உவமாநங் கூறுகின்றார்.] திரிதல் இல் - கெடாத, மெய்ப் பொருளில் - சத்திய வஸ்துவில், திரிந்திடு - கெட்டுப்போகாநின்ற, பொய்ப் பொருளது - மித்தியா பதார்த்தம், கற்பிதம் ஆதற்கு - கல்பனை ஆவதற்கு, வருத்து - துன்பத்தை தருகின்ற, கயிற்று - ரஜ்ஜு, அரவம் - சர்ப்பமும், கந்தர்வ நகர் - கந்தர்வ பட்டணமும், குற்றி - ஸ்தாணு, மகன் - புருஷனும், கனவு - சொப்பநமும், இந்திர சாலம் - இந்திர ஜாலமும், சுத்திகா - குளிஞ்சில், ரசதம் - வெள்ளியும், தெரித்த - சொல்லாநின்ற, இவை - (ஆகிய) இவை, முதலன - முதலியன, (ஆறும்), உவமை - உபமாநங்கள், ஆம் - ஆகும். எ—று 'விவர்த்தமது' என்பதில், அது பகுதிப் பொருள் விகுதி. பொய்ப் பொருளது என்பதில், அது சுட்டுப் பெயர் பின் வந்தது.

சிவ ஞாந சித்தியார் முதல் சூத்திரம் 24 செய்யுளில்,

மலகன் மங்களோடு விரவரத சுத்த மாயையின்

காரியம், படம் குடியானற் போல, விருத்தி யாம். மல கன்மங்களோடு விரவிய அசுத்த மாயையின் காரியம், பால் தயிர் போல, பரிணாம மாம். எனக் கூறுதல் கொண்டுணர்க,

வாதம், விருத்தி வாதம், பரிணாம வாதம் ஆரம்ப வாதம், விவர்த்த வாதம் என வாதம் நான் காம். வாதம், சொல்லுதல் காரண வாதம், (காரிய உத்பத்தியை) நான்கு பிரகார(மாகச் சொல்லுதல்) ஆம்.

1. ஆரம்ப காரண வாதம் - அநேக காரண ரூப அவயவங்களினது சம்யோகத்தால், யாண்டு அத்தியந்த பிந்நமாய். ஆரம்பிக்கப்பட்ட அவயவி யாகிய காரியத் திரவியம் சமவாய சம்பந்தத்தால் சமவேத மாய் உண்டாகின்றது. அது ஆரம்ப வாத மாம். அதன்கண், காரிய காரணம் இரண்டற்கும், அத்தியந்த பேத அங்கீகாரம் ஆம், எங்ஙனம், கிரியா வாயி லாய் இரண்டு பரமாணுக்களின் சம்யோத்தால் பரமாணு சமவேத த்வீ அணுகமும், மூன்று த்வீ அணுகங்களால் திரி யணுகமும், கபாலங்களால் கடமும், தந்துக்களால், படமும், ஆரம்பிக்கப்படுகின்றன. ஈண்டு, சமவாயி காரணம் பரமாணுவாதிக ளாம். காரண ரூப அவயங்களின் கிரியையினால் (உண்டாய) சம்யோகம் காரணத்தின் கண் உள்ள அசமவாயி காரணம் ஆம். ஈசுவரனது இச்சை, குலாலன், தண்டம், சக்கரம், முதலியன நிமித்த காரணம் ஆம். இது நையாயிர்களால் அங்கீகரிக்கப்பட்டதாம்.

2. பரிணாம வாதம், உபாதாநத்தின் சமசத்தை உடையதாய் யாண்டு ஓர் அம்சத்தின் பரிணாமத்தால் காரிய

ரூப ரூபாந்தர மாக உத்பந்நம் ஆகின்றதோ, அது பரிணும வாதம் ஆம். அதன்கண் பரிணும பரிணுமி இரண்டற்கும் அபேதம் அங்கீகாரம் ஆம். எங்ஙனம்? மண்ணிற்குக் கட ரூப பரிணுமம் ஆம், அந்தக் கரணத்திற்கு, விருத்தி ரூப பரிணுமம் ஆம், பிரகிருதிக்கு மகத் தத்துவாதி ரூப பரிணுமம் ஆம். இது சாங்கியர்களுடைய அங்கீகாரம் ஆம்

3. விவர்த்த காரண வாதம், உபாதாந காரணமே தனது ஸ்வரூபத்தை விடாது- விஷம சத்தையால், காரிய, ரூப வேறு ரூபம் ஆக, யாண்டு உண்டாகின்றதும், தோற்றுகின்றதும். ஆமோ, அது,விவர்த்த வாதம் ஆம். எங்ஙனம்? சுத்தியின்கண் ரஜதத்தின் உத்பத்தி, ஸ்வர்ணத்தின்கண் ஆவரணத்தின் பிரதீதி, பிரஹ்மத்தின்கண் ஸ்வர்க்கத்தின் பிரதீதி யாம். இது, வேதாந்தத்தின் அங்கீகாரம் ஆம். இம் மூன்று வாதங்களில், ஆரம்ப பரிணுமம் என்னும் இரண்டு வாதமும், சுருதி யுக்திகட்கு விருத்தமா யிருத்தலின், வித்துவான்களால் உபேக்ஷிக்கத் தக்கன ஆம். அங்கீகாரம் செய்யத் தக்கனவும் அன்ரும். அவற்றின்கண், பிரகிருதிரூப ஜட பதார்த்தங்கட்கு, ஜகத் காரணத் தன்மை அங்கீகரித்திருத்தலின் எதனல், சூத்தரக்காரர்களாலும், பாஷ்யக் காரர்களாலும், "அது ஈக்ஷித்தது,", "நான் அநேகம் ஆவேன்." என்பன வாதி, சேதந காரணத்தைக் கூறும் சுருதிகளின் பலத்தாலும், வண்டி முதலிய ஜட பதார்த்தங்களின் பிரவிருத்தி, சேதநத்தை அதிஷ்டித்தே பார்க்கப் படுகின்றது, ஸ்வதந்தரம் அன்று" என்பதாதி யுக்தியின் பலத்தாலும் ஆம். அவற்றினது விஸ்தார மான கண்டநம், சாரீர மீமாம்சையின்கண் கூறப்பட்டிருக்கின்றது. அதனுல், ஜிஞ்ஞாசுக்களால் இரண்டு வாதமும் சிரத்தை செய்

யத் தக்க தன்றும். பரிசேஷத்தால். விவர்த்த வாதமே, அத் விதீய ஆத்ம ஞாநத்தின் பொருட்டு ஆதரிக்கத் தக்க தாம். "வாசாரம்பண மாத்திரமே காரியம், காரண ரூப மிருத் திகையே சத்தியம்'', காரிய காரணங்களின் அநந்யத் தன்மை, ஆரம்பண சப்தாதி ஹேதுக்க ளாம்'' என்பன வாதி சுருதி சூத்திரங்கள் பிரமாணம் ஆகலின். என, வேதாந்த பதார்த்த மஞ்ஜூஷா 2, 15 காரண வாதம் கொண்டு கூறுவதும் உணர்க.

விருத்தி வாதம், பரிணும வாதம், ஆரம்ப வாதம் மூன்றும், சுருதி விருத்த, யுக்தி விருத்தம் ஆதலின், தள்ளத் தக்கன வாம். விவர்த்த வாதம் ஒன்றுமே, சுருதி யுக்தி களுக்கு பொருத்த மாய். அதாவது, விருத்தம் இன்றி, அவிருத்தமா யிருத்தலின் கொள்ளத்தக்கதாம் என உணர்க இதனை மதங்களின் சோபாநம் என்னும் நூலில், நாம் எழுதி யிருத்தலின் ஆண்டுக் கண்டு தெளிக.

பஞ்ச தசி 13 அத்வைதாநந்தம்.

3. உயுமுதலு மயன் முவிதம் விவர்திபரி ணமிது வக லுரியதவ விருக டையுமே,

4. ஆரம்பநல் வாதியர் ஒன்றினிலொன்
றுமென்றுரை யாடுவர் நுறனினே,
பேரம்பட மாகலி னூல்பட மோ
பேதம் பினமானவ வத்தைபொருள்,
சேரம்பரி ணமிதை சீரததி
சீர்மண்கட மாடணி யாவதுபோல்,

ஆரம்பணி மானவ வத்தைதிரிந்
தவிர்தந்துற வோவிவர் தம்மதுவே.

எனக் கூறுவதும் கொண்டறிக.

[நிர்விகாரி யாகிய பிரஹ்மத்தினிடத்தில், மித்தியா வஸ்து கற்பிதம் ஆயின், முதல் பிராந்தி ஆத்மாவிற்கா? அநாத்மாவிற்கா என்றும், ஆத்மாவிற்காயினும், ஞாதிரு ஞாந ஞேயப் பிராந்தியினால், அதிஷ்டாநப் பிரஹ்மத்திற்கு ஒரு சம்பந்தமும் இல்லை என்றும், சந்யாசி ஒருவன், ஸ்திரி புருஷ சம்யோக இச்சை என்னும் மூன்றையும், ஸ்வபநத்தின்கண் காண்கினும், ஜாக்கிர அவஸ்தையில் சந்யாசி, நிர்த்தோஷனாக இருப்பது போல என்று திருஷ்டாந்தமும் இருக்கிறது என்றும், மித்தியா திரிபுடித் தோற்றத்தினால், சத்திய வஸ்துவுக்கு ஒரு தோஷமும் இல்லை என்றும், கூறுகின்றார்.]

பொய்ப்பொருள்கற் பிதமாயிற் றவிகாரி யாகப்
பொருந்துமுயி ரிடத்தேன்முன் பிராந்தியார்க் கென்னி,
லொப்பில்சதி பதிரதிமா லுருவச்சொப் பநந்தா
னொருமுநிவன் பாலுதிப்பி னதனாலங் கவனுக்,
கெப்பழுது மிலாததுபோற் சான்றுமாங் மாவி
லிலங்குகுண வுருவமாம் பகுதியினான் மருளு,
மெய்ப் ரிய ஞாதிருவும் பிராந்திஞா நமும்பொய்
விடயஞே யமும்வரினு மவற்கிடையூ றிலையே. (80)

(இ—ள்) அவிகாரி ஆக - நிருவிகார சொரூப மாக. பொருந்தும் - பொருந்தி யிருக்கின்ற. உயிரிடத்து - ஆந் மாவினிடத்து, பொய்ப் பொருள் - மித்தியா பதாத்தங் கள், கற்பிதம் ஆயிற்று ஏல் - கற்பிதமா யிருக்கு மாயின்,

முன் பிராந்தி - ஏற்கனவே (பிரதமப்) பிராந்தி, யார்க்கு-யாவர்க்கு, என்னில் - என்று கேட்கில், [சமாதானங் கூறுகின்றார்] ஒரு முநிவன் பால் - ஒரு யதியி னிடத்து, ஒப்பு இல் - சமாநம் இன்றிய, சதி - ஸ்திரீயும், பதி - புருஷனும், ரதி - ரமிக்கின்ற (இன்பம்), மால் உருவ - இச்சா ரூபம் என்னும் (மூன்றும் தோன்றுகின்ற), சொப்பநம் - சொப்பந மானது, உதிப்பின் உண்டாயின், அந்த - அப்பொழுது, அவனுக்கு - அந்த யதிக்கு, அதனால் - அந்தச் சொப்பநத்தினால், எப் பழுதும் -எவ் வித ஹாநியும், இலாதது போல் - இல்லாதது போல, சான்று ஆம் - சாக்ஷி ஆகிய, ஆந்மாவில் - ஆத்மாவினிடத்து, இலங்கு -விளங்காநின்ற, குண உருவம் ஆம் - குணத் (திரய) சொரூபம் ஆகிய, பகுதியினால் - பிரகிருதியினால், மருளும் - மயக்கத்தினைத் தருகின்ற, மெய்ப்பு அரிய - பிராந்தி, ஞாதிருவும் - ஞாதாவும், பிராந்தி - பிராந்தி, ஞாநமும் - ஞாநமும், பொய் விடய - பிராந்தி, ஞேயமும் - ஞேயமும், வரினும்-தோற்றினும், அவற்கு - ஆத்மாவிற்கு, இடையூறு - ஹாநி, இலை - இல்லை யாம், என்று தான் - ஏ - அசை.

பிரஹ்ம கீதை. 8-5.

தாக்கரும் பரமன் றன்சுதந் தரத்தாற்
றன்னுடை மாயைதன் னாலே,
யாக்கின் னிந்த வுடம்படைந் தறியான்
போலநின் றனைத்தையு மதிலே,
சாக்கிரத் தென்னு மிடம்வகுத் தன்ன
பாநமுந் தையலார் முதலாம்,
போக்கியங் களையும் புசித்திடுங் கனவும்
பண்ணியத் தன்மையே புசிக்கும்,

என வருவனவற்றால் அறிக.

சாக்ஷி மாத்திரமா யிருக்கிற சத்ய ஆத்மாவினிடத்தில், பொய் யான குண ரூபப் பிரகிருதியினுல் மயக்கம் அடைந்து. பொய் யான, ஞாதா ஞாநம் ஙேயம் மூன்றும் உண்டாயினும், ஒரு வித தோஷமும் இல்லை என்று உணர்க. (80)

[ஈசுவர சிருஷ்டி, சீவ சிருஷ்டி என. சிருஷ்டி இரண்டு என்றும், ஈசுவர சிருஷ்டி ரூப மாயா மயப் பிரபஞ்சம், அது தன் ஸ்வரூபம் இருந்தபடியே இருக்க, அந்த ஈசுவர சிருஷ்டிப் பொருளின்மீது, சீவ சிருஷ்டி, பிரியம் அப்பிரியம் உபேக்ஷை முதலியன வாகப் பல பிரகார மாகக் கற்பிக்கின்றது. என்றும், ஸ்திரி முதலியன பிரீதி விஷயம் என்றும், புலி முதலியன வெறுப்பு விஷயம் என்றும், வீதியில் கிடக்கும் துரும்பு முதலியன உபேக்ஷா விஷயம் என்றும், கூறுகின்ருர்.

இறைவனுற் ருேன்றியமா யாமயமா முலக
மிருந்தபடி யிருக்குந்தன் வடிவினு லதனுண்,
மறைவிலாச் சீவபுத்தி விருத்திகற் பிதமா
மற்றொருபோக் கியவடிவ மேவிருப்பு விடயம்,
வெறுவிதாம் வெறுப்புவிட யத்தினெடு நொதுமல்
விடயமெனப் பலவிதமா மவையாவை யென்னின்,
முறையின்வசி தாதிபுலி யெழுவாய்வீழ் துரும்பு
முதலனவா மெனமொழிவர் முற்றுமுணர்ந்
துடையோர். (81)

(இ - ள்) இறைவனுல் - ஈசுவரனுல், தோன்றிய - சிருஷ்டிக்கப்பட்ட, மாயா மயம் ஆம் - மாயா மயம் ஆகிய, உலகம் - பிரபஞ்ச மானது, தன் வடிவினுல் -

தனது சொரூபத்தால், இருந்தபடி - ஏகப்பிரகார மாகவே, இருக்கும் - இருக்கின்றது, அதனுள் - அந்த ஈசுவரனாற் சிருஷ்டிக்கப்பட்ட பதார்த்தங்களுள், ஒரு போக்கிய வடிவமே - ஒரு போக்கிய பதார்த்தமே, மறைவு இலா-அபரோக்ஷ மாக உள்ள, சீவ புத்தி விருத்தி- ஜீவனுடைய புத்தி விருத்தியினால், கற்பிதம் ஆம் - கற்பிக் கப்பட்ட தாகிய, விருப்பு விடயம் - ப்ரீதி விஷயமும். வெறுவிது ஆம் - வெறுக்கத் தக்க தாகிய, வெறுப்பு விடயத்தின் - த்வேஷ விஷயமும், நொதுமல் விடயம் - உபேக்ஷா விஷயமும், என - என்று, பல விதம் ஆம் - அநேக பிரகார மாம். அவை - அப்படிப்பட்ட பதாரத்தங் கள், யாவை - எவை, என்னில் - என்று கேட்கில், முறை யின் - கிரம மாக, வநிதா ஆதி - ஸ்திரீ முதலியனவும் (ப்ரீதி விஷயமும்), புலி எழுவாய் - வியாக்கிரம் முதலி யனவும்) த்வேஷ விஷயமும்), வீழ்-(வீதியில்) கிடக்கின்ற, துரும்பு - திரணம், முதலன - முதலியனவும் (உபேக்ஷா விஷயமும்), ஆம் - ஆகும், என - என்று, முற்றும் உணர்ந்துடையோர் - பூரண ஞானிகள், மொழிவர் - கூறு வார்கள். எ—று. மற்று - அசை, 'ஒடு' எண்ணின் கண் வந்தது.

"முற்றும் உணர்ந்து உடையோர்" என்பதற்கு, எல்லாத் தத்துவங்களையு முணர்ந்து, புறக் கரண மகக் கரணங்களைத் தம் வய மாகக் கொண் டுறையு மெய்ஞ் ஞானிகள் என விளங்க அறிக.

ஈசுவர சிருஷ்டி ஒரே படித்தாக இருக்கும். ஜீவ சிருஷ்டி நாநா வாம். சீவர்களின் புத்தி விருத்தி கற்பிதம்

நாநா விதத்தினால், விருப்பு விஷயம், வெறுப்பு விஷயம், உபேக்ஷா விஷயம் என மூ விதம் ஆம் ஸ்திரி ஆதி பிரீதி விஷயம் ஆம். புலி முதலியன துவேஷ விஷயம் ஆம். வீதியில் கிடக்கிற திரணம் முதலியன உபேக்ஷா விஷயம் ஆம். என உணர்க. (81)

[ஒரே படித் தான ஈசுவர சிருஷ்டியும், பல ஆகாரமான ஜீவ சிருஷ்டியும், ஓர் இடத்து, ஒரு விஷயத்தில் எங்ஙனம் இருக்கும் என்றும், அதற்குச் சமாதாந மாக, ஈசுவர சிருஷ்டி யாகிய ரத்நாதி வஸ்துக்கள், ஒரு படித் தாகவும், போக்தாக்க (ளாகிய ஜீவர்) களின் புத்தி விருத்தி பேதத்தினால், ரத்நாதிகளை அடைந்தவனுக்கு, பிரிய விஷயம் ஆகியும், அடையப் பெருதவனுக்கு, அப்பிரிய விஷயம் ஆகியும், பிரிய அப்பிரியம் இன்றிய சந்யாசிக்கு, உபேக்ஷா விஷய மாகவும், மூன்று பிரகார மாக ஜீவ சிருஷ்டியில் தோன்றுகின்றது என்றும், கூறுகின்றார் [

ஈசனிரு மிதமான வேகாகா ரமும்பின்
  னெய்துமுயிர்க் கற்பிதமாம் பலவாகா ரமுமோர்,
தேசவிட யத்துறுதற் கெவ்வாறிங் கென்னிற்
  றிட்டாந்த மீசனிரு மிதமணியா திகடாம்,
பேசிலொரு தகையாய்ப்போத் திருப்புத்தி தன்கற்
  பிதநாநா விதத்தினு லவைதமைபெற் றோனுக்,
காசைவிட யமதாகிப் பெருற்குவெறுப் பாகி
  யரியதுற விக்குபேட் சாவிடய மாமே. (82)

(இ—ள்) ஈசன் - ஈசனால், நிருமிதம் ஆன - கற்பிக்கப்பட்ட, ஏக ஆகாரமும் - ஏக ஆகாரமும், பின் - பின்னர், எய்தும் - (அதன்கண்) பொருந்தி (யிருக்கின்ற,

உயிர் - ஜீவ, கற்பிதம் ஆம் - கற்பிதம் ஆகும், பல ஆகாரமும் - நாநா வித ஆகாரமும், ஓர் - ஒரு, தேச - இடத்திலுள்ள, விடயத்து - விஷயத்தின்கண், உறுதற்கு - (இரண்டும் ஒரே காலத்தில்) பொருந்தியிருத்தற்கு, இங்கு - இவ்விடத்து, திட்டாந்தம்-திருஷ்டாந்தம், எவ்வாறு-எப்படி' என்னில் - என்று நீ வினவுவா யாகில், [அதற்குச் சமாதாநங் கூறுகின்றார்.] ஈசன் - ஈசனால், நிருமித - சிருஷ்டிக்கப்பட்ட, மணி ஆதிகள் - ரத்நாதி வஸ்துக்கள், பேசில் - சொல்லுமிடத்து, ஒரு தகை ஆய் - ஏகப் பிரகாரமாயிருக்கவும், போத்திரு - போக்தாக்க ளாகிய ஜீவர்களின், பத்தி - புத்தி விருத்தியினால், கற்பிதம் - கற்பிக்கப்பட்ட, நாநா விதத்தினால் - நாநாத் தன்மையினால், அவை தமை - அந்த ரதநாதி வஸ்துக்களை, பெற்றோனுக்கு - அடைந்த புருஷனுக்கு, ஆசை விடயமது ஆகி - ப்ரீதி விஷய மாயும், பெறாத - (அவற்றினை) அடையாத புருஷனுக்கு, வெறுப்பு ஆகி - த்வேஷ விஷய மாகியும், அரிய - (அநேக ஜந்மங்களிற் செய்யப்பட்ட நிஷ்காம் க்ர்மத்தான் அன்றி அடைய) முடியாத, துறவிக்கு - சந்நியாசிக்கு, உபேட்சா விடயம் - உபேக்ஷா விஷயமும் (என) ஆம் - (பல விதம்) ஆம். எ—று.

தாம் - தன் - ஏ - "அவைதமை" என்பதில் - தம் - சாரியை. "விடயமது" என்பதில், அது சுட்டுப் பெயர். இயற்பெயரும் சுட்டுப் பெயரும் ஒருங்கே நின்று ஒரு பொருளையே யுணர்த்தும், தெளிவின் பொருட்டெனக் காண்க சுட்டுப் பெயர் இயற்பெயருக்குப் பின்னரே வரும் இயற்பெயர் என்பது, பொதுப்பெயர் தான் எனக் கொள்ளின், அஃறிணைப் பெயர்க்கும் உயர்திணைப் பெயர்க்

கும், சுட்டுப் பெயர் பின்னரே வரு மியல்பால் வந்த தென்க. இம் முறையை, "இயற்பெயர்க் கிளவியுஞ்', என்னுந் தொல் காப்பிய நூற்பா வாலு, மத னுரையாலு மறிய லாம்.

ஈசுவர சிருஷ்டி யான விஷயம்-சிதாபாசனுல் அறியப் படும். ஜீவ சிருஷ்டி யான விஷயம், சாக்ஷி ஞானத்தினுல் பிரகாசிக்கப்படும் என அறிக, ஈசுவர சிருஷ்டி யாகிய ஒரே ஆகாரமும், சீவ சிருஷ்டி ஆகிய பல ஆகாரமும், ஒரு தேசத்தில் உள்ள விஷயத்தில் பொருந்தியிருத்தலுக்கு திருஷ்டாந்தம் கூறு வாம் ஈசுவர சிருஷ்டி யாகிய ரத்நம் முதலியன ஸ்வரூபத்தில் ஒரேபடித் தாக இருக்கவும், போக் தாக்க ளாகிய ஜீவர்களின் புத்தி விருத்தியினுல் கற்பிக்கப் பட்ட நாநாத் தன்மையினுல், ரத்நம் கிடைத்தவருக்கு பிரீதி விஷய மாகவும், கிடைக்காதவருக்கு துவேஷ விஷய மாகவும், சந்யாசிக்கு உபேக்ஷா விஷய மாகவும், மூ வித மாகவும், இருக்கும் என உணர்க. (82)

[ஈசுவர சிருஷ்டியும், ஜீவ சிருஷ்டியும், நன்ருக விளங்குவதற்கு வேறு ஒரு திருஷ்டாந்தம் கூறி விளக்கு வாம் என்றும், ஸ்திரியின் (ஈசுவர சிருஷ்டி) தூல சரீரம் ஒரு படித் தாக இருக்க. போக்தாக்க ளாகிய ஜீவர்களின் புத்தி விருத்தி கற்பித பேதத்தினுல், ஜீவ சிருஷ்டி யில், தகப்பனுக்குப் புத்திரி யாகவும், புருஷனுக்கு மனைவி யாக வும், புத்திரனுக்கு, மாதா வாயும், மாமனுருக்கு, மருமக ளாகவும், ஜீவ சிருஷ்டியில் நால் வகை யாக இருக்கும் என்றும், இவ் வாறே, எல்லா பிரபஞ்ச வஸ்துக்களும், ஈசுவர சிருஷ்டியும், ஜீவ சிருஷ்டியும், என இரு வகையும், கலந்தே நிற்கும் எனவும் கூறுகின்ருர்.]

அப்பொருடான் விளங்கித்தோன் றுறுவதற் கின்னு
மறைதுமொரு திட்டாந்தந் தோன்றியவோர் மாது,
மெய்ப்பரிசோர் திறமாகப் போத்திருக்கள் புத்தி
விருத்திகற் பிதத்தினாற் றாதைக்கு மகளாய்த்,
தப்பில்கொழு நற்குக்கா தலியாகி மகற்குத்
தாயாகி மாதுலற்கு மருகியா யிருப்ப,
ளிப்பரிசு விடயமெலா மிறைவனிரு மிதமு
மிலங்குயிர்க்கற் பிதமுமா மிருதிறத்துற் றிடுமே. (83)

இ—ள் அப் பொருள் - (இப் பொழுது கூறியபடி, ஒரு வஸ்துவில், ஈசுவர சிருஷ்டி ஏகாகாரமும், ஜீவ சிருஷ்டி நாநா ஆகாரமுமா யிருக்கும் என்னும்) அர்த்த மானது. விளங்கி தோன்றுவதற்கு - (உன் னுடைய அந் தக் கரணத்தில்) நன்றாக ப்ரதீதியாவதற்கு, இன்னும் - பின் னும், ஒரு திட்டாந்தம் - ஒரு திருஷ்டாந்தம், அறைதும் - (யாம்) கூறுதும் (நீ கேட்பா யாக), தோன்றிய - (மாதா பிதாக்களினால்) உண் டாகிய, ஓர் - ஒரு. மாது - ஸ்திரீ யின், மெய்ப் பரிசு - (மாமிச மய ரூப) சரீரத்தின் தன்மை, ஓர் திறம் ஆக - (ஈசுவர சிருஷ்டி யாகி) ஏகாகாரமா யிருக்கவும், போத்திருக்கள் - போக்தாக்க ளாகிய ஜீவர் களின், புத்தி விருத்தி கற்பிதத்தினால் - அந்தக் கரண விருத்தி கல்பநா பேதத்தால், தாதைக்கு - பிதாவுக்கு, மகள் - ஆய் - புத்திரி யாகியும், தப்பு இல் - (கிரகஸ்தா சிரமத்தினின்றும்) நழுவாத, கொழுநற்கு - பதிக்கு, காதலி ஆகி - சதி ஆகியும், (மனைவி யாகியும்) மகற்கு - புத்திர னுக்கு. தாய் ஆகி - மாதா ஆகியும், மாதுலற்கு - மாம னுக்கு, மருகி ஆகி - மருமகள் ஆகியும், இருப்பள் - இருக் கின்றாள், (இருப்பாள் விளங்குவாள்), இப் பரிசு - இத்

தன்மை யாகவே, எலாம் விடயம் - சர்வ விஷயங்களும், இறைவன் - ஈசுவர, நிருமிதமும் - சிருஷ்டியும், இலங்கு - விளங்காநின்ற, உயிர் - ஜீவ, கற்பிதமும் ஆம் - சிருஷ்டியும் ஆகிய, இரு - இரண்டு, திறத்து - தன்மையாகவே, உற்றிடும் - பொருந்தியிருக்கும். எ—று. தான் - ஏ - அசை.

"தோன்றுவதற்கு" என்பதில், அது - பகுதிப் பொருள் விகுதி. ஈசுவர சிருஷ்டி, சிதாபாச விஷய மாம், ஜீவ சிருஷ்டி, சாக்ஷி பாஸ்ய மாம் என அறிக.

ஈசுவர சிருஷ்டி, ஒரு படித் தாகவும், சீவ சிருஷ்டி, நாநா பிரகாரம் ஆக இருக்கும், என்பதற்கு, வேறு ஒரு திருஷ்டாந்தம் கூறுவாம் அதனையும் உணர்க.

மாதா பிதாக்களால் உண்டு பண்ணப்பட்ட ஒரு ஸ்திரீயின் மாமிச மய சரீரத் தன்மை, ஈசுவர சிருஷ்டி யாகிய ஒரே படித் தாக இருக்க, போக்த்தாக்க ளாகிய ஜீவர்களின் அந்தக் கரண விருத்தி கற்பநா பேதத்தினால், பிதாவுக்கு, புத்திரி யாகவும் பதிக்குச், சதி யாகவும். புத்திரனுக்கு, மாதா வாகவும், மாமனுக்கு, மருமகள் ஆகவும் இருப்பள். இவ் வாறே, சர்வ பதார்த்தங்களும், ஈசுவர சிருஷ்டியும், ஜீவ சிருஷ்டியும், என இரு வகை யாகவே பொருந்தி யிருக்கும் என உணர்க.

பஞ்ச தசி 4 துவித விவேகம்

9 ஈசன் செய்கை யுயிருணவிவ்
  விரண்டோ டொறுமித் துறுஞால,
நேச மகளிர் தாதையினை
  னேர்ந்து பதிக்கே நுகர்வாம்போற்,

பாச மாயா விருத்திமயப்
பகவ னினைவு தங்கருவி,
நீச மநத்தின் விருத்தியுயிர்
நினைவு நுகர்வின் சாதநமே.

10 பகவா னுளுற்று மணியாதி
பாதார்த்த மொருபண் பாய்நிற்க,
நுகர்வான் மதிப்பல் விருத்திகளா
னுகர்ச்சி நாநா விதமாகும்,
தகவா மணிபெற் றவன்மகிழ்வன்
சாரா மையின்மற் றவனயர்வன்,
மிகநோக் கினுமன் னதின்விரத்தன்
மேவா னுவகை யிடும்பையுமே.

11 விருப்பு வெறுப்பு பேட்சையெனும்
வேறு டாடு மணிமருவும்,
சிருட்டி யுயிரி னுமீசன்
சிருட்டி பொதுமை வடிவாகும்,
மருக்கி மனைவி மதுநிமகள்
மாதா வெனப்பல் விதமாவள்,
ஒருத்தி மாமன் முதலானோ
ருணர்வா லுருவிற் பிரிவிலளே.

என வருவனவற்றால் உணர்க. (83)

[ஈசுவர சிருஷ்டி யாகிய பிரபஞ்சம், ஜீவர்களுக்குப் பாதகஞ் செய்யாமையானும், சாஸ்திரம், ஆசாரிய ஸ்வரூப மாக, மோக்ஷ சாதந மாய் இருத்தலினாலும், ஜீவர்களால் தியாகம் செய்ய முடியாமையினாலும், ஈசத் த்வைதம் இருந்தபடி இருக்க என்றும், ஜீவத் த்வைதம், சாஸ்

திரப் பிரபஞ்சம், அசாஸ்திரப் பிரபஞ்சம் என்று இரு வகைத் தாகும் என்றும், அசாஸ்திரப் பிரபஞ்சமும், தீவிரப் பிஞ்சம், மந்தப் பிரபஞ்சம், என்று இரு வகைத் தாகும் என்றும், கூறுகின்றார்.]

அண்ணனிரு மிதப்பிரபஞ் சந்தான்வா திப்ப
தல்லாமை யானுநூ லாசிரிய வடிவாய்,
நண்ணலரு முத்திசா தநமாயுந் தன்று
னழுவவொண்ணு மையினுனு மனையதுதா நிற்க,
வெண்ணரிய சீவகற் பிதமாய வதுதா
னிருபிரபஞ் சங்கள்சாத் திரத்தொடசாத் திரமாங்,
கண்ணுமசாத் திரப்பிரபஞ் சங்கொலிரு திறனுங்
கழறிற்றீ விரமந்த மெனவைபீண் டுரைப்பாம். (84)

இ—ள் அண்ணல் - (அந்த ஜீவ சிருஷ்டி, ஈசுவர சிருஷ்டி யாகிய, இரண்டனுள்) ஈசுவரனால், நிருமித - சிருஷ்டிக்கப்பட்ட, பிரபஞ்சம் - பிரபஞ்ச மானது, வாதிப்பது அல்லாமையானும் - (நமக்குப்) பாதகம் (வருத்துவது) செய்யாமையானும், நூல் - சாஸ்திர, ஆசிரிய - ஆசாரிய, வடிவு ஆய் - சொரூபமா யிருந்து, நண்ணல் அரும் - (சாமாந்நியர்களால்) அடைதற் கரிய, முத்தி- மோக்ஷத்திற்கு, சாதநம் ஆயும் - சாதக மாயும், தன்றால் - நம்மால், நழுவ - தியாகஞ் செய்வதற்கு. ஒண்ணுமையினு னும் - அசக்கியமா யிருத்தலினாலும், அனையது - அந்த ஈச த்வைதம், நிற்க - (இருந்த படியே) இருக்குக, எண்ணு - கருதுதற்கு, அரிய - அருமை யான, சீவ - ஜீவ, கற்பிதம் ஆய அது - த்வைத மானது, சாத்திரத்தொடு - சாஸ்திரீ யப் பிரபஞ்சம் (என்றும்), அசாத்திரம் - அசாஸ்திரீயப்

பிரபஞ்சம் (என்றும்), இரு பிரபஞ்சங்கள் ஆம் - இரண்டு பிரபஞ்சங்கள் ஆகும், கண்ணும் - (அவற்றுள்) கருது கின்ற, அசாத்திரப் பிரபஞ்சம் - அசாஸ்திரீயப் பிரபஞ்ச மானது, கழறில் - சொல்லுமிடத்து. தீவிரம் - தீவிர(ப் பிரபஞ்சம் என்று)ம், மந்தம் என - மந்த(ப் பிரபஞ்ச)ம் என்றும், இரு திறன் ஆம் - இரண்டு பிரகார மாம், அவை- அவற்றினை, ஈண்டு - இவ் விடத்து, உரைப் பாம் - கூறு வாம். எ—று. தான் - தான் - தான் - கொல் -அசை.

'கற்பிதமாய அது' என்பதில், 'அது' என்பதும், சுட்டுப் பெயரே.

ஜீவ சிருஷ்டி யான அந்தக் கரண கற்பனை ஆனது, அந்வய வியதிரேகங்களால், தன்னை வருத்துவதா யிருப்பத னுலும், அகந்தை, மமதை ரூபத்தால், பந்த காரண மாயும், தனது யத்தநத்தினுல் நிவிர்த்தித்தற்குக் கூடுவதனுலும், சீவ சிருஷ்டியைத் தானே துடைத்தல் வேண்டும்- இதுவே, மனோ நாசம் என்றும், வாசநா க்ஷயம் என்றும், சீவந் முக்தி வருவதற்குச் சாதநம் என்றும் சொல்லப்படும். ஆகையால், சீவ சிருஷ்டியில், இவ் வளவு கருத்தும் கொள் ளல் வேண்டும்.

சீவ சிருஷ்டியும், ஈசுவர சிருஷ்டியும், எனப் பிரபஞ் சம் இரு வகைத் தாம். சீவ பிரபஞ்சம், சாஸ்திரீயப் பிர பஞ்சம் என்றும், அசாஸ்திரீயப் பிரபஞ்சம் என்றும், வேறுபாட்டால் இரு வகைத் தாம். அசாஸ்திரீயப் பிரபஞ் சமும், தீவிரப் பிரபஞ்சம், மந்தப் பிரபஞ்சம் என இரு வகைத் தாம் என உணர்க. (84)

[ஜீவ கற்பித பிரபஞ்ச திரி விதத்தினை விளக்குவான் றொடங்கி, ஜீவப் பிரஹ்ம விசாரம், சாஸ்திரப் பிரபஞ்சம் என்றும், அசாஸ்திரப் பிரபஞ்சத்தில், தீவிரப் பிரபஞ்சம், காமக் குரோதாதிகள் என்றும், மந்தப் பிரபஞ்சம், தன் ஜாதி கருமாதிகளும், மநோ ராஜ்யமும், ஆகும். என்றும், ஜீவ கற்பித திரி வித பிரபஞ்சங்களுள், அசாஸ்திரப் பிரபஞ்ச மான தீவிரப் பிரபஞ்சம், மந்தப் பிரபஞ்சம் இரண்டும், ஆத்ம சாக்ஷாத்காரத்திற்கு விரோதி யாக இருக்கிறபடியால், ஞாந அப்யாசத்திற்கு முன்னம் விடத் தக்கன என்றும், சாஸ்திரப் பிரபஞ்சம், ஆந்ம ஞாநத்திற்குச் சாதகமா யிருக்கிறபடியால், ஆத்ம சாக்ஷாத்காரத்தின் பின் விடயத் தக்கது என்றும் கூறுகின்றார்.]

சீவபர விசாரணையே யுரைத்தலரி தாஞ்சாத்
திரப்பிரபஞ் சங்காமா திகளேதீ விரமாங்,
காவலுறுஞ் சாதிகரு மாதிகமொ டேதன்
கருதுமநக் கற்பிதமே மந்தமசாத் திரத்தின்,
மேவுறுமவ் விருதிறனு மாருயிர்மெய்க் காட்சி
விரோதிகளா தலின்ஞாநம் பயிறற்கு முன்ன,
மோவுவசாத் திரப்பிரபஞ் சந்தான்மெய்ஞ் ஞாந
வுதவியா யாந்மக்காட் சிப்பின்விடு வதுவாம். (85)

இ—ள் சீவ பர விசாரணையே - ஜீவப் பிரஹ்ம விசாரமே, உரைத்தல் - சொல்லுதற்கு, அரிது ஆம் - அருமை யாகிய, சாத்திரப் பிரபஞ்சம் - சாஸ்திரீயப் பிரபஞ்ச மாம், காம ஆதிகளே - காமக் குரோத முதலி யனவே, தீவிரம் ஆம் - (அசாஸ்திரீயத்தில்) தீவிரப் பிரபஞ்ச மாம், காவல் உறும் - காப்பைப் பொருந்தி யிருக்கின்ற, தன் சாதி கரும ஆதிகம் ஒடு - தன் ஜாதி கருமம்

முதலியவற்றோடு, கருதும் - கருதுகின்ற, மந கற்பிதமே - மநோ ராஜ்யமே, மந்தம் - மந்தப் பிரபஞ்ச மாம், அசாத்திரத்தில் - (ஜீவ கற்பித மூன்று பிரபஞ்சங்களுள்) அசாஸ்திரீயப் பிரபஞ்சத்தின்கண், மேவு உறும் - பொருந்தியிருக்கின்ற, அவ் இரு திறனும் - அந்த (தீவிரப் பிரபஞ்சம், மந்தப் பிரப்ஞ்சம், என்று சொல்லப்பட்ட) இரண்டு வகைகளும், ஆர் - நிறைந்த, மெய் - உண்மை யான, உயிர் - ஆத்ம, காட்சி - சாக்ஷாத்கார, விரோதிகள் ஆதலின் - விரோதிகளா யிருத்தலின், ஞாநம் - ஞாந, பயிற்கு - அப்பியாசத்திற்கு, முன்னம் - பூர்வமே (சாதந அநுஷ்டாந காலத்திலே என்றபடி), ஒவுவ - விடத் தக்கன வாம், சாத்திரப் பிரபஞ்சம் - சாஸ்திரீயப் பிரபஞ்சமானது, மெய் ஞாந - யதாத்த ஞாநத்திற்கு, உதவி ஆய் - சாதநமா யிருப்பதால், ஆந்ம - ஆத்ம, காட்சி - சாக்ஷாத்காரத்தின், பின் - பின்னர், விடுவது ஆம் - (பிணம் சுடு தடி போல்) விடத் தக்க தாம். எ-று- ஏ தான் - அசை.

சாஸ்திரத்திஞல் விதிக்கப்பட்டவை, சாஸ்திரீயப் பிரபஞ்சம் ஆம். அதஞல், நிஷேதிக்கப்பட்டவை, அசாஸ்திரீயப் பிரபஞ்சம் ஆம், என உணர்க. சாஸ்திரிய பிரபஞ்சம் ஆத்ம சாக்ஷாத் காரம் வந்தபின் பிணம் சுடு தடி போல் விடத் தக்க தாம் என்க.

தத்துவ ராய சுவாமிகள் பாடு துறை. 56 வது அக்கைச்சி

"பிணஞ் சுடு தடியென்ன என்னைக்கொண்டே
பெறும்பற்றை எல்லாம றச்சாடி,
அணைந்தவென் னையுமப் படியீறில்போ
தத்தில்விட் டநுயோகத் திருந்தானே".

என வருவதால் உணர்க. (85)

[அசாஸ்திரப் பிரபஞ்சம் ஆன தீவிரப் பிரபஞ்சம், மந்தப் பிரபஞ்சங்களை, ஆத்ம ஞானம் அடைந்த பின் வைத்துக்கொள்ளலாமோ எனில், ஜீவன் முக்திக்கு விரோதி யாக இருத்தலின், பின்னரும், விடத் தக்கன ஆம் என்றும், அவச்சிந்ந உபாதி, பிரதிவிம்ப உபாதி, அத்தி யாச உபாதி என உபாதித் திரயம் உள என்றும், சுழுத்தி ஸ்வரூப அவித்தையே ஆவரண அவச்சிந்ந உபாதி என் றும், பிரதிவிம்ப உபாதியினைக் கூறுவான், அவித்தியா காரிய அந்தக்கரணத்தில் என்றும், கூறுகின்றார்.]

தீவிரமந் தங்களுயிர்க் காட்சியுற்ற பின்னுந்
திகழ்முத்தி பெறற்பொருட்டு விடுவனவென் றறிக,
பாவமுறு மவச்சிந்நோ பாதிபதி விம்போ
பாதியுட னத்தியா சோபாதி யெனவே,
மேவுமுபா திகளொருமூன் றுளவவற்றை முறையே
விளம்பியிடிற் சுழுத்தியுரு வாமவித்தை தானே,
யாவரண வவச்சிந்நோ பாதியாம் பிரத்தியக்
காந்மாவுக் கதனதுகா ரியமாம்புத் தியினில். (86)

இ—ள் தீவிரம் மந்தங்கள் - தீவிர(ப் பிரபஞ்ச)ம் மந்த(ப் பிரபஞ்ச)ங்களாகிய (இரண்டும்), உயிர்—ஆத்ம, காட்சி - சாக்ஷாத்காரத்தை, உற்ற - அடைந்த, பின்னும், பின்னரும், திகழ் - விளங்காநின்ற, முத்தி - (ஜீவந் முத்தி யாகிய,) மோக்ஷ, பெறல் பொருட்டு - சித்தியின் பொருட்டு, விடுவன - விடத் தக்கன வாம், என்று-என, அறிக - (நீ) உணர்வாயாக. [இனி உபாதித் திரயத்தினைக் கூறுகின்றார்.] பாவம் உறும் - இயல் பாகப் பொருந்தி யுள்ள, அவச்சிந்ந உபாதி - அவச்சிந்ந உபாதி (என்றும்), பதிவிம்ப உபாதி - பிரதிபிம்ப உபாதி (என்றும்), அத்தி

யாச உபாதி என - அத்தியாச உபாதி என்றும், மேவும் - (ஆத்மாவினிடத்துப்) பொருந்தாநின்ற, ஒரு - ஒப் பற்ற, முன்று - மூன்று, உபாதிகள் - உபாதிகள், உள - இருக் கின்றன, அவற்றை - அந்த மூன்று உபாதிகளை, முறையே - கிரமமாக, விளம்பியிடில் - அறையுமிடத்து, சுழுத்தி உரு ஆம் - சுழுத்தி சொரூப மாகிய, அவித்தை தானே - அவித்தையே, பிரத்தியக் ஆந்மாவுக்கு - பிரத்ய காத்மாவிற்கு, ஆவரண - மறைப்பு ரூப, அவச்சிந்ந உபாதி ஆம் - அவச்சிந்ந உபாதி யாகும், அதனது - அந்த அவித்தையினது, காரியம் ஆம் - காரிய மாகிய, புத்தி யினில் - அந்தக்கரணத்தில். எ-று.

'அவித்தை தானே' என்பதில், தானே ஏ-ஏ-அசை.

(இச் செய்யுள் குளகம்)

தீவிரப் பிரபஞ்சம், மந்தப் பிரபஞ்சம் இரண்டும் ஆத்ம சாக்ஷாத்காரம் வந்த பின்னரும், விதேக முக்தி யினை அடைதற் பொருட்டும் கொள்ளத் தக்கன அன்றும். அவச்சிந்ந உபாதி, பிரதிவிம்ப உபாதி, அத்தியாச உபாதி என மூன்று உபாதிகள் உண்டு. சுழுத்தி ரூப அவித்தை, பிரத்தியக் ஆத்மாவிற்கு ஆவரண அவச்சிந்ந உபாதி என்று உணர்க.

பஞ்ச தசி 4 துவித விவேகம்.

21 அண்ண னிருமி தத்துவித
மலவா திப்ப தாங்கருவி,
யொண்ணு மதுவோ நழுவவிதா
லுறைக வேறெவ் வாருகும்,

எண்ணில் சீவத் துவிதமிரண்
டெழினூ னூலி லாமையென,
நண்ணற் பாற்ருந் தத்துவத்தின்
ஞான நண்ணும் வரை நூலே.

22 சீவப் பிரம விசாரணையே
செப்பு நூன்மா நதசெகமா,
மேவத் தகுதத் துவமுனிரின்
விடற்பாற் றதுவென் றிடுஞ்சுருதி,
மாவல் லப நூல் கற்றறிஞன்
மாறி மாறித் தான்பயிற்சித்,
தோவ வரிய பரம்பொருடேர்ந்
துற்கை போற்பின் பதைவிடுக.

23 நூலைப் பயிற்சித் தறிஞன்மதி
நுண்மை மதிபெற் றவனுய்வைக்,
கோலை விடல்போற் ருனியங்கைக்
கொண்டோ னூலை யறவிடுக,
மேலைப் பொருடேர்ந் தந்தணனும்
விறலோன் பிரஞ்ஞை பெறவேண்டும்,
மாலைத் தருமிக் கொலிசினையல்
வாக்குக் கதுமிக் கிளைப்பன்றே.

24 ஆக்க மவனே கனைத்தெரிக
வயலாம் வாக்கு களையொழிக,
வாக்கை யறிஞன் மநத்தொடுக்க
வென்ப தாதி மறைதெரிக்கு,
மாக்க னூலி லாமையிரு
வகைதீ விரமந் தழுமென்றே,
தாக்குங் காமா திகடீவிரஞ்
சலிக்கு மனோராச் சியமந்தம்.

25 போதம் பெறமெய்க் காட்சியின்முற்
புரையா மிரண்டும் விடற்பாற்றும்.
சாத நங்க ளிடைச்சமையுஞ்
சமாதா நமுங்கேட் டனமதனுன்,
மீதக் காட்சி மேலுமவை
விடற்பாற் றரிய முத்திபெறக்,
காத லாதி பந்தமொடு
கலப்போன் முத்தி கலவாமுல்.
என வருவனவற்றுல் உணர்க. (86)

[ஆங்மாப், பிரதிவிம்மித்திடுதலே, பிரதிவிம்ப உபாதி என்றும், அந்தக் கரணத்தில், உள்ள சுக துக்கம் முதலிய வற்றை, ஆத்மா, அநுபவிப்பது போல, முயற்சித்தல், அத்தியாச உபாதி என்றும், அத்தியாச லக்ஷணம், சுத்தி ரஜதம் போல, தனது அபாவ அதிகரணத்தில், தனது அவ பாசம் (வேறு ஒன்றில் வேறு ஒன்றின், ஞாநம்) என்றும், அவ் வத்தியாசம், மித்தியா அத்தியாசம் என்றும், இதர அத்தியாசம் என்றும், இதர இதர அத்தியாசம் என்றும், சத்திய அத்தியாசம் என்றும், சதுர் விதம் ஆம் என்றும், கூறுகின்றார்.]

பற்றியவாங் மாப்பதிவிம் பித்திடுத ருனே
பதிவிம்போ பாதியாம் புத்திகத மாய,
முற்றுசுக துக்கங்க ளுயிர்நுகர்தல் போல
முயலுதலே யத்தியா சோபாதி யாகு,
முற்றவத்தி யாசவிலக் கணமாம்வே ருென்றி
லொன்றினது புத்தியிப்பி வெள்ளியது போல,
மற்றதுநால் வகைப்படுமால் மித்தையுட னிதர
மற்றிதரே தரஞ்சத்தி யங்களிரு லன்றே. (87)

இ—ள் பற்றிய - பொருந்தி யுள்ள, ஆங்மா - (பிரத்தியக்) ஆத்மா, பதிவிம்பித்திடுதல் தானே - பிரதி பிம்பித்தலே, பதிவிம்ப உபாதி ஆம் - பிரதிபிம்ப உபாதி யாம், புத்தி - அந்தக் கரண, கதம் ஆய - சம்பந்தம் ஆகிய, முற்று - எல்லா, சுக துக்கங்கள் - சுக துக்கங்களையும், உயிர் - ஆத்மா, நுகர்தல் - அநுபவித்தல், போல - போல், முயலுதலே - யத்தநஞ் செய்தலே, அத்தியாச உபாதி ஆகும் - அத்தியாச உபாதி யாம், [அத்தியாச லக்ஷணங் கூறுகின்றார்.] உற்ற - பொருந்தி யுள்ள, அத்தியாச - அத்தியாசத்தின். இலக்கணம் - லக்ஷண மானது, வேறு ஒன்றில் - (தத் தர்ம மல்லாத) வேறு ஒரு பதார்த்தத்தில், ஒன்றினது - தத் தர்மத்தின்து, புத்தி - ஞாநம், ஆம் - ஆகும். [அத்தியாசத்திற்குத் திருஷ்டாந்தங் கூறுகின்றார்.] இப்பி (ரசதத் தன்மை இன்றிய) சிளிஞ்சிலி னிடத்து, வெள்ளி யது - ரசதத் தன்மை ஞாநம், போல - போன்றும், [அவ் அத்தியாசத்தினை நால் வகை யாகப் பிரிக்கின்றார்.] அது - கூறிய அத்தியாச மானது, மித்தை - மித்தியாத்தியாசம், இதரம் - இதராத்தியாசம். இதர இதரம் - இதரேதராத்தியாசம், சத்தியங்களினுல் - சத்தியாசங் (களென்னும் பேதங்) களால், நால் வகைப்படும் - சதுர் விதம் ஆம், எ—று.

மற்று - ஆல் - அன்று - ஏ - "தானே" என்பதில், தான் - அசை. "வெள்ளியது" "ஒன்றினது" என்பவற்றில், அது - என்பதும், சுட்டுப் பெய ராகும். உடன் என்பது, எண் ஒடுவிற்குப் பதி லானது என்க.

"உபாதி" என்றது, தன் தருமத்தை, தன்னைச் சம்பந்தித்த மற்றொன்றன் தரும மாகத் தோற்றுவித்த லாம்.

"வேறொன்றை ஒன்றாகக் கருதல் இப்பி வெள்ளி யது போல, உற்ற அத்தியாச இலக்கணம் ஆம்" என்றிருத்தல், செய்யுள் தவறு. கன்னட விவேக சிந்தா மணிக்கும், விரோதம் வரும். ஆறு உரைகாரரும் இந்தப் பாடத்தையே ஒப்பி யிருக்கின்றனர். அந்நியோந்நிய அபாவத்துக்கும், அத்தியாசத்துக்கும், வித்தியாசம் தெரிய வேண்டும். ஆகலின். "வேறு ஒன்றில் ஒன்றினது புத்தி" என்று இருத்தலே தகும், விவேகசிந்தாமணிக்கும், விரோ தம் இல்லை யாகும்.

அத்தியாச லக்ஷணம், ஸ்ரீ சங்கர பகவத் பாதாசாரிய ஸ்வாமிகளால், சாரீரக பாஷ்யத்தில், "ஸ்மிருதி ரூப மாய் அந்நியத்தின்கண் பூர்வ திருஷ்ட சஜாதீய அந்நியத்தின் அவபாசம் அத்தியாசம் ஆம்" என ஒரு வாக்கியத்தின் கண்ணே காண்பிக்கப்பட்டிருக்கின்றது.

இவ் வத்தியாசம், ஞான அத்தியாசம். அர்த்த அத்தி யாசம் என்றும், சாதி அத்தியாசம், அநாதி அத்தியாசம் என்றும், ஸ்வரூப அத்தியாசம் - தர்மி அத்தியாசம், சம் சர்க்க அத்தியாசம் என்றும், அந்யோந்ய அத்தியாசம், ஸ்வரூப அத்தியாசம் சம்சர்க்க அத்தியாசம் என்றும், கூறப்படும்.

இவ் வத்தியாசம், மித்தியா அத்தியாசம் என்றும், இதர அத்தியாசம் என்றும், இதரேதராத்தியாசம் என்றும், சத்திய அத்தியாசம் என்றும், கூறப்படும். எனவும், உணர்க. இதன் விரிவை, வேதாந்த பதார்த்த மஞ்ஜூஷா 1வது 22வது பிரிவில், விரிவாகக் கண்டு தெளிக.

அவித்தியா காரிய மான அந்தக்கரணத்தில், பிரத்யக் ஆத்மா, பிரதிவிம்பித்திடுதல். பிரதிவிம்ப உபாதியாம் எனவும், புத்தியில் உள்ள சுக துக்கங்களை ஆத்மா அநுபவித்தல் போல, முயற்சித்தலே, அத்தியாச உபாதி யாம் எனவும், உணர்க. (87)

[ஆத்ம சம்பந்தத்தினால், அநாத்மாவிற்கு உண்டாம், மித்தியா அத்தியாசாதி பேதங்களைக் கூறுவான் றொடங்கி, ஜலத்திற்கு, அக்நி சம்பந்தத்தினால் உஷ்ண சக்தி உண்டாவது போல, நித்திய மான பிரத்தியக்காத்ம சம்பந்தத்தினால், தூல சரீரத்திற்கு, பாதம் நடத்தல், கண் பார்த்தல், மநம் சிந்தித்தல், புத்தி உணர்தல் முதலிய சக்திகள் உண்டாகின்றபடியால், தூல சரீரம், மித்தியா அத்தியாசம், ஆத்மாவிற்கு, என்றும், அநித்திய மான ஞாந இந்திரிய கர்ம இந்திரியங்களை, ஆத்மாவிற்கு, இதர அத்தியாசம் என்றும், அந்தக் கரணம், (ஆத்மாவிற்கு), இதர இதர அத்தியாசம் என்றும், மூல அகங்காரம் (ஆத்மாவிற்கு), சத்திய அத்தியாசம் என்றும், மூ வகை அத்தியாசங்களையும், கூறுகின்றார்.]

நெருப்பினொடு புணர்ச்சியாற் புனற்கழற்சி வரல்போ
  னித்தமுறு மாத்மசந் நிதியதனின் முறையே,
சரிப்பினொடு காண்டனினை வுறலறிதல் வரலாற்
  றகுந்தூல மெய்மித்தி யாத்தியா சந்தா,
னிருப்பருமிந் தியங்களே யிதராத்தி யாச
  மிதரேத ராத்தியா சங்கரண மாகுந்,
தரிப்பரிய மூலவகங் காரமது தானே
  சத்தியாத்தி யாசமெனச் சாற்றுவர்தக் கவரே. (88)

இ—ள் புனற்கு - ஜலத்திற்கு, நெருப்பின் - அக்கினியின், புணர்ச்சியால் - சம்பந்தத்தினால், அழற்சி - உஷ்ணம், வரல் - உண்டாதல், போல் - போல, நித்தம் - நித்திய மாக. உறும் - பொருந்தி யிருக்கின்ற, ஆன்ம — (பிரத்தியக்) ஆத்மாவின், சந்நிதியதனின் - சந்நிதாநத்தினால், முறையே - (சரீரத்திற்கு) கிரம மாக, சரிப்பு (பாதம்) நடத்தல், காண்டல் - (கண்) பார்த்தல், நினைவு உறல் - (மநம்) சிந்தித்தல், அறிதல் - (புத்தி) உணர்தல், வரலால் - (முதலிய சக்திகள்) உண்டாகின்றபடியால், தகும் - தகுதியான, தூல மெய் - தூல சரீரமே, மித்தியா அத்தியாசம் - மித்தியாத்தியாசம் ஆம், இருப்பு அரும் - நாச மடையாநின்ற. இந்தியங்களே - தசேந்திரியங்களே, இதர அத்தியாசம்-இதர அத்தியாசம் ஆகும், கரணம் - அந்தக் கரணமே, இதர இதர அத்தியாசம் - இதர இதர அத்தியாசம் ஆம், தரிப்பு அரிய-நாசம் உறுகின்ற, மூல அகங்காரமது தானே-மூல அகங்காரமே, சத்திய அத்தியாசம் - சத்திய அத்தியாசம் ஆம், என - என்று, தக்கவர் - பெரியோர்கள், சாற்றுவர்-பிரதிபாதியாநிற்பார்கள். எ—று.

"சந்நிதியதனில்" என்பதில், அது - "அகங்காரமது" என்பதில், அது - அஃறிணைப் பெயர்ப் பின் வந்த சுட்டுப் பெய ரென்க. தான் "அகங்காரமது தானே" என்பதில் - தான் - ஏ - அசை. "நெருப்பினொடு" என்பதில். ஒடு கலப்புறு பொருளில் வந்தது. 'சரிப்பினோடு' என்பதில், ஒடு எண்ணுப் பொருளில் வந்தது.

ஸ்தூல சரீரம், மித்தியா அத்தியாசம் எனவும், இந்திரியங்கள், இதர அத்தியாசம் எனவும், அந்தக் கரணம், இதர

இதர அத்தியாசம் எனவும், மூல அகங்காரம், சத்திய அத்தியாசம் எனவும் உணர்க.

[அகங்கார சம்பந்தத்திஞல், ஆத்மாவிற்கு உண்டாம் அத்தியாச பேதங்களைக் கூறுவான் ருெடங்கி, அகங்காரத்தினிடத்தில் ஆத்மாவிற்கு, ரஜ்ஜு சர்ப்பம் போல, அகம் புத்தி உண்டாவதால், அதனை, நிருபாதிக அத்தியாசம் என்றும், அகங்காரத்தின் தர்மங்கள் (ஆத்மாவிற்கு) அகம் கர்த்தா என்று ரக்த ஸ்படிகம் போல உண்டாவதால், அதனை, சோபாதிக அத்தியாசம் என்றும், ஆத்மாவிற்கு, அந்தக் கரண தருமங்கள், சஞ்சல ஜலத்தில் பிரதிவிம்பித்த சூரியப் பிரதிபிம்பம் போல் "அகம் இச்சாமி" என்று உண்டாவதால், அதனை, தத் தருமாத்தியாசம் என்றும், கூறுகின்ருர்.]

ஆங்கார மார்மாவிற் குநானெனலாற் கயிற்றி
னரவமென நிருபாதி காத்தியா சந்தா,
ஞங்கார வியலாந்மா விற்குநான் கர்த்தா
வாமெனலாற் சிவப்புவலம் போற்சோபா திகமா,
மீங்காகுங் கரணதரு மாந்மாவிற் கிச்சை
யினேனுனென் றிருத்தலினு லலைபுனலிற் புக்க,
வீர்ங்கதிரின் விம்பமெனத் தத்தருமாத் தியாச
மெனவுரைப்பர் நான்குடும்ப வானெனநிற் கையினுல். (89)

இ—ள் ஆங்காரம் - அகங்கார மானது, ஆந்மாவிற்கு - (பிரத்தியக்) ஆத்மாவிற்கு, நான் - அகம், எனலால் - என்னும் பிரதீதி உண்டாக்குதலால், கயிற்றின் - ரஜ்ஜுவினிடத்தில், அரவம் - சர்ப்ப(ப் பிராந்தி உண்டாவது), என-போல (தோற்றுவது), நிருபாதிக அத்தியாசம்-

நிருபாதிக அத்தியாசம் ஆம், ஆந்மாவிற்கு-(பிரத்தியக்)ஆத்மாவிற்கு, ஆங்கார இயல் - அகங்காரத்தின் தர்ம மானது, சிவப்பு-ரக்த, வலம்-படிகம், போல் - போல, நான் - அகம், கர்த்தா ஆம் - கர்த்தா வாம், எனலால் - என்று பிரதீதி யுண்டாகுவதால், சோபாதிகம் ஆம் - சோபாதிக (அத்தியாசம்) ஆகும், ஈங்கு - இவ் விடத்து, ஆந்மாவிற்கு - (பிரத்தியக்) காத்மாவிற்கு, ஆகும் - உண்டாகின்ற, கரண-அந்தக் கரண, தரு(ம)ம்-தரும மானது, அலை-சலநத்தோடு கூடிய, புனலில்-சலத்தினிடத்தில், புக்க பிரதிவிம்பித்திருக்கின்ற, ஈர்-குளிர்ச்சியோடு கூடிய, கதிரின் - கிரணங்களையுடைய (சந்திரனது), விம்பம் - பிரதிவிம்பத்தினிடத்து (உண்டாம் அத்தியாசம்), என-போல, நான்-அகம், இச்சையினேன்-இச்சாமி, என்று - என, இருத்தலினுல் - பிரதீதி உண்டாகுதலினுல், தத் தரும அத்தியாசம் - (உண்டாவது) தத் தரும அத்தியாச மாம், என - என்று, உரைப்பர் - கூறுவார்கள், [சம்பந்த அத்தியாசத்தினைக் கூறுகின்ருர்.] நான் - அகம், குடும்பவான் - குடும்பி, என-என்று, நிற்கையினுல் - பிரதீதி உண்டாகுவதால். எ-று.

தான் - அசை. (இச் செய்யுள் குளகம்,)

அத்தியாசம், நிருபாதிக அத்தியாசம் என்றும், சோபாதிக அத்தியாசம் என்றும், தத் தரும அத்தியாசம் என்றும், சம்பந்த அத்தியாசம் என்றும், நால் வகைப் படும் என உணர்க. (89)

[ஆத்மாவிற்கு, புத்திரர் முதலியவர்களுடன், அகம் சம்சாரி (குடும்பி) என்று, ஓட சம்பந்தர் போன்று, உண்

30

டாவதால், அதனை, சம்பந்த அத்தியாசம் என்றும், ஆத்ம சம்பந்தத்தினால், அநாத்மாவுக் குண்டாம், மித்தை, இதரம், இதரேதரம், சத்தியாத்தியாசங்களினாலும், அநாத்ம சம்பந்தத்தினால், ஆத்மாவுக் குண்டாம், நிருபாதிகம், சோபாதிகம். தத் தருமம், சம்பந்த அத்தியாசமாகிய எட்டினாலும், நிருவிகாரியாகிய ஆத்மாவால், சம்சார கற்பனை உண்டாகின்றது என்றும், ஆத்மாவிற்கு, சாக்கிரம், ஸ்வப்நம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் எனப் பஞ்சாவஸ்தை உண்டாகின்றது என்றும், கூறுகின்றார்.]

மைந்தர்முத லாயினா ருடனான்மா விற்கு
  மண்ணுலகிற் பஃறியத்தர் விவகார மெனவே,
யந்தமுறு சம்பந்த மாத்திராத் தியாச
  மாமென்ப ரிவ்வத்தி யாசங்க டம்மா,
னந்துநிரு விகாரியான் மாவென்றல் பெற்றா
  நவிறருமைந் தவத்தையுள வவையாவை யென்னிற்,
றெருந்தமுறு நநவொடுசொப் பனஞ்சுழுத்தி துரியந்
  துரியாதீ தந்தானா மவற்றியல்பு மொழிவாம். (90)

இ—ள் ஆந்மாவிற்கு - (பிரத்தியக்) ஆத்மாவிற்கு, மைந்தர் - புத்திரர், முதலாயினார் உடன் - முதலியவர்களோடு, மண் உலகில் - பூலோகத்தில், பஃறி - ஓடத்தில் (எறி), அத்தர் - வழிச் செல்வோர்களது, விவகாரம் - விவகாரத்தினை, என - போல, அந்தம் உறு - நாசத்தை அடையாநின்ற, சம்பந்த மாத்திர அத்தியாசம் ஆம் - சம்பந்த மாத்திர அத்தியாசம் ஆகும், என்பர் - என்று கூறுவர், [ஆத்மாவால், சம்சார கற்பனை உண்டானதனைக் கூறுகின்றார்] இவ் அத்தியாசங்கள் தம்மால்-இப் பொழுது கூறிய, ஆத்ம சம்பந்தத்தால், அநாத்மாவிற்கு உண்டாம், மித்தை

இதர, இதரேதர, சத்திய மென்னும் பெயரை உடையதும், அநாத்ம சம்பந்தத்தால், ஆத்மாவிற்கு உண்டாம், நிருபாதிக, சோபாதிக, தத் தரும, சம்பந்த, மாத்திரம் என்னும் பெயரை உடையது மான, (அந்நியோந்நிய) அத்தியாசங்களினுலேயே, நந்து — கெடாத (வளர்கின்ற), நிருவிகாரியால் - நிருவிகார ரூப ஆத்மாவால், மா - சம்சாரர (கல்பனை), என்றல் -என்பது, பெற்றும் - உண்டாகின்றது, [ஆத்மாவிற்கு உண்டாம் ஐந்து அவஸ்தைகளைக் கூறுகின்றார்.] நவில் தரும் - கூறுகின்ற, ஐந்து - பஞ்ச, அவத்தை - அவஸ்தைகள், உள - (ஆத்மாவிற்கு) இருக்கின்றன, அவை - அப் பஞ்சாவஸ்தை, யாவை - எவை. என்னில் - என்று கேட்கில், [அவற்றின் பெயர்களைக் கூறுகின்றார.] தொந்தம் உறும் - பரஸ்பரம் சம்பந்தித் திருக்கின்ற. நனவு - சாக்கிரமும், சொப்பனம் - சொப்பனமும், சுழுத்தி - சுழுத்தியும், துரியம் - துரியமும். துரியாதீதம் - துரியாதீதமும், ஆம் - ஆகும், அவற்று - அப் பஞ்சவஸ்தைகளினது, இயல்பு - சொரூபத்தினை, மொழி வாம் - (மேற்) கூறு வாம். எ—று. ஏ - தான் - "அத்தியாசங்கள் தம்மால்" என்பதில். தம், சாரியை. மா - என்னும், பத்ததிற்கு, கட்டு - அதாவது, சம்சாரம் என்பது பொருள்.

மறை பொருள் விளக்க உரை ஆசிரியர் "இவ் வத்தியாசங்கடம்மால் நந்து நிருவிகாரி யாந்மா வெய்னன் பெற்றார்" என்று பாட்டைத் திருத்தி, இப் பொருளையே எழுதியிருக்கின்றார்கள், பழைய பாடத்தையும் எழுதியிருக்கின்றார்கள்.

கந்நட விவேக சிந்தாமணி, "ஆத்மாவால் சம்சார கர்ப்பனை உண்டாயிற்று" என்று எழுதி யிருக்கிறது.

ஜாக்ரம், ஸ்வப்நம், சுழுப்தி, துரீயம், துரியாதீதம் என அவத்தை ஐந்து என உணர்க. (90)

[சாக்கிர அவஸ்தையினைக் கூறுவான் ெருடங்கி. தூல பஞ்ச பூதம், தசேந்திரியம், பிராண பஞ்சகம், அந்தக் கரண சதுஷ்டயம் ஆகிய 24 தத்துவங்களோடு கூடிய தூல சரீரத்தில், சத்துவ குணம், அகர அக்ஷரம், ஹரி தெய்வம், நேத்திரம் ஸ்தாநம் இவை கூட்ட மாகப் பொருந்தி, ஹிருதய தாமரையி னுடைய அஷ்ட தள கதியில், விசுவ ஜீவன், விராட் ஈசுவரன், ஏக மாக பொருந்தி, கர்மாதிந மாக வருகின்ற, வநிதாதி விஷயங்களை, 24 தத்துவ ரூப எல்லாச் சாதங்களினுனும். சம்பந்தித்து, சுக துக்கங்களை, புண்ணிய பாப பல க்ஷய பரியந்தம் அநுபவிப்பது, ஜாக்கிர அவஸ்தை என்று கூறுகின்றார்.]

பெருந்தூல வைம்பூத மீரைந்திந் திரியம்
பிராணபஞ் சகமொடுநாற் கரணமிவை யுருவா,
மருந்தூல சரீரத்திற் சாத்துவித குணமோ,
டகரவெழுத் தரிதெய்வம் விழியிடமே யாக,
விருந்தாக விதயமல ரட்டதள கதியில்
விசுவசீ வனும்விராட் டிறையுமொருங் கடைந்து,
வருந்தாவில் விடயங்கள் கரணமனைத் தானு
மருவிநுகர்ந் திடுதல்சா கரணமா மன்றே. (91)

இ—ள் பெரும் - விரிந்த, தூல - தூல, ஐ பூதம் - பஞ்ச பூதங்களும், ஈர் ஐந்து இந்திரியம் - தசேந்திரியங் களும், பிராண பஞ்சகம் - பிராணாதி (வாயு) பஞ்சகமும், நால் - நான்கு, கரணம் - அந்தக் கரண விருத்திகளும் (ஆகிய), இவை உருவு ஆம் - இரு பத்து நான்கு தத்துவ

சொரூபம் ஆகிய, அரும் - அருமை யான, தூல சரீரத்தில்- தூல சரீரத்தின்கண், சாத்துவித குணம் - சத்துவ குண மும், அகர எழுத்து - அகார அக்ஷரமும், அரி - விஷ்ணு, தெய்வம் - அதிதேவதையும், விழி - நேத்திரம், இடம் ஆக - ஸ்தான மாகவும் கொண்டு, விருந்தம் ஆக - கூட்ட மாக(ப் பொருந்தி யுள்ள), இதயம் - இருதயம் (ஆகிய), மலர் - கமலத்தி னுடைய, அட்ட தள கதியில் - எட்டு இதழ்க ளாகிற கதிகளில், விசுவ சீவனும் - விசுவ(ன் என் னும் பெயரை யுடைய) ஜீவனும், விராட்டு - விராட்டு (என்னும் பெயரை யுடைய), இறையும் - ஈசுவரனும், ஒருங்கு அடைந்து - ஏகீ பாவத்தை அடைந்து, வரும் - (கர்மாதீன மாக) வருகின்ற, தாவு இல் - கெடாத, விடயங் கள் -(வசிதாதி) விஷயங்களை, கரணம் அனைத்தானும் - எல்லாக் கரண சாமாக்கிரியைகளாலும், மருவி -பொருந்தி, நுகர்ந்திடுதல் - அநுபவித்தல், சாகரணம் ஆம் - சாக்கிரம் ஆம். எ—று. ஏ - அன்று - ஏ - அசை. ஒடு ஒடு என்பன எண்ணின்கண் வந்தன.

சாக்கிர அவஸ்தை—ஸ்தூல பஞ்ச பூதங்களும், தசேந்திரியங்களும், பஞ்ச வாயுக்களும், அந்தக் கரண சதுஷ்டமும், சேர்ந்து 24 தத்துவ, சொரூப ஸ்தூல சரீரத் தில், சத்துவ குணமும், அகர அக்ஷரமும், விஷ்ணு தேவ தையும், நேத்திரம் ஸ்தான மாகவும், கூட்ட மாகப் பொருந்தி உள்ள இருதய கமலத்தில் அஷ்ட தள கதியில், விசுவன் என்னும் ஜீவனும், விராட்டு என்னும் ஈசுவரனும், ஏகீபாவம் அடைந்து, கர்ம ஆதீ னமாக வருகின்ற விஷயங் களை எல்லாக் கரணங்களும் பொருந்தி, நுகர்ந்திடுதல்-(அநு பவித்தல்) ஜாக்கிர அவஸ்தை ஆம் என உணர்க. (91)

[ஸ்வப்நாவஸ்தையினைக் கூறுவான் றொடங்கி. தசேந்திரியம், பஞ்சப் பிராணன், மநம், அகங்காரம் என்னும் பதினேழு தத்துவ ரூப, சூக்ஷ்ம சரீரத்தினை இட மாக, கொண்டு, ரஜோ குணம், உகார அக்ஷரம், பிரஹ்மா தெய்வம், கண்டம் ஸ்தாந மாக, ஹிருதய மாகிற தாமரை மலர்க் கர்ணிகா கதியில், தைஜச ஜீவனும், ஹிரண்ய கர்ப்ப ஈசுவரனும், அபேத மாக இருந்து. ஜாக்கிரத்தில் அநுபவித்த வாசனையினை, மந மாகிய கரணத்தினால், அநுபவித்துக்கொண்டு, புண்ணிய பாப பல க்ஷயமோ, புண்ணிய பாப பல போக உத்பத்தியோ, வரும் வரை, அநுபவிக்கும் கால அளவை, ஸ்வப்ந அவஸ்தை என்று கூறுகின்றார்.]

பஞ்சபூ தமுஞ்சித்த புத்தியுநின் றொழிந்த
பதினேழின் மயமாஞ்சூக் குமதநுவி னின்றும்,
விஞ்சுரசோ குணமுகர வெழுத்ததிதெய் வந்தான்
விரிஞ்சனிடங் களமாக நல்லிதய மென்னுங்,
கஞ்சமலர்க கந்நிகா கதியிற்றை சதனுங்
கநககர்ப் பனுமருவி நனவின்வா தனையை,
நெஞ்சமெனுங் கரணத்தா லநுபவிக்கை தானே
நிகழ்ந்திடுஞ்சொப் பநமென்று நிகழ்த்துவர்மூ தறிஞர். (92)

இ—ள் பஞ்ச - (தூல) பஞ்ச, பூதமும் - பூதமும், சித்த - சித்தமும், புத்தியும் - புத்தியும், ஒழிந்து - (ஆகிய ஏழும்) நீங்கி, நின்ற - இருக்கின்ற, பதி னேழின் - சப்த தச (தத்துவ), மயம ஆம் - சொரூபம் ஆகிய, சூக்கும - சூக்ஷ்ம, தநுவில் - சரீரத்தில், நின்றும் - இருந்து, விஞ்சு - மிகுதி யாக (உண்டாகின்ற), ரசோ குணம் - ரஜோ குண

மும், உகரம் - உகார, எழுத்து - அக்ஷரமும், விரிஞ்சன் - பிரம்மா, அதி தெய்வம் - அதி தெய்வமும், களம் - கண்டத்தை, இடம் - ஸ்தாநம், ஆக - ஆக (வும் கொண்டு), நல் - நல்ல, இதயம் - இருதயம், என்னும் - ஆகிய கஞ்ச மலர் - தாமரைப் புஷ்புத்தின் (நடுவி லிருக்கும்), கந்நிகா கதியில் - (கொட்டை யாகிற) கர்ணிகா கதிகளில், தைசத னும் - தைஜஸ(ன் என்னும் ஜீவ)னும், கநக கர்ப்பனும் - ஹிரணிய கர்ப்ப(னுகிய ஈசுவர)னும், மருவி - (ஏகீ பாவத்தை) அடைந்து, நநவின் வாதனையை - ஜாக்கிரத் வாசநா விஷய போகத்தை, நெஞ்சம் - மநம், எனும் - ஆகிய, கரணத்தால் - கரணத்தினுல், அநுபவிக்கை - அநுபவித்துக் கொண்டிருத்தல், நிகழ்ந்திடும் - உண்டாகாநின்ற, சொப்பநம் - சொப்பநம், என்று - என, மூது அறிஞர் - பிரம்ம வேத்தாக்கள், நிகழ்த்துவர் - உரைப்பர்கள். எ—று, தான் - தான் - ஏ - அசை,

ஞாந இந்திரிய கர்ம இந்திரியம் 10, வாயு 5. மநம் அகங்காரம் 2 ஆக 17 தத்துவ ரூப சூக்ஷும சரீரத்தில் இருந்து, மிகுந்த ரஜோ குணம், உகார அக்ஷரம், பிரஹ்மா அதிதைவம், கண்டம் ஸ்தாநம், ஹிருதயம் ஆகிய தாமரைப் புஷ்பத்தின் நடுவி லிருக்கும் கர்ணிகா கதிகளில், தைஜசன் என்னும் ஜீவனும், இரண்ய கர்ப்ப ஈசுவரனும், ஏகீ பாவத்தினை அடைந்து, ஜாக்கிர வாசநா போகத்தை, மநம் என்னும் கரணத்தினுல் அநுபவித்துக் கொண்டிருத்தல், ஸ்வப்ந அவஸ்தை என உணர்க. (92)

[குக்குடம் ஆனது, இரைகளை மேய்ந்து திரிகின்ற குஞ்சுகளைத் தன் இறக்கையுள் அடங்கிக் கொண்டு நித்திரை செய்வது போல, ஆந்மாவை ஆசிரயித்து,

ஓர் அவஸ்தையும் இன்றியிருக்கும் பிருகிருதி ஸ்வரூபம் ஆகிய காரண சரீரத்தில், தமோ குணம், மகார அக்ஷரம், ருத்திரன் அதி தெய்வம், ஹிருதய ஸ்தாநம் ஆக, தாமரை மலர் மத்திய கதியில், பிராஞ்ஞன் என்னும் ஜீவனும், அவ்வியாகிருதன் என்னும் ஈசுவரனும், பிரஹ்மாநந்த விஷய போகத்தை, மாயா விருத்தி யாகிய சூக்ஷம கரணத்தினுல், புண்ணிய பாப பலம் உத்பந்நம் ஆகிற வரை, அநுபவிப்பது, சுழுத்தி அவஸ்தை என்று கூறுகின்ருர்.]

மேய்ந்துதிரி பார்ப்படக்கி யுறங்களகு போல
விரிந்தகா ரியங்களையுட் கொண்டுவா தனையோ,
டாய்ந்தவாந் மாசிரயத் தவத்தையற விருக்கு,
மரும்பகுதி மயமாங்கா ரணவுடம்பிற் றமமே,
யேய்ந்தகுண மகரவெழுத் தரன்றெய்வ மிதய
மிடமாகக் கமலமலர்ப் பொகுட்டுநடுக் கதியி,
லோர்ந்தபிராஞ் ஞனும்பரனு மாய்ப்பிரமா நந்த
முறுமாயா விருத்தியெனு நுண்கரணந் தன்னுல். (93)

இ—ள் மேய்ந்து-(இரைகளைப்) புஜித்துக் கொண்டு, திரி - திரிகின்ற, பார்ப்பு - குஞ்சுகளை, அடக்கி - (தன் பக்ஷத்துள்) அடக்கிக் கொண்டு, உறங்கும் - நித்திரை செய்கின்ற, அளகு — கோழியை, போல - போன்று. விரிந்த - (நாநா வித மாய்) அகன்றிருக்கின்ற, காரியங்களை - காரியங்களை, உள் கொண்டு - (தன் அகத்தே) அடக்கிக் கொண்டு, வாதனையோடு - சமஸ்காரத்தோடு (கூட), ஆய்ந்த - அறிவு ரூப, ஆந்ம ஆசிரயத்து - ஆத்ம ஆசிரயத்தில், அவத்தை அற - (ஒரு) அவஸ்தையும் இன்றி, இருக்கும் - இருக்கின்ற, அரும் - அரிய. பகுதி மயம் ஆம் - பிரகிருதி சொருபம் ஆகிய, காரண உடம்பில் - காரண

சரீரத்தில், ஏய்ந்த - பொருந்தி யுள்ள, தமம் - தமோ, குணம் - குணமும், மகர - மகார, எழுத்து - அக்ஷரமும், அரன் - ருத்திரன், தெய்வம் - அதிதேவதையும், இதயம் - இருதயம், இடம் - ஸ்தாநம், ஆக - ஆகவும் (கொண்டு), கமல மலர் - தாமரைப் புஷ்பத்தினது, பொகுட்டு - பீஜத்தின் (கொட்டையின்), நடுக் கதியில் - மத்திய கதியில், ஓர்ந்த - அறிவு ரூப, பிராஞ்ஞ (ன் என்னும் ஜீவ)னும், பரனும் - (அவ்வியாகிருதன் என்னும்) ஈசுவரனும், ஆய் - (ஏகீ பாவ) மாய் இருந்து, பிரமாநந்தம் - பிரம்மாநந்த விஷய போகத்தை, உறும் - (மோக்ஷ பரியந்தம்) பொருந்தியிருப்பதா யுள்ள, மாயா விருத்தி - மாயா விருத்தி, எனும் - ஆகிய - நுண் கரணம் தன்னால் - சூக்ஷ்ம கரணத்தினால். எ—று. ஏ "நுண் கரணம் தன்னால்" என்பதில், தன் - சாரியை. (இச் செய்யுள் குளகம்)

இரைகளை மேய்ந்து திரிகின்ற குஞ்சுகளை, தன் இரக்கையில் அடக்கிக்கொண்டு நித்திரை செய்கின்ற கோழியைப் போல, நாநா வித மாக விரிந்திருக்கின்ற காரியங்களை தன் அகத்தே அடக்கிக் கொண்டு சம்ஸ்காரத்தோடு கூட அறிவு ரூப ஆத்ம ஆசிரயத்தில், ஒரு அவஸ்தையும் இன்றி இருக்கின்ற, பிரகிருதி ஸ்வரூபம் ஆகிய காரண சரீரத்தில், மிகுந்த தமோ குணமும், மகர அக்ஷரமும், ருத்திர தேவதையும், ஹிருதயம் ஸ்தாநமும், ஆகக் கொண்டு, தாமரைப் புஷ்பத்தினது பீஜத்தின் மத்திய கதியில், ஞாந ரூபப் பிராஞ்ஞ ஜீவனும், அவ்வியாகிருதன் என்னும் ஈசுவரனும், ஏகீபாவ மாய் இருந்து, பிரஹ்மாநந்த விஷய போகத்தினை, மோக்ஷ பரியந்தம் பொருந்தியிருப்ப தாய் உள்ள, மாயா

விருத்தி யாகிய சூக்ஷ்ம கரணத் திஞல். அநுபவித்தல் சுழுத்தி அவஸ்தை ஆம் என உணர்க. (93)

[சாக்கிர ஸ்வப்ந சுழுத்தி யவஸ்தைகளே, அவஸ்தாத் திரயம். தாமத் திரயம், புரத் திரயம், ஸ்தாநத் திரயம், தேசத் திரயம்(5) என்னும் பரியாய நாம மாகக் கூறுவர் என்றும், சாக்கிர அவஸ்தையில், தாமரையை அழித்து, மனோ வியவ காரம் நீங்கி, பரப்பிரஹ்மத்தினைச் சிந்திப்பது, நநவிற் சுழுத்தி யாகிய துரீய அவஸ்தை என்றும், பிரஹ்மத்தினிடத்தில், மநம் லயம் ஆகுதல், துரீயாதீத அவஸ்தை என்றும், கூறிய ஜாக்கிர ஸ்வப்ந சுழுத்தி அவஸ்தைகளில், தாவரங்கள் சுழுத்தி யவஸ்தையினை அடைந்திருக்கின்றன என்றும், கூறுகின்ருர்.]

அநுபவித்தல் சுழுத்தியா மிந்நவா திகண்மூ
வவத்தையொடு முத்தாம முப்புரமுத் தாநம்,
பினுமுத்தே யங்களெனும் பரியாய நாமம்
பெறுமுரைத்த சாக்கிரத்தே யக்கமல மழிந்து,
மநவழக்கந் தவிர்ந்துபரந் தனைச்சிந்தித் திடலே
வருந்துரிய மப்பரமாந் மாவின்மந மடங்கன்,
மூனமுரைத்தல் செய்துரியா தீதமெனப் புகல்வர்
மொழிந்தவற்றுட் டாவரங்கள் பெறுதலிருட் சுழுத்தி. (94)

இ—ள் அநுபவித்தல் - அநுபவிக்குதல், சுழுத்தி ஆம் - சுழுத்தி ஆகும், இந் நநவு ஆதிகள் - இப் பொழுது கூறிய ஜாக்கிர சொப்பந சுழுத்திகள், மூ அவத்தை - அவஸ்தாத் திரயம் (என்னும்), முத் தாமம் - தாமத் திரயம்

(என்னும்), முப் புரம் - புரத் திரயம் (என்னும்), முத் தாநம் - ஸ்தாநத் திரயம் (என்னும்), பினும் - இன்னும். முத் தேயங்கள் - தேசத் திரயங்கள், எனும் - என்னும், பரியாய - பரியாய, நாமம் - பெயர்களை. பெறும் - பொருந் தும். உரைத்த - கூறிய, சாக்கிரத்து - ஜாக்கிர அவஸ்தை யின்கண், அக் கமலம் - அந்தத் தாமரைப் புஷ்பம், அழிந்து - நாச மாக, மந வழக்கம் தவிர்ந்து - மநம் வியாபாரம் இன்றிய தாய், பரந்தனை - பிரஹ்ம சொரூ பத்தை, சிந்தித்திடல் -சிந்தித்துக் கொண்டிருத்தல், வரும்- உண்டாகின்ற, துரியம் - துரியம் ஆம், அப் பரமாத்மா வில் - அந்தப் பிரம்மத்தின்கண், மநம் - அந்தக் கரணம், அடங்கல் - ஒடுங்கி இருத்தல், முனம் - முன்னம், உரைத் தல் செய் - கூறிய, துரியாதீதம் - துரியாதீத மாம், என - என்று, புகல்வர் (பெரியோர்) கூறுவார்கள், [பஞ்சா வஸ்தைகளுள். இன்ன பிராணிகள், இன்ன அவஸ்தை களை அடைகின்றன எனக் கூறுகின்றார்.] மொழிந்த- கூறிய, அவற்றுள் - அந்தப் பஞ்சாவஸ்தைகளுள், தாவ ரங்கள் - மரங்கள், பெறுதல், அடைதல், இருள் - அந்த கார மயம் ஆகிய. சுழுத்தி - சுழுத்தி (அவஸ்தை யாம்.) எ—று. - ஏ ஏ - ஒடு - அசை. 'பரந்தனை' என்பதில், தன் என்பது, சாரியை,

சாக்கிர ஸ்வபந சுழுத்திகள், அவஸ்த்தாத் திரயம் என் றும், தாமத் திரயம் என்றும், புரத் திரயம் என்றும், ஸ்தா நத் திரயம் என்றும், தேசத் திரயம் என்றும், ஐந்து நாமங் களையும், பொருந்தியிருக்கும் என உணர்க.

கூறிய ஜாக்கிர அவஸ்தையில், அந்தத் தாமரை புஷ் பத்தினை நாச மாகச் செய்து, மந வழக்கம் தவிர்ந்து,

பிரஹ்ம ஸ்வரூபத்தினைச் சிந்தித்துக் கொண்டிருக்குதல், துரிய அவஸ்தை ஆம் என உணர்க.

பிரஹ்மத்தினிடத்தில், மநம் அடங்கியிருக்குதல், துரியாதீத அவஸ்தை யாம், என உணர்க.

இந்த ஐந்து அவஸ்தைகளில், விருக்ஷாதிகள், சுழுத்தி அவஸ்தையினை அடைந்திருப் பதாம், என உணர்க.

வா சிட்டம்—நா லாவது பிரகரணம்
4வது தாசூரன் கதை 89.

உள்ளினும் புறத்து மெழுந்தசங் கர்ப்ப
வொருக்கிட வொருப்பட நினைவாய்,
எள்ளருந் தவங்கள் கற்பகோ டிகணீ
யியற்றினும் பாதலம் பூமி,
தள்ளருந் துறக்க மேவினு முனக்குச்
சாற்றுசங் கற்பமாய் வல்லாற்,
றெள்ளிய பரம பதத்தினை மேவத்
தியக்கமி லுபாயம்வே றில்லை.

என்பதனுல் உணர்க. எனவும்,

6வது 14 மான்வேடன் கதை 24.

கண்ட நநவு கோரமதாங்
கநவு சாந்த மெனப்பெயராங்,
கொண்ட சுழுத்தி மூடம்தாங்
கூறு மிம்மூன் றவத்தைகளும்,
விண்ட மநத்தின் வடிவாகும்
விளம்பு மிம்மூன் றையும்விட்டாற்,
றண்டு மநம்போம் மநமிறந்தாற்
சத்தா யொன்றுஞ் சமநிலையாம். எனவும்,

பாகவதத்தில்.

சத்துவ குணத்திற் சாக்கிர முண்டாஞ்
சாற்றிய கநவிநா சத்தான்,
மற்றவை யவத்தை யிரண்டலான் மூன்று
மவத்தையுந் தாமதத் தாகும்.

எனவும், கூறுதல் கொண்டு உணர்க, (94)

[மிருகம் பறவை ஊர்வன நீர் வாழ்வன என்பவை, சுழுத்தி அவஸ்தையினையும், ஸ்வப்ந அவஸ்தையினையும், அடைகின்றன, தேவர்கள் - ஜாக்கிர அவஸ்தை ஒன்றையே அடைந்திருக்கின்றனர், மநிதர்கள், ஜாக்கிர அவஸ்தை, ஸ்வப்ந அவஸ்தை, சுழுப்தி அவஸ்தை, மூன்றினையும் அடைகின்றனர். மயக்கம் நீங்கி யிருக்கின்ற உந்மத்த புருஷனுக்கு, துரிய அவஸ்தை ஒன்றும், மகா யோகிகள், துரியாதீத அவஸ்தை ஒன்றும், மருளர்க்கு, சாக்கிர ஸ்வப்ந சுழுத்தி மூன்றும், தா மாகவே உண்டாய், பந்தத்தினை உண்டாக்கும் என்றும், துரிய அவஸ்தை, துரியதீத அவஸ்தை யாகிய இரண்டும், யோக அப்யாச பலத்தினால் உண்டாய், மநிதர்கட்கு மோக்ஷ சாதநம் என்றும், பஞ்சாவஸ்தைகளும், கால தேச நியமத்தினால் உண்டாகாமையினால், மித்தை என்றும், கூறுகின்றார்.]

விலங்குமுத லனபெறுவ சுழுத்தியொடு கநவால்
விண்ணவர்க்கு நநவுநரர்க் கம்மூன்று மாகுங்,
கலங்கலறு மருளர்க்குத் துரியமகா யோகி
கட்குவரு வது துரியா தீதமுதன் மூன்று,
மலங்கலுறு மநுடர்க்குத் தம்மிற்றுமே தோன்றி
வரும்பந்த மாமேனை யிரண்டுமியோ கத்தா,
லிலங்குமுத்தி சாதநமா மவையொன்றி லேயொன்
றிலாமையாற் காலதேச ங்கணிய மம்பொய். (95)

இ—ள் விலங்கு - மிருகம், முதலன - (பறவை, ஊர்வன, நீர் வாழ்வன) முதலியன, பெறுவ - அடைவன, சுழித்தி ஒடு - (சுழுத்தி) அவஸ்தையும், கநவு - சொப்பந (அவஸ்தையு)ம் (ஆகிய இரண்டு மாம்), விண்ணவர்க்கு - தேவர்களுக்கு, நநவு - ஜாக்கிர அவஸ்தை ஒன்றே யாம். நரர்க்கு - மனுஷியர்களுககு, அம் மூன்றும் ஆகும் - அந்த (ச் சாக்கிர சொப்பந சுழுத்தி என்று சொல்லப்பட்ட) மூன்று அவஸ்தைகளும் உண்டாம், கலங்கல் - மயக்கம், அறும் - நீங்கியிருக்கின்ற, மருளர்க்கு - உந்மத்தருக்கு, துரியம் - துரியாவஸ்தை (ஒன்றே யாம்), மகா யோகி கட்கு - பெரிய யோகி (யாகிய, வரன் வரியான் வரிஷ்டர் கட்கு), வருவது - உண்டாவது, துரியாதீதம் - துரியாதீத (அவஸ்தை ஒன்றேயா)ம், முதல் மூன்றும் - முன்னர்க் கூறிய (சாக்கிர சொப்பந சுழுத்தி என்னும்) மூன்று (அவஸ்யையு)ம், மலங்கல் - கலக்கத்தினை, உறும் - பொருந் தியிருக்கின்ற, மநுடர்க்கு - மநுஷியர்களுக்கு, தம்மில் தாமே - தத் தம்மிடத்தில் சுய மாகவே, தோன்றி - உண் டாய், வரும் - வருகின்ற, பந்தம் ஆம் - பந்த (காரண) மாம், ஏனை - எஞ்சி யுள்ள, இரண்டும் - (துரிய அவஸ்தை, துரியாதீத அவஸ்தை, என்னும்) இரண்டும், இயோகத்தால் - யோகாப்பியாச பலத்தினுல் (மநுஷியர்களுக்கு உண்டாய்), இலங்கும் - விளங்கா நின்ற, முத்தி - மோக்ஷ, சாதநம் ஆம் - சாதந மாகும், [அந்தப் பஞ்சாவஸ்தைகளேயும், மித்தை யெனக் கூறுகின் ருர்.] அவை - அந்த ஐந்து அவஸ்தைகளும், ஒன்றில் - மற்ருேர் ஒரு அவஸ்தையில், ஒன்று இலாமையால் - மற்ருேர் அவஸ்தை இல்லாமையினுலும், கால - கால, தேசங்கள்

தேச (வஸ்துக்கள்), நியமம் - நியம(த்தில் உண்டாகாமை யினாலு)ம், பொய் - மித்தை யாம். எ—று. ஏ-ஆல் அசை.

பறவை ஊர்வன நீர் வாழ்வன, சுழுத்தியும், ஸ்வபந மும். ஆகிய இரண் டவதைகளை அடையும், தேவர்கள், ஜாக்கிர அவஸ்தை ஒன்றே, உடையவர்கள், மநிதர்கள், ஜாக்கிர ஸ்வப்ந சுழுத்தி மூன் றவஸ்தைகளையும் உடைய வர்கள் உந்மத்தர், துரிய அவஸ்தையினை உடையவர். மகா யோகிகள், துரியாதீத அவஸ்தையினை உடையவர் ஆவர். ஜாக்கிர ஸ்வப்ந சுழுத்தி மூன்றும், மயக்கம் உடைய மநுடர்கட்குத் தம்மில் தாமாகவே உண்டாகி பந்த ஹேது வாம்.

துரியம் துரியாதீதம் இரண்டவஸ்தையும், யோக அப்யாச பலத்தால் உண்டாய், மோக்ஷ சாதநம் ஆகும்.

இந்தப் பஞ்ச அவஸ்தைகளும், ஓர் அவஸ்தையில், மற்றோர் அவஸ்தை யின்மையினாலும், கால தேச நியமம் இன்றி உண்டாகாகின்றமையினாலும், அவ்வஸ்தை மித்தை ஆம் என உணர்க.

[முற் கூறிய பஞ்ச அவஸ்தைகளில், அநுஸ்யூதனா யிருந்து, அறியும், துரியாவஸ்தையில் விளங்கும், ஆத்மாவே உளது. ஜாக்கிர சொப்பநங்களில், ஆத்மா உண் டென் பதனைப் பிரசித்த மாக அநுபவித்திருக்கின்றோம், சுழுத்தி யவஸ்தையில், ஆத்மா உண் டென்பதனைப் பெற வில்லையே. அஃது எங்ஙனம் இருக்கின்றது, எனின், "ஒன்றும் அறி யாது, சுக மாகத் தூங்கினேன்" என்று, இரு வித ஸ்மிருதி யும், சுழுத்தி அவஸ்தையில் அநுபவியாது, ஸ்மிருதி உண்

டாகாது என்னும், திருஷ்டார்த்தாபத்திப் பிரமாணத்தி ஞல், சகல வஸ்துவையும் அடக்கியிருக்கின்ற இருளினை, நேத்திரம் அறிவது போல, காரியப் பிரபஞ்சம் முழு தையும் அடக்கிக் கொண்டிருக்கின்ற அவித்தை யாகிய அந்த காரத்தினையும், எனக் கூறுகின்ருர்]

சொற்றவவத் தைகளிலநு சூதனு யறியுந்
துரியனே யுளனநவு கநவினிலறி வுண்மை,
பெற்றனமச் சுழுத்தியினிற் பெறலுரைப்பி னெழுந்து
பிறிதொன்று மறியாது சுகத்துறங்கி னேனெனன்,
துற்றவிரு நினைவுமநு பவஞ்சுழுத்தி யதனி
லுருதுவரா வெனுமருத்தா பத்தியினுற் பொருள்கண்,
முற்றுமடக் கிருள்விழிகாண் குதலெனக்கா ரியங்கண்
முழுதையுமுட் கொண்டபே ரவித்தையிரு ளினையும். (96)

இ—ள் சொற்ற - கூறிய, அவத்தைகளில் (பஞ்ச) அவஸ்தைகளிலும், அநுசூதன் ஆய் - (நீங்காது) கலந் திருந்து, அறியும் - அறிகின்ற, துரியனே - துரிய ஆத்மாவே, உளன் - (சத்திய மாய்) இருக்கின்ற தாம், நநவு கநவில் - ஜாக்கிராவஸ்தை, சொப்பநாவஸ்தைகளில், அறிவு - ஆத்மா, உண்மை - இருத்தல், பெற்றனம் - (பிரசித்த மாக) அநுபவித்திருக்கின்ருேம், அச் சுழுத்தியின் - (முன் பிரதிபாதித்த) சுழுத்தி (அவஸ்தை)யில், பெறல் - இல் - உரைப்பின் - (ஆத்மாவின் சித்தியை) பெற்றிலேம் சுழுத்தியில் ஆத்ம சித்தியைப் பெறுதல் எப்படி எனின், [அதற்குச் சமாதாநங் கூறுகின்ருர்] எழுந்து - (தூங்கி) எழுந்து, பிறிது வேறு, ஒன்றும் - ஒன்றும், அறியாது -

தெரியாது, சுகத்து - சுக மாக, உறங்கினேன் - நித்திரை - செய்தேன், என்று - என (உண்டாகின்ற), உற்ற - தொடர்பா யுள்ள, இரு நினைவும் - இரண்டு ஸ்மிருதிகளும், சுழுத்தியதனில் - சுழுத்தி காலத்தில் (அஞ்ஞாந சுகங்களின்), அநுபவம் - அநுபவத்தினை, உறு து - அடையாது, வரா - உண்டாகமாட்டா, எனும் - என்னும் ஆகார மான, அருத்தாபத்தியினால் - அர்த்தாபத்திப் பிரமாணத்தினால், பொருள்கள் முறறும் - சமஸ்த கடாதி பதார்த்தங்களையும், அடக்கு - மறைக்கின்ற, இருள் - அந்தகாரத்தினை, விழி - நேத்திரம், காண்குதல் - பார்க்கின்றதை, என - போல, அக் காரியங்கள் முழுதையும் - (அந்தச் சுழுத்தி அவஸ்தையில்) சகல சரீராதி காரியங்களையும், உள் கொண்ட - மறைத்துக்கொண்டிருக்கின்ற, பேர் - பெரிய, அவித்தை - அவித்தையாகிய, இருளினையும் - அந்த காராத்தினையும். எ—று.

"சுழுத்தியதனில்" என்பதில், அது, என்பது, சுட்டுப் பெயர் பிறகிளக்கப்பட்டுள்ளது. (இச் செய்யுள் குளகம்).

கூறிய ஐந்த வத்தைகளிலும் அநுகூத னாய் அறிகின்ற துரீய ஆத்மாவே உளது என உணர்க. (96)

பஞ்ச தசி 11 யோகாநந்தம்.

28 எழுபவன் சுகமிவன் யானநுப வித்தனன்
ஏதுமறி கிற்றிவ னென,
விழுதுயி லின்பமறி யாமைகளை யுந்நினைவன்
வினையதூஉ மநுப வத்தாஞ்,

செழிகொடுண் டக்காலை யநுபவஞ் சித்வடிவ
சீர்த்தியா லின்ப மதுதான்,
ஒழிவறத் தாஞயி லங்கலுறு மதனிஞ
லுணர்வின்மை யுணர்வ தாமே. (96)

[அவித்தையின் சூக்ஷம விருத்தியில், சலந விருக்ஷத்திலை யிடையில், தோற்றுகின்ற சந்திர லேசம் போல, க்ஷணம் வந்து தோன்றி, திரோபாவத்தினை, அடைகின்ற ஆத்மாநந்த லேசத்தினை. ஆத்மா, வியாவகாரிக கரண அபேக்ஷை இன்றி, முன்னர்க் கூறிய சுழுத்தி யவஸ்தையில், அநுபவிக்கின்றபடியால், - கூறிய சுழுத்தி யவஸ்தையில், அறிவு ரூப ஆத்மாவின் சத் பாவம் உண்டு என்றும், ஒன்றும் அறியாது, சுக மாகத் தூங்கினேன் என்று கூறுவதற்குக் காரணம், விஷய ஞாநம் இன்மையும், குடும்ப விர்த்தியும், ஆகும் என்றும், கூறுகின்ருர்.]

அந்தவவித் தையினதுசூக் குமவிருத்தி தன்னி
லலையுமரத் திலையிடையின் வெண்ணிலாத் துளிபோல்,
வந்திலகி யடங்குசிசா நந்தக்கூற் றினையும்
வருகரணுந் தராபேட்சை யின்றியே யாத்மா,
முந்துரைசெய் சுழுத்தியினி லநுபவிக்கை யாலே
மொழிந்ததனி லறிவுளதா மேதுமறி யாம,
னந்துசுகத் துறங்கினே னெனற்கேது விடய
ஞாநமிலா மையுங்குடும்ப நிவிர்த்தியுமா முறையே. (97)

இ—ள் அந்த - முன் கூறிய, அவித்தையினது - அவித்தையினது, சூக்கும விருத்தி தன்னில் - சூக்ஷம (சத்துவ குண) விருத்தியில். அலையும் - அசைகின்ற, மரத்து - தருவின், இலையிடையில் - இலைகளின்

மத்தியில், வெண் - வெண்மை யான. நிலா - சந்திரிகா, துளி போல் - லேசம் போல, வந்து - (க்ஷணம்) உற்பூத மாய், இலகி - விளங்கி, அடங்கும் - திரோபவத்தை அடை கின்ற, நிச ஆநந்தக் கூற்றினையும் - நிஜ ரூப ஆநந்தாம் சங்களையும், ஆன்மா - ஆத்மா வானது, முந்து - முன்னர், உரை செய் கூறிய, சுழுத்தியினில் — சுழுத்தி (அவஸ்தை) யில், வரு - உண்டாகின்ற, கரண அந்தர - (வியாவகாரிக நேத்திர புத்தியாதி யாகிய) வேறு சாதநங்களின், அபேட்சை - அபேட்சை, இன்றியே - இல்லாமலே. அநு பவிக்கையால் - அநுபவிக்கின்றபடியால், மொழிந்த அத னில் - கூறிய சுழுத்தி அவஸ்தையில், அறிவு - ஆத்மா, உளது ஆம் - ஸ்திரமா யிருப்ப தாம், [சுழுத்தி யவஸ்தை யில், ஒன்றும் அறியாது, சுக மாகத் தூங்கினேன் என்பதற் குக் காரணங் கூறுகின்றார்.] ஏதும் -ஒன்றும், அறியாமல்- தெரியாமல், நந்து - மிகுதியும், (பெருகுகின்ற) சுகத்து - சுக மாக, (சுகத்துடன்), உறங்கினேன் - நித்திரை செய் தேன், எனற்கு - என்று எழுந்த பின் உண்டாம் ஸ்மிரு திக்கு, முறையே - கிரம மாக, விடய ஞாநம் இலாமை யும் - சவிஷய ஞாநம் இன்மையும், குடும்ப நிவிர்த்தியும் - சம்சாரம் இன்மையுமே, ஏது ஆம் - காரண மாம். எ—று. ஏ- "விருத்தி தன்னில்" என்பதில். தன் - சாரியை.

ஜாக்கிர அவஸ்தை ஸ்வப்ந அவஸ்தைகளில், ஆத்மா, அறிவு ரூப மாய் இருக்கின்றது, என்பது சித்தித்தது. சுழுத்தி யவஸ்தையில், ஆத்மா அறிவு ரூப மாய் இருக்கின் றது எப்படி எனின், தூங்கி எழுந்து, வேறு ஒன்றும் தெரியாது, சுக மாக நித்திரை செய்தேன் எனத் தொடர் பாய் உள்ள, இரு ஸ்மிருதிகளும், சுழுத்தி அவஸ்தையில்,

அநுபவியாது வராது என்னும் அருத்தாபத்திப் பிரமாணத்திஞலும்

பொருளை எல்லாம் அடக்கும் இருளை விழி பார்ப்பது போல, காரியங்களை உட் கொண்ட பெரிய அவித்தையின் சூக்ஷும விருத்தியில், அசைகின்ற தருவின் இலைகளின் மத்தியில் வெண்மை யான சந்திரிகா லேசம் போல, க்ஷணம் உத்பூத மாய் விளங்கி திரோபாவத்தை அடைகின்ற நிஜ ரூப ஆநந்த அம்சங்களையும், ஆத்மாவானது, வியாவகாரிக நேத்திர புத்தியாதி வேறு சாதங்களின்றி, சுழுத்தி அவஸ்தையில் அநுபவிக்கின்றபடியாலும், சுழுத்தி அவஸ்தையில் ஆத்மா இருக்கின்றது.

ஒன்றும் அறியாமல் சுகமாகத் தூங்கினேன் என்பது. விஷய ஞாநம் இல்லாமையிஞலும், குடும்ப நிவிர்த்தியாகியிருப்பதும், காரணம் ஆம். என உணர்க. (97)

[சுழுத்தி யவஸ்தையில் அதற்குச் சாக்ஷி யாக ஆநந்தமய அறிவு ரூப ஆத்மா இருக்கும் ஆயின், ஒருவராலும் சுழுத்தியில் ஆத்மாவினை அறிந்தேன், என்று கூருததற்குக் காரணம் யாது என்றும், கூபத்தில் ஓர் பொருளை எடுப்பதற்கு நீரில், மூழ்கினவன், ஆண்டு அப் பொருள் உளது இலது என்பதை. மேலே வந்து சொல்லலாமே அன்றி, ஜலப் பிரதிபந்தத்திஞல், அப் பொழுது கூற முடியாமை போல, சுழுத்தி யவஸ்தையில் கருமச் செயலிஞல், சாதநமாகிய கரண சம்பந்தத்திஞல் கூற முடியுமே அன்றி, சுழுத்தியில் இருந்த வஸ்துவை, சாதநம் இன்றிக் கூற முடியாது என்றும், ஆதலால், ஆத்மா பஞ்சாவஸ்தையிலும், சச்சிதாநந்தப் பிரகாசமா யிருக்கின்றது என்றும், கூறுகின்ருர்.]

மன்றசுழுத் தியிலதற்குக் கரியாமா நந்த
  மயவுயிருண் டெனிலொருவ ராகிலுமாண் டறிந்தே,
னென்றலில தேதுகா ரணமெனிலோர் பொருளை
  யெடுப்பநீர் மூழ்கினோ னுண்டுளதென் பதுமேற்,
சென்றலது புகலவொணா ததுபோலக் கருமச்
  செயலினா லெழுந்துதுணை யாங்கரணங் கூடி,
னன்றியதி லறிந்தபொருள் கூறொணா தாகு
  மாதலினா லுயிர்ச்சி தாநந்த வொளியாம்- (98)

இ—ள் சுழுத்தியில் - சுழுத்தி (அவஸ்தை)யில், அதற்கு - (அந்தச் சுழுத்தி அவஸ்தையி லுள்ள) அவித்தைக்கு, கரி ஆம் - சாக்ஷி யாகிய, ஆநந்த மய - ஆநந்தரூப, உயிர் - ஆத்மா, உண்டு - இருக்கின்றது, எனில் - என்று கூறின், ஒருவ ராகிலும் - ஒரு புருஷனாகிலும்- ஆண்டு - சுழுத்தி அவஸ்தையில், அறிந்தேன் - (அவித்தையினை) உணர்ந்தேன், என்றல் இலது - என்று கூறுததற்கு, காரணம் - காரணம், எது - என்னை, எனில் - என்று கேட்கில், [திருஷ்டாந்தத்தோடு சமாதாநங் கூறுகின்றார்.] ஓர்- ஒரு, பொருளை - வஸ்துவை, எடுப்ப - எடுத்தற் காக, நீர் - (கிணற்றுச்) சலத்தின்கண், மூழ்கினோன் - மூழ்கினவனுக்கு, ஆண்டு - கிணற்றினுள், உளது - (அவ் வஸ்து) இருக்கின்றது (அல்லது இன்று), என்பது - என்பதை, மேற் சென்று - மேற் கிளம்பி வெளியே வந்தால், அலது - அன்றி, புகல - கூற. வொணாதது - முடியாதது, போல - போல், கருமச் செயலினால் - (சுழுத்தி அவஸ்தையின்கண் அறிவு ரூப ஆத்மா இருப்பினும் கால) கரும வசத்தினால், எழுந்து - (சுழுத்தியை விட்டுச்) சாக்கிராவஸ்தையை அடைந்து, துணை ஆம் - சககாரி யாகிய, கரணம் - கரணங்

களோடு, கூடின் அன்றி - கூடினுல் அல்லது, அதில் - (அந்தச்) சுழுத்தி அவஸ்தையில், அறிந்த - உணர்ந்த, பொருள் - (அவித்தை யாகிய) வஸ்துவை, கூற ஒணுது ஆகும் - உரைப்ப அரி தாம், [ஆத்மா சுழுத்தியவஸ்தை யில், சச்சிதாநந்த ஸ்வரூப மாக இருக்கின்றது என்று கூறு கின்ருர்.] ஆதலினுல் - ஆனதால், உயிர் - ஆத்மா, சச்சிதா நந்த ஒளி ஆம்-சச்சிதாநந்த சொயம் பிரகாச சொரூப மாம். எ—று. மன்ற - என்பது, தேற்றத்தில் வந்தது.

சுழுத்தி அவஸ்தையில், அதற்குச் சாக்ஷி யாக ஆநந்த ரூப ஆத்மா உண்டு என்று ஒருவராலும், அறிந்து ஏன் சொல்லப்பட வில்லை என்று கேட்கில், கிணற்றுக்குள் இருக்கும் நீரி லிருந்து, ஒரு வஸ்துவை எடுப்பதற்கு, அக் கிணற்று நீரில் மூழ்கி எடுத்த வஸ்துவை, 'எடுத்தேன்' என்று கூறுவது. நீருக்கு வெளியே வந்தால் அன்றிச் சொல்ல முடியாதது போல, சுழுத்தி அவஸ்தையில், ஆத்மா இருப்பினும், கால கரும வசத்தினுல், சக காரி யாகிய கரணங்களோடு கூடினுல் அன்றி. அந்தச் சுழுத்தி அவஸ்தையில் அறிந்த அவித்தை யாகிய வஸ்துவினைக் கூற முடியாது ஆம் - ஆனதால். ஆத்மா மூன்று அவஸ்தை யிலும், சச்சிதாநந்த ஸ்வயம் பிரகாச ஸ்வரூபம் ஆம் என உணர்க: (94)

[அந்ந மயம், பிராண மயம், மநோ மயம், விஞ்ஞாந மயம், என பஞ்ச கோசம் உள்ளன என்றும், தூல சரீரம் அந்நமய கோசம் என்றும், சூக்ஷ்ம சரீரத்தில் உள்ள. பிரா ணும்; கருமேந்திரியங்களும், கூடி, பிராண மய கோசம் என்றும், மநமும் ஞாந இந்திரியமும் கூடி, மநோ மய கோசம் என்றும், கூறுகின்ருர்.]

அந்நமொடு பிராணன்மநம் விஞ்ஞாந மிக்க
வாநந்த மயமாமைங் கோசமுள வவைதாஞ்,
சொன்னமுறை சுக்கிலசோ ணிதத்தாகி நின்ற
தூலவுடம் பந்நமய கோசஞ்சூக் குமமெய்,
மன்னலுறும் பிராணனும்வாக் காதியுமே பிராண
மயகோச மநமுஞா நேந்தியமும் புணரிற்,
பன்னுமநோ மயகோசந் துரியன்சிற் சாயை
பதிதலொடு லோகாந்த குந்தமே போன்று. (99)

இ—ள் அந்நம் - அந்ந மயமும், பிராணன் - பிராண மயமும், மநம் - மநோ மயமும், விஞ்ஞாந - விஞ்ஞாந மய மும், மிக்க - உயர்வு பொருந்திய, ஆநந்த மயம் ஆம் - ஆநந்த மயமும் ஆகிய, ஐ கோசம் - பஞ்ச கோசங்கள், உள - இருக்கின்றன, அவை - அந்தப் பஞ்ச கோசங்க ளாவன, சொன்ன - கூறிய, முறை - கிரம மாகவே, சுக் கில சோணிதத்து - (மாதா பிதாக்களினது) சுக்கில சோணி தங்களால், ஆகி நின்ற - உண்டாகி விளங்குகின்ற, தூல உடம்பு - தூல சரீரமே, அந்ந மய கோசம் - அந்ந மய கோச மாம், சூக்கும - சூக்ஷுமம, மெய் - சரீரத்தின்கண், மன்னல் உறும் - பொருந்தி யிருக்கின்ற - பிராணனும் - பிராணாதி (பஞ்ச) வாயுக்களும், வாக்கு ஆதியுமே - வாக் காதி (ஐந்து) கர்மேந்திரியங்களும் (சேர்ந்திருப்பதே), பிராண மய கோசம் - பிராண மய கோச மாம், மநமும் - மநமும், ஞாந இந்தியமும் - ஞாநேந்திரிய (பஞ்சக) மும், புணரில் - சேருமிடத்து, பன்னும் - சொல்லாநின்ற, மநோ மய கோசம் - மநோ மய கோச மாம், துரியன் - துரியாதமாவினது, சித் சாயை - சைதந்யச் சாயை, பதி தல் ஒடு - வந்து பொருந்துவதோடு கூடி, லோக -

இரும்பை, அந்தம்- கடையி லுடைய, குந்தம் - ஈட்டியை, போன்று - போல. எ—று.

தாம் - ஏ - அசை. ஒடு எண்ணுப் பொருளது. (இச் செய்யுள் குளகம்).

அந்ந மயம், பிராண மயம், மநோ மயம், விஞ்ஞாந மயம், ஆநந்த மயம், என பஞ்ச கோசங்கள் உள்ளன. கோசம் (சட்டை) மறைப் பாம்.

சுக்கில சுரோணித்தால் உண்டாக்கப்பட்ட ஸ்தூல சரீரம், அந்நமய கோசம் ஆம். சூக்ஷ்ம சரீரத்தில் உள்ள, பிராணுதி பஞ்ச வாயுக்களும், வாக்காதி ஐந்து கர்மேந்திரியங்களும் சேர்ந்து, பிராண மய கோசம் ஆம்.

மநமும், ஞாந இந்திரிய பஞ்சகமும் கூடி, மநோ மய கோசம் ஆம்.

ஆத்ம சைதந்யத்தின் சித் சாயா பிரதிவிம்பத்தோடு லோகாந்த குந்தம், (இரும்பை ஈற்றில் உள்ள தடி) போன்று. இருந்த அகங்காரமும், ஞாந இந்திரியமும் கூடி, விஞ்ஞாந மய கோசம் ஆம். மயம் - விகாரம், காரியம், மிகுதி, சொரூபம், என நான்கு பொருளில் வரும். ஈண்டு ஐந்து மயமும், விகாரப் பொரு ளுடையது.

அந்ந காரிய மறைப்பு, பிராண காரிய மறைப்பு, மந காரிய மறைப்பு, விஞ்ஞாந காரிய மறைப்பு, ஆநந்த காரிய மறைப்பு என ஆகும். தூல தேகத்தினை, ஆத்மா என்றும், சூக்ஷ்ம தேகத்தினை, ஆத்மா என்றும், காரண சரீர ஆநந்த மய கோசத்தினை, ஆத்மா என்றும், பல மதஸ்தர்கள் கூறுவார்கள்.

அது. வேத தாத்பரியம் உணரார் கூற்ரும். தனக்கு அந்நிய மாகப் போகும் ஸ்தூல சூக்ஷ்ம காரண சரீரம் மூன்றும் எங்ஙனம் ஆத்மா வாகும். பிறப்பு, இறப்பு ஷட் பாவ விகாரம். ராகத் துவேஷம் மாந அபமாநம், ஸ்துதி நிந்தை, முதலியவற்றிற்கு இட மாக உள்ளது, எங்ஙனம் ஒரே படித் தான சச்சிதாநந்த ஆத்மா வாகும் என உணர்க.

(99)

[கூடஸ்த சைதந்யச் சாயைப் பெற்ற, லோகாந்த குந்தம் (இரும்பை நுனியில் உடைய தடி) போன்று, இருக்கின்ற அகங்காரமும், ஞாநேந்திரியமும், சேர்ந்து விஞ்ஞாநமய கோசம் என்றும், காரண சரீர அவித்தையும், விஷய தரிசந சாமிப்பிய சையோகத்திறல் உண்டாம் பிரியம் மோதம் பிரமோதம் என்பவையும், சேர்ந்தது, ஆநந்த மய கோசம் என்றும், அகம் என்று துன்பத்தினே, தருகின்ற விஞ்ஞாந மய கோச ரூப மாகிய அகங்காரத்தினே, ஆத்ம அநாத்ம விவேகம் இன்றிய மூடர்கள், ஆந்மா என்று கூறுவர் என்றும், கூறுகின்றார்.]

இருந்தவாங் காரமுஞா நேந்தியமுங் கூடி
  விசைத்தலுறும் விஞ்ஞாந மயகோச மாகும்,
பொருந்துகா ரணதேக ரூபாவித் தையுந்தாம்
  புகல்விடய தரிசநசா மிப்பியசை யோகந்,
தரும்பிரிய மோதமொடு பிரமோத மென்னத்
  தக்கவையு மாநந்த மயகோச நானென்
  றரந்தைதரு விஞ்ஞாந மயகோச வடிவா
  மாங்காரந் தனையாந்மா வென்பர றிவிழந்தோர் (100)

(இ—ள்) இருந்த - இருக்கின்ற (அந்தக் கரணத்தி லொன்ருக அமைந்த), ஆங்காரமும் - அகங்காரமும், ஞாந இந்தியமும் - ஞாநேத்திரிதிரிய (பஞ்சக)மும், கூடில் - சேருமிடத்து, இசைத்தல் உறும் - சொல்லாநின்ற, விஞ்ஞாநமய மய கோசம் ஆகும் - விஞ்ஞாந மய கோச மாம், காரண தேக ரூப - காரண சரீர வடிவ, அவித்தையும் — அஞ்ஞாநமும், புகல் - கழருநின்ற, விடய - (ஜாக்கிராவஸ்தையில் வநிதாதி) விஷயங்களின், தரிசந - தரிசந, சாமிப்பிய - சாமீப்பிய, சையோகம் - சையோகங்களினுல், தரும் - உண்டாகின்ற, பிரியம் - பிரியமும், மோதம் - மோதமும், பிரமோதம் - பிரமோதமும், என்னத் தக்கவையும் - என்று சொல்லக் கூடியனவும். பொருந்து - சேருமிடத்து, ஆநந்த மய கோசம் - ஆநந்த மய கோச மாம், [விஞ்ஞாந மய கோசத்தினை அறிவிலிகள் ஆத்மா என்று கூறுவர் என்று கூறுகின்ருர்.] நான் - அகம், என்று - என (அநுபவம் உண்டாகிறபடியால்), அரந்தை - துக்கத்தினை, தரும் - தருகின்ற, விஞ்ஞாந மய கோச வடிவு ஆம் - விஞ் ஞாந மய கோச ரூப மாகிய, ஆங்காரம் தனை - அகங்காரத்தினை, அறிவு இழந்தோர் - ஆத்மாநாத்ம விவேக மின்றியவர், ஆந்மா - ஆத்மா, என்பர் - என்று கூறுவர். எ—று

தாம் - அசை - ஆங்காரம் தனை'' என்பதில், தன் - சாரியை, ஒடு - எண்ணுப் பொருளது,

''லோகாந்த குந்தம்'' என்றது, கூரிய இரும்பை அந்தத்தில் உடையதனை, குந்தம் (தடி), சிதாபாசனை முன்னிட்டு விஷய தேசத்திற் செல்லுதலால், ''லோகாந்த குந்தமே போன் றிருந்த ஆங்காரமும்'' என்ருர்.

காரண சரீர ரூப அவித்தையும், விஷய தரிசந சாமீப்ய சையோகத்தால் உண்டாகின்ற பிரியம், மோதம், பிரமோத விருத்திகளும், சேர்ந்து ஆநந்த மய கோசம் ஆகும்.

இந்தப் பஞ்ச கோசங்களை ஒவ்வொன்றையும் ஆத்மா என்கின்றனர் அறிவிலிகள், அதிலும், விஞ்ஞாந மய கோசத்தினை அறிவிலிகள் ஆத்மா என்று கூறுவர் என உணர்க. (100)

[நீல குண விசேஷணத்தோடு உத்பல விசேஷியம் அறியப்படுதல் போல, "கிருசோகம்" என்று, தூல சரீர விசேஷணத்தோடும், "அகம் சுரோதாமி" என்று இந்திரிய விசேஷணத்தோடும், "அகம் சங்கற்பவான்" என்று அந்தக்கரண விசேஷத்தோடும், ஆங்காரம் ஆத்மாவால், அறியப்பட்டு இருத்தலின், அகங்காரம் ஆத்மா அன்று என்றும், அப்படியாயின், அசேதந அகங்கார மானது, பாஹ்ய விஷயங்களை எப்படி அறிகின்றது எனின், ஸ்காந்த சந்நிதியில், ஊசி சேட்டித்தல் போலும் என்று, திருஷ்டாந்தங் கூறி, அடுத்த கவியில் முடிக்கின்றார்.]

நீலகுண விசேடமொடுத் பலவிசே டியந்தா
னிகழ்தரவேத் தியமாதல் போலிளைத்தே னெனினுன்,
றூலதநு வொடுங்கேட்ப னெனினிந் தியத்துஞ்
சூழ்வனெ னெனிற்கரண முடனும்வேத் தியமாய்ச்,
சாலவுயிர் துரியனிற் கையினலாங் காரந்
தானான்மா வன்றுகி லசேதநவாங் காரஞ்,
சீலமுறு புறவிடய மறிவதே னெனினூ
சிக்கலின்முன் னூசிசேட் டித்திடுதல் போலும். (101)

(இ—ள்) நீல - நீல, குண - குண மாகிய, விசேடம் ஒடு - விசேஷணத்தினெடு, உத்பல - உத்பல மாகிய, (குவளை யாகிய) விசேடியம்- விசேஷிய மானது, நிகழ்தர - விளங்கும்படி, வேத்தியம் ஆதல் - அறியப்படுதல், போல் - போல, நான் - அஹம், இளைத்தேன் - கிருசன். எனில் - என்னுமிடத்து, தூல - தூல, தநு ஒடும் - சரீர(மாகிய) விசேஷணத்தோடும், நான் - அஹம், கேட்பன் - சுரோதா; எனின் - என்னுமிடத்து. இந்தியத்தும் - இந்திரிய மாகிய (விசேஷணத்)தினேடும், நான் - அஹம். சூழ்வன் - ஸ்மர்த்தா, எனில் - என்னுமிடத்து, கரணம் உடனும் - அந்தக் கரண மாகிய(விசேஷணத்) தினேடும், ஆங்காரம் - அஹங்கார மானது, சால- மிகவும், துரியன் உயிர் - (ஆல்)- துரியாத்மாவால், வேத்தியம் ஆய் - அறியப்பட்டு, நிற்கை யினுல் - போகிறபடியால், (இருக்கிறபடியால்), ஆங்மா - (அஹங்காரம்) ஆத்மா, அன்று - அன்ரும், [அகங்காரம் ஆத்மா அன்ருயின், அசேதந அகங்காரம் பாஹ்ய விஷயங் களை எவ்வாறு உணரக் கூடும் என்று ஆக்ஷேபத்தினைக் கூறுகின்ருர்] ஆகில் - (அஹங்காரம் அங்ஙனம் ஆத்மா வன்ருகும்) ஆயின், அசேதந - சட மாகிய, ஆங்காரம் - அஹங்கார மானது, சீலம் உறு-ஸ்வபாவ மாகப் பொருந்தி யுள்ள, புற - பாஹ்ய, விடயம் - விஷயங்களை, அறிவது - உணர்வது, ஏன் - என்னை?, எனின் - என்று கேட்கில், [அசேதநம் அறிவதற்கு திருஷ்டாந்தம் காந்த சந்நிதியில் ஊசி சேஷ்டித்தலை திருஷ்டாந்த மாகக் கூறுகின்ருர்] ஊசிக்கலின் - ஊசிக் காந்தக் கல்லின், முன் - சந்நிதானத் தில், ஊசி - ஊசி யானது. சேட்டித்திடுதல் - சேஷ்டிப்பது, போலும் - போலவும். எ—று தான் - அசை.

(இச் செய்யுள் குளகம்)

நீல குண விசேஷணத்தோடு உத்பல விசேஷியம், விசிட்ட வாசகத்தில், அறியப்படுதல் போல, "நான் கிருசன்" எனில், ஸ்தூல சரீர விசிஷ்ட மாகவும், "அஹம் சுரோதா" என்று, இந்திரிய விசிஷ்ட மாகவும், "நான் ஸ்மர்த்தா" என்று, அந்தக் கரண விசிஷ்ட மாகவும், அகங்காரம், துரிய ஆத்மாவால், அறியப்பட்டு நிற்கிறபடியால், அகங்காரம் ஆத்மா அன்று எனவும்,

ஜட அகங்காரம் புற விஷயங்களை எங்ஙனம் அறியக் கூடும் எனின், சட மான காந்தக் கல்லின் சந்நிதியில் சட மான ஊசி சேட்டித்திடுதல் போலும் எனக் கூறுகின்றார். எனவும், உணர்க. (101)

[சூரிய சந்நதியில் காட்டப்பட்ட ஸ்படிக் கல் ஆந்தர கிரகத்தினை விளக்குதல் போல, சட அகங்காரம், துரிய ஆத்மாவின் சந்நிதியையும், அந்த ஆத்மாவின் சைதந்யப் பிரதிபிம்பத்தினையும், தன்னிடத்தில் பெற்றிருத்தலினால், விஷய ஞானத்தினோடு ஜாக்கிர ஸ்வப்ந அவஸ்தைகளில் சஞ்சரித்து, சுழுத்தி யவஸ்தையில், தனது காரண அவித்தையில், லயப்பட்டிருக்கும் என்றும், அந்த வியவகாரத்தினை கூறுமிடத்து; அகங்காரம் அடங்குகிற சுழுத்தி யவஸ்தையில், அவித்தை யாகிய ஆந்தர பித்திகையையும், நித்திரை யாகிய கதவையும், என்று கூறி அடுத்த கவிகளில் முடிக்கின்றார்.]

வெயிலினிடைக் காட்டுபடி மக்கல்முண் மனையை
விளக்குதல்போ லுந்துரியன் றனதிருஞ்சந் நிதியு,
மியலுறுதற் சைதந்யத் பதிவிம்பந் தன்பா
லெய்தலும்பெற் றிடுதலினா லச்சடவாங் காரம்,

நடுக்கமறுந் தீபமாந் தனைத்தானே விளக்க,
 னவில்பிரத்ய காத்மாவின் சோதியாம் பின்னர்த்,
தொடக்கிவரு காலகரு மாதிசமீ ரணனுற்
 றுயிற்கதவந் திறந்திடவவ் வவித்தையது தன்னி,
னடுக்குமுத லவத்தைமக தத்துவமாந் தெற்றி
 யடுத்திருந்தாங் காரமெனும் வெண்பளிங்கு மணிதான்,
படைத்தலருந் துரியசுடர்ப் பதிவிம்பம் பதியப்
 பட்டுமுனம் போற்சீவ னென்னவே நின்று. (103)

(இ—ள்) நடுக்கம் அறும் - சலன மின்றிய, தீபம் ஆம் - தீப மாகிய, தனை - தன்னையும், தானே விளக்கல் - ஸ்வய மாகவே விளக்குதல், நவில் - சொல்லாநின்ற, பிரத்தியக் ஆத்மாவின் - பிரத்திய காத்மாவினது, சோதி ஆம் - பிரகாச மாகும், பின்னர் - பின், தொடக்கி - சம்பந்தித்து, வரு - வருகின்ற, கால கரும ஆதி - கால கருமாதியோடு கூடி, சமீரணனால் - சமீரண னென்னும் (பெயரை யுடைய) வாயுவினால், துயில் - நித்திரை யாகிய, கதவம் - கபாடம், திறந்திட - திறக்கப்படின், அவ் அவித்தையது தன்னில் - (அதன் பின்) அந்த அவித்தையினது, அடுக்கு - கிரம மான, முதல் அவத்தை - பிரதமாவஸ்தை யாகிய, மக தத்வம் ஆம் - மக தத்துவம் என்னும், தெற்றி - திண்ணையின், அடுத்து இருந்த - சமீபத்தில் இருக்கின்ற. ஆங்காரம் - (தனது மூல) அகங்காரம், எனும் - என்னும். வெண் - வெண்மை யான, பளிங்கு மணி - படிக மணி யானது, படைத்தல் அரும் - நித்தியமா யுள்ள, துரிய - பிரத்தியகாத்மாவின், சுடர் பதிவிம்பம் - தீபப் பிரதிவிம்பத்தை, பதியப்பட்டு - (தன்னிடத்துப்) பொருந்தப் பெற்று, முனம் - முன்னர், போல் - போல, சீவன் - ஜீவன், என்ன - என, நின்று - இருந்து. எ—று.

(இச் செய்யுள் குளகம்)

தான் - ஏ - அசை. 'அவித்தையது தன்னின்' என்பதில், அது, பகுதிப் பொருள் விகுதி. தன் - அசை,

சலநமின்றிய தீப மாகிய தன்னைத் தானே விளக்கிக் கொண்டு பிரத்தியகாத்ம சோதி இருக்கும் எனவும்,

கால கருமாதி சமீரண வாயுவினுல், நித்திரை யாகிய கபாடம் திறக்கவும், அந்த அவித்தையின் பிரதம அவஸ்தை ஆகிய மகத் தத்துவம் என்னும் திண்ணையின் சமீபத்தில் இருக்கின்ற மூல அகங்காரம் என்னும் வெண்மை யான படிக மணியானது, பிரத்தியக்காத்ம தீபப் பிரதி விம்பம் பதியப்பட்டு, முன்னம் போல், சீவன் என்று பெயர் உடைய தாய் இருந்து, என உணர்க. அடுத்த செய்யுள் சம்பந்தம். (103)

[ஆத்மப் பிரதிபிம்ப அகங்கார மானது, ஸ்வப்ந மாகிய நடு வீட்டை (மத்திய கிரகத்தை) பிரகாசிக்கச் செய்து, இந்திரிய மாகிய பலகணி வாயினினுல் வெளிப் போந்து, ஜாக்கிர மாகிய முற்றத்தினை விளக்கும் என்றும், முன் கூறிய கால கருமாதி சமீரண வாயுவினுல், நித்திரை யாகிய கபாடம் மூடவும், காரிய அகங்காரம் ஆகிய ஸ்படிகக் கல் அவித்தையில் அடங்கி, நநவு கநவு என்று கூறும் முற்றமும், நடு மனையும், இருளும், அந்தப் படிகத்தில், பிரதிவிம்பித்த ஆத்மப் பிரகாசம் ஆனது, தனது அதிஷ்டாந துரிய ஆத்மாவினை அடைந்து, ஏகம் ஆகும் என்று கூறி, மூன்று கவியினுல் கூறி முடிக்கின்ருர்.]

பயில்விடய வுணர்வினெடு நநவுகந வுழன் று
பகர்சுழுத்தி தனிலடங்கு மவ்வழக்க முரைப்பிற்,
செயிர்தருமாங் காரமடங் குறுசுழுத்தி தன்னிற்
செறியவித்தை யுட்சுவருந் துயிற்கதவு மன்றி. (102)

(இ—ள்) வெயிலினிடை -சூரிய கிரணத்தினிடத்து, காட்டு - காட்(டுகின்ற) டப்பட்ட, படிமக் கலம் - கண்ணுடி, உள் - நடு, மனையை-வீட்டி லுள்ள இருளை, விளக்குதல் - (போக்கிப் பதார்த்தங்களைப்) பிரகாசிப்பித்தல், போலும் - போலவும், அச் சட ஆங்காரம் - அந்தச் சடமாகிய அஹங்கார மானது, துரியன் தனது - பிரத்தியகாத்மாவினது, இரும் - பெருமை (பொருந்திய), சந்நிதியும் - சந்நிதியையும், இயல் உறு - ஸ்வபாவ மாகப் பொருந்தி யுள்ள, தத் சைதந்யப் பதிவிம்பம் - அந்தப பிரத்தியகாத்ம சைதந்யப் பிரதிபிம்பத்தினை, தன்பால் - தன்னிடத்து, எய்தலும் - அடையவும், பெற்றிடுதலினுல் - பெற்றிருத்தலினுல், பயில் - சொல்லாநின்ற (பாஹ்ய), விடய - விஷய, உணர்வின் ஒடு - ஞாநத்தோடு கூடி, நநவு, ஜாக்கிர, கநவு - சொப்பநங்களில், உழன்று - சஞ்சரித்து, பகர் - கூறுகின்ற, சுழுத்தி தனில் - சுழுத்தியில், அடங்கும் - லயத்தை அடையாநிற்கும், அவ் வழக்கம் - அந்த முறைமையினை, உரைப்பில் - சொல்லுமிடத்து, செயிர் - துன்பத்தினை, தரும் - தருகின்ற, ஆங்காரம் - அஹங்காரமானது, அடங்குறு - லயத்தை அடைந்திருக்கின்ற, சுழுத்தி தன்னில் - சுழுத்தி (அவஸ்தை)யில், செறி - நெருங்கி யிருக்கின்ற, அவித்தை - அவித்தை யாகிய, உள் - நடு வீட்டி லுள்ள, சுவரும் - பித்திகையையும்,

துயில் - நித்திரை யாகிய, கதவும் - கபாடத்தினையும், அன்றி - அன்றியும். எ—று

இச் செய்யுள் குளகம்.

"துரியன் தனது", "சுழுத்திதனில்", "சுழுத்தி தன்னில்" என்பவற்றி லுள்ள, தன் - தன் - தன் - அசை.

வெயிலில் காட்டிய ஸ்படிகக்கல். உள் வீட்டில் உள்ள இருளை போக்கிப் பதார்த்தங்களை விளக்குவித்தல் போல. சட மான அகங்கார மானது, துரிய ஆத்மாவின் சந்நிதியையும், பிரத்யக்காத்மப் பிரதிபிம்பம் தன்னிடத்து இருப்பதா லும், பாஹ்ய விஷய ஞானத்தோடு கூடி, சாக்கிர ஸ்வப்நங்களில், சஞ்சரித்து, சுழுத்தியில், லயம் ஆகியிருக்கும் எனவும்,

அந்த அடங்கியிருக்கும் முறையினை சொல்லப்புகின், துன்பத்தினைத் தருகின்ற அகங்காரம் லயத்தினை அடைந்திருக்கின்ற சுழுத்தி யவஸ்தையில், நெருங்கியிருக்கின்ற அவித்தை யாகிய நடு வீட்டில் உள்ள பித்திகையையும், நித்திரை யாகிய கபாடத்தினையும் எனவும், உணர்க. அடுத்த கவியில் முடிவுறும், (102)

[நிச்சலந ரூப தீபம் ஆகிய தன்னையும் விளக்குதல், பிரத்தியக்காத்மப் பிரகாசம் என்றும், அதன் பின்னர், கால கருமாதி சமீரண வாயுவினால், நித்திரை யாகிய கபாடம் திறக்கப்படலும், அவித்தையின் பிரதம அவஸ்தை யாகிய மகத் தத்துவம் ஆகிய திண்ணையினை அடுத் திருந்த, அகங்கார மாகிய ஸ்படிகக் கல்லில், ஆத்ம பிரகாசம் பிரதிபிம்பிக்கப்பட்டு, பூர்வம் போல், ஜீவத்துவத்தினை அடைந்து என்று கூறி, அடுத்த கவியில் முடித்தலையும் கூறுகின்றார்.]

நடுக்கமறுந் தீபமாந் தனைத்தானே விளக்க,
நவில்பிரத்ய காந்மாவின் சோதியாம் பின்னர்த்,
தொடக்கிவரு காலகரு மாதிசமீ ரணனாற்
றுயிற்கதவந் திறந்திடவவ் வவித்தையது தன்னி,
லடுக்குமுத லவத்தைமகத் தத்துவமாந் தெற்றி
யடுத்திருந்தாங் காரமெனும் வெண்பளிங்கு மணிதான்,
படைத்தலருந் துரியசுடர்ப் பதிவிம்பம் பதியப்
பட்டுமுனம் போற்சீவ னென்னவே நின்று. (103)

(இ—ள்) நடுக்கம் அறும் - சலநமின்றிய, தீபம் ஆம் - தீப மாகிய, தனை - தன்னையும், தானே விளக்கல் - ஸ்வய மாகவே விளக்குதல், நவில் - சொல்லாநின்ற, பிரத்தியக் ஆந்மாவின் - பிரத்திய காத்மாவினது, சோதி ஆம் - பிரகாச மாகும், பின்னர் - பின், தொடக்கி - சம்பந்தித்து, வரு - வருகின்ற, கால கரும ஆதி - கால கருமாதியோடு கூடி, சமீரணனால் - சமீரண னென்னும் (பெயரை யுடைய) வாயுவினால், துயில் - நித்திரை யாகிய, கதவம் - கபாடம், திறந்திட - திறக்கப்படின், அவ் அவித்தையது தன்னில் - (அதன் பின்) அந்த அவித்தையினது, அடுக்கு - கிரம மான, முதல் அவத்தை - பிரதமாவஸ்தை யாகிய, மக தத்வம் ஆம் - மக தத்துவம் என்னும், தெற்றி - திண்ணையின், அடுத்து இருந்த - சமீபத்தில் இருக்கின்ற. ஆங்காரம் - (தனது மூல) அகங்காரம், எனும் - என்னும். வெண் - வெண்மை யான, பளிங்கு மணி - படிக மணி யானது, படைத்தல் அரும் - நித்தியமா யுள்ள, துரிய - பிரத்தியகாத்மாவின், சுடர் பதிவிம்பம் - தீபப் பிரதிவிம்பத்தை, பதியப்பட்டு - (தன்னிடத்துப்) பொருந்தப் பெற்று, முனம் - முன்னர், போல் - போல, சீவன் - ஜீவன், என்ன - என, நின்று - இருந்து. எ—று.

(இச் செய்யுள் குளகம்)

தான் - ஏ - அசை. 'அவித்தையது தன்னின்' என்பதில், அது, பகுதிப் பொருள் விகுதி. தன் - அசை,

சலநமின்றிய தீப மாகிய தன்னைத் தானே விளக்கிக்கொண்டு பிரத்தியகாத்ம சோதி இருக்கும் எனவும்,

கால கருமாதி சமீரண வாயுவினுல், நித்திரை யாகிய கபாடம் திறக்கவும், அந்த அவித்தையின் பிரதம அவஸ்தை ஆகிய மகத் தத்துவம் என்னும் திண்ணையின் சமீபத்தில் இருக்கின்ற மூல அகங்காரம் என்னும் வெண்மை யான படிக மணியானது, பிரத்தியக்காத்ம தீபப் பிரதிவிம்பம் பதியப்பட்டு, முன்னம் போல், சீவன் என்று பெயர் உடைய தாய் இருந்து, என உணர்க. அடுத்த செய்யுள் சம்பந்தம். (103)

[ஆத்மப் பிரதிபிம்ப அகங்கார மானது, ஸ்வப்நமாகிய நடு வீட்டை (மத்திய கிரகத்தை) பிரகாசிக்கச் செய்து, இந்திரிய மாகிய பலகணி வாயினினுல் வெளிப் போந்து, ஜாக்கிர மாகிய முற்றத்தினை விளக்கும் என்றும், முன் கூறிய கால கருமாதி சமீரண வாயுவினுல், நித்திரை யாகிய கபாடம் மூடவும், காரிய அகங்காரம் ஆகிய ஸ்படிகக் கல் அவித்தையில் அடங்கி, நநவு கநவு என்று கூறும் முற்றமும், நடு மனையும், இருளும், அந்தப் படிகத்தில், பிரதிவிம்பித்த ஆத்மப் பிரகாசம் ஆனது, தனது அதிஷ்டாந துரிய ஆத்மாவினை அடைந்து, ஏகம் ஆகும் என்று கூறி, மூன்று கவியினுல் கூறி முடிக்கின்றார்.]

சொற்பநமா நடுமனையை விளக்கியே பொறியாஞ்
சுருங்கையினிற் போந்துநந வெனுமுன்றில் விளக்கு,
முற்பகருங் காலகரு மாதிசமீ ரணனன்
மூடலுமத் துயிற்கதவங் காரியவாங் கார
நற்படிக மணியவித்தை தனிலடங்கச் சென்று
நநவுகந வெனுமுன்றி னடுமனைக ளிருளுந்,
தற்படிக மணிகதுவு மறிவொளிதன் முதலாந்
தனித்துரிய விளக்கையடைந் தேகமா மன்றே, (104)

(இ—ள்) சொற்பநம் ஆம் - சொப்பந மாகிய, நடு - மத்திய, மனையை - கிரகத்தினை, விளக்கி - பிரகாசித்து, பொறி ஆம் - இந்திரியங்க ளாகிய, சுருங்கையினில் - வாயி னில், (பல்கணி வழி யாக), போந்து - வந்து, நநவு - ஜாக்கி ரம், எனும் - ஆகிய முன்றில் - முற்றத்தினை, விளக்கும் - பிரகாசிப்பிக்கும், முன் - முன்னர், பகரும் - கூறிய, கால கரும ஆதி சமீரணனல் - கால கர்மாதிகளோடு கூடிய சமீரண வாயுவினுல், அத் துயில் - அந்த நித்திரை யாகிய, கதவம் - கபாடம், மூடலும் - சாத்தப்படலும், காரிய ஆங்காரம் - (மகத் தத்துவத்தின்) காரிய மூல அகங்கார மாகிய, நல் - நல்ல, படிக மணி - ஸ்படிக மணி யானது, அவித்தை தனில் - அவித்தையினில், சென்று அடங்க - போய் லயத்தினை அடைகிறபடியால், நநவு - சாக்கிரம், கநவு - சொப்பநம், எனும் - ஆகிய, முன்றில் - முற்றமும், நடு மனைகள் - மத்திய கிரகமும், இருளும் - அந்தகார மயமா யிருக்கவும், தத் படிக மணி-அந்த ஸ்படிக மணியி னிடத்து, கதுவும் - பிரதிபிம்பித்திருக்கின்ற, அறிவு ஒளி - சித்து(த் தீப)ப் பிரகாசம், தன் முதல் ஆம் - தனக்குக் கார ணமா யுள்ள, தனித் துரிய - கேவலம் பிரத்தியகாத்ம, விளக்கை - தீபத்தை, அடைந்து - (போய்ச்) சேர்ந்து,

ஏகம் ஆம் - ஐக்கியம் ஆகும். எ—று. ''அவித்தை தனில்'' தன்-அன்று - ஏ - அசை.

இங்கே, ''ஐக்கியம்'' என்றது ஔபாதிக ஐக்கியத்தினை என உணர்க.

ஸ்வப்நம் ஆகிய நடு வீட்டை விளக்கி, இந்திரியங்களாகிய பலகணி வாயில் வழி யாக வந்து. ஜாக்கிர சொப்பநம் என்று சொல்லப்பட்ட முற்றமும், மத்திய கிரகமும், இருட்டா யிருக்கவும், அந்தப் படிக மணியிடத்துப் பிரதிவிம்பித்திருந்த பிரகாச சித் ரூப தீபம், தனக்குக் காரணம் ஆன கேவல பிரத்தியக் காத்ம தீபத்தினை அடைந்து, ஐக்கியம் ஆகும் என உணர்க (104)

[முற் கவிகளில் கூறிய திருஷ்டாந்தப்படி அகங்காரத்தினது இருப்பு இன்மைகளை, ஜாக்கிர ஸ்வப்ந சுழுத்தியவஸ்தைகளில், அவிகார மாக இருந்து அறிகின்ற ஆத்மா, அகங்காரத்திற்கு, அந்நிய மாக ஒன்று இருத்தலினால், கூறிய அகங்காரம் ஆத்மா அன்று என்று உணர்வாயாக என்றும், பாஹ்ய விஷயங்களைக் குறிக்க ஆத்மா வாயும், பரமாத்மாவிற்கு வேத்தியமா யிருத்தலின், சட அசட ரூபமாக, கண்ணாடியின் முன் புறம் பின் புறம் போல, பிரகாச அப்பிரகாச ரூபம் ஆன அகங்காரத்தினுக்கு. சரீரத்தினோடும், சித் பிரதிவிம்பத்தினோடும், ஆத்மவோடும், சம்பந்தம் ஆம் என்றும், கூறுகின்றார்.]

இத்திறமிங் ககமினது பாவாபா வங்க
ளிலங்குநந வாதிகளி னவிகார மாகி,

யுய்த்துணரு முயிர்வேறென் றிருத்தலினு லென்று
முரைத்தவக மாந்மாவன் றெனவறிக புறம்பு,
வைத்தவிட யங்கடனக் காந்மாவாய்ப் பரமாந்
மாவிற்கு வேத்தியமா தலிற்சடா சடமா,
யத்தமதின் முன்பின்போ லொளியலதா மகந்தைக்
காகஞ்சிற் சாயையாந் மாவுடனும் புணர்ச்சி, (105)

(இ—ள்) இத் திறம் - இவ் வாறு, இங்கு - இவ் விடத்து, அகமினது - அகங்காரத்தினது, பாவ அபாவங் கள் - இருப்பு இன்மைகளை, இலங்கும் - விளங்காநின்ற, நநவு ஆதிகளின் - சாக்கிர சொப்பந சுழுத்தி அவஸ்தை களினிடத்து, அவிகாரம் ஆகி - நிர்விகாரமா யிருந்து கொண்டு, உய்த்து - பொருந்தி, உணரும் - அறிகின்ற, ஒன்று - ஒரு, உயிர் - ஆத்மா, வேறு - (தேகேந்திரியாதி களுக்கு) அந்நிய மாக, இருத்தலினுல் - இருக்கின்றபடி யால், உரைத்த - கூறிய, அகம் - அகங்காரம், என்றும் - எப் பொழுதும், ஆந்மா அன்று - ஆத்மா அல்ல, என - என்று. அறிக - உணர்வா யாக, [கண்ணுடியின் முன் புறம் பின் புறம் போல ஜட அஜட மான அஹங்காரம், பாஹ்ய விஷயங்களை விளக்கும் ஆத்மாவாயும், பரமாந்மா வுக்கு வேத்திய மாயும் இருந்து, சரீரம் சித் பிரதிவிம்பம் ஆந்மாவுடன் சம்பந்தம் ஆம் எனக் கூறுகின்ருர்.] புறம்பு- வைத்த - பாஹியத்தி லுள்ள, விடயங்கள் தனக்கு - விஷ யங்கட்கு, ஆந்மா ஆய் - (விளக்கும்) ஆத்மா வாயும், பரமாந்மாவிற்கு - பிரத்தியாக்காத்மாவினுல், வேத்தியம் - அறியப்படுவதாயும், ஆதலின் - இருத்தலினுல், சட அசடம் ஆய் - சடாசட ரூப மாய், அத்தமதின் - கண்ணுடியின், முன் - முன்(புறமும்), பின் - பின் (புறமும்), போல் -

போல, ஒளி -பிரகாச, அலது ஆம் - அப்பிரகாச வடிவ மாகிய, அகந்தைக்கு - அகங்காரத்திற்கு, ஆகம் - சரீரத் தோடும், சித் சாயை - சித் பிரதிவிம்பத்தினேடும், ஆந்மா வுடன் - ஆத்மாவினேடும், புணர்ச்சி ஆம் - சம்பந்த மாம் எ—று,

'விடயங்கள் தனக்கு'' என்பதில், தன்-அசை, ''அத்த மதின்'' என்பதில், அது, பகுதிப் பொருள் விகுதி.

''பரமாந்மாவிற்கு'' என்பது வேற்றுமை'' மயக்கம்.

இவ் வாறு. அகங்காரத்தினது இருப்பு இன்மைகளை சாக்கிர ஸ்வப்ந சுழுத்தி அவஸ்தைகளிடத்து நிர்விகாரமா யிருந்து கொண்டு அறிகிற ஒரு ஆத்மா, தேகேந்திரியாதி களுக்கு அந்நிய மாக இருக்கின்றபடியால், அகங்காரம் எப் பொழுதும் ஆத்மா அன்றும் என அறிக.

பாகியத்திலுள்ள விஷயங்களை விளக்க ஆத்மாவா யும், பரமாந்மாவிற்கு வேத்தியமாயிருத்தலினுலும், சட மும், அசடமும், ஆய், கண்ணுடியின் முன் புறம், பின் புறம், போல, பிரகாச அப்பிரகாச ஸ்வரூப அகங்காரத் துக்கு, சரீரத்தினேடும், சித் பிரதிவிம்பத்தினேடும், ஆத்மா வினேடும், சம்பந்தம் இருக்கின்றது என உணர்க. (105)

[முற் கவியில் கூறிய சம்பந்தத் திரயம் இன்னது என்று கூறுவான் தொடங்கி, 'அகம் ஜ்வராமி' என்பதனுல், சித் பிரதிவிம்பத்தோடு கூடிய அகங்கார சம்பந்தத்தினுல், தூல சரீரத்திற் குண்டாம் உஷ்ணம் முதலியவற்றினை உணர்தலே, கருமத்தினுல் உண்டாவ தாய்க், கரும ஜந்ய தாதாத்மிய சம்பந்தம் என்றும், 'அஹம் ஜாநாமி' என்று

உண்டாவ தாய், சித் பிரதிவிம்பத்தினோடு அகங்கார சம் பந்தம், சிருஷ்டி முதல் மோக்ஷ பரியந்த மிருப்ப தாகிய சகஜ தாதாத்மிய சம்பந்தம் என்றும், 'அகம் கர்த்தா' என்று அகங்காரத்திற்கு, ஆத்மாவோடு உண்டாம் சம்பந் பந்தம், பிராந்தி ஜந்ய தாதாத்மிய சம்பந்தம் என்றும், கூறு கின்றார்.]

வெப்பினே னெனலாற் சிற்பதிவிம் பந்தான்
மேவுமாங் காரசம் பந்தத்தாற் றூல,
மெய்ப்படுவ வெம்மைமுத லனவறிதல் கரும
வினைவாகிக் கருமசமா நானறிந்தே னெனலாற்,
றப்பரிய சிற்சாயை யுடனவ்வாங் கார
சம்பந்தஞ் சிருட்டிமுதன் முத்தியள வாகிப்,
பொய்ப்பரிய வியல்பாகு நான்கருத்த னெனலாற்
புணர்ச்சியிலாங் மாவினுட னனையதின்சம் பந்தம்.
(106)

(இ—ள்) நான் - அஹம், வெப்பினேன் - ஜ்வராமி, எனலால் - என்று அநுபவம் உண்டாகின்றபடியால், சித் பதிவிம்பம் - சித் பிரதிவிம்பத்தினை, மேவும் - பொருந்தி யிருக்கின்ற, ஆங்கார - அகங்காரத்தின், சம்பந்தத்தால் - சம்பந்தத்தால், தூல மெய் - தூல சரீரத்திற்கு, படுவ - உண்டாவன வாகிய, வெம்மை - உஷ்ணம், முதலன - முதலியவற்றை, அறிதல் - உணர்தலே, கரும வினைவு ஆகி - கருமத்தினால் உண்டாவன வாய், கருமசம் ஆம் - கரும ஜந்ய (தாதாத்மிய சம்பந்த)மாம், நான் - அஹம், அறிந்தேன் - ஜாநாமி, எனலால் - என்று அநுபவம் உண்டாகின்றபடியால், தப்பு அரிய - நீக்கம் இன்றிய, சித் சியையுடன் - சித் பிரதிவிம்பத்தோடு, அவ் ஆங்

கார - முற் புகன்ற அகங்காரத்தினது, சம்பந்தம் - சம்பந்தம், சிருட்டி முதல் - சிருஷ்டி தொடங்கி, முத்தி-மோக்ஷ, அளவு - பரியந்தம், ஆகி - இருப்ப தாய், பொய்ப்பு அரிய - (இடையில்) அழி வின்றிய, இயல்பு ஆகும் - சகஜ (உடன் பிறப்பு) தாதாத்மிய சம்பந்த மாம், நான் - அஹம், கருத்தன்-கருத்தா, எனலால் - என்று அநுபவம் உண்டாகின்றபடியால், புணர்ச்சி இல் - அசங்க ஞானை- ஆந்மாவினுடன் - ஆத்மாவினோடு, அனையதின் - முன்னர் புகன்ற அகங்காரத்தின், சம்பந்தம் - சம்பந்த மானது. எ-று. தான் - அசை. (இச் செய்புள் குளகம்)

'சகஜம்' (உடன் பிறப்பு) என்பதனை, 'இயல்பு' என, இந் நூல் மொழி பெயர்ப்பு ஆசிரியர், மொழி பெயர்த்திருக்கின்றார்.

"அஹம் ஜ்வராமி" என அநுபவம் உண்டாகிறபடியால், சித்பிரதி விம்பத்தினைப் பொருந்தியிருக்கின்ற அகங்காரத்தின் சம்பந்தத்தினால், தூல சரீரத்திற்கு உண்டாம் உஷ்ணம் முதலியவற்றை உணர்தல், கர்மத்தினால் உண்டாவன வாய்க் கர்ம ஜந்ய தாத்மிய சம்பந்தம் ஆம்.

"அஹம் ஜாநாமி" என அநுபவம் உண்டாகிறபடியால், சித் பிரதிவிம்பத்தினோடு அகங்காரத்தினது சம்பந்தம், சிருஷ்டி முதல் மோக்ஷ பரியந்தம் இருப்பது ஆய், இடையில் அழி வின்றிய சஹஜ தாதாத்மிய சம்பந்தம் ஆம்.

"அஹம் கர்த்தா" என்று அநுபவம் உண்டாகிறபடியால், ஆத்மாவோடு அஹங்காரத்தின் சம்பந்தம் (பிராந்தி ஜந்ய தாதாத்மிய சம்பந்த மாம்) என உணர்க. (106)

[பிராந்தி ஜந்ய தாதாத்மிய சம்பந்தம் என்று கூறுவர் என்றும் கூறி, 52 வது செய்யுள் முதல் 107 வது செய்யுள் வரைக் (56 செய்யுளில்) கூறிய அனைத்தும் திரிசிய விவேகம் என்றும் ஜீவர்கட்கு, அஞ்ஞானம், ஆவரணம், விக்ஷேபம், பரோக்ஷ ஞானம், அபரோக்ஷ ஞானம், சோக நிவிர்த்தி, நிரங்குச திருப்தி எனச் சப்த அவஸ்தை உண்டு என்றும், கூறுகின்றார்.]

இசைப்பிலது பிராந்திசெந் நியமாகு மென்னு
 மிவைமுழுதுஞ் செப்புதிரி சியவிவே கந்தான்,
மிசைப்புகல்வ வஞ்ஞான மாவரண மிக்க
 விட்சேபம் பாரோட்சமப ரோட்சஞா னம்பின்,
வசைப்படுத லறுஞ்சோக நிவிர்த்தியதின் மீது
 வருநிரங் குசதிருப்தி யெனுமவத்தை யேழும்,
திசைப்புறுத லுறுஞ்சீவர்க் காவனவா மிவற்றின்
 றிறமனைத்து முறைபிறழா தினியெடுத்து மொழிவாம்.
107)

(இ—ள்) இசைப்பில் - கூறுமிடத்து, அது - ஆத்மா அகங்காரங்களின் சம்பந்தம், பிராந்தி செந்நியம் ஆகும், பிராந்தி ஜந்நிய (தாதாந்மிய சம்பந்த)மாம், என்னும் - ஆகிய, இவை முழுதும் - இவை யாவும், செப்பு - சொல்லாநின்ற, திரிசிய விவேகம் - திருசிய விவேக மாம், [திரிசிய விவேகத்தினை உபசம்மரித்து, பிராந்திஜ தாதாத்மியத்தை நிவிர்த்திக்கத் தக்க அபரோக்ஷ ஞானம், சீவனது சப்த அவஸ்தையில் இருப்பதால், ஜீவர்கட் குள்ள சப்தாவஸ்தையினைக் கூறுகின்றார்.] மிசை - மேல், புகல்வ - கூறப்படுவன, அஞ்ஞானம் - அஞ்ஞானமும், ஆவரணம் - ஆவரணமும், மிக்க - (மோக்ஷ ஏது வான) உயர்வினை

யுடைய, விட்சேபம் - விக்ஷேபமும், பரோட்சம்-பாரோக்ஷ (ஞாந)மும், அபரோட்சம் ஞாநம் - அபரோக்ஷ ஞாநமும், பின் - (அதன்)பின், வசப்படுதல் அறும் - குற்றம் இன்றி (யிருக்கின்ற), சோக நிவிர்த்தி - துக்க நிவிர்த்தியும், அதன் மீது வரும் - அதன் பின் வருகின்ற, நிரங்குச திருப்தி — நிரங்குச திருப்தியும், எனும் - ஆகிய, அவத்தை - அவஸ்தை, ஏழும் - ஏழும், திசைப்புறுதல் உறும் - மயக்கத்தினைப் பொருந்தி யிருக்கின்ற, சீவர்க்கு - ஜீவர்களுக்கு, ஆவன ஆம் - உண்டாவன வாம், இவற்றின் - இந்த (சப்த) அவஸ்தை களின், திறம் - தன்மை. அனைத்தும் - யாவும், இனி-மேல், முறை பிறழாது - கிரமம் தவறாது, எடுத்து - எடுத்து, மொழி வாம் - (யாம்) கூறு வாம் எ—று. தான் - அசை.

பிராந்தி ஜந்ய தாதாத்மிய சம்பந்தம் ஆம். ''இந்து வினை அநாதி யடைந்து'' என்னும், 52வது செய்யுள் முதல், 'இசைப்பிலது'' என்னும், 107 வது செய்யுள் வரை உள்ள, 56 செய்யுளும் திரிசிய விவேகம் என உணர்க.

ஜீவனுக்கு 1 அஞ்ஞாநம், 2. ஆவரணம், 3. விக்ஷேபம், 4. பரோக்ஷ ஞாநம், 5 அபரோக்ஷ ஞாநம், 6. சோக நிவிர்த்தி, 7. நிரங்குச திருப்தி, என ஏழு அவஸ்தைகள் உள என உணர்க. (107)

[தாழ் வான குடும்பி யாக சாமர்த்தியம் இன்றிய சிதாபாச னாகிய ஜீவன், வேத விசாரத்திற்கு முன்னர், தன் ஸ்வரூப மாகிய பூரணப் பிரகாச ரூப துரிய ஸ்வரூபத்

தினை அறியாதிருத்தலை, அஞ்ஞானம் என்றும், ஒரு சமயம் பிரத்தியகாத்மாவின் தன்மையினைக் கூறுமிடத்து. பிரத்தியகாத்மா இன்று, தோன்றவில்லை என்று கூறும் இரு வித மோகமும், அஞ்ஞான காரியம் ஆகிய, அசத்துவ ஆபாதக ஆவரணம், அபான ஆபாதக ஆவரணம் எனவும், பெரியோர் கூறுவர் எனக் கூறுகின்றார்]

புன்னெறிகொள் குடும்பியாய் வலியறுமோர் சித்துப்
 போலியாஞ் சீவனுயர் சுருதிவிசா ரத்தின்,
முன்னமொரு தன்சொரூப மாகியபே ரொளியா
 முதற்றுரிய நிலையறியா திருந்திடலஞ் ஞானம்.
பின்னொருகா லுயிரியல்பு கூறுமிடத் தின்று
 பிரத்தியகாந் மாத்தோன்ற தெனுங்கலக்க மிரண்டும்,
பன்னியவஞ் ஞானகா ரியமாகு மென்னப்
 பகர்தருமா வரணமென்பர் பலகலைகற் றுணர்ந்தோர்.
(108)

(இ—ள்) புல் நெறி . இழிவான மார்க்கத்தினை. கொள் - கொண்டிருக்கின்ற, குடும்பி ஆய் - சம்சாரியாய், வலி அறும்-சாமர்த்திய மின்றிய ஓர் - ஒப்பற்ற, சித்துப் போலி ஆம் - சிதாபாச முகிய. சீவன் - ஜீவன், உயர் - சிரேஷ்டம் பொருந்திய, சுருதி விசாரத்தின் - வேத விசாரத்திற்கு. முன்னம் — பூர்வம், ஒரு - ஒப்பற்ற, தன் சொருபம் ஆகிய - தனது சொரூப மாகிய, பேர் ஒளி ஆம் - பூரணப் பிரகாச சொரூப மாகிய, முதல்-முதன்மையான, துரிய நிலை - பிரத்தியகாத்மாவின் தன்மையினை, அறியா திருந்திடல் - உணராதிருத்தல், அஞ்ஞானம் - அஞ்ஞான மாம், பின் - பின்னர், ஒரு கால் - ஒரு

காலத்தில், உயிர் இயல்பு - பிரத்தியகாத்மாவின் தன்மையினை, கூறுமிடத்து - சொல்லும் (பிரசங்கம் வந்த) காலத்து, பிரத்தியக் ஆந்மா - பிரத்தியகாத்மா, இன்று - இல்லை, தோன்ருது - (பிரத்தியகாத்மா) தோற்றவில்லை, எனும் - என்னும், கலக்கம் இரண்டும் - இருவித மோகமும், பன்னிய - கூறிய, அஞ்ஞாந காரியம் ஆகும் - அஞ்ஞாநத்தின் காரியமாம், என்ன - என்று, பகர்தரும் - புகலாநின்ற, ஆவரணம் - (அசத்துவ ஆபாதக, அபாந ஆபாதக) ஆவரணமாம், என்பர் - என்று கூறுவர், பலகலை - பல சாஸ்திரங்களை, கற்று - படித்து. உணர்ந்தோர்- (பொருளை) அறிந்த பெரியோர். எ—று.

1. இழிவான மார்க்கத்தினைக் கொண்டிருக்கின்ற சம்சாரி ஆய், சாமர்த்தியம் இன்றிய சிதாபாசனுகிய ஜீவன், உயர்வான வேத விசாரத்துக்கு முன், தனது ஸ்வரூபமாகிய பூரணப் பிரகாச ரூப முதன்மையான பிரத்தியகாத்மாவின் தன்மையினை உணராதிருத்தல். அஞ்ஞாநம் ஆம்.

2, 3. ஒரு காலத்து பிரத்தியக்காத்மாவின் தன்மையினைக் கூறும் பிரசங்கம் வந்த காலத்து, "பிரத்தியக் ஆத்மா இல்லை", "பிரத்தியக்காத்மா தோன்றவில்லை" என்னும், இருவித மோகமும், அஞ்ஞாநத்தின் காரியம் ஆகிய அசத்துவ ஆபாதக ஆவரணம். அபாந ஆபாதக ஆவரணம், என்று பெரியோர்கள் கூறுவார்கள் என உணர்க.

பஞ்சதசி 6 சித்திர தீபம்.

12 அனைய தேயந்நி யோந்நியாத் தியாசமா
மாவியோர் காற்கூடத்,

தனைம றத்தலே யநாதியா கியவவி
வேகமாந் தானீதே,
நினைக மூலமா மவித்தையென் றின்னது
நினைப்பொடு மறைப்பென்றும்,
வினையி லானிலைத் தெரிபடான் என்பது
விளம்பிய மறைப்பாகும்.

13 ஞாந கேநன்மற் றறிஞுறல் வினவமெய்
நானறிந் திலன்போதம்,
ஆன தில்லையிங் கிலகுரு தெனவுணர்ந்
தறைகுவன் சொயஞ்சோதி,
மேன லம்பெரு வவித்தையே தனைவிட
மேவுமோ மறைப்பென்னன்,
மோனை யாம்பல தருக்கந்தன் னநுபவ
முழுதையும் அறநூறும். (108)

என வருவனவற்றால் உணர்க.

[கர்ம கர்த்தாவும், கர்ம பல போக்தாவும், தானுகக் கருதும், தேக அபிமாநி யாகிய ஜீவன் தான், விக்ஷேபம் என்றும், சுருதி வாக்கியத்தினுலும், ஆசாரியர், வாக்கியத்தினுலும், பிரத்தியக் ஆத்மா இருக்கின்றது என்று அறிதல், அசத்து என்னும் பிரதம ஆவரண நிவர்த்தகம் ஆகிய பரோக்ஷ ஞாநம் என்றும், தத்த்வமசி என்னும் வேத மகா வாக்கிய விசாரத்தினுல், பிரத்தியக் ஆத்மா தானே என்று உணர்தல், இரண்டாவா தாகிய ஆவரண நிவர்த்தகம் ஆகிய அபரோக்ஷ ஞாநம் என்றும் (விக்ஷேபம், அசத்துவ ஆபாதக நிவர்த்தகம், அபாந ஆபாதக நிவர்த்தகம், மூன்றையும் கூறுகின்றார்.]

கருத்தனுமொண் கரும்பல போத்திருவுந் தாயுய்க்
　கருதியுடம் பபிமானி யாஞ்சீவன் றனே,
யுரைத்தலரும் விட்சேபஞ் சுருதிகுரு வுண்மை
　யுரையாலுண் டுயிரெனவே யறிதலசத் தென்னு,
நிரைத்தமுத லாவரண நிவர்த்தகமாம் பரோட்ச
　நீபிரம மெனும்வேத மொழிவிசா ரத்தால்,
வரத்துரியன் றனெனவே யறிந்திடுத லபாநா
　வரணநிவர்த் தகமாகு மபரோட்ச ஞாநம். (109)

(இ—ள்) கருத்தனும் - (கருமத்தினைச் செய்யும்) கர்த்தாவும், ஒண் - ஒள்ளிய, கரும பல - (புண்ணிய பாப) கருமங்களின் பிரயோஜநத்தினை(ப் புசிக்கும்), போத்திருவும் - போக்தாவும், தான் ஆய் - தானே ஆக, கருதி - உணர்ந்து, உடம்பு அபிமானி ஆம் - தேகாபிமானி யாகிய, சீவன் தானே - ஜீவனே, உரைத்தல் அரும் - சொலற்கரிய, விட்சேபம் - விக்ஷேப மாம், உயிர் - பிரத்தியகாத்மா, உண்டு - இருக்கின்றது, என - என்று, சுருதி - சுருதியின், குரு - குருவின், உண்மை - யதார்த்த (அவாந்தர), உரையால் - வசநத்தினால், அறிதல் - உணர்தல், அசத்து - (ஆத்மாவின்) இன்மை, என்னும் - ஆகிய, நிரைத்த - கிரம மாக உள்ள, முதல் - பிரதம, ஆவரண நிவர்த்தகம் ஆம் — (அசத்துவ ஆபாதக) ஆவரணத்தினை நிவிர்த்திப்ப தாகிய, பரோட்சம் - பரோக்ஷ (ஞாந)மாம், நீ - நீயே, பிரமம் - பிரஹ்மம், எனும் - என்னும், வேத மொழி - வேத வாக்கிய, விசாரத்தால் - விசாரத்தினால், வர - சிரேஷ்டம் பொருந்திய, துரியன் - பிரத்தியகாத்மாவே தான் - நான், என - என்று, அறிந்திடுதல் - உணர்தல், அபாந - அபாந (ஆபாதக), ஆவரண நிவர்த்தகம் ஆகும் - ஆவரத்தினை நிவிர்த்திப்ப தாகிய, அபரோக்ஷச

ஞானம் - அபரோக்ஷ ஞான மாம். எ—று. ஏ- ஏ - அசை. "சீவன் தானே" என்பதில், தான் அசை.

4. கருத்தனும், கர்ம பல போத்திருவும். தா னுய்க் கருதி, தேக அபிமானி யாகிய ஜீவனே, விக்ஷேப ரூபன் ஆவன்.

5. பிரத்தியக் காத்மா இருக்கின்றது என்று, சுருதி (யின், அவாந்தர வாக்கிய) வசனத்தினுலும், குரு(வின் அவாந்தர வாக்கிய) வசனத்தினுலும், அறிதல், அசத்துவ ஆபாதக ஆவரத்தினை நிவிர்த்திப்ப தாகிய பரோக்ஷ ஞானம் ஆம்.

6, "நீயே பிரஹ்மம்" என்னும் வேத வாக்கிய விசாரத்தினுல், பிரத்தியக் காத்மாவே நான் என்று அறிதல், "விளங்க வில்லை" என்னும் அபான ஆவரணத்தினை நிவிர்த் திப்ப தாகிய அபரோக்ஷ ஞானம் ஆம் என உணர்க.

பஞ்ச தசி 6 சித்திர தீபம்.

8 திரவிசா ரத்தாம் வித்தையே பரோக்ஷந்
திகழுப ரோட்சமு மென்ன,
விருவகை யவற்றி னுறினப ரோட்சம்,
இயம்பிய விசாரமுற் றுறுமால்,
பரமமுண் டென்ன வுணர்வுறி லதுதான்
பயன்றரு பரோட்சமா ஞானம்,
பிரமநா னென்ன வுணர்வுறி லதுவே
பிறங்கப ரோக்ஷமெய்ஞ் ஞானம்.

என வருதல் கொண் டறிக. (109)

[பிரத்தியக் காத்ம சாக்ஷாத்காரத்தினை அடைந்த பின்னர், அகம் கர்த்தா, அகம் போக்தா என்னும், ஜீவ ஸ்ரூப மாகிய துக்கம் நீங்குதலே, சோக நிவிர்த்தி யாம் என்றும், செய்யத் தக்கனவற்றைச் செய்து, அடையத் தக்க பல சமூகங்களை, யாம் அடைந்திருக்கின்றோம் என உணர்ந்து, சித்த விசிராந்தி யாக இருப்பதுவே, நிரங்குச திருப்தி யாம் என்றும் கூறி, துக்க நிவிர்த்தி, நிரங்குச திருப்தி இரண்டும், அபரோக்ஷ ஞாந பலம் என்றும், சைதந்ய ரூப ஆத்மாவிற்கு, எப் பொழுதும் அபரோக்ஷ ஞாந மிருத்தலினால், ஆத்மாவிற்கு, அஞ்ஞாந முதலிய சப்த அவஸ்தைகள் எங்ஙனம் உண்டாம் எனச் சங்கித்தலையும், கூறுகின்றார்.]

துரியநிலை யடைந்ததற்பி னுன்கருத்த னுன்போத்
 திருவென்னுஞ் சீவவுருத் துக்கமகன் றிடுத,
லரியதெனு மச்சோக நிவிர்த்தியாஞ் செய்தே
 யடைதலுறும் பலனனைத்து மடைந்தனமென் றமைதல்,
பரிவினிரங் குசதிருப்தி யிரண்டுமப ரோட்ச
 பலமாகு மறிவுருவா மாந்மாவிற் கென்றுந்,
தெரியுமப ரோட்சமுள தாதலினு லவற்குச்
 சேர்தலெவ்வா றஞ்ஞாந முதலனவிங் கென்னில். (110)

(இ—ள்) துரிய நிலை - பிரத்தியகாத்ம சாக்ஷாத்காரத்தினை, அடைந்ததன் பின்-அடைந்த பின்னர். நான் - அஹம், கருத்தன் - (கர்ம) கர்த்தா, நான் - அஹம், போத்திரு - (கர்ம பல) போக்தா, என்னும் , எனக் கூறும், சீவ உரு - சீவ சொரூப மாகிய, துக்கம் - துக்கம், அகன்றிடுதல் - நீங்குதல், அரியது எனும் - (சம்பாதித்

தற்கு) அருமை யாகிய, அச் சோக நிவிர்த்தி ஆம் - முன் னர்க் கூறிய சோக நிவிர்த்தி யாகும், செய்து - (செய்யத் தக்கனவற்றைச்) செய்து, அடைதல் உறும் - அடையத் தகுந்த, பலன் அனைத்தும் - பல சமூகங்களை, அடைந் தனம் - (யாம்) அடைந்திருக்கின்றோம், என்று - எனக் கருதி, அமைதல் - சித்த விசிராந்தியோடு, பரிவின் - சந் தோஷ முற்றிருப்பதே, நிரங்குச திருப்தி - நிரங்குச திருப்தி யாம், [துக்க நிவிர்த்தி, சுக ஆவிர்ப்பாவம். இரண்டும் அபரோக்ஷ ஞாந பலம் எனக் கூறுகின்றார்], இரண்டும் - (முன்னர்க் கூறிய, துக்க நிவிர்த்தி, நிரங்குச திருப்தி என் னும்) இரண்டும், அபரோட்ச பலம் ஆகும் - அபரோக்ஷ ஞாநத்தின் பிரயோசநங்க ளாம், [நித்திய அபரோக்ஷ பிரத் தியக் ஆத்மாவிடத்து, அஞ்ஞாந முதலிய சப்த அவஸ்தை கள் எவ் வாறு வந்து பொருந்தும் என ஆக்ஷேபித்ததைக் கூறுகின்றார்.] அறிவு உருவு ஆம் - சித்து ரூப மாகிய, ஆந்மாவிற்கு - பிரத்தியகாத்மாவிற்கு, என்றும் - நித்தியம், தெரியும் அபரோட்சம் உளது - அறியும்படி யான அப ரோக்ஷத் தன்மை இருக்கின்றது, ஆதலினால் - ஆனதனால், அவற்கு - அந்தப் பிரத்தியகாத்மாவிற்கு, இங்கு - இவ் விடத்து, அஞ்ஞாநம் முதலன - அஞ்ஞாந முதலிய (சப்தாவஸ்தைகள்), சேர்தல் - (வந்து) பொருந்துதல், எவ் வாறு - எங்ஙனம், என்னில் - என்று கேட்கில், எ—று. ஏ - அசை.

6. பிரத்தியக் காத்ம சாக்ஷாத்காரத்தினை பெற்று, நான் கர்த்தா, நான் கர்ம பல போக்தா என்று கூறும் சீவ சொரூபம் ஆகிய துக்கம் அகன்றிடுதல், சோக நிவிர்த்தி யாம்.

7. செய்யத் தக்கனவற்றைச் செய்து, அடையத் தக்கனவற்றை அடைந்து இருக்கின்றோம் என்று கருதி சித்த விசிராந்தி யாக இருப்பதுவே நிரங்குசதிருப்தி யாம்.

முன்னர்க் கூறிய துக்க நிவிருத்தி, நிரங்குச திருப்தி என்னும் இரண்டும், அபரோக்ஷ ஞாநத்தின் பிரயோசந மாம்.

அறிவு ரூப ஆத்மாவிற்கு என்றும் அபரோக்ஷத் தன்மை இருக்கின்றபடியால், அறிவு ரூப ஆத்மாவிற்கு, அஞ்ஞாந முதலிய சப்த அவஸ்தைகள் எவ்வாறு பொருந்தும் என கேட்கில், என உணர்க. (110)

[ஆத்மாவிற்கு அஞ்ஞாநாதி சப்த அவஸ்தைகள் பொருந்தும் எனத் திருஷ்டாந்தத்தோடு அறிவிப்பான் தொடங்கி, நதியைக் கடந்த பத்துப் பெயரை எண்ணிய ஒருவன், நவ புருடரை எண்ணித், தன்னை எண்ணாது விடுத்ததே, அஞ்ஞாநம் என்றும், தசமன் இல்லை, காணப் படவில்லை, என்று உண்டாம் பிராந்தி அசத்துவ ஆபாதக, அபாந ஆபாதக ஆவரணம் என்றும், 'பத்தாமவன் நதியில் மரித்தனன்' என்று உண்டாகின்ற துக்கம், விக்ஷேபம் என்றும், அந்நிய ஆப்த வாக்கியத்தினால், ஸ்வர்க்கத்தை போல, 'பத்தாமவன் இருக்கின்றான்' என உணர்தல், பத்தாமவன் இல்லை என்ற அறிவோடு, (அவனில்லை யென்பதனோடு) விரோதித்த லாகிய பரோக்ஷ ஞாநம் ஆம், என்றும் கூறுகின்றார்.]

கடந்துநதி பதின்மர்தமை யெண்ணுங்கா லொருவன்
கண்டுநவ புருடரைப்பத் தாமவன்ற னெனவே,
யடைந்தறியா திருத்தலே யஞ்ஞானம் பத்தா
மவனிலைகா ணப்படா னென்னுமிரு பிராந்தி,
யிடும்பைதரு மாவரண நதியுள வ னிறந்தா
னெனுந்துக்கம் விட்சேபம் வேறுரியன் மொழியாற்,
கிடந்ததொரு துறக்கமென வுளனெனவே யறிதல்
கிளர்ந்தவவ னிலையென்ற லொடுபகைத்தல் பரோட்சம். (111)

(இ—ள்) நதி - (முன்னர் பத்துப் புருஷர்கள் ஒரு) நதியினை, கடந்து - தாண்டி, பதின்மர் தமை - (அக்கரை சென்ற பின்) பத்துப் பேரை, எண்ணுங்கால் - எண்ணிப் பார்க்கு மிடத்து, நவ புருடரை - ஒன்பது புருஷர்களை, ஒருவன் கண்டு - ஒரு புருடன் (எண்ணி) அறிந்து, பத்தா மவன் - (அவ் வொன்பது புருடரை எண்ணுகின்ற) பத்தாவ தாகிய புருஷன், தான் என - தான் (ஆகும்) என்று, அடைந்து - பொருந்தி, அறியா திருத்தலே - அறி யாதிருந்ததே, அஞ்ஞானம் — அஞ்ஞான மாம், பத்தாமவன் - தசமன், இலை - இல்லை, காணப்படான் - தோன்றவில்லை, என்னும் - என்று கூறும், இரு பிராந்தி - இரு வகைப் பிராந்தியே, இடும்பை தரும் - துக்கத்தினைத் தருகின்ற, ஆவரணம்- (அஞ்ஞான காரிய மாகிய, அசத்துவ ஆபாதக, அபான ஆபாதக) ஆவரண மாம், அவன்-தசமன், நதியுள்- ஆற்றில், இறந்தான் - மரித்தான், எனும் - என்னும், துக்கம் - துக்கம், விட்சேபம் - விக்ஷேப மாம். வேறு - அந்நிய மான, உரியன் - (ஒரு) ஆப்த, மொழியால் - வச னத்தினால், ஒரு - ஒப் பற்ற, துறக்கம் - ஸ்வர்க்கம், கிடந்

தது - உண்டு (என்று அறிவது), என - போல, உளன் - (தசமன்) இருக்கின்முன், என - என்று, அறிதல் - உணர்தல், கிளர்ந்த - முன்னர்க் கூறிய. அவன் - பத்தாமவன், இலெ - இல்லை. என்றல் ஒடு - என்னும் அசத்துவ ஆபாதக ஆவரணத்திஞேடு. பகைத்தல் - விரோதி யாகிய, பரோட்சம் - பரோக்ஷ (ஞாந)மாம். எ—று.

ஏ-ஏ-ஏ அசை. "பதின்மர் தமை" என்பதில், தம் அசை.

முன்னர் பத்துப் புருஷர்கள், ஒரு நதியினைத் தாண்டி, அக்கரை சென்ற பின், பத்துப் பெயரை எண்ணிப் பார்க்கும் இடத்து, ஒன்பது புருஷர்களை, ஒரு புருஷன் எண்ணி அறிந்து, அவ்வொன்பது புருஷரை எண்ணுகிற பத்தாவதாகிய புருஷன் தான் ஆகும் என்று அறியாதிருந்ததே, அஞ்ஞாநம் ஆம்.

'தசமன் இல்லை' 'தோன்ற வில்லை' என்று கூறும் இரு வகைப் பிராந்தியே, துக்கத்தினைத் தருகின்ற அசத்துவ ஆபாதக ஆவரணம், அபாந ஆபாதக ஆவரணம் ஆம்,

தசமன், 'ஆற்றில் மரித்தான்' என்னும் துக்கம், விக்ஷேபம் ஆம்.

அந்நிய மான ஆப்த வசநத்திஞல், ஸ்வர்க்கம் உண்டு என்று அறிவது போல, 'தசமன் இருக்கின்முன்' என்று உணர்தல், முன்னர் கூறிய தசமன் இல்லை என்னும் அசத்துவ ஆபாதக ஆவரணத்திஞேடு விரோதி யாகிய பரோக்ஷ ஞாநம் ஆம். என அறிக; (111)

[ஒன்பது புருடரைக் கிரம மாக எண்ணிய நீயே தசமன் என்று பிறர் கூற, பத்தாமவ ஞகிய தன்னைத் தான்

இருந்தபடியே அறிதல், 'பத்தாமவன் காணப்பட வில்லை' என்றதனோடு விரோதித்த லாகிய அபரோக்ஷ ஞானம் என்றும், பத்தாமவன் நதியில் மரித்தான் என்ற துக்கம் நீங்குதல், துக்க நிவிர்த்தி என்றும், அடைய வேண்டியவற்றினை அடைந்து, தனது ஸ்வாபாவ ஸ்திதியில் சுகி யாக இருத்தல், 'நிரங்குச திருத்தி' என்றும், மேல், வேத வாக்கிய விசாரம் கூறு வாம் என்றும், கூறுகின்றார்.]

சங்கநவ புருடரொடு முறையெண்ணி நீயே
தசமனெனத் தனைத்தானே யிருந்தபடி யடுத்த,
லிங்குவரு தசமன்கா ணப்படா னெனலோ
டிகலுமப ரோட்சமா நதியுளிறந் தனனென்,
றங்குவரு துயரகறல் சோகநிவிர்த் தியதா
மடைந்துதன தியனிலையிற் சுகித்திருத்த லுனே,
துங்கநிரங் குசதிருப்தி யென்றறிக வினிமேற்
றொல்வேத வாக்கியமாம் விசாரமெடுத் துரைப்பாம். (112)

(இ—ள்) நவ புருடர் ஒடு - ஒன்பது புருடரை, சங்கம் - சேர்த்து, முறை - கிரம மாக, எண்ணி - எண்ணிக்கை செய்து, நீயே - (அவ் வொன்பது பேரைச் சேர்த்து எண்ணிக்கை செய்த) நீயே, தசமன் - பத்தாமவன், என - என்று (ஒரு ஆப்தன் தெளிவிக்க), தனை - (பத்தாமவ னுகிய) தன்னை, தானே - தா னுகவே, இருந்த படி - சாக்ஷாத்கார மாக, அடுத்தல் - பொருந்தி (உணர் தலே), இங்கு - இவ் விடத்து, வரு - உண்டாகின்ற, தசமன் - பத்தாமவன், காணப்படான் - தோன்ற வில்லை, எனலோடு - என்னும் அபாந ஆபாதக ஆவரணத்தினோடு,

இகலும் - விரோதி யாகிய, அபரோட்சம் ஆம் - அபரோக்ஷ (ஞாந) மாம், நதியுள் - ஆற்றில், இறந்தனன் - (பத்தா மவன்) இறந்தான், என்று - என, அங்கு - அவ் விடத்து, வரு - உண்டாகின்ற, துயர் - துக்கத்தினை, அகறல் - விடுவதே, சோக நிவிர்த்தியது ஆம் - சோக நிவிர்த்தி யாம், அடைந்து - (அடைய வேண்டியவற்றை) அடைந்து, தனது - நிஜ. இயல் - சுபாவ, நிலையில் - ஸ்திதியில், சுகித் திருத்தல் தானே - சுகியா யிருப்பதே, துங்க - பரிசுத்த மான, நிரங்குச திருப்தி - நிரங்குச திருப்தி யாம், என்று - என, அறிக - உணர்வா யாக, [சப்த அவஸ்தையினைக் கூறி முடித்து, வேத வாக்கிய விசாரம் கூற ஆரம்பிக்கின் றார், எனக் கூறுகின்றார்.] இனி மேல்-பின்னர், தொல் - அநாதியா யுள்ள, வேத வாக்கியம் ஆம் - வேத வாக்கிய மாகிய, விசாரம் - விசாரத்தினை, எடுத்து - எடுத்து, உரைப்பாம் - கூறு வாம். (யாம்) எ—று.

நிவிர்த்தியது ஆம்'' என்பதில், அது, பகுதிப் பொருள் விகுதி, ''சுகித்திருத்தல் தானே'' என்பதில், தான்-அசை.

ஒன்பது புருஷரைச் சேர்த்துக் கிரம மாக எண் ணிக்கை செய்து, அவ் வொன்பது பேரைச் சேர்த்து எண் ணிக்கை செய்த நீயே, பத்தாமவன் என்று, ஒரு ஆப்தன் தெளிவிக்க, பத்தாமவ னாகிய தன்னைத் தா னாகவே சாக்ஷாத் கார மாகவே உணர்தல், 'பத்தாமவன் தோன்ற வில்லை' என்று உண்டாகின்ற அபாந ஆபாதக ஆவரணத்தினோடு விரோதி யாகிய அபரோக்ஷ ஞாநம் ஆம்.

ஆற்றில் பத்தாமவன் இறந்தான் என உண்டாகின்ற துக்கத்தினை விடுதலே, சோக நிவிர்த்தி ஆம்.

அடையவேண்டியவற்றை அடைந்து, தனது நிஜ சுபாவ ஸ்திதியில் சுகியா யிருப்பதுவே, நிரங்குச திருப்தி யாம் என உணர்க.

மேல், வேத வாக்கிய விசாரம் கூறு வாம், என அறிக. (112)

[வேத வாக்கியம், விதி வாக்கியம், நிஷேத வாக்கியம், சித்தார்த்த போதக வாக்கியம், என மூ வகைப்படும் என்றும், 'கஷ்டப்பட்டாயினும் யாகம் முதலியவற்றைச் செய்க' என்ற வாக்கியம், விதி வாக்கியம் என்றும், 'மது பாநாதிகளை விடுக' என்ற வாக்கியம், நிஷேத வாக்கியம் என்றும், விதி சூந்ய மாய், சீவப் பிரஹ்ம ஐக்கியத்தினைக் கூறும் வாக்கியம், சித்தார்த்த போதக வாக்கியம் என்றும், ரிக் யஜுர் சாமம் அதர்வணம் என்னும் நான்கு வேதத்தினும், நான்கு சித்தார்த்த போதக வாக்கியம் உளது என்றும், கூறுகின்றார்.]

விரிந்தவிதி நிடேதஞ்சித் தார்த்தபோ தகமாய்
வேதவாக் கியமூன்று திறனுகு மவற்றுள்,
வருந்திமக முதலனசெய் கென்றல்விதி விடுக
மதுபாநா திகளென்கை நிடேதம்விதி யின்றித்,
திருந்துசிவ வுயிரயிக்கப் பொருடனையே தெருட்டல்
சித்தார்த்த போதகவாக் கியமாகு மென்பர்,
பொருந்துமறை நான்கினுநான் குளவாஞ்சித் தார்த்த
போதகமா கியமகா வாக்கியங்க ளன்றே. (113)

(இ—ள்) வேத வாக்கியம் - வேத வாக்கியம் ஆன இவை, விரிந்த - விரிவாகப் பொருந்தி யுள்ள, விதி - விதி

யும், நிடேதம் - நிஷேதமும், சித்தார்த்த போதகம் ஆய் - சித்தார்த்த போதகமும் ஆக, மூன்று - (விதி வாக்கியம், நிஷேத வாக்கியம், சித்தார்த்த போதக வாக்கியம் என) மூன்று, திறன் ஆகும்-மூன்று வகையின வாம், அவற்றுள்-அம் மூன்றனுள், வருந்தி - பிரயாசை யுற்று, மகம் முதலன - எஞ்ஞாதிகளை, செய்க - செய்வா யாக, என்றல் - என்னும் வாக்கியம், விதி - விதி வாக்கிய மாம், மது பாந ஆதிகள் - (நரகாதி துன்பத்திற்குக் காரண மான) கட் குடித்தல் முதலியவற்றை, விடுக — செய்யற்க. என்கை - என்னும் வாக்கியம், நிடேதம் - நிஷேத வாக்கிய மாம், விதி இன்றி - விதி சூந்ய மாய். (விதியாமல்), திருந்து - சிறந்த, சிவ உயிர் - ஜீவப் பிரஹ்ம, அயிக்கம் பொருள் தனையே - ஐக்கியார்த்தத்தினை மாத்திரம், தெருட்டல் - போதிப்பது, சித்தார்த்த போதக வாக்கியம் ஆகும் - சித்தார்த்த போதக வாக்கிய மாம், என்பர் - என்று கூறு வார்கள், [சித்தார்த்த போதக வாக்கியத்தினை, நான்கு வேதத்தும், நான்கு என்று கூறுகின்றூர்], சித்தார்த்த போதகம் ஆகிய மகா வாக்கியங்கள் - சித்தித்த பொருளை அறிவிப்பன வாகிய மகா வாக்கியங்கள், பொருந்தும் - (மோக்ஷ சாதந மாகப்) பொருந்தி யுள்ள, மறை நான்கி னும் - (இருக்கு, யஜுர், சாமம், அதர்வணம் என்னும்) நான்கு வேதத்தி னுள்ளும், நான்கு - (பிரஞ்ஞாநம் பிரஹ்மம், அஹம் பிரஹ்மாஸ்மி, தத்துவமஸி, அயமாத்மா பிரஹ்மம் என) நான்கு வாக்கியங்கள், உள ஆம் - இருக் கின்றன. எ—று. அன்று - ஏ - அசை.

"பொருள் தனையே" - என்பதில், தன் - அசை.

வேத வாக்கியம் - விதி - நிஷேதம் - சித்தார்த்த போதகம் என மூன்று வகையின ஆம்

'பிரயாசைப்பட்டு யாகாதிகளைச் செய்க' என்றல் விதி வாக்கியம் ஆம்.

நரக காரண மான 'மது பானாதிகளை விடுக' என்று கூறுவது நிஷேத வாக்கியம் ஆம்.

விதியாமல் சீவப் பிரஹ்ம ஐக்கியத்தினைக் கூறும் வாக்கியம், சித்தார்த்த போதக வாக்கியம் ஆம்.

சித்தார்த்த போதக மகா வாக்கியங்கள், இருக்கு, யஜுர், சாமம், அதர்வணம்,என்னும் நான்கு வேதத்திலும், "பிரஞ்ஞானம் பிரஹ்மம்',, "அஹம் பிரஹ்மாஸ்மி", தத்வமஸி", "அயம் ஆத்மா பிரஹ்மம்" என நான்கு, மகா வாக்கியங்கள் இருக்கின்றன. என உணர்க. (113)

*பதம் (கூறுகின்றார்.)*

[சித்தார்த்த போதக, நான்கு வேத வாக்கியங்களுள், சாம வேத மகா வாக்கியம் சிறப்புடைய தாம். சாம வேத சாந்தோக்கிய உபநிஷதம் கூறும், தத் த்வ மசி மகா வாக்கியம், ஆகும். அது, தத் பதம், த்வம் பதம், அசி பதம், என மூன்று பதங்களை உடைய தாம். பிரஹ்ம, ஜீவ, ஐக்கியம், கிரம மாகப் பொரு ளாம் என்றும், பதம் பதார்த்தம் வாக்கியார்த்தங்கட்கு, சாமாநாதிகரண்ய பாவ சம்பந்தம், விசேஷண விசேஷிய பாவ சம்பந்தம், லக்ஷிய லக்ஷண பாவ சம்பந்தம் என மூ வித மான சம்பந்தம் உளது என்றும், கூறுகின்றார்.]

உரைத்தவையுட் சிறந்தன்று சாமமறை புகலு
மோங்குதத்வ மசிமகா வாக்கியமங் கதற்குப்,

பரத்தலுறு தற்பதந்தொம் பதத்தொடசி பதமாய்ப்
பதமூன்றுஞ் சிவமுயிரங் கவற்றயிக்க முறையே,
யருத்தமென லாம்பதமே பதார்த்தமொடு வாக்கி
யார்த்தங்க டமக்குச்சம் பந்தமுறை மூன்றும்,
விரிக்கிலவை தாஞ்சமா நாதிகர ணம்பின்
விசேடவிசே டியமிலக் கியமொடிலக் கணமாம் (114)

(இ—ள்) உரைத்த - (முன்னர்க்) கூறிய, அவை யுள் - நான்கு வேதங்களி லுள்ள நான்கு சித்தார்த்த போதக மகா வாக்கியங்களுள், சாம மறை - சாம வேதத் தின்கண், புகலும் - கூறப்படும், ஓங்கு - மேன்மை பொருந்திய, தத் த்வம் அசி தத்துவமஸி (என்னும்), மகா வாக்கியம் - மஹா வாக்கியமே, சிறந்து அன்று - சிறப்பு டைய தாம், அதற்கு - அந்த மஹா வாக்கியத்திற்கு, பரத் தல் உறு - விரி வாகப் பொருந்தி யுள்ள, தத் பதம் - தத் பதமும், தொம் பதத்துஒடு - துவம் பதமும், அசி பதம் ஆய் - அஸி பதமும் ஆக, பதம் மூன்று ஆம் - பதத் திர யங்கள் உள வாம், அவற்று - அம் மூன்று பதங்களுக்கும், முறையே - கிரம மாக, சிவம் - பிரஹ்மமும், உயிர் - ஜீவ னும், ஐயிக்கம் - ஐக்கியமும், அருத்தம் - அருத்தம், எனல் ஆம் - எனக் கூற லாம், பதம் - பதத்திற்கும், பதார்த்தம் ஒடு - பதார்த்தத்திற்கும், வாக்கியார்த்தங்கள் தமக்கு - வாக்கியார்த்தத்திற்கும், சம்பந்தம் - (உண்டாகின்ற) சம் பந்தம், முறை - கிரம மாக, மூன்று ஆம் - மூன்று பிர காரம் ஆம். அவை - அவற்றினை, விரிக்கில் — விரித்துக் கூறுமிடத்து, சமாநாதிகரணம் - சாமாநாதிகரண்ய பாவ சம்பந்தம், பின் - (அதன்) பின் (கூறும்), விசேட விசேடி

யம் - விசேஷண விசேஷிய பாவ (சம்பந்த)ம், இலக்ஷியம் இலக்கணம் - லக்ஷிய லக்ஷண பாவ (சம்பந்த)ம் (என), ஆம் - ஆகும். எ—று,

"வாக்கியார்த்தங்கள் தமக்கு என்பதில், தம்-அசை தாம்-ஏ-அங்கு - அங்கு - ஒடு ஒடு - அசை.

முன்னர் கூறிய நான்கு வேதங்களில் உள்ள நான்கு சித்தார்த்த போதக மகா வாக்கியங்களுள், சாம வேதத்தில் கூறப்படும் தத்த்வமசி மகா வாக்கியமே சிறப்புடையதாம். அதில் தத் பதம் த்வம் பதம் அஸி பதம் எனப் பதம் மூன்று உள்ளன. அம் மூன்றற்கும் கிரம மாகப் பிரஹ்மம் ஜீவன் ஐக்கியம் அருத்தம் என்று சொல்லப்படும். பதம், பதார்த்தம், வாக்கியார்த்தங்கட்கு சம்பந்தம், சாமாநாதி கரண்ய பாவ சம்பந்தம், விசேஷண விசேஷிய பாவ சம்பந்தம், லக்ஷிய லக்ஷண பாவ சம்பந்தம் என மூன்று என்று உணர்க.

இதற்கு பிரமாணம் சங்கராச்சாரிய ஸ்வாமிகள் செய்த தத்வ உபதேசம்

"தத் துவம் என்னும் இரண்டு பதங்களின் சம்பந்தத்தினால் வேதாந்தங்களினால் பிரஹ்ம ஐக்யத் தன்மை பிரதிபாதிக்கப்படுகின்றன." 26.

"பிரவிருத்திக்கு நிமித்தம் வெவ் வேறுயினும், இரு பதங்கட்கு ஒரு வஸ்துவில் போத்தியத் தன்மை யாம். அல்லது, ஒரு வேற்றுமையின் ஈற்றை யுடைய அவ் விரு பதங்கட்கும், ஒரு பொருளில் ஐக்கிய மாம்." 27.

"அது, சாமாநாதிகரண்யம் என்று சம்பிரதாயம் உணர்ந்தவர்களால் கூறப்படுகின்றது. அங்ஙனமே, பதார்த்தங்கட்கே, விசேஷண விசேஷியத் தன்மையாம்."28.

"இது அது", "அது இது" என்பது போன்று, இரண்டற்கும் சம்பந்தம் உண்டாகிறது, பிரத்யக்த் தன்மை, சத்த்வீயத் தன்மை, பரோக்ஷத் தன்மை, பூரணத் தன்மையாம்" 29.

"பரஸ்பரம் விரோதம் உண்டாகின்றது. அதனால், லக்ஷணை உண்டாகின்றது. பதார்த்தப் பிரத்யக் ஆத்மாக்கட்கு, லக்ஷிய லக்ஷண சம்பந்தம் உண்டாகின்றது"30

"பிரத்தியக்ஷாதி. வேறு பிரமாண விரோதத்தால், முக்கியார்த்தத்தினை கவர முடியாதிருக்கில், அவ் விடத்தில், அமுக்கிய அர்த்தத்தில் பிரவிருத்தி உண்டாகின்றது. அது லக்ஷணை என்று கூறப்படுகின்றது"31. (114)

(பதார்த்தம்) (வாச்சியார்த்தம்)

[தத் பத, த்வம் பதங்கட்கு, வாச்சிய அர்த்தம், லக்ஷிய அர்த்தம் என இரு பொருள் உளது என்றும், தத் பதத்திற்கு, விராட் புருஷன், ஹிரண்ய கர்ப்பன், அவ்யாகிருதன், என்னும் மூ வுருவ ஈசுவரனும், பிரஹ்மமும், அபேதம் ஆகி நிற்கும் போது, தற் பதத்திற்கு, வாச்சியார்த்தம், முக்கியார்த்தம் அபிதார்த்தம் என்றும், இவ் வாறே, த்வம் பதத்திற்கு, விசுவ, தைஜஸ, பிராஞ்ஞ, ஜீவர்களும், கூடஸ்தனும், தப்தாய பிண்டம் போல், ஏக மாகி யிருக்

கும் போது, த்வம் பதத்திற்கும், வாச்சியார்த்தம், முக்கி யார்த்தம் அபிதார்த்தம் என்னும், பெயர் உண்டாம் என் றும், கூறுகின்றார்.]

அறைதலுறு பதங்கடமக் கிருபொருளிங் குளவா
மவைவாச்சி யார்த்தமிலக் கியார்த்தமென வவற்றுண்,
முறைமைதரு விராட்புருடன் முதலாகி நின்ற
மூவுருவ வீசனுமப் பிரமமுமொன் ருகிப்.
பிறிதலற நிற்புழிதற் பதத்திற்கெய் துறுவ
பெயர்வாச்சி யார்த்தமுக்கி யார்த்தமபி தார்த்த,
நெறிகொள்விசு வாதிகளுந் துரியனுமொன் ருகி
நிற்புழிதொம் பதத்திற்கு வருமம்மூ வகையும். (1:5)

(இ—ள்) அறைதல் உறு - கூருநின்ற, பதங்கள் தமக்கு - (தத் த்வம் என்னும்) இரு பதங்களுக்கும், இங்கு- இவ் விடத்து, இரு - இரண்டு, பொருள் - அர்த்தங்கள், உள - இருக்கின்றன, அவை - அவ் விரண்டின் நாமம், வாச்சியார்த்தம் - வாச்சியார்த்தமும், இலக்கியார்த்தம் - இலக்கியார்த்தமும், என - என்று, ஆம் - கூறப்படும், அவற்றுள் - அவ் விரண்டனுள், முறைமை தரு - கிரம மாகப் பொருந்தி யுள்ள, விராட் புருடன் முதல் ஆகி நின்ற - விராட்டு, இரணியகர்ப்பன், அவ்யாகிருத னுகப் பொருந்தி யுள்ள, மூ உருவ ஈசனும் - மூன்று சொருப ஈசுவரனும், அப் பிரமும் - அந்தப் பிரஹ்மமும், ஒன்று ஆகி - ஏக மாய், பிறிதல் அற - (தப்தாய பிண்டம் போல்) வேற்றுமை யின்றி, நிற்புழி - நிற்குமிடத்து, தத் பதத் திற்கு - தத் (என்னும்) பதத்திற்கு, எய்து உறுவ - வந்து பொருந்துவன வாகிய, பெயர் - நாமம், வாச்சிய அர்த்தம் - வாச்சியார்த்தம் (என்றும்), முக்கிய அர்த்தம் - முக்கியார்த்

தம் (என்றும்), அபிதா அர்த்தம் - அபிதார்த்தம் (என்றும் சொல்லப்படும்), நெறி கொள் - இந்தக் கிரம மாகவே கொள்ளத் தக்க. விசுவ ஆதிகளும் - விசுவ, தைஜச, பிராக்ஞ ராகிய ஜீவர்களும், துரியனும் - பிரத்தியகாத்மா வும், ஒன்று ஆகி - ஏக மாய், நிற்புழி (தப்தாய பிண்டம் போல்) வே றின்றி, இருக்குமிடத்து, தொம் பதத்திற்கு - த்வம் (என்னும்) பதத்திற்கு, அம் மூ வகையும் - (முன் னர்க் கூறிய) வாச்சியார்த்தம், முக்கியார்த்தம், அபிதார்த் தம் என்னும்) மூன்று வகைப் பெயர்களும், வரும் - வந்து பொருந்தும். எ—று.

"பதங்கள் தமக்கு" என்பதில், தம் - அசை.

பதங்களுக்கு, வாச்சியார்த்தம் லக்ஷியார்த்தம் என இரு பொருள் உண்டு. தற் பதத்திற்கு-விராட் புருஷ ஹிரண்ய கர்ப்ப, அவ்வியாகிருத ஈசுவரனும், பிரஹ்மமும், தப்த அயப் பிண்டம் போல், ஏகீபாவம் ஆய் இருக்கும் போது, வந்து பொருந்துவது ஆகிய பெயர், வாச்சிய அர்த்தம், முக்கிய அர்த்தம், அபிதா அர்த்தம், என்று சொல்லப்படும்.

த்வம் பதத்திற்கு - விசுவ தைஜஸ பிராக்ஞனும், பிரத்தியக் ஆத்மாவும், தப்த அயப் பிண்டம் போல, ஏகம் ஆய் இருக்கும் போது, வந்து பொருந்துவது ஆகிய பெயர், வாச்சிய அர்த்தம், முக்கிய அர்த்தம், அபிதா அர்த்தம் என்று சொல்லப்படும் என உணர்க. (115)

## (பதார்த்த) (லக்ஷியார்த்தம்.)

[தத் பதத்திற்கு, விராட் புருடாதி நீங்கிய நிருபாதிகப் பிரஹ்மமே, லக்ஷியார்த்தம் என்றும், சோதித தற் பதார்த்

தம் எனவும், இருக்கும் என்றும், த்வம் பதத்திற்கு, விசுவாதிகளுக்கு வேறாய், நிருபாதிக பிரத்தியக்காத்மாவே, லக்ஷியார்த்தம் என்றும், சோதித த்வம் பதார்த்தம் என்றும், லக்ஷணை, ஜகத் லக்ஷணை, அஜகத் லக்ஷணை, ஜஹத் அஜஹத் லக்ஷணை என்றும், மூன்று பிரகாரம் ஆகும் என்றும், கூறுகின்றார் ]

தற்பதத் தினுக்குவிராட் புருடாதி யகன்ற
 தனிநிருபா திகப்பிரம மேயிலக்கி யார்த்தஞ்,
சொற்பரவுஞ் சோதிததற் பதார்த்தமென நிற்குந்
தொம்பதத்திற் குற்றவிசு வாதிகளின் வேறும்,
பொற்பினிரு பாதிகமாந் துரியனிலக் கியார்த்தம்
 பொருந்துறுசோ திததொம் பதார்த்தமென லாகும்,
விற்பரவு மிலக்கணைவிட் டதுவும்விடா ததுவும்
 விட்டுவிடா ததுவுமென மூவகையா மன்றே. (116)

(இ—ள்) விராட் புருட ஆதி - விராட் புருடன், ஹிரணிய கர்ப்பன், அவ்யாகிருதன் என்னும் ஈசுவரர்களினும், அகன்ற - வேறுபட்ட, தனி நிருபாதிகப் பிரஹ்மமே - கேவல நிருபாதிகப் பிரஹ்மமே, தற் பதத்தினுக்கு - தத் பதத்திற்கு, இலக்கிய அர்த்தம் - இலக்ஷியார்த்த மாம், சொல் - புகழ்ச்சியோடு, பரவும் - (வேதம்) துதிக்காநின்ற, சோதித - (அது) சோதிக்கப்பட்ட, தத் பத அர்த்தம் - தத் பதார்த்தம். என - என்றும், நிற்கும் - கூறப்படும், உற்ற - (சரீரத் திரயங்களிலும்) பொருந்தி யுள்ள, விசுவ ஆதிகளின் - விசுவ, தைஜஸ, பிராஞ்ஞர்க ளாகிய ஜீவர்களினும், வேறு ஆம் - பின்ன மாகிய, பொற்பு இல் - சமான ரகித. நிருபாதிகம் ஆம் - நிருபாதிக மாகிய, துரியன் - பிரத்தியகாத்மாவே தொம் பதத்திற்கு - தவம் பதத்திற்கு, இலக்கிய அர்த்தம் -

இலக்ஷியார்த்த மாம், பொருந்து உறு - (கீர்த்தி) பொருந்திய, சோதித - (அது)சோதிக்கப்பட்ட, தொம் பத அர்த்தம் - தவம் பதார்த்தம், எனல் - என்றும், ஆகும் - கூறப்படுவ தாம், [லக்ஷணே, ஜஹத், அஜஹத், ஜஹத், அஜஹத் லக்ஷணே என திரி வித மாகும் என்று கூறுகின்றார்], வில், பிரகாசத்தோடு, பரவும் - துதிக்கின்ற, இலக்கணே - லக்ஷணே யானது, விட்டதுவும் - ஜகத் லக்ஷணேயும், விடாததுவும் - அஜகத் லக்ஷணேயும், விட்டு விடாததுவும் -ஜகத் அஜகத் லக்ஷணேயும், என-என்று, மூ வகை ஆம் -மூன்று பிரகார மாம். எ—று, அன்று - ஏ - அசை.

தற் பத லக்ஷியார்தம்—விராட் புருஷன், ஹிரண்ய கர்ப்பன், அவ்வியாகிருதன், என்னும் ஈசுவரர்களின் வேறுபட்ட நிருபாதிக பிரஹ்மமே, தத் பதத்திற்கு லக்ஷிய அர்த்தம் ஆம். இதனே, சோதித தத் பதார்த்தம் என்றும், கூறுவர்.

த்வம் பத லக்ஷியார்த்தம் - விசுவ தைஜச பிராஞ்ஞ ஜீவர்களின் வேறு ஆய், நிருபாதிக பிரத்தியக் காத்மாவே, த்வம் பதத்திற்கு லக்ஷ்ய அர்த்தம் ஆம், இதனேச், சோதித த்வம் பதார்த்தம் என்றும், கூறுவர்.

லக்ஷணே - ஜகத் லக்ஷணே, அஜகத் லக்ஷணே, ஜகத் அஜகத் லக்ஷணே என மூன்று பிரகாரம் ஆகும். என உணர்க.

சசி வர்ண போதம் 72 கவி

ஓரில் விட்டதும் விட்டி டாததும்
உபய மும்மென வுணர்வுளோர்,

தேரி லக்கணை திரிவி தத்திலி
சைப்பர் மற்றதி யம்புவாம்.

கைவல்ய நவநீதம் 1 தத்துவ விளக்கப் படலம் 71 கவி

வட நூல்வல் லவர்கள் சொல்லும்
வாசகப் பொருள்சே ராமல்,
இடராகில் பொருளாம் வண்ணம்
இலக்கணை உரையாற் கொள்வார்,
திடமான அதுவும் மூன்றுச்
செப்புவார் விட்ட தென்றும்,
விடலிலா தென்றும் விட்டு
விடாததென் றும்பேர் ஆமே, (116)

என வருவனவற்றால் உணர்க.

["கங்காயாம் கோஷ· பிரதிவசதி", "குந்தாப் பிரவிசந்தி", "சோயம் தேவதத்த", என்னும் மூன்று வாக்கியங்களும், ஜஹத், அஜஹத். ஜஹத் அஜஹத் லக்ஷணைகளுக்கு உதாஹரணம் ஆம் என்றும், கங்கை எனும் வாக்கியம், ஜல வடிவ, தனது முக்கியார்த்தம் ஆனது, இடைச் சேரி இருத்தற் கிட மாகாமையினால், முக்கிய அர்த்தத்தை விட்டு, தீரத்தை அறிவிக்கும் என்றும், 'குந்தம' எனும் மொழி, முக்கியார்த்தத்தினை விடாமல், குந்தத்தினைச் சுமப்பவனைக் காட்டும் எனவும், கூறுகின்றார்.]

கங்கையினி லிடைச்சேரி மருவலுறுஞ் சொல்லுங்
கவன்குந்த மொடுசோயந் தேவதத்த னென்னு,
மிங்கிவைக ளுதாரணமா மவற்றினுக்குக் கங்கை
யெனுமொழிநீர் வடிவாந்தன் முக்கியார்த் தத்தைத்,

தங்குமிடைச் சேரிதனக் கிடமாகா மையினற்
றணந்துகரை காட்டுந்தன் முக்கியார்த் தத்தைத்,
துங்கமுறு குந்தமொழி விடாமற்குந் தத்தைச்
சுமப்பவனைக் காட்டுமென வுணர்ந்திடுக துணிந்தே 117

(இ—ள்) இங்கு - இவ் விடத்து. அவற்றினுக்கு - முற் புகன்ற லக்ஷணை மூன்றிற்கும், கங்கையினில் - கங்கையில், இடைச் சேரி - இடைச் சேரி, மருவல் உறும் - பொருந்தி யிருக்கின்றது, சொல்லும் - (என்னும்) வாக்கியமும், குந்தம் - குந்தம், கவன் - உள் நுழைகின்றது, சோயம் தேவதத்தன் - அவனே இவன், என்னும் இவைகள் - என்னும் வாக்கியங்களும், உதாரணம் ஆம் - (கிரமமாகத்) திருஷ்டாந்தங்க ளாம், கங்கை - கங்கை, எனும் - என்னும், மொழி - சொல், நீர் வடிவு ஆம் - ஜல வடிவமாகிய, தன் முக்கிய அர்த்தத்தை - தனது வாச்சிய அர்த்தத்தை தங்கும் - (நிலைத்து) இருத்தற் குரிய, இடைச் சேரி தனக்கு - இடைச் சேரி இருத்தற்கு, இடம் - ஆதாரம் ஆதல், ஆகாமையினல் - கூடாமையினல், தணந்து - விட்டு, கரை - (ஜலத்தின் சம்பந்தியா யுள்ள) தீரத்தினை, காட்டும் - அறிவிக்கும், துங்கம் - பரிசுத்தத் தன்மையினை, உறு - பொருந்தியிருக்கின்ற, குந்தம் - ஈட்டி (என்னும் வாக்கியத்தி லுள்ள) ஈட்டி நுழைகின்றது. மொழி - (என்னும்) சொல், தன் முக்கிய அர்த்தத்தை - தனது வாச்சியார்த்த மாகிய ஈட்டியினை, விடாமல் - தியாகம்பண்ணுமல், குந்தத்தை - ஈட்டியினை, சுமப்பவனை - தாங்குவோனை, காட்டும் - அறிவிக்கும், என - என்று, துணிந்து - நிச்சயமாக, உணர்ந்திடுக - அறிவாயாக. எ—று.

ஒடு - ஏ - "சேரிதனக்கு" என்பதில், தன் - அசை.

'கவின்' என்பது பிழை, 'கவன்' என்று தான் இருத்தல் வேண்டும். கவனுதல், நுழைதல் என்னும் பொருளது.

'கங்கையினில் இடைச் சேரி இருக்கின்றது' என்னும் வாக்கியமும், 'குந்தம் நுழைகின்றது' என்னும் வாக்கியமும், 'சோயம் தேவதத்தன்' என்னும் வாக்கியமும், உதாரணம் ஆம்,

கங்கை எனும் சொல், தனது வாச்சியார்த்தத்தை, நிலைத்து இருத்தற் குரிய இடைச்சேரி இருத்தற்கு ஆதாரம் ஆதல் கூடாமையின், அதனை விட்டு, ஜலத்தின் சம்பந்தியாயுள்ள தீரத்தினை அறிவிக்கும்.

குந்தம் என்னும் சொல், தனது வாச்சியார்த்தத்தை விடாமல், ஈட்டியினைச் சுமப்பவனை அறிவிக்கும் என உணர்க.

**கைவல்ய நவநீதம், தத்துவ விளக்கப் படலம். 72 கவி**

கங்கையிற் கோஷ மென்றும்
கருப்புச்சேப் போடு தென்றும்,
தங்கிய சோயந் தேவ தத்தனென்
றுஞ்சொல் வார்கள்,
இங்குதா ரணங்கள் ஆக்கி
இந்தமூன் றுரைக ளாலே.
துங்கநூல் விரோதம் ஆன,
சொல்லெலாம் பொருளாம் தானே.

**சசி வர்ண போதம். 73 கவி.**

மஞ்சு கூப்பிடு தென்றல் போலவும்
வடபகிரதி உள்ளதே,

விஞ்சு கோஷம தென்றல் போலவும்
விட்ட லக்கணை ஆவதே,
சிவலை நின்றது வெள்ளை போயின
தென்று செப்புதல் போலவே,
கவலை யின்றிவி டாத லக்கணை
என்று நீகொள்க ருத்திலே. 74.
மேவும் விட்டுவி டாத லக்கணை
மெய்ம்மை யாதெனின் அந்தஇத்,
தேவ தத்தனெ னும்பொ ருட்படி
சிந்தை செய்திடு தீரவே. 75.

என வருவனவற்றால் அறிக. 117

[சோயம் தேவதத்தன் என்னும் வாக்கியம், அவன் என்னும் முதன் மொழி, இறந்த காலம், சென்ற தேசம், பாலிய வயோ விசிஷ்ட தேவதத்தனை அறிவிக்கும் என்றும், இவன் என்னும் வாக்கியம், நிகழ் கால நிகழ் தேச விருத்த வயஸ் விசிஷ்ட தேவதத்தனைக் காட்டிடும் இரண்டு விருத்த தருமப் பொருட்களுக்கும் ஐக்கியம் கூடாமையினால், அவ் விரு பொருள்களில் உள்ள விருத்த தர்மங்களை விட்டு என்றும், கூறுகின்றார்.]

முன்னமொழி தருஞ்சோயந் தேவதத்த னென்னு
மொழியுண்முத லவனென்னு மொழியிறந்த காலந்,
தன்னில்வரு தேசவயோ விசிட்டனாந் தேவ
தத்தனைக்காட் டிடுமிவனென் மொழிநிகழ்கா லத்தி,
லுன்னவரு மவையுடைய தேவதத்தன் றன்னை
யுணர்த்திடுமிவ் விருத்ததரு மப்பொருக ளிரண்டு,
மன்னுதல்செ யயிக்கமுறா மையினாலப் பொருட்கண்
வருவிருத்த தருமங்க ளனைத்தினையும் விட்டே. (118)

(இ—ள்) முன்னம் - பூர்வம், மொழிதரும் - புகலப் பட்ட, சோயம் தேவதத்தன் - அந்தத் தேவதத்தனே இந் தத் தேவதத்தன், என்னும் - எனும், மொழியுள் - சொல் லில், அவன் - ச. என்னும் - எனும், முதல் மொழி - பிரதமச் சொல், இறந்த காலம் தன்னில் - பூத காலத்தில், வரு - இருந்த, தேச - தேச, வயோ - வயசோடு கூடிய, விசிட்டன் ஆம் - விசேஷண முடையவனுகிய, தேவ தத்தனை - தேவ தத்தனை, காட்டிடும் - பிரதிபாதிக்கும், இவன் - அயம், என் - என்னும், மொழி - (இரண் டாவது) சொல், நிகழ் காலத்தில் - வர்த்தமாந காலத்தில், உன்ன - கருதும்படி யாக, வரும் - இருக்கின்ற, அவை யுடைய-தேச வயசுக்களை யுடைய, தேவதத்தன் தன்னை - தேவதத்தனை, உணர்த்திடும் - பிரதிபாதிக்கும், இவ் -இந்த விருத்த தரும - (பூத கால தேச வயசுக்களும், வர்த்தமாந தேச கால வயசுக்களும் ஆகிய) விரோத தர்மங்களை யுடைய, இரண்டும் - (சோயம் தேவதத்தன் என்னும்) இரண்டு பதங்களின், பொருள்கள் - அர்த்தங்களும், மன் னுதல் செய் - நிலைபெற்ற, அயிக்கம் - ஏகத்துவத்தினை, உருமையினுல்- பொருந்தாமையினுல், அப் பொருட்கண்- அந்த இரு பொருள்களிடத்தும், வரு - உண்டாகின்ற, விருத்த தருமங்கள் - (பூத கால தேச வயோ விசிஷ்டத் தன்மை, வர்த்தமாந கால தேச வயோ விசிஷ்டத் தன்மை ஆகிய) விரோத தர்மங்கள், அனைத்தினையும் - யாவற்றினை யும், விட்டு - நீக்கி. எ—று.

ஏ - "காலம் தன்னில்" "தேவ தத்தன் தனை" என்ப வற்றில். தன் - தன் - அசை.

(இச செய்யுள் குளகம்)

சோயம் தேவதத்தன் என்னும் வாக்கியத்தில், ச: என்னும் பிரதமச் சொல், பூத காலத்தில் இருந்த, தேச வயசோடு கூடிய விசேஷண முடைய தேவதத்தனைப் பிரதிபாதிக்கும். அயம் என்னும் இரண்டாவது சொல், வர்த்த மான காலத்தில் இருக்கின்ற தேச வயசுக்களை உடைய தேவதத்தனைப் பிரதிபாதிக்கும். இவ் விருத்த தர்ம பொருள்களை உடைய, சோயம் தேவதத்தன் என்னும் இரண்டு வாக்கியங்களும், ஏகத்துவத்தினைப் பொருந்தாமை யினுல், அந்த இரு பொருள்களிடத்தும் உள்ள பூத கால தேச வயோ விசிஷ்டத் தன்மை, வர்த்த மான கால தேச வயோ விசிஷ்டத் தன்மைக ளாகிய விரோத தர்மங்கள் யாவற்றினையும் நீக்கி, என உணர்க.

கைவல்ய நவநீதம் தத்துவ விளக்கப் படலம் 73 கவி.

பன்னிய சோயம் என்னும்
பதங்களின் வாச்சி யார்த்தம்,
அந்நிய தேசங் காலம்
அவனிவன் என்ப வெல்லாம்,
சொன்னவிவ் விரோதம் விட்டுத்
தொடரிலக் கியம்வி டாமல்,
உன்னிடில் தேவ தத்தன்,
ஒருவனை வெளியாக் காட்டும்.

சசி வர்ந போதம்

போது மேவிய தேசம் விட்டொரு,
புருடனைக் கொளும் ஆறுபோல்,
ஓதும் ஈருடல் கண்டு விட்டதன்
உண்மை காணவு ணர்ந்திடே, 77.

என வருவனவற்றுல் அறிக.

[அவிருத்த தர்மம் ஆகிய, தேவதத்தனை கொண்டால், அவன் இவனே இவன் அவனே, எனும் தாதாத்மியம் பொருந்தும் என்றும், இதை. விட்டு விடாத இலக்ஷணை, அர்த்த லக்ஷணை, பாகத் தியாக லக்ஷணை, என்றுங் கூறுவதால், இதனையே. தத்த்வ மசி மகா வாக்கியத்திற்கு உதாரணமாக உரியது என்று, யதார்த்த ஞாநிகள் கூறுவார்கள் என்றும், அஃது எவ்வாறு பொருந்தும் என்பதை அறிவிப்பாம் என்றும், கூறுகின்றார்.]

விருத்தமறுந் தருமமாந் தேவதத்தன் றனையே
விடாதுகொளி னவனிவனே யிவனவனே யென்னுந்,
தெரித்தலரி தாயதா தாத்மியங்கூ டுறுமாற்
றேரினிதை விட்டுவிடா விலக்கணையி னொடுதா,
னருத்தவிலக் கணைபாகத் தியாகவிலக் கணையென்
றறைதலினு மிதுவேதத் துவமசிவாக் கியத்திற்,
குரைத்திடுவ ருதாரணமா யுரியதென வுண்மை
யுணர்ந்துடையோ ரஃதெவ்வா றெனின்முறையே
யுரைப்பாம். 119

(இ—ள்) விருத்தம் - விரோதம், அறும் - இன்றிய- தருமம் ஆம் - தருமி மாகிய, தேவதத்தன் தனை - தேவதத்த பிண்டத்தினை- விடாது கொளின் -விடாது கொள்ளுவோமாகில், அவன் இவன் - அவனே இவன், இவன் அவனே - இவனே அவன், என்னும் - எனும், தெரித்தல் அரிது ஆய - அறிதற் கரிய, தாதாத்மியம் - அபேதம், கூடு உறும் - வந்து பொருந்தும், தேரின் -விசாரிக்கின், இதை - இந்த விரோதத்தினைப் பரிகரித்து அபேதம் செய்வதனை, விட்டு விடா இலக்கணையின் ஒடு - ஜகத் அஜகத் லக்ஷணை (என்றும்), அர்த்த இலக்கணை - அர்த்த லக்ஷணை

என்றும், பாகத் தியாக இலக்கணை - பாகத் தியாக லக்ஷணை, என்று - என்றும், அறைதலினால் - (கலை நூல்) கூறுதலினால், இதுவே - இந்த லக்ஷணையே, தத்துவ மசி வாக்கியத்திற்கு - தத் த்வமஸி (மஹா) வாக்கியத் திற்கு, உதாரணம் ஆய் -திருஷ்டாந்த மாகக் (கூறுதற்கு), உரியது - யோக்கிய மாம், என - என்று, உண்மை - யதார்த்த வஸ்துவினை, உணர்ந் துடையோர் - சாக்ஷாத் கரித்திருக்கின்ற பெரியோர்கள், உரைத்திடுவர் - கூறு வார்கள், அஃது - அந்தப் பாகத் தியாக லக்ஷணையினைத் தத் த்வமஸி மஹாவாக்கியத்திற் கொள்வது, எவ் வாறு - எப்படி, எனின் - என்று கேட்கில், முறையே - கிரம மாக, உரைப்பாம் (சமாதானம்) கூறுவாம். (யாம்)- எ—று.

"தேவதத்தன் றனையே" என்பதில், தன் - ஏ- ஒடு தான் - ஆல் - அசை.

விரோதம் இன்றிய தர்மி யாகிய தேவ தத்த பிண்டத் தினை விடாது கொள்ளுவோம் ஆகில், அவனே இவன், இவனே அவன், என்னும் தாதாத்மியம் கூடும். இதனை விட்டு விடாத லக்ஷணை என்றும், அர்த்த லக்ஷணை என் றும், பாகத் தியாக லக்ஷணை என்றும், இதுவே தத் த்வ மசி மகா வாக்கியத்திற்கு உதாரண மாக பெரியோர்கள் கூறுவார்கள்.

அந்தப் பாகத் தியாக லக்ஷணையினைத் தத்த்வமசி மகா வாக்கியத்திற் கொள்வது எப்படி என்று கேட்பாயாகில், கிரம மாகச் சமாதானம் கூறு வாம் என உணர்க.

சசி வர்ண போதம்.

மேவும் விட்டுவி டாத லக்கணை
மெய்ம்மை யாதெனின் அந்தவித்,
தேவ தத்தனெ னும்பொ ருட்படி,
சிந்தை செய்திடு தீரவே. 75

விட்ட லக்கணை தனையும் விட்டுவி
டாத லக்கணை தனையும்நீ,
விட்டு விட்டுவி டாத லக்கணை,
யால்வி ளங்குவி ளங்கவே. 76.

போது மேவிய தேசம் விட்டொரு
புருட னைக்கொளும் ஆறுபோல்,
ஓதும் ஈருடல் கண்டு விட்டதன்
உண்மை காணவு ணர்ந்திடே. 77.

119

என வருவனவற்றால் உணர்க.

[தத் பதம், வாச்சியார்த்தம் ஆக. சர்வஞத்வாதி கல்யாண குண விசிஷ்ட பரோக்ஷ ஈசுவரனை அறிவிக்கும் என்றும், த்வம் பதம், வாச்சியார்த்த மாக, அற்பஞத்வாதி ஹீந குண விசிஷ்ட அபரோக்ஷ ஜீவனை அறிவிக்கும் என்றும், இரு விரோத தர்மம் உடைய பொருட்களுக்கு ஏகத்வம் பொருந்தாது என்றும், அவ் விரு பொருளும் அடைந்திருக்கின்ற, பரோக்ஷ, அபரோக்ஷ, விரோத தர்மங்கள் யாவற்றையும் விட்டு என்றும், கூறுகின்றார்.]

தற்பதம்வாச் சியார்த்தமா யெலாமறிதன் முதலாஞ்
சற்குணங்கொள் பரோட்சனுஞ் சிவன்றனையே
யுணர்த்து,

முற்பகருந் த்வம்பதமுக் கியமாய்ச்சிற் றுணர்வு
  முதலாய வீநகுண விசிட்டவப ரோட்ச,
கற்பிதசீ வனையுணர்த்து மிம்முரண்கொள் பொருட்கே
  கத்துவங்கூ டாமையினவ் விருபொருளு மடையும்,
பற்பலவாம் பரோட்சமுட னபரோட்ச மாகும்
  பகைத்ததரு மத்திறங்க ளனைத்தினையும் விட்டே. (120)

(இ—ள்) தத் பதம்-(தத் துவ மஸி என்னும் மஹா வாக்கியத்தி லுள்ள) தத் என்னும் பத மானது, வாச்சிய அர்த்தம் ஆய் - வாச்சியப் பொரு ளாகி, எலாம் அறிதல் - சர்வஞ்ஞத் தன்மை, முதல் ஆம் - முத லாகிய, சத் குணம் கொள் - கல்யாண குண விசிஷ்ட, பரோட்சன் ஆம் - பரோக்ஷ னுகிய, சிவன் தனை - சிவத்தினை, உணர்த்தும் - கூறும், முன் - முன்னர், பகரும் - கூறிய, த்வம் பதம் - த்வம் (என்னும்) பத மானது. முக்கியம் ஆய் - வாச்சியப் பொருள் ஆகி, சிற்று உணர்வு - கிஞ்சிஞ்ஞத் தன்மை, முதல் ஆய - முத லாகிய, ஈந குண விசிட்ட - ஈந குண விசிஷ்ட, அபரோக்ஷ - அபரோக்ஷ னுகிய, கற்பித - சிதா பாச, சீவனை - சீவனை, உணர்த்தும் - கூறும், இம் முரண் கொள் - (உபாதிகள் வசத்தால்) இந்த (பரோக்ஷத்வ அபரோக்ஷத்வ) விரோத தருமங்களைக் கொண்டிருக்கின்ற, பொருட்கு - சீவேசுவரர்கட்கு, ஏகத்வம் - ஐக்கியம், கூடாமையின் - பொருந்தாமையினுல், அவ் இரு பொரு ளும் - அந்த (ஜீவேசுவர ராகிய) இரண்டு வஸ்துக்களும், அடையும் . பொருந்தாநின்ற, பல் பல ஆம் - நாநா வாகிய, பரோட்சம் உடன் - பரோக்ஷத்தினேடு, அப ரோட்சம் ஆகும் - அபரோக்ஷ மாகிய, பகைத்த - விரோத.

தரும - தரும, திறங்கள் - வகைகள், அனைத்தினையும் - யாவையும், விட்டு - விட்டு. எ—று.

"சிவன் தனையே" என்பதில், தன், ஏ,-ஏ - அசை.

(இச் செய்யுள் குளகம்)

தத் த்வ மசி என்னும் மகா வாக்கியத்தில் உள்ள, தத் என்னும் பதம் வாச்சியப் பொருள் ஆய், சர்வஞ்த்வாதி கல்யாண குண விசிஷ்ட பரோக்ஷ சிவனை உணர்த்தும். த்வம் என்னும் பதம் வாச்சியப் பொருள், ஆகி கிஞ்சிக்ஞத்வாதி ஈன குண விசிஷ்ட அபரோக்ஷ சீவனை உணர்த்தும் இந்த உபாதிகள் வசத்தால் முரண் கொள் பொருட்கு ஏகத்வம் கூடாமையின், அவ் விரு பொருளும் அடைகின்ற பரோக்ஷ அபரோக்ஷ விரோத தருமங்கள் அனைத்தினையும் விட்டு. என உணர்க.

பஞ்ச தசி 5 மகா வாக்கிய விவேகம்.

5 ஏக மேவாத் துவிதமெ னுஞ்சத்தே,
யாகு நாமவு ருவம கன்றது,
மாக மாதிவ ருமுனு மின்றுறும்,
பாகு பாடிலப் பண்பது வென்பதாம்.

6 வினவு வோனுட விந்திய மேலதாய்த்.
துனு மெய் வத்திங்கு தொம்பத மென்பதா,
மனுநல லொற்றுமை மற்றசி தேற்றிடும்,
தனிமை தொந்தத்தின் றுன் பெறற் பாலதே. (120)

என வருவனவற்றால் அறிக.

வாக்கியார்த்தம்.

[அவிரோத சைதந்ய மாத்திர சொருப மாக இருக்கின்ற லக்ஷிய மாகிய கூடஸ்த பிரஹ்ம சேதநங்களைக்

கொள்ளல் வேண்டும் என்றும், அவ் வாறு கொள்ளு மிடத்து குற்ற மற்ற, அதுவே இது, இதுவே அது, எனத் தாதாந்மிய சம்பந்தம் வரும் என்றும் கூறி, அசி பதம் ஆனது. பிரஹ்ம கூடஸ்த ராகிய லக்ஷியார்த்தத்தில், பரோக்ஷத்வ அபரோக்ஷத்வ தர்மங்கள் மாயா கற்பிதம் என்று அறிவித்துப் பிரயோசநம் உடையது என்றும், அறிவிக்கின்ற தென்றும், இந்தக் கிரம மாக சைதந்யம் ஒன்றே உளது என்பது வாக்கியார்த்தம் ஆகும் என்றும், கூறுகின்றார்.]

இகலிலா வறிவுமாத் திரமாகி நின்ற
விலக்கியமாம் பிரமகூ டத்தவுயிர் கொள்ளிற்,
புகரிலா வதுவிதுவே யிதுவதுவே யென்னப்
பொருந்துதா தாந்மியம்வந் துறுமெனவே யறிக,
பகவிலா வசிபதமிவ் விலக்கியார்த் தத்திற்
பரோட்சவப ரோட்சங்கள் மாயாகற் பிதமென்
றுகவிலா துணர்த்தியுறு பலமாமிம் முறையா
லொன்ருகு மறிவேயுண் டெனல்வாக்கி யார்த்தம்.
(121)

(இ—ள்) இகல் இலா - அவிரோத மாய், அறிவு மாத்திரம் ஆகி நின்ற - சைதந்ய மாத்திர சொரூபமா யிருக்கின்ற, இலக்கியம் ஆம் - (தத் த்வம் என்னும் இரு பதங்களின்) லக்ஷியார்த்தம் ஆகிய, பிரம கூடத்த உயிர் - கூடஸ்த பிரம சேதநங்களை, கொள்ளில் - கொள்ளு மிடத்து, புகர் இலா - குற்ற மற்ற, அது இதுவே - தத் த்வம், இது அதுவே — த்வம் தத், என்ன - என்று, பொருந்து - கூடாநின்ற, தாதாந்மியம் - அபேத மானது, வந்து - வந்து, உறும் - பொருந்தும், என - என்று,

அறிக - உணர்வா யாக, [அசி என்னும் பதத்திற்குப் பயன் கூறுகின்றார்] பகவு இலா - பிரி வின்றிய, அசி பதம் - அஸி (என்னும்) கிரியா பத மானது, இவ் இலக்கிய அர்த் தத்தில் - (இந்த தத் த்வம் பத) லக்ஷிய அர்த்த கூடஸ்த பிரமங்களிடத்தில், பரோட்சு அபரோட்சங்கள் - பரோக்ஷ த்வ அபரோக்ஷத்வ (தர்ம)ங்கள், மாயா - மாயையினுல், கற்பிதம் - கற்பிக்கப்பட்டவை, என்று - என, உகவு இலாது - நீங்காது, உணர்த்தி உறு - அறிவித்து, பலம் ஆம் - பிரயோஜந முடைய தாம், இம் முறையால் - இப் பொழுது கூறிய விரோத நீக்க அவிரோத சுவிகார நியாயத்தால், ஒன்று ஆகும் - ஏக மாகிய, அறிவே - சைதந்யமே, உண்டு - இருப்ப தாகச் சித்தித்தது. எனல் - என்று கூறு வது, வாக்கியார்த்தம் - (மஹா வாக்கியத்தினது) வாக்கி யப் பொரு ளாம். எ—று ஏ - அசை.

அவிரோத மாய் சைதந்ய மாத்திர சொரூபமா யிருக் கின்ற தத் த்வம் என்னும் இரு பதங்களின் லக்ஷியார்த்தம் ஆகிய கூடஸ்த பிரஹ்ம சேதநங்களைக் கொள்ளுமிடத்து, தத் த்வம், த்வம் தத் என்று அபேத மானது பொருந்தும் என்று உணர்வாய். அசி பதம் (வினைச்சொல்) இந்த லக்ஷிய அர்த்த கூடஸ்த பிரஹ்மங்களில் உள்ள, பரோக்ஷத்வ அப ரோக்ஷத்வ தர்மங்கள், மாயா கற்பிதம் என்று அறிவித்து பிரயோசநம் உடைய தாம்.

இந்தக் கிரமம் ஆக அறிவு ஒன்றே இருக்கின்றது எனச் சித்தித்தது என்று கூறுவது மகா வாக்கியத்தின் வாக்கியப் பொரு ளாம் என உணர்க.

கைவல்ய நவநீதம், தத்துவ விளக்கப் படலம். 74 கவி

தத்துவம் எனும்ப தங்கள் பிரமமாய்ச் சாட்சி யான
வத்துவை விடாமல் பேத வாச்சியார்த் தத்தை விட்டு,
நித்தமும் அதுநீ ஆகும் நீ அது ஆகும் என்னும்.
அர்த்தமும் அகண்டம் என்றே அசிபத ஐக்கியம்
காட்டும். என்பதால் உணர்க. 121

[தத் த்வ மசி மகா வாக்கியத்தினாலே கூடஸ்தப் பிரஹ்மங்கட்கு ஏகத்துவம் கூறுவது, கடாதி உபாதி நீக்கி, விசும்பு ஒன்றே என்றும், மநுஷத் தன்மையினை நீக்கி இராமனை நீயே மஹா விஷ்ணு என்றும், வேடத் தன்மை நீக்கி கர்ணனை நீயே குந்தி புத்திரன் என்றும், பத்தாமவன் இறந்தான் என்னும் துன்பத்தினை நிவிர்த் தித்து, பத்தாமவன் நீயே என்றும் நான்கு வகைத் திருஷ் டாந்தத்தினால் கூறுவது போல, ஸ்வாவவ சித்தம் ஆம் என்று கூறுகின்றார்.]

தூயதத்வ மசிமகா வாக்கியத்தி னாலே
துரியபரற் குளதேக த்வமென்கை கடாதி,
யாயவுபா திகளகற்றி விசும்பொன்றே யெனவு
மகற்றிமநு டத்தன்மை யிராமனைநீ தானே,
மாயவன்கா ணெனவுங்க ணனைவேடு கழித்து
மகன்குந்திக் கெனவுமொரு தசமனைமாய் துயரம்,
போயகல வொழித்துநீ யேதசம னெனவும்
புகலுதல்போற் சுபாவசித்த மாகுவதே யன்றி. (122)

(இ—ள்) தூய - பரிசுத்த மான, தத் த்வ மசி வாக்கி யத்தினால் - தத் த்வ மஸி (என்னும்) மஹா வாக்கியத்தி னால், துரிய - கூடஸ்தனுக்கும், பரற்கு - பிரஹ்மத்தினுக்

கும், ஏகத்வம் - அபேதம், உளது - இருக்கின்றது, என்கை - என்று சொல்லுவது, கட ஆதி ஆய - குடம் முதலிய ஆகிய, உபாதிகள் - உபாதிகளை, அகற்றி - நீக்கி, விசும்பு - ஆகாசம், ஒன்றே - ஒன்றே, எனவும் - என்றும், மநுடத் தன்மை - மநுஜத் தன்மையை, அகற்றி - நிவிர்த்தித்து, இராமனை - தாசாதியை (ப் பார்த்து). நீ தானே - நீயே, மாயவன் - விஷ்ணு, எனவும் - என்றும், கந்நனை - கர்ணனுக்கு (உண் டாகிய), வேடு - வேடுவ (வேட)த் தன்மையினை, கழித்து - நிவிர்த்தித்து, குந்திக்கு - (நீ) குந்திக்கு, மகன் - புத்திரன், எனவும் - என்றும். ஒரு- ஒப் பற்ற, தசமனை - பத்தாமவனை(ப் பார்த்து), மாய் துயரம் - (பத்தாமவன்) இறந்தனன் (எனக் கருதியதனுல் உண்டாய) துக்கத்தினை, போய் அகல ஒழித்து - நிவிர்த்தித்து, நீயே - நீயே, தசமன் - பத்தாமவன், எனவும் - என்றும், புகலுதல் - சொல்லுதல். போல் - போல, சுபாவசித்தம் ஆகுவதே - ஸ்வபாவமா (இயல்பா)கச் சித்தித்ததே யாம், அன்றி - அல்லாமல். எ—று

ஏ - '"நீதானே'' என்பதில், தான் - அசை. 'காண்' முன் னிலை அசைச் சொல்.

தத் த்வம் அசி மகா வாக்கியத்தினுல் கூடஸ்தப் பிரஹ்ம ஏகத்வம் கூறுதல், குடம் முதலிய உபாதி நீக்கி ஆகாசம் ஒன்றே என்றும், மநுஷத் தன்மையினை நிவிர்த்தித்து தாசரதியைப் பார்த்து நீயே விஷ்ணு என்றும், கர்ணனுக்கு உண் டாகிய வேடத் தன்மையினை நிவிர்த்தித்து. நீயே குந்தி புத்திரன் என்றும், பத்தாமவனைப் பார்த்து, பத்தாமவன் இறந்தான் என்று கருதியதனுல் உண்டாம் துக்கத்தினை நிவிர்த்தித்து, நீயே பத்தாமவன்

என்று சொல்லுதல் போல, என்றும், ஸ்வபாவ சித்தம் ஆகுவது ஆம். என உணர்க. (122)

[ஒரு புஷ்பத்துக்கு ஸ்வர்க்கம் உண்டாகும் என்று கூறுவது போல, மோக்ஷ விருப்பம் உண்டாக்குவது அருத்த வாத வாக்கியம் என்றும், பிரதிமையை தேவன் என்று கூறுவது போல, கூறுவது, உபாசானா பர வாக்கியம் என்றும் மநிதனை தேவேந்திரன் என்று கூறுவது போலக் கூறுவது, துதி பர வாக்கியம் என்றும், வேலைக்காரனை ராஜா என்று கூறுவது போலக் கூறுவது, உபசார பர வாக்கியம் என்றும், பிரமசாரியை அக்நி என்று கூறுவது போலக் கூறுவது, குண சாதிருச பர வாக்கியம் என்றும், இது பசுவின் தேகம் என்று கூறுவது போலக் கூறுவது, ஜாதி வியக்தி பர வாக்கியம் என்றும், சொல்லப்படும் அறு வகை அமேதமும், பொருந்தாது என்று கூறி, அடுத்த கவியில் முடிக்கின்றார். என்றும் கூறுகின்றார்.]

ஒருமலர்க்குத் துறக்கமெனல் போன்முத்தி விருப்ப
முதவருத்த வாதமொழிற் பதுமையைத்தே வெனல்போ,
லிருமைதரு முபாசநா பரமநுடன் றன்னை
யிந்திரனென் பதுபோலத் துதிபரமா ளினையே,
யருமரசென் பதுபோல வுபசாரி கந்தா
னக்கினிமா ணவகனெனும் வாக்கியமே போல,
வுரிமைதரு சுகுணசா திரிசமிது கோவி
னுடம்பென்கை போற்சாதி வியக்தியா மன்றே. (123)

(இ—ள்) ஒரு - ஒரு. மலர்க்கு - புஷ்பத்தினுக்கு, துறக்கம் - ஸ்வர்க்கம், எனல் - என்று சொல்லும் (வாக்கி

யம்). போல் - போல, முத்தி விருப்பம் உ_தவு - மோக்ஷ விருப்பத்தினைக் கொடுக்கின்ற, அருத்த வாதம் - அர்த்த வாத பரம் (என்றும்), எழில் - அழகு பொருந்திய. பது மையை - பிரதிமையினை, தேவு - தேவன், எனல் - என்று சொல்லும் (வாக்கியம்), போல் - போல; இருமை தரும் - பெருமையினைத் தருகின்ற, உபாசநா பரம் - உபா ஸநா பரம் (என்றும்), மநுடன் தன்னை - மநுஜனை, இந்தி ரன் - தேவேந்திரன், என்பது - என்று கூறும் (வாக்கி யம்), போல - போல, துதி பரம் - துதி பரம் (என்றும்), ஆளினை - வேலைக்காரனை. அரும் - அரிய, அரசு - அரசன், என்பது - என்று கூறும் (வாக்கியம்), போல - போல, உபசாரிகம்-உபசாரபரம் (என்றும்), மாணவகன்-மாணவ கனை, அக்கினி - அக்கினி யாம், எனும் - என்று (கூறும்), வாக்கியம் - வாக்கியம், போல - போல, உரிமை தரு - உரிமையினைத் தருகின்ற, சுகுண சாதிரிசம் - குண சாதிரி சிய பரம் (என்றும்), இது - இது, கோவின் - பசுவின், உடம்பு - தேகம், என்கை - என்று கூறும் (வாக்கியம்), போல் - போல, சாதி வியக்தி ஆம் -சாதி வியக்தி பரமாம் (என்றும்). எ—று.

"மநுடன் தன்னை" என்பதில், தன் - ஏ - தான் - ஏ-அன்று - அசை (இச் செய்யுள் குளகம்)

அநேக பதார்த்தங்களில் இருக்கும் ஒரு தர்மத்தினுக்கு ஜாதி யென்று பெயர். ஜாதியை உடையது வியக்தி ஆம்.

ஒரு புஷ்பத்திற்கு ஸ்வர்க்கம் உண்டு என்று கூறும் அர்த்த வாத வாக்கியம் போலும், அழகு பொருந்திய பிரதிமையைத் தேவன் என்று சொல்வது போல, உபா

சனா பர வாக்கியம் போலும், மனிதனை இந்திரன் என்பது போல, துதி பரம் போலும், ஆளைப் பார்த்து அரசன் என்பது போல உபசார பரம் போலும், மாணுக்கனை அக்நி என்பது போல, குண சாதிரிசிய பரம் போலும், இது கோவின் சரீரம் என்னும் வாக்கியம் போல, சாதி வியக்தி பரம் போலும், என்றும் கூறுவது அன்ரும் என உணர்க.

பஞ்ச தசி 7 திருப்தி தீபம்.

48 சோய மென்ப தாதி வாக்கி யத்த சொற்கள் போலவே,
ருய தேய்வு ருசஞ் சர்க்க மாக ருன்வி சிட்டமு,
பேய வாக்கி யார்த்த மிங்கு மேவு ருவ கண்டமா,
யேய வோர்நல் வாக்கி யார்த்த மேகொள் வார றிஞரே.

என வருவதனுல் அறிக. (123)

[கடத்திற்கு மண் அநந்யம் என்று கூறுவது போலக் கூறுவது, காரிய காரண பர வாக்கியம் என்றும். நீல உத்பலம். என்று கூறுவது போல, கூறுவது, குண குணி பர வாக்கியம் என்றும், தயிர் பாலுக்கு அபேதம் என்று கூறுவது போலக் கூறுவது, விகார பர வாக்கியம் என்றும், சமுத்திரத்திற்கும், ஜலத்திற்கும், அபேதம் என்று கூறுவது போலக் கூறுவது, அம்சாம்சி பர வாக்கியம் என்றும், விம்பப் பிரதிவிம்பங்கட்கு ஐக்கியம் என்று கூறுவது போலக் கூறுவது, பிம்பப் பிரதிவிம்ப வாத பர வாக்கியம் என்றும், ஐந்து வகையாகவும், முன் கூறிய ஆறு வகையாகவும், அபேதம் கூறுவது போன்று, பேதத்தினை கூறுவது வேத விருத்தமாம் என்று கூறுகின்ருர்.]

கடத்தொடுமட் கநந்யமென் வாக்கியமே போலக்
காரியகா ரணநீலோத் பலமெனுவாக் கியம்போல்,
விடுப்பில்குண குணிதயிர்பாற் கபேதமெனல் போல
விகாரமே வாரிகணங் கட்கேக மெனல்போ,
லடுத்தவம்சாம் சிகம்விம்பப் பதிவிம்பங் களினுக்
கயிக்கமெனல் போல்விம்பப் பதிவிம்ப வாத,
மெடுத்துணரி லெனவிங்ஙன் பேதபர மாக
விசைப்பனவெ லாஞ்சுருதி விரோதமென வறியே.
(124)

(இ—ள்) கடத்து - கடம், மட்கு - மிருத்திகைக்கு, அநந்யம் - அநந்யமாம், என் - என்று கூறும், வாக்கியம் - வாக்கியம், பொல - போல, காரிய காரணம் - காரிய காரண பரம் (என்றும்), நீல உத்பலம் - நீலோத்பலம், எனும் - என்று கூறும், வாக்கியம் - வாக்கியம், போல் - போல, விடுப்பு இல் - நீங்காத, குண குணி - குண குணி பரம் (என்றும்), தயிர் - தயிர், பாற்கு - பாலுக்கு, அபேதம் - அபேதம், எனல் - என்று கூறும் (வாக்கியம்) போல - போல, விகாரம் - விகாரம் (என்றும்), வாரி - (சமூத்திர) ஜலத்திற்கும், கணங்கட்கு - (ஜலத்) துளிகளுக்கும், ஏகம் - அபேதம், எனல் - என்று கூறும் (வாக்கியம்), போல் - போல, அடுத்த - சம்பந்தித்து வருகின்ற, அம்ச அம்சிகம் - அம்ச அம்சிகம் (என்றும்), விம்ப பதிவிம்பங்களினுக்கு - பிம்பத்திற்கும் பிரதிபிம்பத்திற்கும், அயிக்கம் - ஐக்கியம், எனல் - என்று கூறும் (வாக்கியம்), போல் - போல, விம்பப் பதிவிம்ப வாதம் - பிம்பப் பிரதிவிம்ப பாவ பரம், என - என்றும், இங்ஙன் - இவ்வாறு, பேத பரம் ஆக - (11 வித அபேதக் கூற்றுத்) துவைத பர மாக, இசைப்பன - கூறுவன, எலாம் - யாவும், எடுத்து - விசாரித்து,

உணரில் - அறியுமிடத்து, சுருதி விரோதம் - வேத விரோத மாம், என - என்று, அறி - உணர்வா யாக எ—று,

ஒடு - ஏ - ஏ ஏ- அசை.

கடம் மிருத்திகைக்கு அநந்யம் என்று கூறும் வாக்கியம் போல, காரண காரிய பரம் என்றும், நீலோத் பலம் என்னும் வாக்கியம் போல, குண குணி பரம் என்றும், தைர் பாலுக்கு அபேதம் என்னும் வாக்கியம் போல, விகார பரம் என்றும், வாரி கணங்கட்கு அபேதம் என்னும் வாக்கியம் போல, அம்ச அம்சிக பரம் என்றும், பிம்பம் பிரதிவிம்பங்களினுக்கு ஐக்கியம் போல, பிம்பப் பிரதி விம்ப பாவ பரம் என்றும் 11 வித அபேதக் கூற்றுத் துவைத பர மாகக் கூறுவன யாவும் வேத விருத்தம் ஆம் என்றும், உணர்க. (124)

[முன்னர் கூறிய சர்வ பிரபஞ்சத்திற்கும், மித்தை யாத் தன்மையினைப் பிரதிபாதிக்கின்ற வேதாந்த பக்ஷத்தில், மித்தை யாகிய சுருதி விசாரத்தினால், சத்திய மான அநர்த்த நிவிர்த்தி ஆநந்தப் பிராப்தி வடிவ மோக்ஷம் உண்டாம் என்று கூறுவது எப்படிப் பொருந்தும் என்று கேட்கில், (சமாதாநம்) மித்தை யாகிய ஸ்வப்ந ஸ்திரி சம்போகத்தினால் (வியாவகாரிக) சத்திய மாகிய சுக்ல ஸ்கலநமும், மித்தை யாகிய சிலா முதலிய உருவத்தில், தேவதா பஜநத்தினால், வியாவகாரிக இஷ்ட வத்துவினை அடைதல் போலவும், மித்தை யாகிய சாஸ்திர ஞாநத்தினால், அநர்த்த நிவிர்த்தி ஆநந்தப் பிராப்தி வடிவ உண்மை யான மோக்ஷம் கிடைக்கும் என்றும் கூறுகின்றார்.]

அவ்வகிலங் கட்கெல்லாம் பொய்மையே புகலு
மரியதாம் வேதாந்த பக்கமதி லினைய,
வெவ்வமறு சுருதிவிசா ரத்தினு லுண்மை
யெனுமுத்தி கூடுமென லெவ்வாறிங் கென்னி,
லவ்வியமென் சொற்பநமா தணைவினுன் மெய்ம்மை
யாயவீ ரியவொழிவுங் கற்பிதமாம் வடிவிற்,
செவ்வியவொண் கடவுள்வழி பாட்டினு லிட்டஞ்
சேர்தலும்போ னூலுணர்வான் முத்தியுஞ்சித் திக்கும்.
(125)

(இ—ள்) அவ் எலாம் அகிலங்கட்கு - முன்னர்க் கூறிய சர்வப் பிரபஞ்சத்திற்கும், பொய்ம்மையே - மித்தையாத் தன்மையினையே, புகலும் - கூறும். அரியது ஆம் - மிகத் துர்லப மாகிய, வேதாந்த பக்கமதில் - வேதாந்த பக்ஷத்தில், எவ்வம் அறு-குற்றம் அற்ற, இனைய - மித்தையாகிய, சுருதி விசாரத்தினுல் - வேத விசாரத்தினுல், உண்மை - சத்தியம், எனும் - ஆகிய, முத்தி முத்தி, கூடும் - பொருந்தும், எனல் - என்று கூறுதல், இங்கு - இவ் விடத்து, எவ் வாறு - எப்படி, என்னில் - என்று கேட்கில். [சமாதாநங் கூறுகின்றூர்] அவ்வியம் - பொய் வடிவம், என் - ஆகிய, சொற்பந மாது - ஸ்வப்ந ஸ்திரி, அணைவினுல் - சம்போகத்தினுல், மெய்ம்மை ஆய-(வியாவகாரிக) சத்திய மாகிய, வீரிய - சுக்ல, ஒழிவும்-ஸ்கலநமும், கற்பிதம் ஆம் - கற்பிதமாகிய, வடிவில் - (சிலா முதலிய) ஸ்வரூபத்தில், செவ்விய - அழகோடு, ஒண் - பிரகாசிக்கின்ற, கடவுள் - தேவதா, வழிபாட்டினுல்-பஜநத்தால், இட்டம் - (வியாவகாரிக சத்திய) இஷ்ட பதார்த்தத்தினை, சேர்தலும் - அடை

தலும், போல் - (உண்டாகின்றது) போல, நூல் உணர்வால் - (மித்தை யான) சுருதி விசாரத்தினால், முத்தியும் - (சத்திய மான) மோக்ஷமும், சித்திக்கும் - அடையப்படும். எ—று.

'அவியம்' 'அவ்வியம்' என, எதுகை நோக்கி வந்தது வேதாந்த பக்கமதில்' என்பதில், அது - பகுதிப் பொருள் விகுதி.

முன்னர் கூறிய பிரபஞ்சங்கள் அனைத்திற்கும் மித்தியாத், தன்மையினை கூறும் வேதாந்த பக்ஷத்தில், மித்தையாகிய வேத விசாரத்தினால் சத்திய மாகிய மோக்ஷம் எவ்வாறு பொருந்தும் என்று கேட்கில், பொய் வடிவாகிய ஸ்திரீ சம்போகத்தினால் வியாவகாரிக சத்திய சுக்ல கலநமும், கற்பித மாகிய சிலா முதலிய சொரூபத்தில், தேவதா பஜநத்தால் வியாவகாரிக சத்திய இஷ்ட பதார்த்தினை அடைதலும் உண்டாகின்றது போல, மித்தை யான சுருதி விசாரத்தினால் சத்திய மான மோக்ஷமும் சித்திக்கும் என உணர்க. (125)

[மோக்ஷ விக்கிந மாக, அஞ்ஞாநம் சந்தேகம் விபர்யயம் என்று மூன்று உள என்றும், நான் பிரமம் அல்லன் என்று உண்டாவது அஞ்ஞாநம் என்றும், நான் பிரஹ்மமோ அல்லனோ என்று உண்டாவது சம்சயம் என்றும், சுருதியினாலும், யுக்தியினாலும், நான் பிரஹ்மம் ஆயினும் முன் விருத்தி யான ஜீவத்வம் இருக்கின்றது என உண்டாவது விபரீதம் என்றும், சிரவணம் மநநம் நிதித்தியாசநம் மூன்றும், அம் மூன்றற்கும் விரோதியாகும் என்றும் கூறுகின்றார்.]

அருமையெனு முத்திவிலக் காகமூன் றுளவா
மஞ்ஞாந மையம்விப ரீதமென வவற்றுட்,
பிரமமல நானென்கை யஞ்ஞாந நானப்
பிரமமோ வலனோவென் றிடலையஞ் சுருதி,
வருமினிய வுத்திகளா னுன்பரமா யினுமுன்
வளர்சீவ பாவமுண்டென் குதல்விபரீ தந்தான்,
றருமுறையி லஞ்ஞாநா திகட்குமுற ணுகுஞ்
சவணமொடு மநநநிதித் தியாசநங்க ளன்றே. (126)

(இ—ள்) அருமை - துர்லபம், எனும் - ஆகிய, முத்தி - மோக்ஷத்திற்கு, விலக்கு ஆக - விக்கிந மாக, அஞ்ஞாநம் - அஞ்ஞாநம், ஐயம் - சந்தேகம், விபரீதம் - விபரியயம், என - என்று, மூன்று - மூன்று, உள ஆம் - இருக்கின்றன, அவற்றுள் - அம் மூன்றனுள், நான் - அஹம், பிரமம் - பிரஹ்மம், அலன் - அலன், என்கை - என்று உண்டாவது, அஞ்ஞாநம் - அஞ்ஞாந மாம், நான் - அஹம், அப் பிரமமோ - பிரஹ்ம ரூபமோ, அலனோ - அல்லனோ, என்றிடல் - என்று உண்டாவது. ஐயம் - சம்சய மாம், வரும் - (மோக்ஷ சாதந மாக) வருகின்ற, இனிய - விரும்பத் தகுந்த, சுருதி உத்திகளால் - சுருதியினுலும் யுக்தியினுலும், நான் - அஹம், பரம் - பிரஹ்மம், ஆயினும் - ஆவேனுயினும், முன் - பூர்வமே, வளர் - விருத்தியாய்க்கொண்டிருக்கின்ற, சீவ பாவம் - ஜீவத் தன்மை, உண்டு - (எனக்கு இன்னும்) இருக்கின்றது, என் குதல் - என்று உண்டாவது, விபரீதம் - விபரீத மாம் [அஞ்ஞாந சம்சயம் விபரீதங்கட்கு விரோதி, சிரவண மநந நித்தியாசநம் எனக் கூறுகின்றார்] அஞ்ஞாந ஆதிகட்கு - அஞ்ஞாநம், சம்சயம், விபரீதம் என்னும் மூன்றிற்கும்,

சவணம் - சிரவணமும், மநந நிதித்தியாசநங்கள் - மநந, நிதித்தியாசங்களும், முறையில் தரும் - கிரம மாக உண்டா கின்ற, முரண் ஆகும் - விரோதிக ளாம். எ—று ஒடு - தான் - அன்று - ஏ - அசை.

மோக்ஷ விக்கிந மாக, அஞ்ஞாநம் சந்தேகம் விபரீதம் என மூன்று உண்டு, நான் பிரஹ்மம் அல்லன் என்று உண் டாவது அஞ்ஞாநம் ஆம்.

நான் பிரஹ்ம ரூப மோ, அல்லமோ என்று உண்டா வது சம்சயம் ஆம்

சுருதியினுலும், யுக்தியினுலும், நான் பிரஹ்மம் ஆவேன் ஆயினும், முன்னரே விருத்தி யாகிக் கொண் டிருக்கின்ற ஜீவத் தன்மை, எனக்கு இன்னும் இருக்கின் றது என உண்டாவது, விபரீதம் ஆம்.

அஞ்ஞாந சந்தேக விபரீதங்கட்கு, சிரவணம் மநநம் நிதித்தியாசங்கள் கிரம மாக விரோதிகள் ஆம் என உணர்க.

[127 முதல் 136வது கவி வரை பத்துச் செய்யுட் களால் சிரவண மநந நிதித்தியாசங்களைக் கூறல்] ஆகுசம் முதலியவற்றில, வேத விசாரத்தினுல், நிச்சய புத்தி உண் டாவது போல, ஜீவப் பிரஹ்ம ஐக்கியத்தினைக் கூறுகின்ற வேத வாக்கியத்தின் தாத்பரியத்தினை கேட்டு நம்புவது, சிரவணம் என்றும், கேட்ட பொருளை யுக்தியால் (தர்க்கத் தால் மநதில் சிந்திப்பது மநநம் என்றும், சுருதி யுக்திகளால் நிச்சயித்த வஸ்துவில், மநம் அசை வற்று இருத்தல் நிதித்யா

சநம் என்றும், முதன்மை யாகிய சிரவண ஞாநத்திஞல் ஆந்ம சாக்ஷாத்காரம் உண்டாகின்ற முக்கியத்தன்மையி ஞல், சிரவணத்தை அங்கி என்று கூறப்படும் என்றும் கூறுகின்ருர் ]

சூதகா திகளினிடைச் சுருதிவிசா ரத்தாற்
  றுணிவுதோன் றுதலெனவே சிவமொடு ரயிக்க,
மோதுமா ரணமொழியின் ருற்பரியங் கேட்கை
  யுயர்சவணங் கேட்டபொரு ளுத்தியிற்சிந் தித்த,
றீதின்மா மநநமவற் ருற்றுணிந்த பொருளிற்.
  சித்தமசை வறவிருத்த னிதித்தியா சநந்தான்,
மேதையா கியசவண ஞாநத்தா லாந்மா
  மெய்ம்மையா முக்கியத்தாற் சவணமங்கி யெனலாம்.
(127)

(இ—ள்) சூதக ஆதிகளினிடை - ஆசூசம் முதலிய வற்றில், சுருதி விசாரத்தால் - வேத விசாரத்திஞல், துணிவு - திட புத்தி, தோன்றுதல் - உண்டாவது, என - போல, சிவம் உயிர் - சீவப் பிரஹ்மங்களின், அயிக்கம் - ஏகத்வத்தினே, ஓதும் - பிரதிபாதிக்கின்ற, ஆரண மொழி யின் - வேத வாக்கியத்தின், தாற்பரியம் - தாத்பரியத்தினே, கேட்கை - சிரவணித்து (நம்புவது) உயர் - சிரேஷ்டம் பொருந்திய, சவணம் - சிரவண மாம். கேட்ட - சிரவ ணித்த, பொருள் - வஸ்துவை. உத்தியில் - (நல்ல) யுக்தி (நல்ல தர்க்கங்)களால், சிந்தித்தல் - (மநத்தில்) சிந்திப்பது, தீது இல் - குற்றமற்ற, மா - பெரிய, மநநம் - மநந மாம், அவற்ருல் - (புகன்ற) சிரவண மநந (சுருதி யுக்தி)களால். துணிந்த - நிச்சயித்த, பொருளில் - வஸ்துவில், சித்தம் - மநம், (நிவாத ஸ்தல தீபம் போலும். நிஸ்தரங்க சமுத்திரம்

போலும்,) அசைவு அற - நிச்சலமாய், இருத்தல் -இருந்து (அநுசந்திப்பது), நிதித்தியாசநம் - நிதித்தியாசநம் ஆம், மேதை ஆகிய - மேன்மை யாகிய, சவண ஞாநத்தால் - சிரவணத்தினு லுண்டான ("அஹம் பிரஹ்மாஸ்மி" என்னும்) ஞாநத்தினுல், ஆன்மா மெய்ம்மை ஆம் - ஆத்ம சாக்ஷாத்காரம் உண்டாகின்ற, முக்கியத்தால் - முக்கிய (அதிகாரிக்குத் தசமனைப் போல) பிரதாநத் தன்மையினுல், சவணம் - சிரவணம், அங்கி - பிரதாநம், எனல் ஆம் - என்று கூறப்படும். எ—று. ஓடு ஏ - தான் - அசை.

ஆகுச முதலியவற்றில், வேத விசாரத்தினுல் திட புத்தி உண்டாவது போல, ஜீவப் பிரஹ்மங்களின் ஏகத்துவத்தினைப் பிரதிபாதிக்கின்ற வேத வாக்கியத்தின் தாத்பரியத்தினை கேட்பது சிரவணம் ஆம்.

கேட்ட பொருளை, நல்ல யுக்தி, நல்ல தர்க்கங்களால், மநதில் சிந்திப்பது, மநநம் ஆம்.

சிரவண மநந (சுருதி யுக்தி)களால், நிச்சயித்தபொருளில், மநம் நிவாத ஸ்தல தீபம் போலும், நிஸ்தரங்க சமுத்திரம் போலும், நிச்சலம் ஆய் இருந்து அநுசந்திப்பது, நிதித்தியாசநம் ஆம்.

சிரவண ஞாநத்தினுல், ஆன்ம சாக்ஷாத்காரம் உண்டாகின்றபடியால், முக்கிய அதிகாரிக்குத் தசமன் போல, முக்கியமாயிருத்தலால், சிரவணம் அங்கி எனப்படும் என உணர்க.

பஞ்ச தசி 7 திருப்தி தீபம்.

63 ஒகை வேதச்சி ரங்கட்க டிநடு வோடங்தத்து
மேக மெய்யறி விற்கருத் தென்மதி கேள்வியாமே.
(127)

[மநந நிதித்தியாசநங்கள் இரண்டும், சிரவணத்துக்கு சககாரி என்று கூறுவதால், அங்கம் என்று கூறப்படும் என்றும், அஃது எவ் வாறு எனின், வஸ்துக்களைப் பிர காசிப்ப தான தீப மானது, வாயுவினால் சலந அவஸ்தை யில் காரிய சாமர்த்தியம் இன்றாம் என்றும், காற்றினைத் தடை செய்கின்ற திரைச் சேலை போன்றது மநநம் என்றும், மேலே நிமிரும் பொருட்டு திரியினைத் தூண்டி பிரகாசிப் பித்தல் போல, நிதித்திய சநம் என்றும். அங்கி என்று கூறிய, சிரவணத்திற் குள்ள ஷட் வித லிங்க, தாத்பரியத் தினை கூறு வாம் என்றும், கூறுகின்றார்.]

ஏனையவோ ரிரண்டுமதன் றுணையெனலா லங்க
மெனலாகு மஃதெவ்வா றெனிற்பொருள்க டிசுழ்த்து,
மானதோர் சுடரசைவிற் கருமவலி யின்று
மாதலினால் வளிதடுக்குந் திரையெனலா மநந,
மேனிமிர்வான் றிரிதூண்டி யொளிர்வித்தல் போலும்
விளம்புநிதித் தியாசநமென் றறிந்திடுக தெரிந்து,
மோனையா மெனவுரைத்த சிரவணத்திற் குள்ள
முறையிலறு வகையிலிங்க தாற்பரிய முரைப்பாம்.
(128)

(இ—ள்) ஏனைய - (சிரவணம் ஒழிந்து) எஞ்சிய, ஓர் - ஒப் பற்ற, இரண்டும்-(மநந நிதித்தியாசநங்க ளாகிய) இரண்டும், அதன் - சிரவணத்திற்கு, துணை - சஹகாரி,

எனலால் - ஆக இருத்தலால், அங்கம் ‘ அப்பிரதாநம், எனல் ஆகும் - என்று கூறப்படும், அஃது - அங்க மாகிய அப்பிரதாந மானது, எவ் வாறு - எப்படி, எனில் - என்று கேட்கில், பொருள்கள் - வஸ்துக்களை, திகழ்த்தும் - பிர காசிப்பது, ஆனது - ஆன, ஓர் - ஒப் பற்ற, சுடர் - தீப மானது, அசைவில் - (வாயுவினால்) சஞ்சல அவஸ்தையில், கரும - காரிய, வலி - (தீபப் பிரகாசத்தினால் உள தாகும்) சாமர்த்தியம், இன்றும் - இல்லை யாம், ஆகலினால் - அத னால், வளி - காற்றினை, தடுக்கும் - தடை செய்கின்ற, திரை - திரைச் சேலை, மநநம் - (போல) மநந மாம், எனல் ஆம் - என்று கூறப்படும், மேல் - மேலே, நிமிர்வான் - நிமிர்த்தற் பொருட்டு, திரி - திரியினை, தூண்டி - சோதித்து ஒளிர்வித்தல் - ஜ்வலிப்பித்தல், போலும் - போல, விளம் பும் - கூறுகின்ற, நிதித்தியாசநம் - நிதித்தியாசநம் ஆம், என்று - என, தெரிந்து - நன்றாக, அறிந்திடுக - உணர்வா யாக, [அங்கி என்று கூறிய சிரவணத்துக் குள்ள அங்க மாகிய ஷட் வித லிங்க தாத்பரியத்தினை கூறுகின்றார்.] மோனை ஆம் - (அங்கி) பிரதாந மாம், என - என்று, உரைத்த - கூறிய, சிரவணத்திற்கு - சிரவணத்திற்கு, உள்ள - (சாதக மாய்) உள்ள, அறு வகை இலிங்க தாற் பரியம் - ஷட் வித லிங்க தாத்பரியத்தினை, முறையில் - கிரம மாக, உரைப் பாம் - (இனிக்) கூறு வாம் (யாம்). எ—று.

மநந நிதித்யாசநங்கள் அங்கம் ஆம், அஃது எவ் வாறு என்னில், வஸ்துக்களைப் பிரகாசிப்ப தான தீப மானது வாயுவினால் சஞ்சல அவஸ்தையில் ரூபப் பிரகாசத்தினால் உள தாகும் காரிய சாமர்த்தியம் இல்லை யாம். அதனால்

காற்றினைத் தடை செய்கின்ற திரைச் சேலை போல, மனனம் ஆம்.

மேலே நிமிர்தற் பொருட்டு திரியினைத் தூண்டி ஸ்வலிப்பித்தல் போல், நிதித்தியாசனம் ஆம் என உணர்க.

அங்கி யாகிய சிரவணத்திற் குள்ள ஷட் வித லிங்க தாத்பரியத்தினை இனிக் கிரம மாகக் கூறு வாம் யாம் என உணர்க. (128)

[உபக்கிரமம் உபசம்ஹாரம், அப்பியாசம், அபூர்வதை, பலம், அர்த்தவாதம், உபபத்தி என்னும் பெயர் உடையன ஷட் வித லிங்க (தாத்பரிய)ம் என்றும், உபக்கிரமம் ஆவது, ஜகத் சிருஷ்டிக்கு முன் சத் ரூபப் பிரஹ்ம மாகவே இருந்தது என்றும், பிரஹ்மத்திற்கு ஸ்வகதம் விஜாதீயம் சஜாதீய பேதம் இல்லை என்றும், அகண்டார்த்தப் பிரதி பாதகம், உபக்கிரமம் என்றும், பிரபஞ்சத்தினை பிரஹ்மத்தில் லயம் செய்து, பிரத்தியக்காத்மாவிற்கு பிரஹ்மத்தோடு அத்வைதத்தைக் கூறுதல், உபசங்காரம் என்றும், ஒரு லிங்கப் பிரதிபாதகம் கூறுகின்றார்.]

அவைகளுபக் கிரமமுப சங்கார முடனே
யப்பியா சம்பினபூர் வதைபலமொ டுற்ற,
நவிலருத்த வாதமுப பத்தியென லாகு
நற்சிருட்டி முன்சகமெய்ப் பரமாயிற் றென்றுஞ்,
சிவமதற்குச் சுவகதா திகளிலையென் றகண்டஞ்
செப்புமதே யுபக்கிரமஞ் சகஞ்சிவத்தின் மாய்த்துப்,
பவமகலத் துரியற்குப் பிரமமுட னயிக்கம்
பகர்ந்தத்து விதங்கூற லுபசங்கா ரந்தான். (129)

(இ—ள்) அவைகள் - அந்த ஷட் வித லிங்க (தாத்பரிய)ங்க ளாவன, உபக்கிரமம் உபசங்காரம் - உபக்கிரம உபசங்காரமும், அப்பியாசம் - அப்பியாசமும், பின் - பின்னர், அபூர்வதை - அபூர்வதையும், பலம் - பலமும், உற்ற - பொருந்தும்படி யாக, நவில் - சொல்லாநின்ற, அருத்த வாதம் - அர்த்த வாதமும், உபபத்தி - உபபத்தியும், எனல் ஆகும் - என்று கூறப்படும், நல் - மோக்ஷ ஏது வான, சிருட்டி - சிருஷ்டிக்கு, முன் - முன்னர். சகம் - பிரபஞ்சம், மெய் - (நாம ரூப ரகிதம் ஆய்) சந்மாத்திர மான, பரம் - பிரம்ம ரூப மாகவே, ஆயிற்று - இருந்தது, என்றும் - எனவும், சிவமதற்கு - பிரம்மத்திற்கு, சுவகத ஆதிகள் - சுவகத பேதம், விஜாதிய பேதம், சஜாதிய பேதங்கள், இலே — இல்லை, என்று - எனவும், அகண்டம் - அகண்டைக ரசத் தன்மையினை, செப்புமது - கூறும் வாக்கியம், உபக்கிரமம் - உபக்கிரம மாம், சகம் - (நாம ரூபாத்மகப்) பிரபஞ்சத்தினை, சிவத்தில் - பிரம்மத்தினிடத்தில், மாய்த்து - லயம் செய்து, துரியற்கு - பிரத்திய காத்மாவிற்கு, பவம் - சம்சாரம், அகல - நீங்கும்படி யாக, பிரமமுடன் - பிரமத்தோடு, அயிக்கம் - ஏகத்வத்தினை, பகர்ந்து - போதித்து, அத்துவிதம் -அத்வைதத்தினை, கூறல் - கூறும் (வாக்கியம்), உபசங்காரம் - உபசம்மார மாம், எ—று-

ஏ - ஏ - தான் - உடன் -ஒடு - அசை. ''சிவமதற்கு'' ''செப்புமது,' என்பதில், அது - பகுதிப் பொருள் விகுதி.

1. உபக்கிரமம் உபசம்ஹாரம், 2. அப்பியாசம், 3. அபூர்வதை, 4. பலம், 5. அர்த்தவாதம், 6. உபபத்தி, என்று அறு வகைத் தாம்.

1. மோக்ஷ ஏதுவாக உள்ள சிருஷ்டிக்கு முன்னர் பிரபஞ்சம், நாம ரூப ரகிதமாய் சன்மாத்திர மான பிரஹ்ம ரூபம் ஆகவே இருந்தது என்றும், பிரஹ்மத்திற்கு ஸ்வகத பேதம், விஜாதீய பேதம், சஜாதீய பேதம், இல்லை என்றும், அகண்ட ஏக ரசத் தன்மையினைக் கூறும் வாக்கியம் உபக்கிரமம் ஆம்.

நாம ரூப ஆத்மகம் பிரபஞ்சத்தினை பிரஹ்மத்தினிடத்தில் லயம் செய்து, பிரத்தியக் ஆத்மாவிற்கு, சம்சாரம் அகல, பிரஹ்மத்தோடு ஏகத்வத்தினைப் போதித்து, அத்வைதத்தினைக் கூறும் வாக்கியம் உபசம்மாரம் ஆம் என உணர்க. (129)

[உபக்கிரமம் உபசம்ஹாரம் இரண்டும் ஒரே லிங்கம் என்றும், பிரஹமமே கூடஸ்தன், கூடஸ்தனே பிரஹ்மம் என மீண்டும் மீண்டும் தெளிவுபடக் கூறும் வாக்கியம் அப்யாசம் என்னும் இரண்டாவது லிங்கம் என்றும், பிரத்தியகாத்மா பிரமாண அகோசரன் எனக் கூறும் வாக்கியம், அபூர்வதை என்னும் மூன்றாவது லிங்கம் என்றும், நித்தியமாக வுள்ள ஆத்மாவின் ஏக விஞ்ஞானத்தினால் சர்வ விஞ்ஞான சம்பிராப்தி எனக் கூறும் வாக்கியம் பலம் என்னும் நான்காவது லிங்கம் என்றும், பிரத்தியக்காத்ம ஸ்வரூபப் பிரஹ்மத்திற்கு நீக்குதல் இன்றிய கர்த்திருத்வத்தினை கூறும் வாக்கியம், அர்த்தவாத வாக்கியம் என்னும் ஐந்தாவது லிங்கம் என்றும், கூறுகின்றனர்.]

கூறுமிவை யிரண்டுமோ ரிலிங்கமென வறைவர்
  கூடத்த னேபிரம மெனமறித்து மறித்தும்,
தேறவுரைத் திடலப்பி யாசமாந் துரியன்
  றிகழ்பிரமா ணதீத னென்கையபூர் வதையாம்,

பாறிலுயி ரொன்றறித லெலாமறித லென்கை
பலம்பிரத்திய காங்மவுரு வாம்பிரமங் தனக்கு,
மாறரிய வைங்தொழிற்கர்த் திருத்துவஞ்செப் புறுதல்
வயங்கருத்த வாதமென மதித்திடுக தெரிங்தே. (130)

(இ—ள்) கூறும் - புகன்ற, இவை - உபக்கிரம உபசம்மாரங்கள் இரண்டும், ஓர் - ஒரு, இலிங்கம் - லிங்கமாம், என - என்று, அறைவர் - கூறுவார்கள், கூடத்தனே - பிரத்தியகாத்மாவே, பிரமம் - பிரஹ்மம், என - என்று, மறித்தும் மறித்தும் - மீண்டும் மீண்டும், தேற - நிச்சய மாக. உரைத்திடல் - கூறும் வாக்கியம், அப்பியாசம் ஆம் - அப்பியாச மாம், துரியன் - பிரத்தியகாத்மா, திகழ் - விளங்காநின்ற, பிரமாண — (பிரத்தியக்ஷ முதலிய) பிரமாணங்களால், அதீதன் - அறியப்படான், என்கை - என்று கூறும் (வாக்கியம்), அபூர்வதை ஆம் - அபூர்வதை யாம். பாறு இல் - நித்தியமா யிருக்கின்ற, உயிர் - ஆத்மாவின், ஒன்று - ஏக, அறிதல் - விஞ்ஞாநத்திலே, எலாம் அறிதல் - சர்வ விஞ்ஞாந சம்பிராப்தி, என்கை - என்று கூறும் (வாக்கியம்), பலம் - பல மாம், பிரத்தியக் ஆங்ம - பிரத்தியக்காத்ம, உருவு ஆம் - ஸ்வரூப மாகிய, பிரமம் தனக்கு - பிரஹ்மத்திற்கு, மாறு அரிய - நீக்கம் இன்றிய. ஐ தொழில் - (சிருஷ்டி, ஸ்திதி, சம்மாரம், திரோபவம், அநுக்கிரக மாகிய) பஞ்ச கிருத்தியங்களின், கர்த்திருத்துவம் - கர்த்திருத் தன்மையை, செப்பு உறுதல் - கூறும் (வாக்கியம்), வயங்கு -விளங்காநின்ற, அருத்தவாதம் - அர்த்த வாத மாம், என-என்று, தெரிங்து - திடமாக, மதித்திடுக - அறிவா யாக (எ—று)

ஏ - "பிரமம் தனக்கு" என்பதில், தன் - அசை.

லிங்கம் - அடையாளம் குஹ்ய அர்த்தங்களை ஞாபகப் படுத்துவது ஆம்.

1 உபக்கிரமம் உபசம்ஹாரம் இரண்டும் ஒரு லிங்கம் என்று கூறுவார்கள்.

2 கூடத்தனே பிரஹ்மம், பிரஹ்மமே கூடஸ்தன் என மீண்டும் மீண்டும் நிச்சயம் செய்து கூறுவது, அப்யாச லிங்கம் ஆம்.

3 பிரஹ்மம், பிரத்தியக்ஷம் முதலிய பிரமாணங்கட்கு அப்பாற்பட்டவன் என்பது, அபூர்வதை யாம்.

4 நித்தியமா யிருக்கின்ற ஆத்மாவின், ஏக விஞ்ஞானத்திறைல், சர்வ விஞ்ஞாந சம்பிராப்தி என்று கூறும் வாக்கியம் பலம் ஆம்,

5 பிரத்யக் காத்மரூப பிரஹ்மத்திற்கு, பஞ்ச கிருத்தியங்களாகிய கர்த்திருத் தன்மையைக் கூறும் வாக்கியம் அர்த்தவாத வாக்கியம் ஆம் என உணர்க. (130)

[குடத்திற்கு மண்ணையும், நூலுக்கு உலண்டுப் பூச்சியினையும், காரணம் என்று கூறுவது போல, முன் சிருஷ்டித்த ஜகத்திற்கு, பிரஹ்மமே உபாதாந காரணம் என்று கூறும் வாக்கியம், உபபத்தி (திருஷ்டாந்தம்) என்னும் ஆறுவது லிங்கம் என்றும் கூறி, யுக்தி தர்க்கம் அநுமாநம் மூன்றும், மநநத்திற்குச் சககாரிகள் என்றும், அவற்றுள், யுக்தியினைக் கூறுவாம் எனத் தொடங்கி, சாங்கிய மதம் முதலிய மதங்களில், ஆத்மா அநேகம் வியாபகம் எனக் கூறுவதால், எல்லா ஆத்மாவும் எல்லாச்

சரீரத்திலும் சம்பந்தித்திருத்தலால் (கூடாது) என்றுங் கூறுகின்றார்.]

கடத்தினுக்கு மண்ணினையு நூற்குலண்டு தனையுங்
காரணமென் பதுபோலப் பிரமமே முன்னம்,
படைத்தசகத் காரணமென் பதுவேதிட் டாந்தம்
பகருத்தி தர்க்கமநு மாநமிவை மூன்று,
மடுத்துவரு மநநசக காரிகளா மவற்று
ளாருயிர்க ளநேகம்வியா பகமெனவே கூறுந்,
தடுப்பரிய சாங்கியமே முதலாய மதத்துட்
சாற்றுமுயி ரெலாமுடம்பு தொறும்புணர்ச்சி யுறலால்,
(131)

(இ—ள்) கடத்தினுக்கு - கடத்திற்கு, மண்ணினையும் - மிருத்திகையையும், நூற்கு - தந்துவுக்கு, உலண்டு தனையும் - உலண்டுப் பூச்சியினையும், காரணம் - (உபாதாந) காரணம், என்பது - என்று சொல்லுவது, போல -போல, பிரமமே — பிரஹ்மே, முன்னம் - பூர்வம், படைத்த - சிருஷ்டிக்கப்பட்ட, சகத் - (நாம ரூபாத்மக) ஜகத்திற்கு, காரணம் - (அபிந்ந உபாதாந (நிமித்த) காரண மாம், என்பது - என்று (மண் பொன் முத லான அநேக திருஷ்டாந்தங்களால்) கூறும் (வாக்கியம்), திட்டாந்தம் - உபபத்தி யாம். (என அறிக. விதேக முக்தியினைப் பல லிங்கம் என்றும் கூறுவர்), [மநநத்திற்குச் சககாரிகளான யுக்தி தர்க்கம் அநுமாநம் மூன்றையும் பெயர் மாத்திரை யாகக் கூறுகின்றார்.] பகர் - கூறுகின்ற, உத்தி - யுக்தி, தர்க்கம் - தர்க்கம், அநுமாநம் - அநுமாநம், இவை மூன்றும் - என்னும்

மூன்றும், அடுத்து - (சிரவணத்தின்) பின், வரும் - (செய்யப்பட்டு) வருகின்ற, மநந - மநநத்திற்கு, சககாரிகள் ஆம் - சஹகாரிகள் ஆகும், [யுக்தி தர்க்கம் அநுமாநம் என்ற மூன்றனுள் யுக்தியினைக் கூறுகின்றார்.] அவற்றுள் - யுக்தி தர்க்க அநுமாநம் என்னும் மூன்றனுள், ஆர் - நிறைந்த, உயிர்கள் - ஆத்மாக்கள், அநேகம் - நாநா, வியாபகம் - வியாபகம், என - என்று, கூறும் - சொல்லுகின்ற, தடுப்பு அரிய - கண்டித்தற் கரிய, சாங்கியம் - சாங்கியம், முதல் ஆய - முதலிய, மதத்துள் - மதத்தில், எலாம் உயிர் - எல்லா ஆத்மாக்களும், சாற்றும் - (சாதநமாகக்) கூறுகின்ற, உடம்பு தொறும் - ஒவ்வொரு சரீரங்கள் தோறும், புணர்ச்சி - சம்பந்தம், உறலால் - (உற்று) இருத்தலினால், எ—று.

ஏ-ஏ-ஏ-அசை "உலண்டுதனை" என்பதில், தன் - அசை,

(இச் செய்யுள் குளகம்)

6 குடத்திற்கு மண்ணையும், நூலுக்கு உலண்டு பூச்சியையும், உபாதாந காரணம் என்பது போல, பிரஹ்மமே, முன்னம் சிருஷ்டிக்கப்பட்ட நாம ரூபாத்மக ஜகத்துக்கு, அபிந்ந நிமித்த உபாதாந காரணம் என்று கூறுவது உபபத்தி ஆம்.

யுக்தி தர்க்கம் அநுமாநம் மூன்றும் மநநத்துக்குச் சககாரிகள் ஆகும்.

யுக்தி ஆவது, பூரண, ஆத்ம நாநா வியாபகம் என்று கூறும் கண்டித்தற்கு அரிய சாங்கிய முதலிய மதத்தில்,

எல்லா ஆத்துமாக்களுக்கும், சாதநம் ஆகக் கூறுகின்ற ஒவ்வொரு சரீரங்கள் தோறும் சம்பந்தம் உற்று இருத்தலி ுைல் என உணர்க. (131)

[இந்த ஜீவனுக்கே இந்தச் சரீரம் போக சாதநம் ஆகும், ஏனைச் சீவர்கட்கு, இந்தச் சரீரம் போக சாதநம் அன்று என்று கூற முடியாது போக ஸ்திதியை, என்று கூறுகின் ருர்.]

இந்தவுடம் பிவற்கேயாம் போகசா தநமற்
றேனேர்க்கன் றெனப்போகத் திதிபுகலொ ணுதாம்,
வந்தவுடம் பெத்திறத்து மிவன்வினையான் வரலான்
மற்றிவற்கே யெனின்வினையு மெவர்க்குமிலை யோதான்,
முந்தையுடம் பபிமாநத் தாற்செய்வினை யிவற்கே
முற்றுமெனி னவ்வபிமா நமுமுந்தை யுடல்சே,
ரந்தவுயி ரனைத்திற்கு மிலையோதா னிவ்வா
றநவவத்தை நீக்கலரி தநாதிவுயி ரெனலால். (132)

(இ—ள்) இவற்கே - இந்த ஆத்மாவிற்கே, இந்த உடம்பு - இந்தச் சரீரம், போக சாதநம் ஆம் - (சுக துக்கம் வெளிப்படுதற் குரிய) போக சாதந மாம், ஏனேர்க்கு - அந்நிய ஆத்மாக்கட்கு, அன்று - (இந்தச் சரீரம் போக சாதநம்) அன்று, என - என்று, போக திதி - போக ஸ்திதி. புகல ஒணுது ஆம் - கூற முடியாத தாம், [இப்பொழுது வந்திருக்கும் இந்தச் சரீரம் இந்த ஜீவன் செய்த புண்ணிய பாப கருமத்திஞல் வந்திருக்கிறது என்று கூறுகின்ருர்], வந்த (போக சாதந மாகக் கருமத்திஞல்) வந்த, உடம்பு - (இந்தச்) சரீரம், எத் திறத்தும் - எவ் வாற்றும், இவன் - இந்த ஆத்மாவி னுடைய, வினையால் - (புண்ணிய

பாப) கருமத்தால், வரலால் - வந்திருக்கின்றபடியால், இவற்கே - இந்த ஆத்மாவிற்கே, எனின் - (இந்தச் சரீரம் போக சாதந மாம்) என்று கூறில், [புண்ணிய பாப வினை எல்லாச் சீவருக்கும் உண்டு என்று கூறுகின்றார்] வினையும் (சரீர ஏது வான புண்ணிய பாப) கருமமும், எவர்க்கும்- (ஏனைய) எல்லா ஆத்மாக்கட்கும், இலையோ - இல்லையா? (எல்லா ஆத்மாக்கட்கும் சரீர ஏது வான புண்ணிய பாப கர்மம் இருக்கின்றது என்றபடி), [முன் சரீர அபிமாநத்தினால் செய்த கர்மங்கள் இந்தச் சீவனுக்கே வரும் என்கின்றார்], முந்தை - பூர்வ, உடம்பு அபிமாநத்தால் - தேக அபிமாநத்தினால், செய் - செய்த, வினை - புண்ணிய பாப ஆதிகள், இவற்கே - இந்த ஆத்மாவிற்கே, முற்றும் - (அதனால் உண்டாகி யுள்ள இந்தச் சரீரம் போக சாதந மாக) பொருந்தும், எனின் - என்று கூறின, [அந்த அபிமாநமும் முன் சரீரத்தினைப் பொருந்திய அந்த எலலாச் சீவர்கட்கும் உண்டு என்கின்றார்] அவ் அபிமாநமும் - பூர்வ தேக அபிமாநமும், முந்தை உடல - பூர்வ சரீரத்தில், சேர் - பொருந்தியிருந்த, அந்த உயிர் - அந்த ஆத்மாக்கள், அனைத்திற்கும் - யாவற்றிற்கும், இலையோ - இல்லையா? (பூர்வ தேக அபிமாநமும், பூர்வ சரீரத்தி லுள்ள எல்லா ஆத்மாக்கட்கும் இருக்கின்றது என்றபடி), [அநவஸ்தா தோஷம் நீக்க முடியாது என்கின்றார்] இவ் வாறு - இங்ஙனம், அநவவத்தை - (சர்வ சாங்கர்யத்தோடு கூடிய) அநவஸ்தா தோஷ மானது, நீக்கல் அரிது - நீக்க முடியாதாம், [அநவஸ்தா தோஷத்துக்குக் காரணம் கூறுகின்றார்] உயிர் - ஆத்மா, அநாதி - அநாதி, எனலால் - (நித்தியம்) என்று கூறுதலால்,- எ—று.

மற்று - மற்று - தான் - தான் - அசை.

'அநவஸ்தை' என்பது, 'அநவவஸ்தை' எனச் செய்யுள் குறித்து அகரம் இரட்டித்தது,

இந்த ஆத்மாவிற்கே, இந்த உடம்பு சுக துக்கம் வெளிப்படுதற்குச், சாதநம் ஆம். அந்நிய ஆத்மாக்கட்கு அன்று என்று போக ஸ்திதி கூற முடியாதாம். இப்பொழுது வந்த இந்தச் சரீரம் எப்படியும் இந்த ஆத்மாவினுடைய புண்ணிய பாப கருமத்தால் வந்திருக்கிறபடியால், இந்த ஆத்மாவிற்கு இந்தச் சரீரம் என்று கூறில், சரீர ஏதுவான புண்ணிய பாப கருமங்கள், ஏனைய எல்லா ஆத்மாகட்கும் இல்லையா? பூர்வ தேக அபிமாநத்தினால், செய்த புண்ணிய பாப ஆதிகள் இந்த ஆத்மாவிற்கே, அதனால் உண்டாகி உள்ள, இந்தச் சரீரம் போக சாதநம் ஆகப் பொருந்தும் என்று கூறின், அந்தப் பூர்வ தேக அபிமாநமும், பூர்வ சரீரத்தில் பொருந்தியிருந்த அந்த ஆத்மாக்கள் யாவற்றிற்கும் இல்லையா?

ஆத்மா அநாதி எனலால், இவ்வாறு, சர்வ சாங்கரியத்தோடு கூடிய அநவஸ்தை தோஷம் நீக்க முடியாதது ஆம். என உணர்க. (132)

[ஏகாத்ம பக்ஷத்தில் போக வியவஸ்தை பொருந்தவில்லை என்று கருதி, அநேகாத்ம பக்ஷத்தினைக் கொள்ளினும், முன் கூறிய பிரகாரமாகப் போக வியவஸ்தை பொருந்துவதில்லை என்கின்றார்.]

செப்பரிய வேகாந்ம பக்கத்திற் போகத்
திதியிலையென் றநேகாந்ம பக்கமது கொளினும்,
மிப்பரிசு மிகுபோகத் திதிகூடா தாயிற்
றிச்சங்கை யிருமதத்து மொக்குமே யென்னிற்,

பற்பலவி லேகாந்ம பக்கமதில் விம்பப்
பதிவிம்ப நியாயத்தாற் கரணவசை வாதி,
மெய்ப்பரிய பலதிறத்தா லெண்ணிகழ்ந்த போக
விளைவுகூ டுதலெளிதென் குதலுத்தி யாமால். (133)

(இ—ள்) செப்பு அரிய - சொலற் கரிய, ஏக ஆந்ம பக்கத்தில் - ஏக ஆத்ம பக்ஷத்தில், போக திதி - (சுக துக்கம் வெளிப்படுத லாகிய) போக விவஸ்தை யானது, இலே- (பொருந்துவது) இல்லை, என்று - எனக் கருதி, அநேக ஆந்ம பக்கமது - (சாங்கியர் முதலியோர் அங்கீகரித்திருக்கும்) நாநா ஆத்ம பக்ஷத்தினை, கொளினும் - கொள்ளுவோமாயினும், இப் பரிசு - இப் பொழுது கூறிய பிரகார மாக, மிகு - நன் ருய், போக திதி - போக விவஸ்தை, கூடாது ஆயிற்று - பொருந்தாமல் போயிற்று, [இவ் ஆக்ஷேபம், ஏகாந்ம வாதம் அநேகாந்ம வாதம் இரண்டினும் சமம் என்கின்றார்] இச் சங்கை - இந்த ஆக்ஷேபம், இரு மதத்தும்- (ஏக ஆத்ம அநே காத்ம பக்ஷ, மாகிய) இரு மதத்தின் கண்ணும், ஒக்குமே-சமாநமே, என்னில் - என்று கூறுவாயாகில், [ஏகாத்ம பக்ஷத்தில், பிம்பப் பிரதிபிம்ப நியாயத்தினுலும், கரண சலநத்தினுலும், அள விறந்த போக விசித்திரம் கூடும் என்று சமாதாநங் கூறுகின்றார்]பல் பல இல்- நாநாத் தன்மை இன்றிய, ஏக ஆந்ம பக்கமதில் - ஏக ஆத்ம பக்ஷத்தில், விம்பப் பதிவிம்ப நியாயத்தால் - பிம்பப் பிரதிபிம்ப நியாயத்தினுலும், மெய்ப்பு அரிய - மித்தை யாய் (உபாதி ரூபமா யுள்ள), கரண அசைவு ஆதி பல திறத்தால் - அந்தக்கரண அசைவு (சங்கற்ப) முதலிய நாநாத் தன்மையினுலும், எண் இகழ்ந்த - அள வின்றிய (விசித்திர), போக விளைவு - போக ஸ்திதி, எளிது - சுலப மாக,

கூடுதல் - பொருந்தும், என்குதல் - என்று கூறுதல், உத்தி ஆம் - யுக்தி யாம். எ—று.

ஆல் - அசை. "பக்கமது" "பக்கமதில்" என்பவற்றில் - அது - பகுதிப் பொருள் விகுதி.

ஏகாத்ம பக்ஷத்தில், போக ஸ்திதி இல்லை என்று கருதி, சாங்கியர் முதலியோர் கொண்ட நாநா ஆத்ம பக்ஷத்தினைக் கொள்ளுவோம் ஆயினும், இப் பொழுது கூறிய பிரகாரம் போக வியவஸ்தை பொருந்தாது போயிற்று. இந்த ஆக்ஷேபம் ஏக ஆத்ம பக்ஷம், அநேக ஆத்ம பக்ஷம் இரு மதத்தும் சமமே என்னில், ஏகாத்ம பக்ஷத்தில், பிம்பப் பிரதிவிம்ப நியாயத்தினுலும், உபாதி ரூபமா யுள்ள அந்தக் கரண அசைவு முதலிய நாநாத் தன்மையினுலும், சுலப மாகச் (சுக துக்கங்கள்) பொருந்தும் என்று கூறுதல் யுக்தி யாம். என உணர்க.

பஞ்ச தசி 6 சித்திர தீபம்

115 பந்தமுத் திகணிலைமை யாகவாங் மாப்பான்மை
பாங்கிற்கொ ளப்பாற்றெனின்,
விந்தைபெறு மாயைநிலை மையதுதர வல்லதாம்
வேண்டுகில மாதலாலே. என வருவனவற்ருல்
உணர்க. (133)

[தர்க்க லக்ஷணமும், அநுமாந லக்ஷணமும், ஸ்ரீஹர்ஷ மிசிரர் மதுசூதந சரஸ்வதி, நிரு சிஹ்ம சுவாமிகள் சித்சுக ஆசாரியர் முதலாயினேர் கண்டந கண்ட காத்தியம், அத்வைத சித்தி போத திக்காரம், சித் சுகி முதலிய நூற்களில் விரி வாகக் கூறியிருக்கிறபடியினுலும், இந் நூல் ஸ்வாநு

பவ நூ லாக விளங்குதலினுலும், இதில், தருக்க அநுமாந விஷயங்களைக் கூறின், நூல் விரியும் என்னும் பீதியினுலும், கூற வில்லை என்கின்றார்]

தருக்கவநு மாநவிலக் கணங்கடாஅ மிசிரா
சாரியர்கண் முதலானோர் கண்டநா திகளில்,
விரித்தமைத லாலிதுதான் சுவாநுபவ நூலாய்
விளங்குதலா லீண்டுரைப்பிற் பெருகுமெனும் பயத்தா,
லுரைக்கிலமந் திரயோகம் பரிசயோ கம்பி
னுயர்பாவ யோகமுட னபாவயோ கந்தான்,
றெரித்தமகா யோகமெனு மிவைகளோ ரைந்துந்
திகழ்கின்ற நிதித்தியா சநவடிவ மாமால். (134)

(இ—ள்) தருக்க - தர்க்க, அநுமாந - அநுமாநங்களின், இலக்கணங்கள் - இலக்ஷணங்களை, மிசிராசிரியர்கள் - (ஸ்ரீ ஹர்ஷ) மிசிராசிரியர்கள், முதலானோர் - (மதுசூதந சரஸ்வதி, நரஸிம்ம சுவாமிகள், சித் சுக ஆசாரியர்) முதலாயினோர், கண்டந ஆதிகளில் - கண்டந கண்டகாத்தியம் (அத்வைத சித்தி, பேத திக்காரம் சித் சுகி) முதலிய நூல்களில், விரித்து - விரி வாக, அமைதலால் – எழுதியிருத்தலாலும், இது - இவ் வேதாந்தக் கிரந்தம், சுவ அநுபவ நூல் ஆய் – சுவாநுபூதிக் குரிய சாஸ்திர மாய், விளங்குதலால் - பிரகாசிக்கின்றபடியினுலும், ஈண்டு - இந்த நூலில், உரைப்பில் - (தர்க்க அநுமாந லக்ஷணங்களைச்) சாற்றுமிடத்து, பெருகும் - (கிரந்தம்) விரியும், எனும் - என்னும், பயத்தால் - பயத்தினுலும், உரைக்கிலம் - (தருக்க அநுமாந லக்ஷணங்களை ஈண்டு யாம்) கூறிலம், [நிதித்தியாசந ரூப, யோகம், மந்திர யோகம், ஸ்பரிச யோகம், பாவ யோகம், அபாவ யோகம், மகா யோகம்,

என ஐ வகைத் தாகக் கூறுகின்ருர்.] மந்திர யோகம் - மந்திர யோகமும், பரிச யோகம் - ஸ்பரிச யோகமும், பின் - பின்னர். உயர் - சிரேஷ்டம் பொருந்திய, பாவ யோகம் - பாவ யோகமும், அபாவ யோகம் - அபாவ யோகமும், தெரித்த - அறிவுரூப மாகிய, மகா யோகம் - மஹா யோகமும், எனும் - ஆகிய, இவைகள் - இவைகள், ஓர் ஐந்தும் - ஒரு ஐந்தும், திகழ்கின்ற - விளங்காநின்ற, நிதித்தியாசந - நிதித்தியாசந, வடிவம் ஆம் - சொரூப மாம். எ—று.

தாம் - தான் - தான் - ஆல் - உடன் - அசை,

தர்க்க அநுமாந இலக்ஷணங்களை ஸ்ரீ ஹர்ஷ மிசிராச் சாரியர், மது சூதந சரஸ்வதி சுவாமிகள், சித் சுக ஆச்சாரி யர், நரசிம்ம சுவாமிகள் முதலானவர்கள், கண்டந கண்ட காத்தியம், அத்வைத சித்தி, சித் சுகி, பேத திக்காரம் முதலிய நூல்களில் எழுதியிருத்தலினாலும், இந்த வேதாந்தக் கிரந் தம், ஸ்வாநுபூதிக் குரிய நூலாக விளங்குகின்றபடியினு லும், தர்க்க அநுமாந லக்ஷணங்களைக் கூறின், நூல் விரியும் என்னும் பயத்தினாலும், இதன்கண் கூற வில்லை.

1. மந்திர யோகம், 2. பரிச யோகம், 3. பாவ யோகம், 4. அபாவ யோகம், 5. மகா யோகம் என்னும் ஐந்து யோகமும், நிதித்தியாசந ஸ்வரூபம் ஆம் என உணர்க (134)

[மந்திர யோக லக்ஷணமும், ஸ்பரிச யோகமும், கூறி பாவ யோகம் கூறுகின்ருர்.]

ஓங்காரா திகளநுசந் தாநத்தாற் பரத்தி
லுள்ளமடங் குதலேமந் திரயோக மதனோ,
டீங்காகு மநபவந மொன்றாய்மூ லத்தி
னிருஞ்சுழிநா வழிச்சென்று சென்னிநடு விருந்த,
தேங்காத்ம வொளியின்மநோ லயமாதல் பரிசஞ்
சிரந்துறக்கஞ் செவிதிசைக ளிருசுடர்கள் விழிதீ,
பாங்காய முகமுந்தி விசும்புநிலம் பதமாம்
பரமனுரு வாயவிராட் புருடவடி வெனினும். (135)

(இ—ள்) ஓங்கார ஆதிகள் - பிரணவம் முதலிய
(மந்திரங்களின்), அநுசந்தாநத்தால் - அநுசந்தாநத்தினால்,
பரத்தில் - பிரம்மத்தினிடத்தில், உள்ளம் - மநம், அடங்கு
தலே - லயமாயிருத்தலே, மந்திர யோகம் - மந்திர யோக
மாம், அதனோடு - அந்த மந்திர யோக (பிரணவ)
முதலிய மந்திரங்களின் அநுசந்தாநத்தினோடு கூடி,
ஈங்கு - இவ் விடத்து, ஆகும் - உண்டாகின்ற,
மந பவநம் - மநமும் பிராண வாயுவும், ஒன்று
ஆய் - ஏக மாய்ப் பொருந்தி, மூலத்தின் - மூலாதாரத்தி
லிருந்து. இரும் - பெருமை பொருந்திய, சுழிநா - சுஷும்
நா நாடி, வழி - மார்க்க மாக, சென்று - (மேற்) சென்று,
சென்னி நடு - சிரஸின் மத்தியில். தேங்த - நிறைந்து,
இருந்த - இருக்கின்ற, ஆத்ம வொளியில் - பரமாத்ம தேஜ
ஸில், மநோ லயம் - (அந்த) மநம் லயம், ஆதல் - ஆகு
வதே, பரிசம் - ஸ்பரிச யோக மாம், துறக்கம் - ஸ்வர்க்
கமே, சிரம் - சிரசும், திசைகள் - திக்குகளே, செவி -
சுரோத்திரமும், இரு சுடர்கள் - சந்திர சூரியர்களே, விழி -
நேத்திரமும், தீ - அக்கியே, பாங்கு ஆய - அழகு பொருந்
திய, முகம் - முகமும், விசும்பு - ஆகாயமே, உந்தி - நாபி

யும், நிலம் - பூமியே, பதம் - பாதமும், ஆம் - ஆகிய, பரமன் - பிரம்ம, உருவு ஆய -சொருபம் ஆகியிருக்கின்ற, விராட் புருட வடிவு - விராட் புருஷ (வியாபக ஈசுவர) சொருபத்தை, எனினும் - ஆயினும். எ—று

(இச் செய்யுள் குளகம்)

1. பிரணவ முதலிய மந்திரங்களின் அநுசந்தாநத்தினுல், பிரஹ்மத்தின்கண் மநம், லயித்திருத்தலே, மந்திர யோகம் ஆம்.

2. அந்த பிரணவ முதலிய மந்திர யோகத்திேைடு கூடி, மநமும், பிராண வாயுவும், ஏகம் ஆய்ப் பொருந்தி, மூலாதாரத்தி லிருந்து சுழும்நா நாடி மார்க்கம் ஆக, மேற்சென்று, சிரசின் மத்தியில் நிறைந்து இருக்கின்ற பிரஹ்ம தேஜஜில், அந்த மநம் லயம் ஆவதே, ஸ்பரிச யோகம் ஆம்.

3. ஸ்வர்க்கம், சிரஸ், திக்குகள், சுரோத்திரம், சந்திர சூரியர்களே. நேத்திரம், தீ, முகம், ஆகாயம், நாபி, பூமி, பாதம், ஆகிய பிரஹ்ம ஸ்வரூபமா யிருக்கின்ற விராட் புருஷ வியாபக ஈசுவர ஸ்வரூபத்தையியானும், என உணர்க.

யோக தத்வ உபநிஷத்.

"மந்திரயோகோ லயச்சைவ ஹடோசௌ ராஜயோகத:"19.

இதன் பொருள், மந்திர யோகம், லய யோகம், ஹட யோகம், ராஜ யோகம்" என்று கூறுகின்றது. (135)

[பாவ யோகமும், அபாவ யோகமும், மகா யோகமும், கூறுகின்றுர்.]

அன்றியள வுறுபெருந்தோட் படைபணியோ டுற்ற
வண்ணல்வடி வெனினுநினைந் தவயவங்க டம்மி,
லொன்றொன்றை விடுத்துநின்ற வவயவிமாத் திரமா
முண்மையாம் பிரமத்தின் மநமடங்கல் பாவஞ்,
சென்றளவு கரணமுரு வொருபிரமந் தன்னிற்
சிந்தையடங் குதலபா வம்படைப்பி லொழிவிற்,
றன்றெரித றெரியாமை யிடத்திரோர் பரிசாய்த்
தன்வடிவாம் பிரமத்தின் மநமிறன்மா யோகம். (136)

(இ—ள்) அன்றி - அல்லது, பெரும் தோள் - மஹா ஹஸ்தத்தில், படை - ஆயுதம், பணியோடு - ஆபரணங்களோடு, உற்ற - பொருந்தியிருக்கின்ற, அளவு உறு - பரிமித மான (சரீரத்தை யுடைய), அண்ணல் - பரமேசுவரனது, வடிவு - (திவ்விய மங்கள) மூர்த்தியை, எனினும் - ஆயினும், நினைந்து - தியாநித்து, அவயவங்கள் தம்மில் - (பின்னர் தியாநிக்கப்பட்ட அந்த மூர்த்தியினது) அவயவங்களில், ஒன்று ஒன்று - ஒவ் வொரு அவயவங்க ளாக, விடுத்து - நீக்கி, நின்ற - சேஷமா யிருக்கின்ற, அவயவி மாத்திரம் ஆம் - அவயவி மாத்திர சொரூப மாகிய, உண்மை ஆம் - சத் ரூப, பிரமத்தில் - பிரம்மத்தினிடத்தில், மநம் - மநம், அடங்கல் - லயமாவதே, பாவம் - பாவ யோக மாம், கரணம் - வாக்கு மநங்கள், சென்று - போய், அளவு உரு - அறிய முடியாத, ஒரு - நிருபாதிக, பிரமம் தன்னில் - பிரமத்தில், சிந்தை - மநம், அடங்குதல் - லயமாவதே, அபாவம் - அபாவ யோக மாம், படைப்பில் - (லோக) உற்பத்தியிலும், ஒழிவில் - லயத்திலும், தெரிதல் - அறிவு, தெரியாமை யிடத்தின் - அறியாமைக ளிடத்திலும், ஓர் பரிசு ஆய் -(தனக்கு நாச மின்றி) ஒரே படித்தா யிருக்கின்ற, தன் வடிவு ஆம் - பிரத்தியகாத்ம சொரூப

மாகிய, பிரமத்தில் - பிரஹ்மத்தி னிடத்தில், மநம் - மநம், இறல் - லய மாவதே, மா யோகம் - மஹா யோக மாம். எ—று

''அவயவங்கள் தம்மில்'' - தம் - ''பிரமம் தன்னில்''-தன்- தன் - அசை. ஐ - சாரியை.

அல்லது, மகா அஸ்தத்தில், ஆபரணம் ஆயுதங்களோடு பொருந்தியிருக்கின்ற பரிமிதம் ஆன சரீரத்தினை உடைய திவ்விய மங்கள மூர்த்தியையாயினும், தியானித்து, பின்னர், தியானிக்கப்பட்ட அந்த மூர்த்தியினது அவயவங்களில், ஒவ்வொரு அவயவங் களாக நீக்கி, சேஷமா யிருக்கின்ற அவயவி சொரூபம் ஆகிய சத் ரூபப் பிரஹ்மத்தினிடத்தில், மகம், லயம் ஆவது, பாவ யோகம் ஆம்.

4. அறிய முடியாத நிருபாதிகப் பிரஹ்மத்தில், மநம் லயம் ஆவது, அபாவ யோகம் ஆம்.

5. சிருஷ்டியிலும், லயத்தினும், அறிவு அறியாமைகளிடத்திலும், தனக்கு நாசம் இன்றி, ஒரே படித்தாயிருக்கின்ற பிரத்திபக்காத்ம சொருப மாகிய பிரஹ்மத்தினிடத்தில், மநம் லயம் ஆவது, மகா யோகம் ஆம். என அறிக. (136)

[சிரவண மநந நிதித்தியாசந வாயிலாக் உளதாகும், ஆத்ம சாக்ஷாத்கார ஞாந விரோதிக ளாகப், பூதப் பிரதிபந்தம், வர்த்த மாநப் பிரதிபந்தம், ஆகாமியப் பிரதிபந்தம் என மூன்று பிரதிபந்தங்கள் உண்டு என்றும், அவற்றுள், பூதப் பிரதிபந்த லக்ஷணமும், கூறுகின்றார்.]

பகர்ந்தவுயி ருண்மைவிலக் காகவரும் பூதப்
பிரதிபந்தம் வர்த்தமா னப்பிரதிபந் தம்பி,
னிகழ்ந்தவா காமியப் பிரதிபந்த மெனமுத்தி
நேயமொடு துறந்துகுரு பரனையறிந் தடைந்து,
மகிழ்ந்துசவ ணாதிகமுற் றிடினுமுன் னுகர்ந்த
வநிதாதி விடயசுக வாதனையாற் றிநமும்,
புகுந்துமந நிலைகலக்கி யுயிருண்மை யுருமற்
போக்கியிட றனைப்பூதப் பிரதிபந்த மென்பர். (137)

(இ—ள்) பகர்ந்த - (முன்னர்க்) கூறிய, உயிர் - ஆத்ம, உண்மை - சாக்ஷாத்காரத்துக்கு, விலக்கு ஆக - பிரதிபந்தங்களாக, பூதப் பிரதிபந்தம் - பூதப் பிரதிபந்தகமும், வர்த்தமானப் பிரதிபந்தம் - வர்த்தமானப் பிரதிபந்தகமும், பின் - பின்னர், நிகழ்ந்த - கூறுகின்ற, ஆகாமியப் பிரதிபந்தம் - ஆகாமியப் பிரதிபந்தகமும், என - என்று, வரும் - (மூன்று பிரகார மாக) உணடாகாநிற்கும், முத்தி நேயமொடு - மோக்ஷ விருப்பத்தினால், துறந்து - சர்வ சங்கப் பரித்தியாகஞ் செய்து, குருபரனை - ஸ்ரீ குருவை, அறிந்து அடைந்து - உணர்ந்து (சரணாகதி யாக) அடைந்து, மகிழ்ந்து - சந்தோஷம் உண்டாம்படி (சதுர் விதப் பணிவிடைகளையுஞ் செய்து), சவண ஆதிகம் - சிரவண மநந நிதித்தியாசநங்களை, உற்றிடினும் - செய்யி னும், முன் - பூர்வம் (கிரகஸ்த ஆசிரமத்தில்), வநிதா ஆதி - (சுவீகரித்திருந்த) ஸ்திரீ எருமை முதலிய, விடய சுக - விஷய சுகங்களின், நுகர்ந்த - அநுபவமே, வாதனை யால் - சமஸ்கார பலத்தால், திநமும் - நாள் தோறும், மநம் - மநத்தின்கண், புகுந்து - (வந்து வந்து) நுழைந்து, நிலை - (மநத்தின்) ஸ்திதியினை, கலக்கி - கலங்கச் செய்து (சிந்தையினை உண்டாக்கி), உயிர் - ஆத்ம, உண்மை -

சாக்ஷாத்காரத்தினை, உறுமல் - அடையாதபடி, போக்கியிடல்தனை - தடுப்பதனை, பூதப் பிரதிபந்தம் - பூதப் பிரதிபந்தகமாம், என்பர் - என்று கூறுவர் (பெரியோர்) எ—று.

"போக்கியிடல் தனை" என்பதில் - தன் - அசை.

வாசனை - சித்தத்தின் சூக்ஷும அவஸ்தையாகிற சம்ஸ்காரம். ஆதி சப்தத்தினால் எருமை முதலியனவும் கொள்க.

முன்னர்க் கூறிய ஆத்ம சாக்ஷாத்காரத்திற்குப் பிரதிபந்தங்களாக, பூதப் பிரதிபந்தம் - வர்த்தமானப் பிரதிபந்தம் ஆகாமியப் பிரதிபங்கள் என மூன்று பிரகாரம் ஆம்.

1. பூதப் பிரதிபந்தம் ஆவது- மோக்ஷ விருபத்தினால் சர்வ சங்கப் பரித்தியாகம் செய்து, குருவை உணர்ந்து, சரணுகதியாக அடைந்து, சந்தோஷம் உண்டாம் படி சதுர்வித பணி விடைகளைச் செய்து, சிரவண மநந நிதித்தியாசநங்களைச் செய்யினும், பூர்வம் கிரஹஸ்த ஆசிரமத்தில் ஸ்வீகரித்திருந்த ஸ்திரீ எருமை முதலிய் விஷய சுகங்களின் அநுபவமே, சம்ஸ்கார பலத்தால், நாள் தோறும் மநத்தின் கண் வந்து வந்து நுழைந்து, மநத்தின் ஸ்திதியினை கலங்கச் செய்து, சிந்தையினை உண்டாக்கி, ஆத்ம சாக்ஷாத்காரத்தினை அடையாது தடுப்பதனைப் பூதப் பிரதிபந்தம் என்பர், என உணர்க. (167)

[வர்த்மாநப் பிரதிபந்தம், ஆகாமியப் பிரதிபந்தங்களைக் கூறுகின்றார்.]

மடிவிடயா சத்தியபி மாநமொடு குதர்க்க
மறுகுறுசிற் றினஞ்சேர்தல் சபலத்து வாதி,

யடைதலின்மெய் தெரிந்துமுயி ருண்மையுறு தழித்த
லதுவாகும் வர்த்தமா நப்பிரதிபந் தங்காண்,
விடலரிய சநநமினுஞ் சிலவடைந்தா லன்றி
விடாதுபிர மாதியுல கிச்சையெனுந் தோட,
மொடுமருவி மறைப்பொருளை யுணர்ந்திடினு மாந்ம
வுண்மையுறு தழித்தலா காமியப்பிரதி பந்தம். (138)

(இ—ள்) மடி - சட புத்தி, விடய ஆசத்தி - விஷயாசத்தி, அபிமாநம் - அபிமாநம், குதர்க்கம் - குதர்க்கம், மறுகு உறு - மநக் குளப்பம் பொருந்தியிருக்கின்ற, சிற்று இனம் - ஆகாத கூட்டத்தினை, சேர்தல் - பொருந்தல், சபலத்துவ ஆதி - சபலத் தன்மை முதலிய (ஆற ேறாடு), அடைதலின் - பொருந்தியிருத்தலினால், மெய் - உண்மை (தத்துவத்தினை) தெரிந்தும் - விசாரம் செய்யினும், உயிர் - ஆத்ம, உண்மை - சாக்ஷாத்காரத்தினை, உறுது - அடைய வொட்டாது, அழித்தலது - தடுப்பது, வர்த்தமாநப் பிரதிபந்தம் ஆகும் - வர்த்தமாநப் பிரதிபந்தகமாம், விடல் அரிய - கடத்தற் கரிய, இனும் - இன்னும், சில - சில, சநநம் - சநநத்தினை, அடைந்தால் - அடையில், அன்றி - அல்லது, பிரம உலகு ஆதி - பிரம்ம லோகாதிகளில் (உள்ள), இச்சை - வாஞ்சை, விடாது - (தமமை விட்டு) நீங்கமாட்டாது, எனும் - என்று கூறுகின்ற, தோடமொடு - தோஷத்தோடு கூட, மருவி - பொருந்தி, மறைப் பொருளை - வேதார்த்தத்தினை, உணர்ந்திடினும் - அறியினும், ஆந்ம - ஆத்ம, உண்மை - சாக்ஷாத்காரத்தினை, உறுது - அடையாதபடி, அழித்தல் - தடுப்பது, ஆகாமியப் பிரதிபந்தம் - ஆகாமியப் பிரதிபந்தகமாம். எ—று.

"அழித்தலது" என்பதில், அது பகுதிப் பொருள் விகுதி. காண் முன் னிலை அசை. ஒடு - அசை.

2. ஜட புத்தி, விஷயாசக்தி, அபிமாநம், குதர்க்கம், மநக் குளப்பம் பொருந்தி யிருக்கின்ற ஆகாத கூட்டத்தினைச் சேர்தல், சபலத் தன்மை முதலிய ஆறனோடு பொருந்தியிருத்தலினால், உண்மை தத்துவத்தை விசாரம் செய்யினும், ஆத்ம சாக்ஷாத்காரத்தினை அடைய வொட்டாது (தம்மை) தடுப்பது வர்த்தமாநப் பிரதிபந்தகம் ஆம்.

3. கடத்தற் கரிய இன்னும் சில ஜநநத்தினை அடையின் அல்லது, பிரஹ்ம லோகத்தில் உள்ள வாஞ்சை, தம்மைவிட்டு நீங்க மாட்டாது என்று கூறுகின்ற தோஷத்தோடு கூடப் பொருந்தி, வேத அர்த்தத்தினை அறியினும், ஆத்ம சாக்ஷாத்காரத்தினை அடையாதபடி தடுப்பது ஆகாயமியப் பிரதிபந்தகம் ஆம். என உணர்க. 138

பஞ்ச தசி 9 தியாந தீபம்.

14 அந்தவறி வெதனாலுண் டாமெனினவ்
வறிவுதடை யழிந்தா லுண்டாம்,
இந்தவலு வுறுதடையு மிறந்ததுமேல்
வருவதுமின் றுளது மென்று,
வந்துறுமூ வகைத்தாயித் தடையுறுமேன்
மறைமறையின் பொருள்க ளெல்லாம்,
முந்துறக்கற் றையமற மொழியவல
ரேனுமுறார் முத்தி யன்றே.

15 தடையுளதேல் ஞாநம்வரா தெனுமிதனைத்
தானேபொற் பொருட்டிட் டாந்தத்

திடமுறக்காட் டியதுமறை யதியொருவன்
கற்றறிந்தும் எருமை தன்பால்,
அடைவுறுகேண் மையினல்வந் தடுத்தபதி
பந்தத்தா லறிவாந் தன்னை.
மடைமைகெட வறிந்திலனென் றிடுகதைதா
னுலகின்கண் வழங்கா நிற்கும்.

16 குரவனொரு மையின்கேண்மை யநுசரித்தே
தத்துவத்தைக் குயின்றான் பின்னர்,
உரைசெய்வன் றன்பதிபந் தந்தீர்ந்தே
யுள்ளபடி யுணர்வுற் றனால்,
பெருகுநிகழ் காலபதி பந்தம்விட
யாசத்தி பிரஞ்ஞை மாந்தம்.
மருவலொடு குதர்க்கம்விப ரியயதுராக்,
கிரகமுறில் வாரா ஞானம்.

17 சமமுதலாற் சவணாதி தம்மாலு
மங்கங்கே தகுந்த வற்றால்.
அமையுமந்தப் பதிபந்த நட்டமுறி
னதனாற்றற் கதுவந் தெயதுஞ்,
சுமடுறுமேற் பதிபந்த மதுவாம
தேவரின்கண் டுலங்கப்பட்ட,
திமையளவில் ஓர்பவத்தாற் பரதனுக்கு
முப்பவத்தா லிறந்த தன்றே.

20 அன்ன வன்முனைப் பயிற்சியா
லவசனென் றனுமாற் றுவன்செம்மப்,
பன்மைப் பேற்றினாற் பரகதி
சாருவன் பங்கய னுலகாசை,

துன்னி னீத்ததைத் தன்னோடா
　　டினுமிவன் றுகளறத் தெளிகில்லான்,
முன்னை நான்முடிப் பொருடுணிந்
　　தயன்பதி முடிவின்முத் தியைச்சேர்வான்.
　　　　என வருவனவற்றால் உணர்க. 138

[பிரதிபந்தம் மூன்றுக்கும், விரோதி யாய, ஞானம் வைராக்யம், உபரதி, மூன்றும், அப்யாசிக்க வேண்டும், என்றும், ஒவ்வொன்றுக்கும், ஏது, சொரூபம், காரியம், என்று மூன்று அவயம் இருக்கின்ற தென்றும், ஞானத்திற்குக் காரணம் (ஏது), சிரவண மநந நிதித்யாசநம் எனவும், ஆத்ம அகங்கார வேறுபாடு, சொரூபம் எனவும், அகங்கார மய சிதாபாசனுக்கு, ஆத்மா சாக்ஷி யாக அறிதல், காரியம் என்றும், கூறுகின்றார்.]

பந்தமவை மூன்றினையுங் கடந்திடுவான் பயில்வ
　பகர்ஞானம் வைராக முபரதியா மவற்றின்,
வந்தணுகு மிலக்கணங்கா ரணமொடுதான் சொரூப
　மருவுகா ரியமெனவே தனித்தனிஞா னத்து,
முந்துசவ ணாதிகமே காரணமாம் மாவு
　மூலவகங் காரமும்வே றுக்குதலே சொரூபம்,
நந்துமகங் காரகத மயற்குத்தான் கரியாய்
　நணுகுதலே காரியமென் றறைகுவர்மூ தறிஞர். (139)

(இ—ள்) அவை பந்தம் மூன்றினையும் - (பூதம் வர்த்தமாநம் ஆகாமி என்று கூறப்பட்ட) அந்த மூன்று பிரதிபந்தங்களையும், கடந்திடுவான் - நிவிர்த்தித்தற் பொருட்டு, பயில்வ - (அதிகாரி) அப்யாசிக்கத் தக்கன, பகர் - நவிலாநின்ற, ஞானம் - ஞானமும், வைராகம் -

வைராக்கியமும், உபரதி-உபரதியும், ஆம் - (என மூன்று பிரகாரம்) ஆம், அவற்றின் - அந்த ஞானம் வைராக்கிய உபரதி மூன்றனுக்கும், காரணம் - ஏதுவும், சொரூபம் - சொரூபமும், மருவு - பொருந்தாநின்ற, காரியம் - காரியமும், என - என்று (மூன்று பிரகாரமாக), தனி தனி - ஒவ்வொன்றற்கும், இலக்கணம் - லக்ஷணம், வந்து அணுகும் - வந்து பொருந்தாநிற்கும், ஞானக்கு, ஞானத்திற்கு, மூந்து - பிரதானமான, சவண ஆதிகமே - சிரவண மனந நிதித்தியாசநங்களே, காரணம் - ஏது வாம், ஆத்மாவும் மூல அகங்காரமும் - ஆத்மாவிற்கும் (கர்த்திருத்துவ ரூபம் ஆன) மூலாகங்காரத்திற்கும் (உண்டாயிருக்கும் அத்தியாச அயிக்கியத்தினை), வேறு ஆக்குதலே - வேறு செய்வதே, சொரூபம் - (ஞானத்தினது) சொரூபமாம், நந்தும் - கெட்டுப் போகாநின்ற, அகங்கார கத மயற்கு - அகங்காரத்தில் பிரதிபிம்பித்திருக்கும் சிதாபாசனுக்கு, தான் கரி ஆய் - தான் சாக்ஷியாய், நணுகுதலே - பொருந்தியிருப்பதே, (அகங்காராதிகளோடு ஆத்மாவின் தாதாத்மிய அத்தியாசக் கிரந்தி மீண்டும் உதயமாகாமை என்றபடி), காரியம் - (ஞானத்தினது) காரியமாம், என்று - என, மூது அறிஞர் - பெரியோர்கள், அறைகுவர் - கூறுநிற்பர். எ—று.

ஒடு - தான் - ஏ - அசை. “ஞானத்துக்கு” என்பது அத்துச் சாரியை குறைந்து, “ஞானக்கு” என வந்தது.

பூதம் - வர்த்தமானம் - ஆகாமி என்று கூறப்பட்ட, அந்த மூன்று பிரதிபந்தங்களையும், நிவிர்த்தித்தற் பொருட்டு, அப்பியாசிக்கத் தக்கன, ஞானம் வைராக்கியம் உபரதியும் என மூன்றும்.

அந்த ஞாநம் வைராக்யம் உபரதி மூன்றற்கும், ஏது சொரூபம் காரியம் என்று, ஒவ்வொன்றுக்கும் லக்ஷணம் பொருந்தாநிற்கும்.

ஞாநத்திற்கு, சிரவண மநந நிதித்யாசநங்களே, ஏது ஆம்.

ஆத்மாவிற்கும், கர்த்திருத்தன்மை ரூபம் ஆன மூல அகங்காரத்திற்கும், உண்டாகியிருக்கும் அத்தியாச ஐக்கியத்தினை, வேறு செய்வதே, ஞாநத்திற்குச சொரூபம் ஆம்.

அகங்காரப் பிரதிபிம்ப சிதாபாஸனுக்கு, தான் சாக்ஷியாய் பொருந்தி யிருப்பதே, (அகங்காராதிகளோடு ஆத்மாவின் தாதாத்மிய அத்தியாசக் கிரந்தி மீண்டும் உதயம் ஆகாமை என்றபடி), ஞாநத்தின் காரியம் ஆம், என உணர்க. (139)

[வைராக்கியத்திற்கு, ஏது சொரூபம் காரியம், இன்னவை என்றும், வநிதாதி விஷயத்தில். அநித்தியத் தன்மை முதலிய தோஷ திருஷ்டி, ஏது என்றும். விஷயத்தினை விடுதல், சொரூபம் என்றும், விட்ட விஷய்த்தில் பற்றுதிருத்தல் காரியம் என்றும், உபரதிக்குக் காரணம், இயமாதிகள் என்றும், மநம் லயம் ஆதல், சொரூபம் என்றும், பாகிய கருமத்தில் மீண்டும் பிரவேசியாதிருத்தல், காரியம் என்றும், ஞாநாதிகட்கு அவதியும், கூறுகின்றார்.]

வேண்டும்வை ராக்கியத்திற் குற்றவநி தாதி
  விடயத்தி னிலையாமை முதலாய குற்றங்,
காண்டலது காரணமெத் திறத்தானு மதனைக்
  கழன்றிடுதல் சொரூபம்பின் புறுமைகா ரியமா,

மாண்டவுப ரதிக்கியமா திகளேகா ரணஞ்சூழ்
மநமொடுங்கல் சொருபமாம் புறக்கருமந் தன்னின்,
மீண்டுபுகு மயலறுதல் காரியமென் றிசைப்பர்
விளம்பலுறு ஞாநாதி கட்கவதி மொழிவாம். (140)

(இ—ள்) வேண்டும் - (ஞாந சாதந மாகக்) கொள்ளத் தக்க, வைராக்கியத்திற்கு - வைராக்கியத்தினுக்கு, உற்ற - (கருமாதீந மாக வந்து) பொருந்தியிருக்கின்ற, வநிதா ஆதி - ஸ்திரீ முதலிய, விடயத்தில், விஷயங்களினிடத்தில், நிலையாமை - அநித்தியத் தன்மை, முதல் ஆய - முதலிய, குற்றம் - தோஷத்தினை, காண்டலது - பார்ப்பதே, காரணம் - ஏது வாம், அதனை - அந்த ஸ்திரீ முதலிய விஷயங்களை, எத் திறத்தானும் - எவ் வாற்றானும், கழன்றிடுதல் - விட்டு விடுதல், சொருபம் - (வைராக்கியத்தினது) சொருப மாம், பின்பு - (விட்ட அந்த வநிதாதி விஷயங்களின்) மீண்டும், உறுமை - (வாந்தாசநாதிகளில் போல்) செல்லாதிருப்பதே, காரியம் ஆம் - (வைராக்கியத்தின்) காரிய மாம், மாண்ட - மாக்ஷிமை தங்கிய, உபரதிக்கு - உபரதிக்கு, இயம ஆதிகளே - யம, நியம, ஆஸந, பிராணாயாம, பிரத்தியாகார, தாரணை, தியாந, சமாதிகளாகிய அஷ்ட அங்கங்களே, காரணம் - ஏது வாம், சூழ் மநம் - விஷயங்களிம் செல்லும் மநம், ஒடுங்கல் - (அவற்றினிடத்துச் செல்லாது) ஏகாக்கிரத் (தன்மையோடு இருப்பதுவே), சொருபம் ஆம் - சொருப மாம். புறக் கருமம் தன்னில் - பாஹிய கர்மங்களில், மீண்டு புகும் - மீண்டும் செல்லுகின்ற, மயல் - (மநத்தின்) பிராந்தியினை, அறுதல் - விடுவதே, காரியம் - காரிய மாம், என்று - என, இசைப்பர் - (பெரியோர்) கூறுவர், [ஞாநம் வைராக்யம் உபரதி

மூன்றுக்கும், அவதியினை மேலே கூறுவாம் எனக் கூறுகின்றார்.] விளம்பல உறு - (மோக்ஷ சாதநமாகக்) கூறுகின்ற, ஞாந ஆதிகட்கு - ஞாநம், வைராக்கியம். உபரதிகளுக்கு, அவதி - அவதியினை, மொழிவாம் - கூறுவாம் (யாம்), எ—று.

"காண்டலது" என்பதில், - அது - பகுதிப் பொருள் விகுதி. "புறக் கருமம் தன்னில்" என்பதில்,-தன்-அசை.

வைராக்கியத்திற்கு, கருமாதீநமாக வந்து பொருந்தியிருக்கின்ற ஸ்திரீ முதலிய விஷயங்களிடத்தில், அநித்தியத் தன்மை முதலிய தோஷத்தினை பார்ப்பதே, ஏதுவாம்.

அந்த ஸ்திரி முதலிய விஷயங்களை எவ்வாற்றானும் விட்டு விடுதல், வைராக்கியத்தின் ஸ்வரூபம் ஆம்.

விட்ட வநிதாதி விஷயங்களின் மீண்டும் வாந்தாசநாதிகளில் போல், செல்லாதிருப்பதே, வைராக்கியத்தின் காரியம் ஆம்

உபரதிக்கு. யம நியம ஆஸந பிராணயாம பிரத்யாகார தாரணை தியாந சமாதிகளாய அஷ்டாங்கங்களே ஏது ஆம்.

விஷயங்களில் செல்லும் மநம். அவற்றினிடத்துச் செல்லாது, ஏகாக்கிரத் தன்மையோடு இருப்பதுவே. உபரதிக்குச் சொருபம் ஆம்.

பாஹ்ய கர்மங்களில் மீண்டும் செல்லுகின்ற மநத்தின் பிராந்தியினை விடுவதே உபரதியின் காரியம் ஆம்.

ஞானம் வைராக்கியம் உபரதிக்கு. அவதியினை மேற் கூறுவாம். என உணர்க. (140)

[ஞானத்தினுக்கு அவதியும், வைராக்கியத்தினுக்கு அவதியும், உபரதிக்கு அவதியும் கூறி, இம் மூன்றையும் ஒருவன் முயற்சித்து அடைந்திருப்பானுகில், முன் தவத் தின் ஆற்றல் என்றும், கூறுகின்ருர்.]

தக்கதே காங்மபா வம்போலப் பிரமந்
 தானென்னுந் திண்மைஞா நத்தினுக்கா மவதி,
மிக்கபிர மாதிபதந் துரும்பெனவே நினைத்தல்
 விளம்பும்வை ராக்கியத்திற் கவதிசுழுத் தியன்போற்.
றொக்ககரு மங்களனைத் தினையுநினை யாமை
 தோன்றுமுப ரதிக்கவதி யாகுமிவை மூன்றும்,
புக்கொருவ னடைந்திடுமே லதுமுன்னம் விடாது
 புரிந்தமா தவத்தின்வலி யென்றறிக தெரிந்தே. (141)

(இ—ள்) தக்க - தகுதி யான, தேக ஆங்ம பாவம் - தேகத்தின்கண் ஆத்மத் தன்மை (திடமா யிருப்பது), போல - போல், தான் - தான், பிரமம் - பிரஹ்மமே. என்னும் - என உண்டாகும், திண்மை - திட (புத்தி), ஞானத்தினுக்கு - ஞானத்திற்கு, அவதி ஆம் - அவதி யாம், மிக்க - உயர்வு பொருந்திய, பிரம ஆதி பதம் - பிரமம் (லோக) ஆதி பதங்களை, துரும்பு என - திரணம் போல, நினைத்தல் ஏ - கருதி (விட்டுவிடுதலே). விளம்பும் - கூறு நின்ற, வைராக்கியத்திற்கு - வைராக்கியத்தினுக்கு, அவதி- அவதி யாம், சுழுத்தியன் போல் - நித்திரை பண்ணுபவனைப் போல், தொக்க - கூட்ட மாக வுள்ள, கருமங்கள் அனைத் தினையும் - சகல கருமங்களையும், நினையாமை - செய்து

(பலனை) நினையாதிருப்பதே, தோன்றும்- உண்டாகாநின்ற, உபரதிக்கு - உபரதிக்கு, அவதி ஆ'தம் - அவதி யாம், [ஞாநம் வைராக்யம் உபரதி மூன்றையும், ஒருவன் பிரயத்நம் செய்து அடைந்திருப்பானுனல், அது பூர்வ புண்ணிய தவத்தின் சாமர்த்தியம் என்று கூறுகின்றார்], இவை மூன்றும் - இந்த ஞாநம் வைராக்கியம் உபரதி என்னும் மூன்றையும், ஒருவன் - ஒரு புருஷன், புக்கு — யத்நம் செய்து, அடைந்திடுமேல் - அடைந்திருப்பானுகில், அது - (அந்த மூன்றையும் ஏக காலத்தில்) அடைந்திருப்ப தானது, முன்னம் - பூர்வ செந்மத்தில், விடாது - இடையருது, புரிந்த - செய்த, மா தவத்தின் - மஹா தவசின், வலி - பல மாம், என்று - என, தெரிந்து - நன்ருய், அறிக - உணர்வாயாக. எ—று ஏ - அசை.

தேக ஆத்ம பாவம் போல. தான் பிரஹ்மம் என்னும் திடம், ஞாநத்தினுக்கு அவதி என்றும், பிரமாதி பதமும் துரும்புக்குச் சமாநம் என நினைத்தல், வைராக்கியத்தினுக்கு அவதி என்றும், சுழுப்தன் போன்று, கருமங்கள் யாவற்றையும், செய்தும் பலனை விரும்பாதிருத்தல், உபரதிக்கு அவதி என்றும், மூன்றையும் ஒருவன் அடைந்திருப்பா னுயின், முற் ஜந்மங்களில் செய்த பெரும் தவத்தின் சாமர்த்தியம் என்றும் உணர்க.

பஞ்ச தசி 6 சித்திர தீபம்.

136 தன்னேர் விராகம் போதோப
ரதிக டமிற்ரு னன்பாகி,
யொன்றுய்க் கொளற்பாற் ருய்நிற்கும்
ஓர்பாற் பிறிபட்டிருக்குமால்.

137 ஏது சொரூபங் காரியம்வெவ்
வேறு மிவைக்குக் கலப்பிலதென்,
றேது நன்னூற் பொருளுணர்ந்தோ
ருண்மை யாவுட் கொளல்வேண்டுந்,
தீது நோக்க லருவருப்புந்
திரும்பப் போகத் தாசையற,
லீது மூன்றும் விராகத்துக்
கெழிலா ரேது முதலியவாம்.

138 வினவ லாதி யொருமூன்று
மெய்ம்மை பொய்ம்மை பகுத்தறிதல்,
பினைவன் முடிச்சு முளையாமை
பெரும்போ கத்துக் கிவைமூன்று,
மநக வியமா திகள்புத்தி
யடக்கம் வைரா கத்தழிவு,
மினிய வேது வாதியுப
ரதிக்கா மிதுதான் கலப்பிலதாம்.

139 நிகழ்மெய்ப் போதந் தலைமையதா
நேரே முத்தி யளிப்பதனுன்,
மிகநற் போதம் வளர்ப்பனவாம்
விராக வுபர திகளிரண்டும்,
திகழும் மூன்று மிகமுதிரிற்
றீர்க்க காலத் தவப்பயனு,
முகள்வெம் பாவத் தொருபாலொன்
றேர்காற் றடைப்பட் டிருக்குமால்.

140 விரதி யுபர திகணிறைந்து
மேலாம் போகந் தடைப்பட்டோர்,

நிரதி சயமுத் தியையடையார்
நேர்வர் தவத்தான் மேலுலகம்,
பூரண போத நிறைந்தேனை
யிரண்டுந் தடைதான் புகுமெனினுந்,
திரமெய் முத்தி நிலைவரமாந்
திட்ட துக்கஞ் சிதையாதால்,

141 அயன்பே ருலகந் திரணமென
வறிதல் விரதிக் கவதியுடல்,
சோயமா வதுபோற் பரந்தானுந்
துணிவே போதத் தினுக்கவதி,
துயில்போன் முழுது மறப்பதுதான்
றுகடீ ருபர திக்கவதி,
வியனுர் மதியா லவாந்தரமாம்
வேறு பாடோர்ந் திடல்வேண்டும்.

142 பெற்ற வினைநா நாத்துவத்தாற்
பெரியோர் நாநா விதமாவர்,
பற்று மதனுன் நூற்பொருளின்
மயங்க வேண்டாம் பண்டிதர்கள்,
உற்ற தத்தம் வினைவயத்தா
லவர்க ளெவ்வா றுரைந்தாலும்,
முற்றும் போத மொருபடித்தா
முத்தி நிலைமை சமனுமே,
என வருவனவற்றுல் உணர்க. (141)

[சம்பூர்ண வைராக்கியமும், உபரதியும் அடைந்து, ஞானம் அடையாதிருப்பானுயின் ஒருவன், அவனுக்கு விதேக முக்தி கிடையாது என்றும், ஆனுல், வைராக்கியம் உபரதியை அடைந்தமையின், விரும்பத் தக்க மேல் உலக

பதவி கிடைக்கும் என்றும், ஞானமாத்திரம் அடைந்து, வைராக்கியம் உபரதிகள் இல்லாதிருப்பின் அவனுக்கு நிற்கும் போது முறியும் நெடும்பனையி லிருப்பவனுக்கு, தான் விழுவோம் என்ற எண்ண மில்லாதிருந்தும், அகஸ்மாத்தாக விழுவது போல, தேகாந்தத்தில் விதேக முக்தியினை அடைவன்; தேக பிராரப்தத்தால் உண்டாகாநின்ற துக்க அநுபவம் உண்டாகுதல் நிச்சயம், என்றும் கூறுகின்றார்.]

குறையகலும் வைராக்கிய முபரதியா மிரண்டுங்
 கூடிஞா நங்கூடா தாயின்முத்தி யரிதா,
முறுமினிய மிசையுலக பதங்கிடைக்கு ஞாந
 மொன்றுமடைந் தவையிரண்டு மிலையாயி னிற்ப,
முறியுமர நெடும்பனையோன் விழநினைவின் றியினு
 மூறியவிழல் போலவே தேகாந்த மதனிற்,
பெறுவனுயர் முத்தியினை யுடற்கமைந்த வினையாற்
 பிறந்திடுந்துக் காநுபவ முளதாத றிண்ணம். (142)

(இ—ள்) குறை அகலும்-பூரண மான, வைராக்கியம்-வைராக்கியம், உபரதி - உபரதி, ஆம் -ஆகிய, இரண்டும் - இரண்டினையும், கூடி-(யத்நத்தினால்) அடைந்து, ஞாநம் - (பிரஹ்மாத்ம ஐக்கிய) ஞாநத்தினை, கூடாதாயின் - (ஒருவன்) அடையாதிருப்பானாயின், முத்தி - (அவனுக்கு) மோக்ஷம், அரிது ஆம் - இன்றாம், [வைராக்கியம் உபரதி இரண்டும் உடையவனுக்குப் பிரஹ்ம லோக பதம் கிடைக்கும் என்கின்றார்] உறும் - (புண்ணியத்தினால்) அடையத் தக்க, இனிய - சுக ரூப மாகிய, மிசை உலக - ஊர்த்வ லோக (பிரம்ம லோகம் என்றபடி), பதம் - பத மானது, கிடைக்கும் -அடையப்படும், [ஞாநம் ஒன்றும் அடைந்து,

வைராக்யம் உபரதி இரண்டும் அடையப் பெருதவனுக்கு தேகாந்தத்தில் விதேக கைவல்ய பதத்தை யத்நம இன்றி அடைவன் என்கின்ருர்] ஞாநம் - (பிரஹ்மாத்ம ஐக்கிய) ஞாநம், ஒன்றும் - ஒன்றை மாத்திரம், அடைந்து - சம்பாதித்து, அவை இரண்டும்-அந்த (பூரண வைராக்கிய உபாதிகளாகிய) இரண்டையும், இலை ஆயின் - (ஒருவன்) அடையாதிருப்பாணுயின், நிற்ப முறியும் மரம் நெடும் பணையோன் - (தான்) நிற்குங் காலத்தில் முறிகின்ற மரத்தினது நீண்ட கிளையி லுள்ள புருஷனுக்கு, விழ - (தான் கீழே) விழுவதற்கு, நினைவு இன்றியினும் - இச்சை இல்லாதிருப்பினும், முறிய - (கிளை)யினையுடைய மரம் முறிய, விழல் போல் - (கீழே) விழுவது போல, தேக அந்தமதனில் - (அவன் வர்த்தமாந தூல) தேக நாசத்தில், உயர் முத்தியினை - சிரேஷ்டம் பொருந்திய (விதேக) மோக்ஷத்தினை, பெறுவன் - அடைவன், உடற்கு - சரீரத்திற்கு, அமைந்த - பொருந்திய, வினையால் - (பிராரப்த) கருமத்திஞல், பிறந்திடும் - உண்டாகின்ற, துக்க அநுபவம் - துக்காநுபவம், உளது ஆதல் - (அவனுக்கு) உண்டாவது, திண்ணம் - சித்த மாம். எ—று.

ஏ-அசை. "தேகாந்தமதனில்" என்பதில், அது - பகுதிப் பொருள் விகுதி.- (142)

விருக்ஷாகாச்ச்யுத பாதோ, யத்வதநிச்சந்நர: க்ஷிதௌ பததி 1

தத்வ குணபுருஷக்ஞோ நிச்சிந்தியந்நபி கேவலீ பவதி 83.

விருக்ஷம் வெட்டும் போது, கீழே விழும் தன்மையுடைய பாதம் உடையவன், எப்படி இச்சை யின்றியும்

மனிதன் கீழே விழுகின்றனனே, அது போன்றே, தத்வ குண புருஷ அறிஞன் இச்சை யின்றியும் கேவலன் ஆகின் றனன் என்ப தாம்.

ஆத்ம ஞான முடையோன், தேக பாத காலத்தில் விதேக முக்தியினை அடைவன். வைராக்கியம் உபரதி மட்டும் உடையவன், மரண காலத்தில் உயர்ந்த உலகங் களை அடைந்து, மீண்டும் பிறப்பை அடைவன் என்பது கருத் தாம். (142)

[1 சுபேச்சை, 2. விசாரணை, 3. தநுமானசி, 4. சத்வா பத்தி, 5 அசம்சத்தி, 6. பதார்த்தாபாவனை, 7. துரியகா என்னும் ஏழையும் ஞான சப்த பூமிகை என்றும், சுபேச் சையின் லக்ஷணமும், விசாரணையின் லக்ஷணமும் ஆகிய இரண்டு பூமியின் லக்ஷணமும், கூறுகின்றார்.]

சாற்றரிய சுபேச்சைவிசா ரணைதநுமா நசிசத்
வாபத்தி யசம்சத்தி பதார்த்தாபா வனையே,
மேற்றுரிய காமியெனு மிவற்றினைமூ தறிஞர்
விளங்குசத்த ஞானபூ மிகையென்ப ரவற்றுட்,
டோற்றிடுநான் மூடனு யிருந்தகா ரணமென்
சுருதிகுரு வாலறிவ னெனநினைதல் சுபேச்சை,
மாற்றரிய சுருதிகுரு வாற்சிறிது தோன்றும்
வைராகத் துறுதல்சதா சாரம்விசா ரணையே. (143)

(இ—ள்) சாற்று அரிய-கூறுதற்கு அரிய, சுபேச்சை- சுபேச்சை, விசாரணை - விசாரணை, தநுமானசி - தநு மானசி, சத்வாபத்தி - சத்வாபத்தி, அசம்சத்தி – அசம் சத்தி, பதார்த்தாபாவனை - பதார்த்தாபாவனை, மேல் - பின்

னர், துரியகாமி - துரியகாமி. எனும் - ஆகிய, இவற்றினை- இவைகளை, மூது அறிஞர் - பெரியோர்கள், விளங்கு - விளங்காநின்ற, ஞான சத்த பூமிகை - ஞான சப்த பூமிகை, என்பர் - என்று கூறுவார்கள், [சுபேச்சை என்னும் முதற் பூமியின் லக்ஷணமும், விசாரணை என்னும் இரண்டாம் பூமியின் லக்ஷணமும் கூறுகின்றார்.] அவற்றுள் - அவ் ஏழு பூமியினுள், தோற்றிடும் - விளங்காநின்ற, நான்- அஹம், மூடன் ஆய் - மூட ுய், இருந்த - இருந்த, காரணம் - காரணம், என்-என்னை?, சுருதி குருவால் -(அதனை) வேதத்தினுலும் ஆசாரியராலும், அறிவல - உணர்வேன், என - என்று, நினைதல் - (அந்தக் கரணத்தின்கண்) கருதுதல், சுபஇச்சை - சுபேச்சையாம் (மூதற் சாதந மாகிய நன்மையில் விருப்பம் என்றபடி), மாற்று அரிய - கொள்ளத் தகுந்த, சுருதி குருவால் - சுருதியினுலும் ஆசாரியராலும், தோன்றும் - உண்டாகின்ற, சிறிது வைராகத்து - சிஞ்சித் வைராக்கியத்தினுல், சத் ஆசாரம் உறுதல் - சதாசாரப் பிரவிருத்தியே. விசாரணை - (இரண்டாம் சாதந மாகிய) விசாரணை யாம், எ—று ஏ - ஏ- அசை,

அந்நியமம் சித்த சுத்தி ஏது வாகையால், முன்னமே சித்தித்திருத்தலின், குரு சிசுருஷை பிரக்ஷாளநம் சௌசம் முதலியவாதித் தர்ம பரிபாலநம் சதாசாரம் எனப்படும்.

1. சுபேச்சை, 2. விசாரணை, 3. தநுமாநசி 4. சத்வாபத்தி, 5. அசம்சக்தி, 6. பதார்த்தாபாவனை, 7. துரியகா என்னும் இவற்றை ஞான சப்த பூமிகை என்று கூறுவர் என உணர்க. நான் மூடன் ஆகி யிருந்த காரணம் என்னை? சுருதியினுலும், குருவினுலும், அறிவேன் என ஸ்மரணம்

மசிதன் கீழே விழுகின்றனரே, அது போன்றே, தத்வ குண புருஷ அறிஞன் இச்சை யின்றியும் கேவலன் ஆகின்றனன் என்ப தாம்.

ஆத்ம ஞான முடையோன், தேக பாத காலத்தில் விதேக முக்தியினை அடைவன். வைராக்கியம் உபரதி மட்டும் உடையவன், மரண காலத்தில் உயர்ந்த உலகங்களை அடைந்து, மீண்டும் பிறப்பை அடைவன் என்பது கருத் தாம். (142)

[1 சுபேச்சை, 2. விசாரணை, 3. தநுமானசி, 4. சத்வாபத்தி, 5 அசம்சத்தி, 6. பதார்த்தாபாவனை, 7. துரியகா என்னும் ஏழையும் ஞான சப்த பூமிகை என்றும், சுபேச்சையின் லக்ஷணமும், விசாரணையின் லக்ஷணமும் ஆகிய இரண்டு பூமியின் லக்ஷணமும், கூறுகின்றார்.]

சாற்றரிய சுபேச்சைவிசா ரணைதநுமா நசிசத்
 வாபத்தி யசம்சத்தி பதார்த்தாபா வனையே,
மேற்றுரிய காமியெனு மிவற்றினைமூ தறிஞர்
 விளங்குசத்த ஞானபூ மிகையென்ப ரவற்றுட்,
டோற்றிடுநான் மூடனு யிருந்தகா ரணமென்
 சுருதிகுரு வாலறிவ லெனநினைதல் சுபேச்சை,
மாற்றரிய சுருதிகுரு வாற்சிறிது தோன்றும்
 வைராகத் துறுதல்சதா சாரம்விசா ரணையே. (143)

(இ—ள்) சாற்று அரிய-கூறுதற்கு அரிய, சுபேச்சை-சுபேச்சை, விசாரணை - விசாரணை, தநுமானசி - தநுமானசி, சத்வாபத்தி - சத்வாபத்தி, அசம்சத்தி — அசம்சத்தி, பதார்த்தாபாவனை - பதார்த்தாபாவனை, மேல் - பின்

ணர், துரியகாமி - துரியகாமி. எனும் - ஆகிய, இவற்றினை- இவைகளை, மூது அறிஞர் - பெரியோர்கள், விளங்கு - விளங்காநின்ற, ஞாந சத்த பூமிகை - ஞாந சப்த பூமிகை, என்பர் - என்று கூறுவார்கள், [சுபேச்சை என்னும் முதற் பூமியின் லக்ஷணமும், விசாரணை என்னும் இரண்டாம் பூமியின் லக்ஷணமும் கூறுகின்றார்.] அவற்றுள் - அவ் ஏழு பூமியினுள், தோற்றிடும் - விளங்காநின்ற, நான்- அஹம், மூடன் ஆய் - மூடனாய், இருந்த - இருந்த, காரணம் - காரணம், என்-என்னை?, சுருதி குருவால் -(அதனை) வேதத்தினாலும் ஆசாரியராலும், அறிவல - உணர்வேன், என - என்று, நினைதல் - (அந்தக் கரணத்தின்கண்) கருதுதல், சுபஇச்சை - சுபேச்சையாம் (முதற் சாதந மாகிய நன்மையில் விருப்பம் என்றபடி), மாற்று அரிய – கொள்ளத் தகுந்த, சுருதி குருவால் - சுருதியினாலும் ஆசாரியராலும், தோன்றும் - உண்டாகின்ற, சிறிது வைராகத்து - சிஞ்சித் வைராக்கியத்தினால், சத் ஆசாரம் உறுதல் - சதாசாரப் பிரவிருத்தியே. விசாரணை - (இரண்டாம் சாதநமாகிய) விசாரணை யாம், எ—று ஏ - ஏ- அசை,

அந்நியமம் சித்த சுத்தி ஏது வாகையால், முன்னமே சித்தித்திருத்தலின், குரு சிசுருஷை பிரக்ஷாளநம் சௌசம் முதலியவாதித் தர்ம பரிபாலநம் சதாசாரம் எனப்படும்.

1. சுபேச்சை, 2. விசாரணை, 3. தநுமாநசி 4. சத்வாபத்தி, 5. அசம்சக்தி, 6. பதார்த்தாபாவனை, 7. துரியகா என்னும் இவற்றை ஞாந சப்த பூமிகை என்று கூறுவர் என உணர்க. நான் மூடன் ஆகி யிருந்த காரணம் என்னை? சுருதியினாலும், குருவினாலும், அறிவேன் என ஸ்மரணம்

உண்டாவது, சுபேச்சை என்றும் முதற் பூமி என்றும், கொள்ளத் தகுந்த சுருதியினுலும், ஆசாரியராலும், உண்டாகின்ற சிறிது வைராக்கியத்தினுல், சதாசாரப் பிரவிருத்தி உறுதல் விசாரணை என்னும் இரண்டாம் பூமி என்றும், உணர்க.

1. சுபஇச்சை - நன்மையில் விருப்பம்.
2. விசாரணை - விசாரித்தல்.
3. தநுமாநசி - மாநசி, மநது, தநு-சுருங்குதல்.
4. சத்வாபத்தி - சத்வ, சத்தை, ஆபத்தி-அடைதல்.
5. அசம்சத்தி - சம்சத்தி - உவகத் தோற்றம். அஃதின்றியிருத்தல்.
6. பதார்த்தாபாவனை - பதார்த்தம் - வாசனை, அபாவனை, ஆநந்தில் லயித்தல்.
7. துரியகா - நான்காவது அவஸ்தை, உட்புறம் பதார்த்த அறிவு இன்றி சூந்ய கதி ஆகும். இவை இவற்றின் பெயர் பொருளாகும் என உணர்க. (143)

[சுபேச்சை விசாரணையின் சாமர்த்தியத்தினுல் விஷய ஆற்றல் நீங்குவது, தநுமாநசி எனும் மூன்ரும் பூமி என்றும், மூன்று பூமியின் அப்யாச பலத்தால் சாக்கிரப் பிரபஞ்சத்தினை சொப்பநம் போலக் கருதியிருப்பது சத்துவாபத்தி என்னும் நாலாம் பூமி என்றும், சுழுப்தன் போன்று விரிந்த உலகம் தோன்ருது, அறிவு மாத்திர மாக இருத்தல், அசம்சத்தி என்னும் ஐந்தாம் பூமி என்றும், காட சுழுப்தன் போல வாசனை நீங்கி, ஆத்மா ஆநந்தாவிற்பாவமாக இருக்குதல், பதார்த்தாபாவனை என்னும் ஆரும் பூமி என்னும், இக் கவியில் நாலு பூமியைக் கூறுகின்ருர்.]

மருவலுறு சுபேச்சை விசாரணைவலியால் விடய
வலியறுத நுன்றநுமா நசியவற்றின் பயில்வால்,
விரவுநந வாயவுல கினைக்கநவென் றெண்ணி
மெய்த்தவாந் மாவுண்மை கருதல்சத்வா பத்தி,
பரவலுறு முலகுதோன் றுது சுழுத் தியன்போற்
பகரறிவு மாத்திரையாய் நிற்றலசம் சத்தி,
யொருவிவா சனையனைத்து மிகுதுயிலோன் போல
வுயிராநந் தத்தொடுங்கல் பதார்த்தாபா வனையாம். (144)

(இ—ள்) மருவல் உறு - (வைராக்கியத்திற்கு அநுசாரிகளாகப்) பொருந்தாநின்ற, சுபேச்சை விசாரணை வலியால் - சுபேச்சை விசாரணை என்னும் (இரண்டு பூமியின் அப்பியாச) பலத்தால், விடய வலி - விஷய ஆசத்தி, அறுதல் - நீங்குவது, தநுமாநசி - (மூன்றும் சாதந மாகிய) தநுமாநசியாம், அவற்றின் - (சுபேச்சை விசாரணை தநுமாநசி என்னும்) மூன்று பூமியின், பயில்வால் - அப்பியாச (பல)த்தால், விரவு - (பந்த ஏது வாக வந்து) பொருந்துகின்ற, நநவு ஆய - சாக்கிர மாகிய, உலகினை - பிரபஞ்சத்தினை, கநவு - சொப்பநம், என்று - போல, எண்ணி - கருதி, மெய்த்த - சத் ரூப, ஆந்மா - ஆதமாவினது, உண்மை - சத்துத் தன்மையை, கருதல் - சிந்திப்பதே, சத்வ ஆபத்தி - (நான் காம் சாதநமும், பிரம வித்தாதலும் ஆகிய) சத்வாபத்தி யாம், பரவல் உறும் - விரிவாகப் பொருந்தியிருக்கின்ற, உலகு - பிரபஞ்சத்தின், தோன்றுது - பாநம் இன்றி, சுழுத்தியன் போல் - சுழுத்தியிலிருக்கும் புருஷனைப் போல, பகர் - சொல்லாநின்ற, அறிவு மாத்திரை ஆய் - சிந்மாத்திர மாக, நிற்றல் - இருப்

பதுவே, அசம்சத்தி - (பிரமவித் வானுக் குரிய) அசம் சத்தி யாம், வாசனை அனைத்தும் - சகல வாசனைகளும், ஒருவி - ஒழிந்து, மிகு துயிலோன் போல - காட சுழுத் தனைப் போல், உயிர் ஆநந்தத்து - ஆத்மாநந்தத்தில், ஒடுங் கல் - லய மாவதே, பதார்த்த அபாவனை ஆம்-(பிரஹ்மவித் வரியானுக் குரிய) பதார்த்தாபாவனை ஆகும். எ—று.

தான் - அசை.

தநு சுருங்குதல், மாநசி, மந சம்பந்தம், சுபேச்சை விசாரணை என்னும் இரண்டு பூமியின் அப்யாச பலத்தி னால், விஷய ஆசக்தி நீங்குதல், மூன்ரு வது பூமி யாகிய தநுமாநசி என்றும், சுபேச்சை விசாரணை தநுமாநசி என் னும் மூன்று பூமியின் அப்யாச பலத்தால், வியாவகாரிக சாக்கிரப் பிரபஞ்சத்தினை ஸ்வப்நம் போலக் கருதி சத் ரூப ஆத்மாவின் சத்துத் தன்மையைச் சிந்திப்பதே நான்காம் சாதநமும், பிரஹ்மவித்து ஆதலும், ஆகிய, சத்துவாபத்தி என்னும் நான் காம் பூமி என்றும், விரி வாகப் பொருந்தி யிருக்கின்ற பிரபஞ்சத்தின் பாநம் இன்றி, சுழுத்தியி லிருக் கும் புருஷனைப் போல், அறிவு மாத்திரையாய் இருப்பது, பிரஹ்மவித் வரனுக் குரிய அசம் சத்தி என்னும் ஐந் தாம் பூமிகை என்றும், சகல வாசனையும், நீங்கி, காட சுழுப் தனைப்போல ஆத்மாநந்தத்தில் லயப்படுவதே பதார்த்த அபாவனை என்னும் பிரஹ்ம வித் வரிஷ்டனுக் குரிய ஆரும் பூமிகை என்றும் உணர்க. (144)

[சத் அசத் என்று கூற முடியாமலும், அகங்காரம் அகங்காரம் இன்மையினைப் பொருந்தாமலும், இருக்கின்ற சித் ரூபம் ஆகிய அத்வைத பதவியில், பார்க்கப்பட்ட

வெறும் குடத்தினைப் போல, அந்தர் பகிர் சூந்யம் ஆகிய கதி பிரஹ்ம வித் வரிஷ்டனுக் குரிய துரியகாமியாகிய ஏழாம் பூமிகை என்றும், உபரதிக்கு அநுசாரிகளாக விளங்கும் பாஹ்ய திருசியாநுவித்த சவிகற்ப சமாதி, பாகிய சப்தாநுவித்த சவிகற்ப சமாதி, பாஹ்ய நிருவிகற்ப சமாதி என்றும், ஆந்தர திரிசியாநுவித்த சவிகற்ப சமாதி, ஆந்தர சப்தாநுவித்த சவிகற்ப சமாதி, ஆந்தர நிருவிகற்ப சமாதி என்றும் ஆறு சமாதிகள் உள என்றும், கூறுகின்றார்,]

உண்டிலையென் னுமலகங் கிருதிநிர கங்கிருதி
யுறுமலறி வுருவாய வத்துவித பதத்திற்,
கண்டதொரு வறுங்குடம்போ லுட்புறஞ்சூ நியமாங்
கதிதுரிய காமியா முபரதியை யடைந்து,
கொண்டிலக வுறுதிரிசி யாநுவித் தம்பின்
கூறலுறு சத்தாநு வித்தநிரு விகற்ப,
மெண்டருசட் சமாதிகளாம் புறமொடக மென்னு
மிருபேத மடைந்தவற்றை முறையினிவண்
மொழிவாம். (145)

(இ—ள்) உண்டு இலை - சத் அசத், என்னுமல் - என்று கூறமுடியாமலும், அகம் கிருதி - அகங்காரத்தினையும், நிரகம் கிருதி - அகங்காரம் இன்மையினையும், உறுமல் - பொருந்தாமலு மிருக்கின்ற, அறி வுருவு ஆய - சித்ரூபம் ஆகிய, அத்துவித பதத்தில் - அத்வைத பதவியில், கண்டது - பார்க்கப்பட்ட, ஒரு - ஒரு, வறும் - வெறும், குடம் போல - குடத்தைப் போல, உள புறம் - அந்தர் பஹிர், சூநியம் ஆம் - சூநியம் ஆகிய, கதி - அடைவே, துரிய காமி ஆம் - (பிரஹ்மவித் வரிஷ்டனுக் குரிய) துரிய காமியாம், [உபரதிக்கு அநுசாரிகளான, பாஹ்ய திரிசி

யாநுவித்த சவிகற்ப சமாதி, பாகிய சப்தாநுவித்த சவிகற்ப சமாதி, பாஹ்ய நிருவிகற்ப சமாதி, ஆந்தர திரிசியாநு வித்த சவிகற்ப சமாதி ஆநந்தர சப்தாநுவித்த சவிகற்ப சமாதி, ஆநந்தர நிருவிகற்ப சமாதி என அறு வகைச் சமாதி கூறுகின்றார்.] உபரதியை அடைந்து கொண்டு - உபரதிக்கு அநுசாரிக ளாக, இலகல் உறு - விளங்காநின்ற, திரிசிய அநுவித்தம் - திரிசியாநுவித்த (சவிகற்ப)ம், பின் - பின்னர், கூறல் உறு - பிரதிபாதியாநின்ற, சப்த அநுவித் தம் - சப்தாநுவித்த (சவிகற்ப)ம், நிருவிகற்பம் - நிர்வி கல்பம், எண் தரு - (எனக்) கருதும்படி யாக, புறம் அஹம் - பாஹ்ய ஆந்தரம், என்னும் - ஆகிய, இரு பேதம்- இரு வித பேதத்தினை, அடைந்து - பொருந்தி, சட் சமாதி கள் ஆம் - சட் சமாதிக ளாம், அவற்றை - அவ் அறு வகைச் சமாதிகளையும், முறையின் - கிரம மாக, இவண் - இவ் விடத்து, மொழி வாம் - (யாம்) கூறுவாம். எ—று.

ஒடு - அசை.

'அஹங்கிருதி' என்றது, சாக்கிர சொப்பனங்களை. நிரகங்கிருதி' என்றது, சுழுத்தியை என உணர்க.

சத் அசத் என்று கூற முடியாமலும். அகங்காரம் அகங்காரம் இன்மையினைப் பொருந்தாமலும், இருக்கின்ற சித் ரூப மான அத்வைத பதவியில், பார்க்கப்பட்ட வெறும் குடம் போல, அந்தர் பகிர் சூநியம் ஆகிய கதி, பிரஹ்ம வித் வரிஷ்டனுக் குரிய துரியகா என்னும் ஏழாம் பூமிகை என்று உணர்க.

உபரதியினை அடைந்து கொண்டு, விளங்காநின்ற அதற் கநுசாரிக ளான பாகிய திருசியாநுவித்த சவிகற்ப

சமாதி என்றும், பாகிய சப்தாநுவித்த சவிகற்ப சமாதி என்றும், பாகிய நிருவிகற்ப சமாதி என்றும், ஆந்தர திரிசியாநுவித்த சவிகற்ப சமாதி என்றும், ஆந்தர சப்தாநுவித்த சவிகற்ப சமாதி என்றும், ஆந்தர நிருவிகற்ப சமாதி என்றும், சட் சமாதிகளை உணர்க. (145)

[கடாதி விஷயத்தில், ஒன்றை லக்ஷியம் ஆக வைத்துக் கொண்டு, நாம ருபம் ஆகிய மாயையின் தன்மையினை விடுத்து, அஸ்தி பாதி பிரியம் ஆகிய சச்சிதாநந்தம் ஆம் பிரஹ்மத்தின் தன்மையினை, அநுசந்தாநம் செய்தல், பாகிய திரிசிய அநுவித்த சவிகற்ப சமாதி என்று கூறுவர் எனறும், பாகிய சப்தாநுவித்த சவிகற்ப சமாதியை கூறுவாம் என்றும். கூறுகின்றார்.]

கடாதிவிட யத்தினிலொன் றினைக்குறித்து நாம
　கற்பனையோ டுருவமெனு மாயையதன் றிறத்தைத்,
தடாதுவிடுத் தத்திபா திப்பிரிய மென்னுஞ்
　சச்சிதா நந்தமாம் பிரமத்தின் றிறத்தை,
விடாதநுசந் தாநஞ்செய் திடுதலே புறத்து
　மெய்த்திரிசி யாநுவித் தப்பெயர்கொள் கின்ற,
கெடாதவொரு சவிகற்ப சமாதியென லாகுங்
　கிளர்ந்தபுறச் சப்தாநு வித்தமது கிளப்பில். (146)

(இ—ள்) கட ஆதி - குடம் முதலிய, விடயத்தினில் - விஷயங்களுள், ஒன்றினை - ஒரு விஷயத்தினை, குறித்து-லக்ஷிய மாக (வைத்துக் கொண்டு), நாம கற்பனையோடு - (அதனிடத்து) கற்பனையாகிய நாமமும், உருவம் - ரூபமும், எனும் - ஆகிய, மாயையதன் - மாயையினது, திறத்தை - அம்சங்களை, தடாது - பிரதிபந்தக மின்றி,

விடுத்து - பரித்தியாகம் செய்து, அத்தி பாதிப் பிரியம் - அஸ்தி பாதி பிரிய (ரூப)ம், என்னும் - எனக் கூறப்பட்ட, சச்சிதாநந்தம் ஆம் - சச்சிதாநந்த மாகிய, பிரமத்தின் - பிரஹ்மத்தினது, திறத்தை - அம்சங்களை, விடாது - கைக் கொண்டு, அநுசந்தாநம் செய்திருதலே - அநுசந்தாநம் செய்வதே, மெய் - உண்மை யான, புறத்து - பாஹ்ய, திரிசிய அநுவித்தம் - திரிசியாநுவித்தம் (என்னும்), பெயர் கொள்கின்ற - நாமத்தினை உடைய, கெடாதது - அழிவு இன்றிய, ஒரு - ஒப் பற்ற, சவிகற்ப சமாதி - சவிகற்ப சமாதி, எனல் ஆகும் - என்று கூறப்படும், கிளர்ந்த - கூறிய, புற - பாஹ்ய, சப்த அநுவித்தமது - சப்தாநுவித்த (சவிகற்ப) சமாதியை, கிளப்பில் - சொல்லுமிடத்து. எ—று.

“மாயையதன்”, “சாதாநுவித்தமது” என்பவற்றில், அது - பகுதிப் பொருள் விகுதி.

(இச் செய்யுள் குளகம்)

கடாதி விஷயத்தில், ஒன்றை லக்ஷியம் ஆக வைத்துக் கொண்டு, மாயையின் தன்மை யான நாம ரூபங்களை விட்டு, அஸ்தி பாதி பிரிய ரூப சச்சிதாநந்தம் ஆகிய பிரஹ் மத்தின் தன்மையினை அநுசந்தாநஞ் செய்தல், பாஹ்ய திரிசிய அநுவித்த சவிகற்ப சமாதி என்று ஆம். பாஹ்ய சப்தாநு வித்த சவிகற்ப சமாதியைச் சொல்லுமிடத்து எனவும், உணர்க. (146)

[சச்சிதாநந்த ஸ்வரூபமே பிரஹ்மம் ஆம் என்று கூறும் சப்தத்துடன் தியானிப்பது, பாஹ்ய சப்த அநுவித்த சவிகற்ப சமாதி ஆம் என்றும், பாஹ்ய திருசிய அநு

சவிகற்ப சமாதி, பாஹ்ய சப்த அநுவித்த சவிகற்ப சமாதி களின் அப்யாச பலத்தினால், பிரஹ்மாநந்த ஸ்திதியில் மநம் போய் மக்கிநம் ஆய், நிஸ்தரங்க சமுத்திரம் போல, நிச்சல ரூபம் ஆக இருப்பது, பாஹ்ய நிருவிகற்ப சமாதி யாம் என்றும், மநோ சம்பந்த காமாதிகளுக்குத் தான் சாக்ஷி என்று அநுசந்தாநஞ் செய்வது, ஆந்தர திரிசிய அநுவித்த சவிகற்ப சமாதி என்றும், கூறுகின்றார்.]

சச்சிதா நந்தவுரு வாகுவதே பிரமந்
 தானெனவே தியானித்த லதுவாகு மென்க,
விச்சமா திகள்பயின்ற வலியினாற் றோன்று
 மிரும்பிரமா நந்தநிலை தனின்மநஞ் சென் றொடுங்கி,
நிச்சலமா யலையில்கடல் போலிருத்தல் புறத்து
 நிருவிகற்ப சமாதியா மநோக்தகா மாதிக்,
கச்சமறு கரிதானென் றெண்ணுதலுட் டிரிசி
 யாநுவித் தப்பெயர்கொள் சவிகற்ப சமாதி. (147)

(இ—ள்) சச்சிதாநந்த உருவு ஆகுவதே பிரமம் - சச்சிதாநந்த சொரூபமே பிரமம் ஆம், என - என்று (கூறும் சப்தத்துடன்), தியானித்தல் - தியானிப்பதே, அது ஆகும் - பாஹிய சப்தாநுவித்த சவிகற்ப சமாதி யாம், என்க - என அறிக, இச் சமாதிகள் - பாஹ்ய திருசியாநுவித்த சவிகற்ப சமாதி, பாஹிய சப்தாநுவித்த சவிகற்ப சமாதிக ளாகிய) இரு சமாதிகளின், பயின்ற - அப்யாச, வலியினால் - பலத்தினால், தோன்றும் - உண்டாகின்ற, இரும் - பெரிய, பிரமாநந்த நிலைதனில் - பிரமாநந்த ஸ்திதி யில், மநம் - மநம், சென்று ஒடுங்கி - போய் மக்கிந மாய், அலை இல் கடல் - நிஸ்தரங்க சமுத்திரம், போல் - போல,

நிச்சலம் ஆய் - நிச்சல ரூபம் ஆக, இருத்தல் - இருப்பதே, புறத்து - பாஹ்ய, நிருவிகற் சமாதி ஆம் - நிர்விகல்ப சமாதி ஆம், மனோகத - மநத்தின்கண் உள்ள, காம ஆதிக்கு - காமம் முதலிய (திரிசிய) பதார்த்தங்களுக்கு, தான் - ஸ்வயம், அச்சம் அறு - நிர்ப்பய மான, கரி-சாக்ஷி, என்று - என, எண்ணுதல் - அநுசந்தாநம் செய்வதே, உள் - ஆந்தர, திரிசிய அநுவித்தப் பெயர் கொள் - திரிசியாநுவித்த நாமமுடைய, சவிகற்ப சமாதி - சவிகற்ப சமாதி யாம். எ—று. தான் - ஏ - அசை-

"பிரஹ்மாநந்த நிலைதனில்" என்பதில், தன் அசை.

சச்சிதாநந்த ஸ்வரூபமே பிரஹ்மம் ஆம் என்று கூறும் சப்தத்துடன் தியாநிப்பது, பாகிய சப்த அநுவித்த சவிகற்ப சமாதி ஆம்.

பாஹ்ய திரிசிய அநுவித்த சவிகற்ப சமாதி, பாஹ்ய சப்த அநுவித்த சவிகற்ப சமாதிகளின் அப்யாச பலத்தினுல் உண்டாகின்ற பிரஹ்மாநந்த ஸ்திதியில், மநம் போய் மக்நம் ஆய், நிஸ்தத்ரங்க சமுத்திரம் போல, நிச்சலம் ஆக இருப்பதுவே, பாஹ்ய நிர்விகற்ப சமாதி ஆம். மநத்தில் உள்ள காமம் முதலிய திரிசிய பதார்த்தங்கட்கு, ஸ்வயம் சாக்ஷி என அநுசந்தாநம் செய்வது- ஆந்தர திரிசிய அநுவித்த சவிகற்ப சமாதி ஆம்- என உணர்க. (147)

[அசங்க சச்சிதாநந்த ஸ்வயம்பிரகாச ஸ்வரூபமே தான் என்று கூறும் சப்தத்துடன் சிந்தனை செய்வதே, ஆந்தர சப்த அநுவித்த சவிகற்ப சமாதி யாம் எனவும், ஆந்தர திரிசிய அநுவித்த சவிகற்ப சமாதி ஆநந்தர சப்த

அநுவித்த சவிகற்ப சமாதி, இரண்டையும் விட்டு, மநம் நிவாத தல தீபம் போல, சிந்தனை இன்றி இருப்பது, ஆந் தர நிருவிகற்ப சமாதி என்றும், இவ் ஆறு சமாதிகளில், ஒன்றாயினும் பொருந்தியிருக்கிற யோகியின் மநம் சென்ற இடம் எல்லாம் சமாதி யாம் என்றும், கூறுகின்றார்.]

சங்கமறு சச்சிதா நந்தவொளி யுருவந்
தானெனச்சிந் தித்திடலுட் சப்தாநு வித்தம்,
பொங்குறுதன் னநுபூதி ரசந்தோன் றுமதனாற்
புகன்றதிரி சியஞ்சப்த மெனுமிரண்டு மகன்றே,
யிங்கசைவி றீபமெனப் பந்தமற விருத்த
லிலங்குறுமுண் ணிருவிகற்ப சமாதியிவ்வா றனுஞ்,
தங்கலுற வொழுகுமியோ கிக்குமந மெங்குச்
சரிக்குமாண் டாண்டெலாஞ்ச மாதியென லாகும்.
(148)




(இ—ள்) சங்கம் அறு - அசங்க, சச்சிதாநந்த ஒளி உருவம் - சச்சிதாநந்த ஸ்வப்பிரகாச சொருபமே, தான் - தான், என - என்று (கூறும் சப்தத்துடன்), சிந்தித்திடல்- சிந்தனை செய்வதே, உள் - ஆந்தர, சப்த அநுவித்தம் - சப்தாநுவித்த (சவிகற்ப) சமாதி யாம், பொங்கு உறு - மிகுந்த, தன் அநுபூதி ரசம் - சுவாநுபூதி ரசம், தோன்று மதனால் - உண்டாகின்றதனால், புகன்ற - (முன்னர்க்) கூறிய, திரிசியம் - (ஆந்தர) திருசிய அநுவித்த (சவிகற்ப) சமாதி, சப்தம் - (ஆந்தர) சப்த அநுவித்த (சவிகற்ப) சமாதி, எனும் - ஆகிய, இரண்டும் - இரண்டினையும், அகன்று - விட்டு, இங்கு - இவ்விடத்து அசைவு இல் தீபம் - நீவாத தல தீபம், என - போல, பந்தம் அற - (மநம்) சிந்தனை இன்றி,

இருத்தல் - (தன் னிலையில்) இருப்பதே. இலங்கு உறும் - விளங்காநின்ற, உள் - ஆந்தர, நிருவிகற்ப சமாதி - நிருவிகல்ப சமாதி யாம், [ஆறு சமாதியில், ஒரு சமாதி யாவது, தன் னிடத்துப் பொருந்தியிருக்கும்படி அப்யாசித்திருக்கின்ற யோகியினது மநம் சென்ற இடம் எல்லாம் சமாதி யாம் என்று கூறுகின்றார்.] இவ் ஆறுனும் - இந்த ஆறு சமாதிகளுள் ஒன்றாயினும், தங்கல் உற - (தன்னிடத்துப்) பொருந்தி யிருக்கும்படி யாக. ஒழுகும் - அப்பியசித் திருக்கின்ற, யோகிக்கு - யோகியினது, மநம் - மந மானது, எங்கு - (எவ்) எவ் விடத்து, சரிக்கும்- சஞ்சரிக்கின்றதோ, ஆண்டு ஆண்டு - அவ் வவ் விடத்தில், எலாம் - யாவும், சமாதி - சமாதி, எனல் ஆகும் - என்று சொல்லப்படும். எ—று. ஏ - அசை.

"தோன்றுமதனால்', என்பதில், அது பகுதிப் பொருள் விகுதி. "இவ் வாறனும்" என்பதில், ஆன் சாரியை.

அசங்க சச்சிதாநந்த ஸ்வரூப மே தான் என்று கூறும் சப்தத்துடன் சிந்தனை செய்வதே, ஆந்தர சப்த அநுவித்த சவிகற்ப சமாதி ஆம். ஆந்தர திரிசிய அநுவித்த சவிகற்ப சமாதி, ஆந்தர சப்த அநுவித்த சவிகற்ப சமாதி என்னும் இரண்டினையும் விட்டு, மிகுந்த சுவாநுபூதி ரசம் உண்டாகின்றபடியினால், நிவாத ஸ்தல தீபம் போல, மநம் சிந்தனை இன்றித், தன் னிலையில் இருப்பது, ஆந்தர நிர்விகற்ப சமாதி ஆம்.

இவ் ஆறு சமாதியில், ஒரு சமாதியாயினும் தங்கும்படி அப்யாசித்திருக்கிற யோகியின் மநம் சஞ்சரிக்கும்

இடம் எல்லாம், சமாதி என்று சொல்லப்படும் என உணர்க- ஆறு சமாதியும், ஒருவருக்குத் தானே உண்டாக வேண்டும் என்பாரும் உளர். (148)

[ஞானத்தின் பிரயோசநம், துக்க அபாவம், சர்வ காம ஆப்தி, கிருத கிருத்தியம், பிராப்தப் பிராப்பியம் என நான்கு ஆம் என்றும், துக்க அபாவம், இக லோக துக்க அபாவம், பர லோக துக்க அபாவம் என இரண்டு ஆம் என்றும், தூல சரீரத்தில், குரூபித் தன்மை, துர்க்கந்தம், வாத பித்த சிலேஷ்ம முதலான வியாதிகளும், சூக்ஷ்ம சரீரத்தில், காமாதிகளும், காரண சரீரத்தில், ஆதி வியாதிகட்கு வித்து ஆகிய வாசனையும், இக லோக துக்கம் ஆம் என்றும் கூறுகின்றார்.]

தக்கமா ஞானபல நான்குதுக்கா பாவஞ்
சர்வகா மாப்தியொடு கிருதகிருத் தியமே,
தொக்கபிராப் தப்பிராப் பியங்களென வவற்றுட்
சொல்லியதுக் காபாவ மிகபரத்தா விரண்டாம்,
பொய்க்குமோர் தூலவுடம் பொழிவெழிறீ நாற்றம்
புகுபிணிகண் முதலனவுஞ் சூக்குமதே கத்து,
மிக்ககா மாதியுங்கா ரணத்தினிலவ் வாதி
வியாதிகட்கு வித்தாம்வா சனையுமிகத் திடும்பை. (149)

(இ—ள்) தக்க - தகுதி யான, மா- (ஆத்மாநாத்மாக்களின் தாதாத்மியம் விடுபடுதல்) பெருமை பொருந்திய, ஞான பலம் - (பிரம்ம) ஞானத்தின் பலம், துக்க அபாவம் - துக்காபாவமும், சர்வ காம ஆப்தி - சர்வகாமாப்தியும், கிருத கிருத்தியம் - கிருதகிருத்தியத் தன்மையும், தொக்க - நெருங்கி வாராநின்ற, பிராப்தப் பிராப்பியங்கள் - பிராப்தப்

பிராப்பியத் தன்மையும், என - என்று, நான்கு - நான்காம், அவற்றுள் - அந்த ஞாந பல சதுஷ்டயங்களுள் சொல்லிய - கூறிய. துக்க அபாவம் - துக்கபாவ மானது, இக பரத்தால் - இக லோக, பர லோக பேதத்தினுல், இரண்டு ஆம் - இரண்டு பிரகார மாம், [இரண்டுள் இக லோக துக்காபாவப் பிரதியோகி யாகிய இக லோக துக்கத்தினை, தூல சூட்சும காரண சரீர வாயிலாக அறிவிக்கின்றார்] பொய்க்கும் — (அவற்றுள், இஹ லோக துக்காபாவப் பிரதியோகி யாகிய இஹ லோக துக்கம்) நாசம் உறுகின்ற, ஓர் - ஓர், தூல உடம்பு - தூல சரீரத்தின்கண், எழில் ஒழிவு - அழ கின்மையும் (குரூபித் தன்மை என்றபடி), தீ நாற்றம் - துர்க் கந்தமும், புகு - (கர்மாதீந மாக வந்து) புகுகின்ற, பிணிகள் - (வாத பித்த சிலேஷ்ம முதலான) வியாதிகளும், முதலனவும் - (ஆகிய இவை) முதலியனவும், சூக்கும தேகத்து- சூக்ஷ்ம சரீரத்தில், மிக்க - மிகுதி யாக (விளங்காநின்ற), காம ஆதியும், காமக் குரோதாதிகளும், காரணத்தினில்-காரண சரீர மாகிய (அவித்தையில்), அவ் ஆதி வியாதிகட்கு - (அந்தச் சூக்ஷம சரீர) ஆதி (தூல சரீர) வியாதிகளுக்கு, வித்து ஆம் - பீஜ (காரண) ரூப மாகிய, வாசனையும் - சமஸ்காரமும், இகத்து - (ஆகிய இம் மூன்று தாபமும்) இக லோகத்தின்கண் ணுள்ள, இடும்பை-துக்க மாம். எ—று.

ஏ - ஒடு -அசை.

பிரஹ்ம ஞாநத்தின் பலம் - துக்க அபாவமும், சர்வ காம ஆப்தியும், கிருத கிருத்தியத் தன்மையும், பிராப்தப் பிராப்பியமும், என நான்கு ஆம்.

துக்க அபாவம் - இக லோக துக்க அபாவம் - பர லோக துக்க அபாவம் என இரண்டு பிரகாரம் ஆம்.

இக லோக துக்கம்- தூல சரீரத்தில், குருபித் தன்மை, துர்க் கந்தம், வாத பித்த சிலேஷ்ம முதல் ஆன வியாதி களும்.

சூக்ஷ்ம சரீரத்தில் - காமக் குரோதாதிகளும்.

காரண சரீரத்தில் - ஆதி வியாதிகட்கு பீஜ மாகிய வாசனைகளும் (ஆகிய முத் தாபமும்) இக லோக துக்கம் ஆம் என உணர்க.

பஞ்ச தசி 14 வித்தியாநந்தம்.

2 இடர்கெடல் காம வடைவகங் கிருத,
வின்கிருத் தியனடை வடைந்தோ,
ரெடுவினை நான்கு விதமதா யுரைக்கு
முறுந்துய ரிகபர மெனவே,
படுமிரு வகையா யைகிக நூக்கம்
பகர்வுறும் பருவன மொழியே,
திடனிலீ துளனென் றரிதரிற் றனேயே,
திண்ணதை விழைந்தெத னசைக்காய்.

3 போத்திருப் பொருட்டுப் போக்கியம் விழைந்து,
புற்கலந் தபிப்பன்று பழுமோ,
காத்திர மூன்றிற் றிதிபெறுந் தனக்கோ
காய்ச்சலில் விடமந்தா துறவாந்,
தீத்திர ரேயைக லேவா கத்தே
திதசுரங் காமமே முதல,
காத்திர நடுக்கா மிரண்டிரெண் விரையோ,
காரண மெனக்கழ றுவரால்.

என வருவனவற்றுல் அறிக. (149)

[மித்தை யாகிய மாயா காரிய உடம்பு முதலியவற்றின் விலக்ஷணம் ஆகிய பிரத்தியக் ஆத்மாவே, பரம ஆத்மா என்னும் ஞானத்தின் பின்னர், பரமார்த்தம் ஆக, ஒரு போக்கியமும், போக்தாக்களும், இல்லாதபடியினால், பிரஹ்ம வித்துவிற்கு, தூல சூக்ஷ்ம காரண சரீரங்களினால், உண்டாம் தாபத்திரயங்களும் இல்லாது இருப்பதே, இக லோக துக்க அபாவம் எனவும், பர லோக துக்கம் அபாவப் பிரதியோகி யாகிய பர லோக துக்கம், புண்ணியம் எப்போது வரும், பாவம் எப்போது நீங்கும் என்று மநத்தில் பொருந்தி யிருக்கும் சிந்தனை, பர லோக துக்கம் என்றும், கூறுகின்றார்.]

மித்தையெனு மாயாகா ரியவுடம்பா திகளின்
வேறாய துரியஞா நத்தின்மே லாக,
வைத்தவொரு போக்கியபோத் திருக்களிலா மையினால்
வரஞானிக் கவ்விடும்பை மூன்றுமிலா திருத்தல்,
பொய்த்தவிக லோகதுக்கா பாவமென லாகும்
புண்ணியம்வந் தென்றுபோம் பாவமென நின்ற,
சித்தமுறு சிந்தனையே பரலோக துக்கந்
தெரியினெனப் புகன்றிடுவர் திருக்கறுநல் லறிஞர். (150)

(இ—ள்) மித்தை - மித்தை, எனும் - ஆகிய, மாயா காரிய - உடம்பு ஆதிகளின் மாயா காரிய சரீராதிகளினின்றும், வேறு ஆய - பிந்நம் ஆன, துரிய ஞானத்தின் மேல் - பிரத்தியகாத்மாவே (பரமாத்மா என்னும்) ஞானத்தின் பின்னர், ஆக - (பரமார்த்தம்) ஆக, வைத்த - உள்ள, ஒரு - ஒரு, போக்கிய போத்திருக்கள் - போக்கியமும், போக்தாக்களும், இலாமையினால் - இல்

லாதபடியால், வர - சிரேஷ்டம் (பொருந்திய) ஞானிக்கு - பிரம்ம வித்துக்கு, அவ் இடும்பை மூன்றும்-தூல சூக்ஷ்ம காரண சரீரங்களினு லுண்டாம், தாபத் திரயங்களும். இலாது இருத்தல் - (சத்திய மாக) இல்லாதிருப்பதே, பொய்த்த - நாசத்தை அடையாநின்ற, இக லோக துக்க அபாவம் - இக லோக துக்காபாவ மாம், எனல் ஆகும் - என்று கூறப்படும், [பர லோக துக்காபாவப் பிரதியோகி யாகிய பர லோக துக்கத்தினைக் கூறுகின்றார்,] புண்ணியம் வந்து - (பர லோக துக்காபாவப் பிரதியோகி யாகிய பர லோக துக்கம்) புண்ணியம் (எங் ஙனம்) வரும், பாவம் என்று போம் - பாவம் எவ் வாறு நீங்கும், என - என்று, சித்தம் உறு நின்ற - சித்தத்தின்கண் பொருந்தியிருக்கின்ற, சிந்தனையே - சிந்தையே, பர லோக துக்கம் - பர லோக துக்க மாம், என - என்று, திருக்கு அறும் - குற்ற (மயக்க)ம் நீங்கி யிருக்கின்ற, நல் அறிஞர் - பிரம்ம ஞானிகள், தெரியின் - (தமது) அறிவினுல், புகன்றிடுவர் - கூறுநிற்பர்.

எ—று.

மித்தை யாகிய மாயா காரிய சரீராதிகளின்றும் பிந்நம் ஆன பிரத்தியக்காத்மாவே பரம ஆத்மா என்னும் ஞானம் உண்டான பின்னர், பரமார்த்த மாக உள்ள போக்தாக்களும், போக்கியமும் இல்லாதபடியினுல், பிரஹ்ம வித்துக்கு, ஸ்தூல சூக்ஷ்ம காரண சரீரத் திரயங்களினுல், உண்டாம் தாபத் திரயங்களும், சத்திய மாக இல்லாதிருப்பதுவே, இக லோக துக்க அபாவம் ஆம் எனவும்.

புண்ணியம் எங் ஙனம் வரும், பாவம் எங் ஙனம் போம், என்று சித்தத்தில் பொருந்தியிருக்கிற சிந்தனையே, பர லோக துக்கம் என அறிவுடையோர் கூறுவர் எனவும் உணர்க.

பஞ்ச தசி 7 திருப்தி தீபம்.

119 மேவு தூலமி லிங்க மூலமு
மென்று மெய்திரி விதமதா,
மோவு ருதவ ணவணி யைந்து று
முசித மாகியசு ரமுமே.

120 வாத பித்தசி லேட்டு மத்துடல்,
வருவி யாதிகள் கோடியாங்,
தீது நாற்றமி லக்க ணக்குறை
சேரு மவ்வகை யென்பவே,
காத லேசெயிர் சாந்தி தாந்திகள்
காணி லிங்கவு டற்புகும்
மாதி ரண்டுமொ ழுங்கு பேரிழ
வால்வ ருத்தும தாற்சுரம்.

121 அறிவு தன்னையு மந்நி யத்தையு
மறிகி லாமையவி த்தைமீ,
திறுத லொத்திடல் வருவ தாமிடர்,
விதையு மிந்திர ஞேதிஞன்.

பஞ்சதசி 14 வித்தியாநந்தம்.

6 மின்னுமறம் பாபமெனு மிருநினைவே
வஞராமுஷ் மிகம தாகும்,
பன்னினமுன் ஞேத்ததினே தபித்திடா
தெனவிவனைப் பரமாஞ் சிந்தை,
மன்னிமரப் பன்னமிசை யறலுறல்போ
லறிஞனிடை மாஞா நத்தின்,
பின்னருறு மாகாமி கருமமதின்
பற்றதெனப் பேசு வாரே.

என வருவனவற்றல் உணர்க.

[ஆத்ம ஞாந ஸ்திதியினை அடைந்த பின்னர், கமல பத்திர உதகம் போல, ஞாநி புண்ணிய பாப கருமங்கள் இரண்டினையும் பொருந்தாமையினாலும். ஸ்தூல மான விறகில், சூக்ஷ்ம மான அக்கிநி பொருந்தியிருக்கும். சூக்ஷ்ம மான அக்கிநியினிடத்தில், ஸ்தூல மான விறகு பொருந்தியிராதது போல, தூல மாகிய புண்ணிய பாப கர்ம விவகாரத்தில், பிராரப்த வசத்தினால், சூக்ஷ்ம ரூபம் ஆன ஞாநி பொருந்தியிருப்பன், சூக்ஷ்ம ரூபம் ஆன அந்தப் பிரஹ்ம ஞாநியினிடத்தில், ஸ்தூல மான புண்ணிய பாபங்க ளாகிய ஆகாமிய வினை பொருந்தாமையினாலும், நெருப்புப் பற்றி எறிகின்ற புல் பூடு இல்லாத வநத்தில், உழை முதலிய மிருகங்கள் போய்ப் பொருந்தியிராமை போல, சூக்ஷ்ம ரூப ஞாநியை, தூல ரூப புண்ணிய பாபங்கள் அனைத்தும் போய் பொருந்தியிராமையினாலும், பாவம் எங்ஙனம் போம், புண்ணியம் எங் ஙனம் வரும் என்னும் சிந்தை, அந்த ஞாநியினிடத்து எழாது இருத்தலே, பர லோக துக்காபாவம் என்று கூறுகின்றார்.]

ஞாநநிலை யடைதலுந்தா மரையிலைநீர் போல
  ஞாநியிரு வினையுமுறா மையினாலிந் தநத்திற்,
றீநணுகு மழலில்விற கிலாததுபோற் கருமச்
  செயலிலவ னுமவனி லஃதிரா மையினான்,
மானழலுண் வநத்திலுறா ததுபோல ஞாந
  மயனைவினை யாவுமுறா மையினாலச் சிந்தை,
தானவனி லெழாதிருத்த றனையுரைப்பர் மேலோர்,
  தக்கபர லோகதுக்கா பாவமென வன்றே. (151)

(இ—ள்) ஞாந நிலை அடைதலும் - (ஆத்ம) ஞாந ஸ்திதி அடைந்த பின்னர், தாமரை இலை நீர் - கமல பத்

திர உதகம், போல - போல், ஞானி - ஞானி யானவன், இரு வினையும் - (புண்ணிய பாப) கருமங்க ளிரண்டினையும், உறுமையினால் - பொருந்தாமையினாலும், இந்தனத்தில் - (தூல மான) விறகில், தீ - (சூக்ஷ்ம மான) அக்கினி, நணுகும் - பொருந்தியிருக்கும், அழலில் - (சூக்ஷ்ம மான) அக்கினியினிடத்தில், விறகு - (தூல மான) விறகு, இலா தது - பொருந்தியிராது, போல் - போல, கருமச் செயலில்- (தூல மாகிய புண்ணிய பாப) கர்ம விவகாரத்தில், அவன் ஆம் - (பிராரப்த வசத்தினால், சூக்ஷ்ம ரூப மான) ஞானி பொருந்தியிருப்பன், அவனில் - (சூக்ஷ்ம ரூப மான) அந் தப் பிரம்ம ஞானியினிடத்தில், அஃது - (தூல மாகிய) புண் ணிய பாப கர்மங்கள், இராமையினால் - (ஆகிய ஆகாமிய வினை) பொருந்ாதனாலும், அழல் உண் வனத்தில் - நெருப் புப் பற்றி எறிகின்ற வனத்தின்கண் (புல் இல்லாத வனத்தில் என்றபடி), மான் - உழை (முதலிய மிருகங்கள்), உறு தது - (போய்) பொருந்தியிராமை, போல - போல், ஞான மயனை (சூக்ஷ்ம ரூப) ஞானியை, வினை - (தூல ரூப) புண் ணிய பாப கருமங்கள், யாவும் - அனைத்தும், உறுமையி னால் - (போய்ப்) பொருந்தியிராமையினாலும், அச் சிந்தை- (பாவம் எங்ஙனம் போம், புண்ணியம் எங்ஙனம் வரும் என்னும்) சிந்தை, அவனில் - அந்த ஞானியினிடத்தில், எழாதிருத்தல் தனை - உண்டாகா திருக்குதலை, தக்க - உயர்ந்த, பர லோக துக்க அபாவம் - பர லோக துக்கா பாவ மாம், என - என்று, மேலோர் - உயர்ந்தோர், உரைப்பர் - கூறுவர். எ—று.

தான் - அன்று - ஏ-"எழாதிருத்தல்தனை" என்பதில், தன் - அசை.

பிரஹ்ம ஆத்ம ஐக்கிய ஞாந ஸ்திதியினை அடைந்த பின்னர், கமல பத்ர உதகம் போல, ஞாநி யானவன், புண்ணிய, பாவ கர்மங்கள் இரண்டினையும், பொருந்தாமை யினாலும், ஸ்தூலம் ஆன விறகில், சூக்ஷ்மம் ஆன அக்நி பொருந்தியிருக்கும், சூக்ஷ்மம் ஆன அக்நியினிடத்தில், ஸ்தூலம் ஆன விறகு பொருந்தியிராதது போல, தூலம் ஆகிய புண்ணிய பாப கர்ம விவகாரத்தில், பிராரப்த வசத்தினால், சூக்ஷ்ம ரூபம் ஆன ஞாநி பொருந்தியிருப்பன், சூக்ஷ்ம ரூபம் ஆன அந்தப் பிரஹ்ம ஞாநியினிடத்தில், தூலம் ஆகிய புண்ணிய பாப கர்மங்கள் ஆகிய ஆகாமிய வினை, பொருந்தாமையினாலும், நெருப்புப் பற்றி எறிகின்ற வநத்தின்கண், உழை முதலிய மிருகங்கள் போய்ப் பொருந்தியிராமை போல, சூக்ஷ்ம ரூபம் ஆன ஆத்ம ஞாநியை, தூல ரூப புண்ணிய பாப கர்மங்கள் அனைத்தும் போய்ப் பொருந்தாமையினாலும், பாபம் எங்ஙனம் போம், புண்ணிய எங்ஙனம் வரும் என்னும் சிந்தை, அந்த ஞாநி யினிடத்தில் உண்டாகாதிருத்தலை, பர லோக துக்க அபாவம் ஆம் என்று கூறுவர் என உணர்க: (151)

[சர்வ ஐசுவரியங்களையும் பொருந்தியிருக்கின்ற சார்வ பௌமன் முதல் இரணிய கர்ப்பாந்தமா யுள்ள, உத்தர உத்தரம் உயர் வான நூறு நூறு பங்கு அதிக மாய் உள்ள, ஆநந்தங்கள் யாவையும், வாந்தாசநம் போல, பற்று இன்றிய ஞாநி, பிரஹ்ம ரூப மாகப் பொருந்தியிருத்தலினாலும், பழைமை யான ஆநந்தங்கள் அனைத்தும், பிரஹ்மத்தினது அம்சங்க ளாக இருக்கின்றபடியினாலும், ஆத்ம ஞாநிக்கு அகண்டாநந்தம் சித்திப்பதே, சர்வகாமாப்தி யாம் என்று நல் வினை தீ வினை யாகிய சத்துருவை ஜயித்திருக்கின்ற மகா தவசிகள் கூறுவர் என்றும், கூறுகின்றார்.]

எல்லாவாழ் வினையுமுறுஞ் சார்வபௌ மாதி
யிரணியகர்ப் பாந்தமாய் மேன்மேல்வேண் டுற்ற,
நல்லாநந் தங்களெலாம் பற்றிலா வறிஞ
னணுகுதலான் ஞாநங்கொண் டறிசிவத்தின் கூறுய்த்,
தொல்லாநந் தங்களெலா நிற்கையினு லவற்குத்
தோமிலகண் டாநந்தச் சித்திதோன் றுதலே,
பொல்லாத வினைப்பகையைக் கடந்தபெருந் தவர்கள்
புகன்றிடுவர் சர்வகா மாப்தியென வன்றே. (152)

(இ—ள்) எல்லா வாழ்வினையும் - சர்வ ஐசுவரியங்களையும், உறும் — பொருந்தியிருக்கின்ற, சார்வ பௌம ஆதி - சார்வ பௌமன் முதல், இரணியகர்ப்ப அந்தம் ஆய் - இரணியகர்ப்ப பரியந்த மாக. மேல் மேல் - உத்தர உத்தர மாக (பின் பின் என்றபடி), வேண்டு உற்ற - அபேக்ஷிக்கத் தகுந்த, நல் - நூறு நூறு பங்கு அதிக மான, ஆநந்தங்கள் - (பதி னொரு வகை) ஆநந்தங்கள், எலாம் - யாவற்றையும், பற்று இலா அறிஞன் - (வாந்தாசநம் போல், தோஷ திருஷ்டியினுல்) இச்சை யின்றிய ஞாநி, நணுகுதலால் - (பிரஹ்ம ரூபத்தால்) (சார்வ பௌள மாதிகளைப் போலக், கிரமம் இன்றி, இத்தனை பே ராய் இருந்து புசிக்கின்றவன் நான் ஒருவன் றனே என்று) பொருந்தியிருத்தலினுலும், ஞாநம் கொண்டு அறி - (சம்சய ரகித மான பிரஹ்மாத்ம ஐக்கிய) ஞாநத்தினுல் அறியப்பட்ட, சிவத்தின் - பிரம்மத்தினது, கூறு ஆய் - அம்சங்க ளாக, தொல் - பழமை யான, ஆநந்தங்கள் எலாம் - சர்வாநந் தங்களும், நிற்கையினுல் - இருக்கின்றபடியினுலும், அவற்கு - அந்த ஞாநிக்கு, தோம் இல் -நிர்த் தோஷ மான, அகண்ட ஆநந்த சித்தி தோன்றுதலே - அகண்டாநந்தம்

சித்திப்பதே, சர்வ காம ஆப்தி - சர்வ காமாப்தி யாம், என - என்று, பொல்லாத - கொடி தாகிய, வினை - நல் வினை தீ வினைகள் (என்னும்), பகையை - சத்துருவை, கடந்த - ஜெயித்திருக்கின்ற, பெரும் தவர்கள் - மஹா தவ முடையோர், புகன்றிடுவர் - உரையாநிற்பர். எ—று. அன்று - ஏ - அசை.

சர்வ ஐசுவரியங்களையும் பொருந்தியிருக்கின்ற சார்வ பௌமன் முதல் இரண்ய கர்ப்ப பரியந்த மாக, உத்தரம் உத்தரம் ஆக அபேக்ஷிக்கத் தக்க, நூறு நூறு பங்கு அதிக மாக வுள்ள பதி னொரு வகை ஆநந்தங்கள் யாவற்றையும், வாந்தாசநம் போல், தோஷ திருஷ்டியினால், இச்சைஇன்றிய ஞாநி, பிரஹ்ம ரூபத்தினால் சார்வ பௌமாதிகளைப் போல், கிரமம் இன்றி இத்தனை பே ராக இருந்து புசிக்கின்றவன் நான் ஒருவன் றானே என்று, சம்சய ரகித மாகிய பிரஹ் மாத்ம ஐக்கிய ஞாநத்தினால், அறியப்பட்ட, பிரஹ்மத்தி னது அம்சங்க ளாகப் பழைமை யான சர்வ ஆநந்தங்களும் இருக்கின்றபடியினாலும், அந்த ஞாநிக்கு நிர்த்தோஷம் ஆன, அகண்டாநந்தஞ் சித்திப்பதே, சர்வ காம ஆப்தி யாம் என்று, கொடி தாகிய நல் வினை தீ வினை என்னும் சத்துரு வினைச் செயித்திருக்கின்ற மகா தவ முடையவர்கள் கூறு வார்கள் என உணர்க.

பஞ்ச தசி 14 வித்தியாநந்தம்.

10 இளமையு மெழிலுங் கல்வியு மிசைந்தே,
யின்றிநோய் திடமநத் தவனாய்,
முளைபடை யுளனாய்த் தநநிறை தரணி
முழுதையு மளிப்பவ னாகி,

யுளவெலா மநுட போகங்க ளோடு
மொன்றிய திருத்தமன் னவன்றன்,
களிசுக மெதனைக் கதுவுவ னதையே
கதுவுவன் பிரமவித் துரனே.

14 கற்பமிதின் மநுடனு யறப்பாகச்
சிறப்பினுற் கந்தர் வத்வ,
நற்பெறுவன் மாநுடகந் தருவனும்
பூர்வகர்ப்ப நன்மை யாற்றிக்,
கற்பமுத லதனினே பவிப்பனேற்
கந்தருவக் கவினுந் தன்மை,
யற்பமறு மத்தகைய னிவண்டேவ
கந்தருவ னறைவா ரன்றே.

15 அக்கினிஷ்வாத் தாதியராஞ் சிரவாசிப்
பிதிர்க்களுல கதனி லேய்ந்தோர்,
தக்ககற்ப மாதியினே தேவதையைச்
சார்ந்தோரா சாந தேவர்,
இக்கற்பத்திற் பரிமேத முதல்வினைக
ளியற்றிமகத் திடத்தை யேய்ந்தே,
கலக்கலறு மாசாந தேவரா
லேத்துறுவர் கரும தேவர்.

16 எமனக் கினிமுக் கியதே வர்களா
மெழிலிந் திரனங் குருயா ரறியார்,
சமைநற் பிரசா பதிவ்ராட் பிரமா
சற்சூத் திரமாங் மனெனப் பெயரோன்,
மமவெப் புவிநற் பதியா திபிர
மாவந் தமென்மேல் விழைவுற் றவரா,

மமைசத் தமுளுசித் தமுமே யறியா
வாந்மச் சுகமீ ததனிற் பரமே.

17 அவரவர்தங் காமியமாஞ் சருவசுகங்
களிலெதனு லமர்ஞா நிக்குச்,
சுவையிலையங் கதனுனே யவருடைய
வச்சுகங்கள் சுஞ்ஞா நிக்குண்,
டுவமையறு சருவகா மாப்தியிது
வுரைத்தனமற் றுணர்சி தாந்ம,
நவமதனுற் றன்றேக மெனவெவற்றும்
போகமதை நாடு வாளுல்.

19 துக்கவபா வமுங்காம வாப்தியுமென்
றிரண்டுமிங்ஙன் சொல்ல லாய,
தக்கிருத கிருத்தியமா மன்னியமு
மடைந்ததடை வதுவுங் காண்க,
தொக்கிரண்டுந் திருத்திதீ பத்தினம்மா
னன்ருகச் சொல்ல லாய,
தக்கவிக ளேயிரண்டும் புத்திவிசுத்
தியின்பொருட்டா யநுசந் திக்க.

20 இகபர வுலகி லுளவெலாங் கிடைப்ப
வின்பவில் லதும்பெறச் செயல்கண்,
மிகமுன மிவர்க்குண் டவையெலா மிக்கான்
மிலைச்சிய தாமிவ னவ்விவ்,
விகசெயற் குரிய செய்தன வெனலை
யெதிர்மறை வாயிலா யெனுமே.
மகிழ்வனி நனித மிடருறு மடையர்
மகன்முத லாசையாற் றிநமே.

21 நசைவழி யுழல்க ணிரைபர சுகநா
ஞடியென் விழைவிஞு லுழல்வேன்,
மிசையுல கடையு நசையினர் கரும
மிகவியற் றுகவெலா வுலகா,
யிசையக மெதஞு லெதையெங்ஙன் புரிவ
னிவணதி காரியா மவர்நூ,
லிசையுரை புரிக மறைசொல வினையற்
றிருத்தலி னெக்குரித் திலையே.

22 நித்திரை பயிக்க முழுக்கொடு சவுச
நிரிச்சையன் புரிகிலென் காண்போர்,
கத்துவ ரெனின்மற் றவர்தங்கற் பனையாற்
கதுவலென் னெனக்குக்குன் றிமணிக்,
கொத்துமுன் னரிய கற்பனை வரியாற்
கொழுத்துரு வின்னண மயலாற்,
தத்துகற் பனைசெய் தருஞ்சமு சார
தன்மங்க ளவற்றையான் போற்றேன்.

23 தத்துவ முணர்கிலர் செவிகொள வுணர்நான்
ருனெத ஞற்கேட் பேனையம்,
பத்துவர் மங்நங் தனையுற வையமில்
பாவன ஞன்மாந ரிக்கேனே,
யித்திரி புளரினி தித்யா சத்துற
விலதேற் றிரிபே ஞேதியாந,
சத்துறு முடலாத் மத்துவ விபரீ
தம்மொரு காஞன் போற்றேனே.

24 மநுடஞு னெனலாதி விவகார
மித்திரிபை மருவா தேனு,

முனுமிகுநா னெழுகிவரு வாதனையா
லுண்டாகு முனுமா றற்ற,
வினைகழியில் விவகாரம் விட்டொழியும்
வினைகழிந்து விடா தாயின்,
பனுமிலைதா யிரமாந்தி யாநமத
னுமே படவே மாட்டா.
25 விவகாரத் தொழிவுவிழை தரினினக்கு
மெய்த்தியாந மேன்மே லாகத்,
தெவுவிவகா ரம்வாதிப் பதற்கியையா
தெனக்காண்யான் றியாநிப் பானேன்,
றவமறுவி க்ஷேபமெனக் கிலையெதனு
னதனுனே சமாதி யின்றுஞ்,
சிவனுவிகா ரியெனுமனந் தனக்குவிக்ஷே
பமதுஞ்ச மாதியதுந் தானே.

என வருவனவற்றால் உணர்க. (152)

[சம்சய ரகித ஆத்ம ஞாநத்தினுக்கு முன்னர் இக லோக சம்பந்த மாக இஷ்டப் பிராப்தி, அநிஷ்ட நிவர்த்தியின் பொருட்டு வைத்த உழவு முதலியனவும், ஸ்வர்க்கம் முதலிய லோகங்களைப் பெறுதற் பொருட்டு, யாகாதி கர்மங்களும், மோக்ஷ சாதந மான ஞாந சித்தி உற, சிரவண மநந நிதித்தியாசநங்களும், விவேகிக்குக் கிருத்தியம் ஆம். ஆத்ம ஞாநம் வந்த பின், குடும்பப் புத்தியொடு பல போகத்து இச்சை இல்லாதபடியினால், கூறிய கிருஷி வாணிச்சியாதி இக லோக கிருத்தியங்கள் ஒன்றும் இல்லை என்று கூறுகின்றார்.]

தத்துவஞா நத்திற்கு முன்னமிங் கடையத்
தக்கவிட்டம் பெறவநிட்ட வொழிவிற்கு வேண்டி,

வைத்தவுழ வாதிகளுந் துறக்கமுதல் பெறற்கு
மகமுதலா யினவுமுத்தி சாதநமா ஞாந,
சித்தியுற மிகுசவணு திகமுமறி ஞர்க்குச்
செய்வனவாந் தத்துவஞா நத்தின்பின் குடும்பப்,
புத்தியொடு பலபோகத் திச்சையிலா மையினாற்
புகன்றவுழ வாதிதொழில் யாவுமிலை யாமால். (153)

(இ—ள்) தத்துவஞாநத்திற்கு (சம்சய ரகிதம் ஆன) பிரம்ம ஞாநத்திற்கு, முன்னம் - பூர்வம், இங்கு - இக லோக சம்பந்த மாக, அடையத் தக்க - அடையத் தகுந்த, இட்டம் - இஷ்ட, பெற - பிராப்தி, அநிட்ட - அநிஷ்ட, ஒழிவிற்கு - நிவிர்த்தியின் பொருட்டு, வேண்டி வைத்த - விரும்பி வைக்கப்பட்ட, உழவு ஆதிகளும் - கிருஷி (வாணிச்சிய) முதலியவைகளும, துறக்கம் முதல்-ஸ்வர்க்க முதலிய (லோகங்களை), பெறற்கு - அடைதற் பொருட்டு, மகம் முதலா யினவும் - யாகாதி கர்மங்களும், முத்தி சாத நம் ஆம் - (அநர்த்தி நிவிர்த்தி ஆநந்தப் பிராப்தி ரூப) மோக்ஷ சாதந மாகிய, ஞாந சித்தி உற - (ஆத்ம அஹங் காரங்களின் தாதாந்மிய நிவிர்த்தி ரூப) அபரோக்ஷ ஞாநம் சித்தித்தற் பொருட்டு, மிகு - உயர்வினை யுடைய, சவண ஆதிகமும் - சிரவண மநந நிதித்தியாசநங்களும். அறி ஞர்க்கு - விவேகிக்கு, செய்வன ஆம் - செய்யத் தக்கன (கிருத்தியம்) ஆம், தத்துவ ஞாநத்தின் பின் - ஆத்ம ஞாநம் வந்த பின்னர், குடும்பப் புத்தியொடு - (அஹம்) குடும்பி (என்னும்) ஞாநத்தோடு, பல போகத்து - (இக லோகத்தி லுள்ள) பல வித போகங்களினிடத்தும். இச்சை இலாமையினால் - விருப்ப மின்மையால், புகன்ற - கூறிய, உழவு ஆதி தொழில் - கிருஷி (வாணிச்சி) யாதி (இக லோக) கிருத்தியங்கள், யாவும் - ஒன்றும், இலை யாம் -

(ஞானிக்குச் செய்ய வேண்டுவன வாக) இல்லை யா (கிருத மா)ம். எ—று. ஆல் - அசை.

சம்சய ரகித மான பிரஹ்ம ஞானத்திற்குப் பூர்வம், இக லோக சம்பந்த மாக அடையத் தகுந்த இஷ்டப் பிராப்தி அநிஷ்ட நிவிர்த்தியின் பொருட்டு, விரும்பி வைக்கப்பட்ட கிருஷி வாணிச்சியாதிகளும், ஸ்வர்க்க முதலிய லோகங்களை அடைதற் பொருட்டு, யாகாதி கர்மங்களும், அநர்த்த நிவிருத்தி ஆநந்தப் பிராப்தி ரூப மோக்ஷ சாதந மாகிய ஆத்ம அகங்காரங்களின் தாதாத்மிய நிவிருத்தி ரூப அபரோக்ஷ ஞானம் சித்தித்தற் பொருட்டு, சிரவண மநந நிதித்தியாசநங்களும், விவேகிக்குச் செய்யத் தக்கன வாம் என்றும்,

ஆத்ம ஞானம் வந்த பின்னர், குடும்பப் புத்தியொடு பல போகத்து இச்சை யிலாமையினால், முன்னர் கூறிய இக லோக கிருஷி வாணிச்சியாதி கிருத்தியங்கள் ஞானிக்குச் செய்ய வேண்டுவன வாக இல்லை யாம் என்றும், உணர்க. (153)

[சூரிய கிரணத்தினால் சாளரத்தில் வந்து தோன்றுகின்ற அதிக சூக்ஷ்ம மான திரிசரேணு வானது, ஆகாயத்தில் உள்ள சூரியனது அதிகப் பிரகாசத்தின் முன்னால் தோன்றாத முறைமை போல, நாசத்தினை அடைகின்ற அற்பஞ்ஞனுக்கு புருஷார்த்த மாக அறியத் தகுந்த யஞ்ஞாதி கர்மங்கள், ஆத்ம ஞானியின் திருஷ்டிக்கு புருஷார்த்த மாகத் தோன்றாமையினால், பரலோக சாதந மாக யாகாதி கர்மங்கள் செய்யத் தக்கன வாக இல்லை யாம். பிரஹ்மாநந்த சாக்ஷாத்காரத்தினை பொருந்தியிருத்தலால், சிரவண மநந நிதித்யாசநங்கள் சித்தித்தில் பொருந்தும்படி செய்யப்பட்டனவே ஆம் என்றும், பிரமாநந்தம் அடைந்திருப்பதே முன்னர் கூறிய கிருத கிருத்தியத்தன்மை என்றும், கூறுகின்றார்.]

வந்துசிறு சாரளத்திற் றோன்றுபர மாணு
வான்கதிரின் மிகுமொளியிற் றோன்றிடா வாபோ,
னந்தலுறு சிற்றறிஞன் விடயமாங் கரும
ஞானியிடைத் தோன்றாமை யாலியற்றத் தக்க,
முந்துமக முதலனவிங் கிலைபிரமா நந்த
முதலுண்மை யெய்தலாற் சவணாதி யெல்லாஞ்,
சிந்தையுற வியற்றுமள வாகுமதா லிதுவே
செப்பியவக் கிருதகிருத் தியத்துவமென் றறியே. (154)

(இ—ள்) வந்து - (சூரிய கிரணத்தினால்) வந்து, சிறு - சிறிய, சாளரத்தில் - ஜன்னலில், தோன்று-தோன்றுகின்ற, பரம அணு - அதி சூக்ஷ்மமான (திரிசர) அணுவானது, வான் - ஆகாயத்தின்கண்ணுள்ள, கதிர் - சூரியனது, மிகும் ஒளியில் - அதிகப் பிரகாசத்தில், தோன்றிடா ஆ(று) - தோன்றாத முறைமை, போல் - போல. நந்தல் உறு - நாசத்தினைப் பொருந்துகின்ற, சிற்று அறிஞன் - அற்பஞ்ஞனால் - விடயம் ஆம் கருமம் (புருஷார்த்த மாக) அறியத் தகுந்த தாகிய(யக்ஞாதி) கருமங்கள், ஞானியிடை - (ஆத்ம) ஞானியி னிடத்து, தோன்றாமையால் - (திருஷ்டிக்கு புருஷார்த்தம் ஆக) பிரதீதியாகாமையினால், இயற்றத் தக்க - (பர லோக சாதனமாக) செய்யத் தகுந்த, முந்து - உயர்வினை யுடைய. மகம் முதலன - யாகம் முதலியன, இங்கு - (கருமங்கள்) இவ் விடத்து, இலை - (செய்த்தக்கன வாக) இல்லை யா (கிருதமா)ம் பிரமாநந்த முதல் உண்மை - பிரமாநந்த சாக்ஷாத்காரத்தினை, எய்தலால - பொருந்தியிருத்தலால். (சிரவண ஆதிகள் எல்லாம் அவனுக்குச் செய்ய வேண்டுவன வாக இல்லை) [சிரவணாதிகள் ஞானியினிடத்துக் காணப்படுகின்றதே எனில் கூறுகின்றார்] சவண ஆதி - (சிரவண மநந நிதித்யாசநங்கள்,

எல்லாம் - யாவும், சிந்தை உற - சித்தத்தில் பொருந்தும் படி, இயற்றும் அளவு ஆகும் - செய்யப்படன் மாத்திரமே யா (கிருதமா)ம், அதால் - அதனால், இதுவே - பிரம்மா நந்தம் அடைந்திருப்பதே, செப்பிய - (முன்னர்க்)கூறிய, அக் கிருத கிருத்தியத்துவம் - அந்தக் கிருத கிருத்தியத் தன்மை யாம், என்று - என, அறி - உணர்வா யாக. எ—று ஏ - அசை. (154)

கிருத்தியம் - செய்யத்தக்கது - கிருதம் - செய்து முடித்தல் ஆம்.

சூரிய கிரணத்தினால் வந்து சிறிய சந்நலில் தோற்று கின்ற அதிசூக்ஷ்ம மான திரிசரேணு வானது, ஆகாயத்தின் கண் ணுள்ள சூரியப் பிரகாசத்தில் தோன்றாத முறைமை போல, நாசத்தினை அடைகின்ற அற்பஞ்ஞனால் புருஷார்த்த மாக அறியத் தகுந்த தாகிய யஞ்ஞாதி கருமங்கள், ஆத்ம ஞானியின் திருஷ்டிக்குப் புருஷார்த்த மாகப் பிரதீதியாகா மையினால், பர லோக சாதந மாகச் செய்யத் தகுந்த உயர் வினை யுடைய யாகம் முதலிய கருமங்கள் இவ் விடத்துச் செய்யத்தக்கன வாக இல்லை யாம். (கிருதம் ஆம்) பிரஹ்மா நந்த சாக்ஷாத்காரத்தினைப் பொருந்தியிருத்தலால், சிரவண ஆதிகள் எல்லாம் செய்ய வேண்டுவன வாக இல்லை. சிர வண மநந நிதித்யாசநங்கள் யாவும் சித்தத்தில் பொருந்தும் படி செய்யப்பட்டனவே ஆகும். (கிருதம் ஆம்) அதனால், பிரஹ்மாநந்தம் அடைந் திருப்பதே, முன்னர் கூறிய கிருத கிருத்தியத் தன்மையாம் என உணர்வா யாக. (154)

[1. பூர்ண மான விசிஷ்ட புண்ணிய பரிபாகம், 2. முமுக்ஷுத்வம், 3. குரு சேவை, 4, வேதாந்த சாஸ்திர சிரவண மநந நிதித்யாசநம். 5. ஆத்ம அநாத்மாக்களின்

விவேகம், 6. மூல அஞ்ஞான நிவிர்த்தி, 7. ஆத்ம சாக்ஷாத்காரம், 8. சம்சார துக்க நிவிர்த்தி. 9 நிஜாநந்தப் பிராப்தி என்னும் ஒன்பதும் அடையத் தக்கன ஆம். இவ் வொன்பதையும் அடைந்திருத்தலே பிராப்தப் பிராப்பம் ஆம் என்று கூறுகின்றார் ]

முற்றலுறு விசிட்டபுண் ணியபரிபா கந்தான்
முத்திவிருப் பரியகுரு வழிபாடு பெருநூல்,
வெற்றிதரு சவணாதி யறிவறியா மைகளின்
விவேகமிகு மஞ்ஞான வழிவொடுதன் னுண்மை,
பெற்றசமு சாரதுக்க நிவிர்த்திநிசா நந்தப்
பேறெய்த லேபிராப் தப்பிராப் பியமாம்,
பற்றுமுயர் முத்திவகை யிரண்டாகு மவைதாம்
பகர்சீவந் முத்தியொடு விதேககைவல்யம். (155)

(இ—ள்) முற்றல் உறு - பூர்ண மான, விசிஷ்ட புண்ணிய பரிபாகம் - விசிஷ்ட புண்ணிய பரிபாகமும், முத்தி விருப்பு - முமுக்ஷுத்துவமும், அரிய-கிடைத்தற் கரிய. குரு வழிபாடு - குரு சேவையும், பெரு நூல் - வேதாந்த சாஸ்திரத்தினது, வெற்றிதரு - உயர்வினை யுடைய, சவண ஆதி - சிரவண மநந நிதித்தியாசநமும், அறிவு அறியாமைகளின் விவேகம்- ஆத்மாநாத்மாக்களின் விவேகமும், மிகும் அஞ்ஞான அழிவு - மூலாஞ்ஞானத்தின் நிவிர்த்தியும். தன் உண்மை - ஆத்ம சாக்ஷாத்காரமும், பெற்ற - (தான்) அடைந்த, சமுசார துக்க நிவிர்த்தி -சம்சார துக்க நிவிர்த்தியும், நிசா நந்தப் பேறு - நிசாநந்தப் பிராப்தியும், எய்தலே -(ஆகிய இந்த அடையத் தகுந்த (பிராப்பியம் ஆன) நவ விதத்தினையும் பிரஹ்ம ஞாநி) அடைந்தி (பிராப்தமா யி)ருத்தலே,

பிராப்தப் பிராப்பியம் ஆம் - பிராப்தப் பிராப்பிய மாம், [மோக்ஷம், ஜீவந் முக்தி விதேக முக்தி என இரண்டு என்று கூறுகின்றார்.] பற்றும் (அதிகாரியினால்) அடையத் தகுந்த, உயர் - சிரேஷ்ட முடைய, முத்தி இரண்டு வகை ஆகும் - மோக்ஷம் இரண்டு பிரகார மாம், [இரு வகை முக்தியின் நாமாக்களைக் கூறுகின்றார்.] அவை - அவ் விரு வகை மோக்ஷங்க ளாவன, பகர் - (சித்த விசிராந்தி யாகக்) கூறு கின்ற, சீவந் முத்தி - ஜீவந் முத்தியு(சதேக கைவல்யமு)ம், விதேக கைவல்லியம் - விதேக கைவல்லியமும் ஆம். எ—று தான் - தாம் ஒடு - ஒடு - அசை.

"விசிட்ட புண்ணிய பரிபாகம்" என்றது, நிஷ்காம புண்ணிய பரிபாகத்தை. 'சவணாதி', எனவே, மநந நிதித்தியாஸங்களையும் கொள்க.

சிரவணாதிகளை, 128வது செய்யுள் முதல், 134-வது செய்யுள் வரையும் காண்க.

குரு வழிபாடு பாயிரத்தின் 10வது செய்யுளில் காண்க.

துக்க நிவிருத்தி - திரிசய விவேகத்தில் 151-152வது செய்யுளில் காண்க.

பிராப்தம் - பெறுதல், பிராப்பியம் - பேறு என உணர்க.

1. பூர்ண மாக விசிட்ட பிண்ணிய பரிபாகம், 2 முமுக்ஷுத்வம். 3. குரு சேவை. 4. வேதாந்த சாஸ்திர சிரவண மநந நிதித்யாசநம், 5. ஆத்ம அநாத்ம விவேகம், 6. மூல அஞ்ஞாந நிவிர்த்தி, 7 ஆத்ம சாக்ஷாத்காரம், 8 சம்சார

துக்க நிவிர்த்தி, 9. நிஜாநந்தப் பிராப்தி ஆகிய ஒன்பதும் ஆத்ம ஞானி அடைந்திருத்தலே பிராப்தப் பிராப்பியம் ஆம். அடையத் தகுந்த சிரேஷ்டம் பொருந்திய மோக்ஷம் இரண்டு பிரகாரம் ஆம். சித்த விசிராந்தியைத் தருகின்ற ஜீவந் முக்தியும் (சதேக கைவல்யமும்) விதேக கைவல்ய மும் ஆம் என உணர்க. (155)

[ஞானிக்கு அஹங்கார ஆத்மாவோடு சம்பந்தம் நீங்கி யிருத்தலினால், அந்நியர் சரீரத்தில் போல தம்முடைய சரீ ரத்திலும். திடமான அபிமானம் இன்றி, அநுபவிக்கானின்ற அநுபவ சமானத் தன்மையினால், ஜந்ம ஏது இன்றிய பிரா ரப்த் போக அநுபவம் உண்டாகாதற்கும் உறக்கம் மிகுந் தோன் போல, பிரபஞ்சத்தில் மந்த அநுசந்தானத்தால், தேகம் முதலியவற்றில் பொருந்தியிருக்கின்ற நான் என் என்னும் அபிமானம் நீங்கிய பின்னரும், கடம் உதித்த பின்னரும் சுழலும் திகிரி போல, வாதனையால் பொருந்தி யிருக்குதல் ஜீவந் முக்தி யாம் என்று கூறுகின்றார்.]

அறிவுடையார்க் ககமாந்மா வொடுவருசம் பந்த
மகறலினாற் பிறருடல்போ றம்முடலந் தனிலு,
முறுதிதரு மபிமான மின்மையே யாகி
யுண்ணுமநு பவவொப்பால் வருபிரா ரப்த,
வறுநுகர்வுண் டாஞ்சுழுத்தி யின்வலியே போல
மந்தாநு சந்தான மாதலிற்றே காதி,
செறியபிமா னங்கழன்றுங் கடமுதித்துஞ் சுழலுந்
திகிரிபோல் வாசனையா லுறல்சீவந் முத்தி. (156)

(இ—ள்) அறிவு உடையார்க்கு - (பிரமாந்ம ஐக் கிய ஞானம் உடைய) ஞானிக்கு, அகம் ஆந்மா ஒடு - அகங் கார ஆத்மாக்களினோடு, வரு - உண்டாகின்ற, சம்பந்தம்-

(பிராந்தி ஐந்கிய தாதாந்மிய) சம்பந்த மானது, அகல்தலி ஞல் - நீங்கி யிருத்தலிஞல், பிறர் - அந்நியரது, உடல் - சரீரத்தில், போல் - போல தம் - தம் முடைய, உடலம் தனிலும் - சரீரத்திலும், உறுதி தரும் - திட மான, அபிமா நம் - அபிமாந மானது, இன்மையே ஆகி - இன்றி, உண் ணும் - புசிக்காநின்ற, அநுபவ ஒப்பால்—அநுபவ சமாநத் தன்மையிஞல், வரு - உண்டாகின்ற, வறு - (ஜந்ம ஏது) இன்றிய, பிராரப்த நுகர்வு - (சுக துக்க ரூப) பிராரப்த (போக) அநுபவம். உண்டாம் - உண்டாகாநிற்கும், [ஜீவந் முக்தியினைத் திருஷ்டாந்தத்தோடு கூறுகின்ருர்] சுழுத்தியின் - சுழுத்தியினது, வலி - சாமர்த்தியத்தி (உறக் கம் மிருந்ததா)னே, போல - போல், மந்த அநுசந்தாநம் ஆதலின் -(பிரபஞ்சத்தில்) மந்த அநுசந்தாநத்தால், தேக ஆதி - தேக முதலியவற்றில், செறி - பொருந்தியிருக்கின்ற, அபிமாநம் - (நான் எனது என்னும்) அபிமாநம், சுழன் றும் - நீங்கிய பின்னரும், கடம் - குடம், உதித்தும் -உண் டான பின்னரும், சுழலும் — சுற்றிக் கொண்டிருக்கின்ற, திகிரி — (குயவனது) சக்கரத்தை, போல் - போல வாசனை யால - (பிராரப்த) வாசனையிஞலே, உறல் - (சரீராதிக ளோடு கூடி) சஞ்சரித்துக்கொண்டிருத்தல், சீவந் முத்தி - (சதேக கைவல்யம் ஆகிய) ஜீவந் முத்தி யாம். எ—று.

ஏ - அசை

"உடலம் தனிலும்" என்பதில், தன் - அசை,

அறிவுடையார்க்கு ஜீவந் முக்தி என ஒட்டுக.

பிரஹ்ம ஆந்ம ஐக்கியம் உடைய ஞாநிக்கு, அஹங் கார ஆத்மாக்களினேடு உண்டாகின்ற பிராந்தி ஐந்ய

தாதாத்மிய சம்பந்த மானது நீங்கியிருத்தலினால், அந்நியாது சரீரத்தில் போல, தம்முடைய சரீரத்திலும், திட மான அபிமானம் இன்றி, புஜிக்காநின்ற அநுபவ சமானத் தன்மை யினால், உண்டாகின்ற ஜந்ம ஏது இன்றிய, சுக துக்க ரூப பிராப்த போக அநுபவம் உண்டாகாநிற்கும்-

சுழுத்தியினது சாமர்த்தியத்தினால் உறக்கம் மிகுந் தோனைப் போல, பிரபஞ்சத்தில் மந்த அநுசந்தானத்தினால். தேகம் முதலியவற்றில் பொருந்தியிருக்கின்ற நான் எனது என்னும் அபிமானம் நீங்கிய பின்னரும், குடம் உண்டான பின்னரும், சுற்றிக் கொண்டிருக்கின்ற குயவ னுடைய சக்கரத்தினைப் போல, பிராரப்த வாசனையினாலே, சரீராதிகளோடு கூடிச் சஞ்சரித்துக் கொண்டிருத்தல், சதேக கைவல்யம் ஆகிய ஜீவந் முக்தி ஆம். என உணர்க (156)

## ஜீவன் முக்தியில் சங்கை.

[பிரஹ்ம ஞானம் உண்டாவுடனே சூரிய சந்நிதானத் தில் இருள் (இராமை) போல, அஞ்ஞானமும், அதன் காரி யம் ஆகிய சரீரம் முதலியன அனைத்தும், நீங்கி விடுதலே சொலற் கரிய விதேக கைவல்யம் என்று கூறுவார்கள். ஆத்ம ஞானத்தினால் அடையத் தக்கது இவ் வாறு இருக்க, ஆத்ம ஞானத்திற்கும், விதேக கைவல்யத்திற்கும், மத்தியில் ஜீவந் முக்தி என்று ஒன்று இருக்கின்றது என்று கூறுவது எங்ஙனம் பொருந்தும் என்று கேட்கில், ரஜ்ஜுவினிடத்து சர்ப்பப் பிராந்தி நீங்கியும், அதன் காரியம் ஆக உண்டா கின்ற பய கம்பம் ஆதி பொருந்துதல் போல, ஞானத்தினால் அஞ்ஞானம் கெடினும், என்று கூறி, அடுத்த கவியில் முடிக்கின்றார் ]

பரமமா ஞானந்தோன் றுதலுமே கதிர்முன்
பாயிருள்போ லஞ்ஞானத் துடனதன்கா ரியமாம்,
புரமுதலா யினவனைத்து மகன்றிடுத ருனே
புகலரிய விதேககைவல்லியமென் றிசைப்பர்,
உரமுறுமிங் கிதுவாகச் சீவன்முத்தி யுளதென்
றுரைப்பதெவ்வா றெனிற்கயிற்றி னரவமயக்
வருமதன்கா ரியமாகும் பயகம்ப மாதி [கொழிந்தும்,
மருவுதல்போன் ஞானத்தா லஞ்ஞானங் கெடினும். (157)

(இ—ள்) பரமம் ஆம் ஞானம் - மேலாகிய (பிரஹ்மாத்ம ஐக்ய) ஞான மானது, தோன்றுதலுமே - உண்டான வுடனே, கதிர் முன் - சூரிய சந்நிதானத்தில், பாய் - (வந்து) பாய்ந்த, இருள் - அந்தகாரம் (நாசம் அடைவது), போல் - போல, அஞ்ஞானத்துடன் - (உபாதான காரண மான) அஞ்ஞானத்தோடு, அதன் காரியம் ஆம் - அஞ்ஞான காரியம் ஆகிய, புரம் முத லாயின - சரீரம் முதலிய, அனைத்தும் - யாவும், அகன்றிடுதல் தானே - நீங்கி விடுவதே. புகல் அரிய - சொலற் கரிய, விதேக கைவல்லியம் - விதேக கைவல்லியம், என்று - என, இசைப்பர் - பெரியோர் கூறுவார்கள், உரம் - (ஆத்ம) ஞானத்தினால், உறும் - அடையத் தக்கது, இங்கு - இவ் விடத்து, இது ஆக - இவ் வா றிருக்க, சீவன் முத்தி - (ஆத்ம ஞானத்திற்கும், விதேக கைவல்லியத்திற்கும், மத்தியில) சீவன் முத்தி (என்று ஒன்று), உளது - இருக்கின்றது, என்று - என, உரைப்பது - கூறுவது, எவ் வாறு - எங்ஙனம் (பொருந்தும்), எனில் - என்று கேட்பாயாகில், [திருஷ்டாந்தத்தோடு ஜீவன் முக்தியினைக் கூறுகின்றார்] கயிற்றின் - ரஜ்ஜுவினிடத்து, அரவ மயக்கு - சர்ப்பப் பிராந்தி, ஒழிந்தும் -

நிவிர்த்தியாகியும், வரும் - உண்டாகின்ற, அதன் - அந்த ரஜ்ஜு சர்ப்பப் பிராந்தியினது, காரியம் ஆம் - காரியமாகிய, பய கம்பம் ஆதி - பயம் நடுக்கம் முதலியன, மருவுதல் - (சர்ப்பம் அன்று, ரஜ்ஜு என்று, அறிந்த உடனே நிவிர்த்தியாகாமல், சில காலம்) பொருந்தியிருக்குதல், போல் - போல, ஞானத்தால - (பிரஹ்ம ஆத்ம ஐக்கிய) ஞானத்தினால், அஞ்ஞானம் கெடினும் - அஞ்ஞானம் நாசமாயினும். எ—று. தான் - அசை.

(இச் செய்யுள் குளகம்)

மேலான பிரஹ்மாத்ம ஐக்கிய ஞானம் உண்டான உடனே, சூரிய சந்நிதானத்தில் வந்து பாய்ந்த இருள் நாசம் அடைவது போல, உபாதான காரணம் ஆன அஞ்ஞானத்தோடு அஞ்ஞான காரியம் ஆகிய சரீரம் முதலியன யாவும் நீங்கிவிடுவதே, விதேக கைவல்யம் என்று பெரியோர் கூறுவார்கள்.

ஆத்ம ஞானத்தினால், அடையத் தக்கது இவ் விடத்து இவ் வாறிருக்க, ஆத்ம ஞானத்திற்கும், விதேக கைவல்யத்திற்கும் மத்தியில், ஜீவந் முக்தி என்று ஒன்று இருக்கின்றது என்று கூறுவது எங்ஙனம் பொருந்தும் என்று கேட்பாயாகில், ரஜ்ஜுவினிடத்துச் சர்ப்பப் பிராந்தி நிவிர்த்தி ஆகியும், அந்த ரஜ்ஜு சர்ப்பப் பிராந்தியினது, காரியம் ஆகிய பயம் நடுக்கம் முதலியன, சர்ப்பம் அன்று ரஜ்ஜு என்று அறிந்த உடனே நிவிர்த்தியாகாமல், சில காலம் பொருந்திபிருத்தல் போல, பிரஹ்ம ஆத்ம ஐக்கிய ஞானத்தினால், அஞ்ஞானம் நாசம் ஆயினும், என அடுத்த கவியில் முடிவுறுகிறதென்று உணர்க. (157)

[அஞ்ஞானத்தின் காரியம் ஆகிய சரீரம் முதலியன உபாதானம் நசித்தும், உபாதேயம் பிராரப்த க்ஷயபரியந்தம் பொருந்தியிருக்கும் என்னும் ஏதுவினாலும், பிரஹ்ம ஞானம் உண்டான அந்த க்ஷணத்திலேயே, நாசம் அடைகின்ற அஞ்ஞானத்தினோடு கூடவே, அஞ்ஞான காரியம் ஆகிய சரீரமும், நாசம் அடைந்து போகும் ஆயின், பிரஹ்ம வித்தியா சம்பிரதாயத்தின் விச்சேதம் ஆம் என்னும் ஏதுவினாலும், பரம சிவத்தினால்; பிரஹ்மா, பிரஹ்மாவினால், பிரஜாபதி, பிரஜா பதியினால், மநு, மநுவினால், இக்ஷுவாகு முதலிய பிரஜைகள் யாவரும் பிரஹ்ம வித்தையினை அறிந்தார்கள். என்று பிரஹ்ம வித்தியாசம் பிரதாயக் கிரமத்தினைக் கூறுகின்ற சாந்தோக்கியம் பிருகதாரணியாதி உபநிஷத் வாக்கியங்கட்கு விரோதம் ஆம் என்னும் ஏதுவினாலும், என்று கூறி அடுத்த கவியில் முடிக்கின்றார்.]

அதனதுகா ரியமாகு முடம்பாதி நிற்கு
மதனானும் பிரமஞா நந்தோன்றும் பொழுதே,
சிதைதருமஞ் ஞானமுட னுடம்பொழியு மாயிற்
றிகழ்பிரம வித்தியா சம்பிரதா யந்தான்,
கதியொழியு மதனானும் பரசிவனாற் பிரமன்
கமலனா லுயர்பிரசா பதியவனான் மநுவாம்,
புதமநுவான் மநுடருணர்ந் தனரெனவே முறைமை
புகல்சுருதி விரோதமா மதனானு மன்றே. (158)

(இ—ள்) அதனது - அந்த அஞ்ஞானத்தினது, காரியம் ஆகும் - காரியம் ஆகிய, உடம்பு ஆதி - சரீரம் முதலியன, நிற்கும் -(உபாதானம் நசித்தும், உபாதேயம் பிராரப்த க்ஷய

பரியந்தம் பொருந்தி) இருக்கும், அதனுனும் - (என்னும்) ஏதுவினுலும், பிரம ஞாநம் - பிரஹ்ம ஞாநம். தோன்றும் பொழுதே - உண்டான அந்த க்ஷணத்திலேயே, சிதை தரும் - நாசத்தை அடைகின்ற, அஞ்ஞாநம் உடன் - அஞ்ஞாநத்தோடு கூடவே. உடம்பு - (அஞ்ஞாந காரிய மாகிய) சரீரமும், ஒழியும் ஆயின் - நாசமடைந்து போகுமேயாயின், திகழ் - விளங்காநின்ற பிரம வித்தியா சம்பிரதாயம் - பிரஹ்ம வித்யா சம்பிரதாயத்தின், கதி - சம்பந்தம், ஒழியும் - விச்சேத மாம், அதனுனும் - (என்னும்) ஏதுவினுலும், பரசிவனுல் - பரம சிவத்தினுல், பிர மன் - பிரம்மாவும், கமலனுல் - பிரம்மாவினுல், உயர் - சிரேஷ்டம் பொருந்திய, பிரசாபதி - பிரஜாபதியும், அவ னுல் - பிரஜாபதியினுல், மநு ஆம் - மநுவும், புத மநு வால் - ஞாநத்தோடு கூடிய மநுவினுல், மநுடர் - இக்ஷ்வாகு முதலிய பிரசைகள் யாவரும், உணர்ந்தனர் (பிரம்ம வித்தையினை) அறிந்தார்கள், என - என்று, முறைமை - (பிரஹ்ம வித்தியா சம்பிரதாயக்) கிரமத்தினை, புகல் -அறை கின்ற, சுருதி விரோதம் ஆம் - (சாந்தோக்கிய பிருகதாரண் ணியாதி) உபநிஷத் (வாக்கியங்கட்கு) விரோத மாம், அத னுனும் - (என்னும்) ஏதுவினுலும். எ—று.

தான்-ஏ-அன்று-ஏ-அசை.

(இச் செய்யுள் குளகம்)

அஞ்ஞாநத்தின் காரியம் ஆகிய சரீர முதலியன. உபா தாநம் நசித்தும், உபாதேயம் பிராரப்தக்ஷய பரியந்தம் பொருந்தியிருக்கும் என்னும் ஏதுவினுலும், பிரஹ்ம ஞாநம் உண்டான அந்த க்ஷணத்திலேயே நாசத்தினை அடை

கின்ற அஞ்ஞானத்தோடு கூடவே, அஞ்ஞான காரிய மாகிய சரீரம் நாசம் அடைந்து போகு மாயின், விளங்காநின்ற பிரஹ்ம வித்தியா சம்பிரதாயத்தின் சம்பந்தம் விச்சேதம் ஆம் என்னும் ஏதுவினாலும், பரம சிவத்தினால், பிரஹ்மாவும், பிரஹ்மாவினால், பிரஜாபதியும், பிரஜாபதியினால், மநுவும், மநுவினால் இக்ஷுவாகு முதலிய பிரஜைகள் யாவரும் பிரஹ்ம வித்தையினை அறிந்தார்கள் என்று, பிரஹ்ம வித்தியா சம்பிரதாயக் கிரமத்தினை அறைகின்ற சாந்தோக்கிய பிரகதாரண்யாதி உபநிஷத் வாக்கியங்கட்கு விரோதம் ஆம் என்னும் ஏதுவினாலும், எனக் கூறி அடுத்த செய்யுளில் முடிக்கின்றார் என உணர்க. (168)

[சிறந்த பிரஹ்ம ஞானிக்கு ஆத்ம ஞானத்திற்கும், விதேக கைவல்யத்திற்கும், மத்தியில் ஜீவந் முக்தி உரியது ஆம். இன்னும் அந்த ஞானிக்கு ஜீவந் முக்தி சித்தித்தற்கு, சுக துக்க பிராரப்த கர்ம வாசனையும், அஞ்ஞானத்தின் லேசம் இருப்பதாகவும், அங்கீகரித்துக் கொள்ளுகின்றபடியால், அஞ்ஞான லேச சத்பாவத்தினால், சரீர ஸ்திதியும், சிஷ்யர்களுக்கு பிராப்த கரும வாசனா சத்பாவத்தினால், உபதேசம் சிரவணம் முதலியனவும், எப் பொழுதும் சித்திக்கும் என்றும், ஜீவந் முக்தனது சஞ்சித கர்மம் அக்நியில் பிரவேசித்த காய்ந்த புல்லைப் போல, ஆத்ம ஞானத்தினால் தகிக்கப்பட்டுப்போம். பிராப்த கர்மம் ஆனது, அநுபவித்து நிவிர்த்தி யாம். ஆகாமிய கர்மம் ஆனது, கர்த்திருத் தன்மை நீங்கியபடியால், ஜீவந் முக்தன் ஜாதி வர்ண ஆச்சிரம ரூப அதிகாரம் இன்றியிருத்தலின், அவனை பொருந்தமாட்டாது என்றும், கூறுகின்றார்.]

செஞ்ஞானிக் குரித்தாகுஞ் சீவங் முத்தி
சித்தித்தற் குற்றபிரா ரப்தவா சனையோ,
டஞ்ஞான லேசசத் பாவவுடம் பாட்டா
லாகநிலை யுஞ்சீடர்க் குபதேசா திகமு,
மெஞ்ஞான்றுங் கிடைத்திடுமா லச்சீவங் முத்தற்
சிரிதருஞ்சஞ் சிதமங்கி புகுமுளிபுற் போல,
மெய்ஞ்ஞானத் தாற்பிரா ரப்தநுகர்ந் தொழியு
மேல்வினைகூ டாதநதி காரியா தலினால். (159)

(இ—ள்) செம் - சிறந்த, ஞானிக்கு - (பிரஹ்ம) ஞானிக்கு, சீவங் முத்தி - (ஆத்ம ஞானத்திற்கும், விதேக கைவல்யத்திற்கும். மத்தியில்) ஜீவங் முத்தி, உரித்து ஆகும் - உரிய தாம், சித்தித்தற்கு — (இன்னும் அந்த ஞானிக்கு) (சீவங் முத்தி) சித்தப்பதற்கு, உற்ற - பொருந்தி யிராநின்ற, பிராரப்த வாசனை ஒடு - (சுக துக்க) பிராரப்த (கர்ம) வாசனையும், அஞ்ஞான லேச சத்பாவ - அஞ்ஞானத் தின் லேசம் இருப்பதாகவும், உடம்பாட்டால் - அங்கீ கரித்துக் கொள்ளுகின்றபடியால், ஆகம் நிலையும் - அஞ் ஞான லேச சத்பாவத்தினால்) சரீர ஸ்திதியும், சீடர்க்கு - சிஷ்யர்களுக்கு, உபதேச ஆதிகமும் - (பிராரப்த கரும வாசநா சத்பாவத்தினால்) உபதேசம் சிரவணம் முதலியன வும், எஞ் ஞான்றும் - எப்பொழுதும், கிடைத்திடும் - சித்திக்கும், [ஜீவங் முக்தருக்கு, ஜீவங் முக்தி காலத்தில். சஞ்சித கர்மம், பிராரப்த கர்மம், ஆகாமிய கர்மம், பற்றாது என்று காரணங் கூறுகின்றார்], அச் சீவங் முத்தற்கு - அந் தச் சீவங் முத்தனது, சஞ்சிதம் - சஞ்சித (கருமம்)ம், அங்கி புகும் - அக்கினியில் பிரவேசித்த, முளி புல் - காய்ந்த புல்லை, போல - போல், மெய் ஞானத்தால் - ஆத்ம ஞானத்தினால்,

றி தரும் - தகிக்கப்பட்டுப் போம், பிராரப்தம் - பிராரப்த (கர்ம)மானது, நுகர்ந்து - அநுபவித்து, ஒழியும்- நிவிர்த்தி யாம், மேல் வினை - ஆகாமிய கர்ம மானது, அநதிகாரி ஆதலின் - (கர்த்திருத் தன்மை நீங்கியபடியால்) ஜீவந் முத்தன் சாதி வர்ணாசிரம ரூப அதிகார மின்றி யிருத்தலின், கூடாது - (அவனை) பொருந்தமாட்டாது. எ—று.

ஆல் - ஆல் - அசை.

சிறந்த பிரஹ்ம ஞானிக்கு, ஆத்ம ஞாநத்திற்கும், விதேக கைவல்யத்திற்கும், மத்தியில், ஜீவந் முக்தி உரியது ஆம். இன்னும், அந்த ஞானிக்குச், சீவந் முக்தி சித்திப்பதற்கு, சுக துக்க பிராரப்த கர்ம வாசனையும், அஞ்ஞாந லேசம் இருப்ப தாகவும், அங்கீகரித்துக் கொள்ளுகிறபடியினால், அஞ்ஞாந லேச சத்பாவத்தினால், சரீர ஸ்திதியும், சிஷ்யர் களுக்கு பிராரப்த கர்ம வாசநா சத்பாவத்தினால், உபதேசம் சிரவணம் முதலியனவும், எப் பொழுதும் சித்திக்கும் என்றும்,

அந்தச் சீவந் முக்தனது, சஞ்சித கர்மம். அக்கினியில் பிரவேசித்த காய்ந்த புல்லைப் போல, ஆத்ம ஞாநத்தினால், தகிக்கப்பட்டுப் போகும் பிராரப்த கர்மம் ஆனது, அநுப வித்து நிவிர்த்தி யாம். ஆகாமிய கர்மம் ஆனது, கர்த்திருத் தன்மை நீங்கியபடியால், ஜீவந் முக்தன் சாதி வர்ண ஆசிரம ரூப அதிகாரம் இன்றியிருத்தலினால், அவனை பொருந்த மாட்டாது என்றும், உணர்க. (159)

சங்கை உத்தரம்.

[குருவின் அநுக்கிரகத்தினால், தான் அடைந்த சிரேஷ் டம் உடைய பிரஹ்ம ஆத்ம ஐக்கிய ஞாநத்தினால், நாசம்

அடைந்த கர்மமே, பிராரப்த கர்மத்தினுல் உளவாம் போகத்தினைக் கொடுக்கும் ஆயின், அந்தக் கர்மமே, பின்னர் அடையத் தக்க ஜந்மத்தினையும் உண்டாக்கும் என்று நீ கூறுவாயாகில், வறுக்கப்பட்ட நெல், கடலை கொள் முதலிய பீஜங்கள், அநுபவிப்பது மாத்திரத்திற்கே அல்லது. அங்குராதி ஜநநத்திற்கு, வறுத்த விதைகள் ஏது வல்ல, அந்தத் திருஷ்டாந்தம் போல், ஆத்ம ஞாநிக்கு உண்டாகின்ற பிராரப்த கர்மம் ஆனது, அநுபவித்தலினுலே நிவிர்த்தியாவது ஆய், நாசம் அடைகின்ற புநர் ஜந்மத்திற்கு காரணம் ஆக மாட்டாது என ஞாநிகள் கழறுநிற்பர் எனச் சமாதாநமும், கூறுகின்றுர்.]

பெற்றவுயர் ஞாநத்தா லொழிந்தவினை தானே
பிராரப்த போகத்தை யளிக்குமெனி லதுமே,
லுற்றவுட லுற்பத்தி தனையுமியற் றுறுமென்
றுரைப்பில்வறு விதைநுகர்ச்சிக் கன்றியே முளைக்கு,
மற்றதுதான் காரணமன் றதுபோல ஞாநி
வருகரும நுகர்ச்சியினு னேயொழிவ தாகி,
யற்றமுறு பிறவிமேல் விளைத்திடுதற் கேது
வாகாதென் றியம்புறுவ ரறிவறிதக் கவரே. (160)

(இ—ள்) பெற்ற - (குருவின் அநுக்கிரகத்தினுல், தான்) அடைந்த, உயர் - சிரேஷ்டமுடைய, ஞாநத்தால் - (பிரஹ்ம ஆத்ம) ஐக்கிய ஞாநத்தினுல்; ஒழிந்த - நாசமடைந்த, வினை தானே - கர்மமே, பிராரப்த - பிராரப்த (கருமத்தினுல் உளவாம்), போகத்தை - போகத்தினை, அளிக்கும் எனில் - கொடுக்குமாயின், அது - அந்தக் கர்மமே, மேல் - பின்னர், உற்ற - அடையத் தக்க, உடல்

உற்பத்திதனையும் - ஜந்மத்தினையும், இயற்று உறும் - உண்டாக்கும், என்று - என, உரைப்பில் - நீ கூறுவா யாகில், [வறுத்த விதை போன்று, மறு ஜந்மத்தினை கொடுக்கும் முளைத்தற்குக் காரணம் இன்று என்று கூறுகின்றார்] வறு - வறுக்கப்பட்ட, விதை - (நெல் கடலை கொள் முதலிய) பீஜங்கள், நுகர்ச்சிக்கு ஏ - அநுபவிப்பது மாத்திரத்திற்கே, அன்றி - அல்லது, முளைக்கு - (அங்குராதி) ஜநநத்திற்கு, அது - (வறுத்த) விதைகள், காரணம் - ஏது, அன்று - அல்ல, அது போல - அந்தத் திருஷ்டாந்தம் போல், ஞானி - (ஆத்ம) ஞானிக்கு, வரு - உண்டாகின்ற, கருமம் - (பிராரப்த) கர்ம மானது, நுகர்ச்சியினுலேயே, அநுபவித்தலினுலேயே, ஒழிவது ஆகி - நிவிர்த்தியாவதாய், அற்றம் - நாசம், உறு - அடைகின்ற, மேல் பிறவி - புநர் ஜந்மத்தினை, விளைத்திடுதற்கு - உண்டாக்குவதற்கு, ஏது - காரணம், ஆகாது - ஆகமாட்டாது, என்று - என, அறிவு அறி தக்கவர் - பிரஹ்ம ஞானிகள், இயம்புறுவர் - கழறுகிற்பர். எ—று.

"வினை தானே", "உற்பத்தி தானே" என்பவற்றில், தான் - தன், மற்று, தான் - ஏ - அசை.

குருவின் அநுக்கிரகத்தினுல், தான் அடைந்த சிரேஷ்டம் பொருந்திய பிரஹ்ம ஆத்ம ஐக்கிய ஞானத்தினுல் நாசம் அடைந்த கர்மமே, பிராரப்த கர்மத்தினுல் உளவாம் போகத்தினை கொடுக்கும் ஆயின், அந்தக் கர்மமே பின்னர் அடைத் தக்க ஜந்மத்தினையும் உண்டாக்கும் என நீ கூறுவாயாகில், (சமாதாநம் கூறுகின்றார்).

வறுக்கப்பட்ட நெல் கடலை, கொள் முதலிய பீஜங்கள், அநுவிப்பது மாத்திரத்திற்கே அல்லது, அங்குராதி ஜநநத்திற்கு, வறுத்த விதைகள் ஏது வல்ல, அந்தத் திருஷ்டாந்தம் போல், ஆத்ம ஞாநிக்கு உண்டாகின்ற பிராரப்த கர்மம் ஆனது, அநுபவித்தலினுலேயே நிவிர்த்தி யாவது ஆய், நாசம் அடைகின்ற புநர் ஜந்மத்தினை உண்டாக்குவதற்குக் காரணம் ஆக மாட்டாது என பிரஹ்ம ஞாநிகள் கூறுவார்கள் என உணர்க. (160)

[கூறிய பிராரப்த கர்மம் ஆனது, வேறு லோகத்திற்குச் செல்லுதலில் அதிகாரம் இன்றி வதிகின்ற மநுடர்கட்கு மாத்திரமே, ஒரு சரீரத்தில் நெருங்கி அநுபவித்துத் தீரும், வேறு லோகங்களுக்குச் செல்லுதற்கண் அதிகாரம் உடையவர்க ளாய், உயர்ந்த மநு வியாசாதி மகாபுருஷருக்குப், பத்து எண்ணிக்கை யுடைய சரீரத்தின்கண் பொருந்தி அநுபவித்தால் அன்றி, பிராரப்த கர்மம் நீங்கமாட்டாது என்னும் நியமம் இருப்பினும், ஆத்ம ஞாநத்தின் திரோதாநம் இன்றி. அந்தப் பத்துச் சரீரத்தை பொருந்தி பிராரப்த கர்மத்தை அநுபவித்தலால், ஒரு புருஷனுக்கு, இவ்விடத்து பால்ய கௌமார யௌவந வார்த்தைக்கிய முதலியவற்றுல் வேறுபாடு உண்டாயினும், அந்த அவஸ்தாவிசிஷ்ட ஞன புருஷனுக்கு ஒரு சரீரமே யாக இருக்கின்ற தன்மை ஆம் என்று செவ்வை யாக அறிவா யாக எனக் கூறுகின்றுர்]

அறைந்தநுகர் வினையதுதான் லோகயாத் திரைக
  ளநதிகரித் துறுநரற்கே யொருடம்பு தன்னிற்,
செறிந்துநுகர் வாமவற்றி னதிகிருத ராகிச்
  சிறந்தமா புருடர்க்குத் தசசங்கை யுடம்பி,

னுறைந்தலது தீர்ந்திடா தெனினுமறைப் பின்றி
யுறுதலா லொருவனுக்கிங் கிளமைமுதற் பேதம்,
பிறந்திடினு மவனுக்கோ ருடம்பேயாய் நின்ற
பெற்றிபோ லாகுமென வுணர்ந்திடுக தெரிந்தே. (161)

(இ—ள்) அறைந்த - புகன்ற, நுகர் வினையது - பிராரப்த கர்ம மானது, லோக யாத்திரைகள் - (வேறு) லோகத்திற்குச் செல்லுதலில், அநதிகரித்து - அதிகார மின்றி, உறும் - வதிகின்ற, நரர்க்கே - மநுடர்கட்(கு மாத் திர மே, ஓர் - ஒரு, உடம்பு தன்னில் - சரீரத்தில், செறிந்து - நெருங்கி, நுகர்வு ஆம் - அநுபவித்துத் தீரும். அவற்றின் - வேறு லோகங்களுக்குச் செல்லுதற்கண், அதி கிருதர் ஆகி - அதிகார முடையவர்க ளாய், சிறந்த - உயர்ந்த, மா - (மநு வியாசாதி) மஹா, புருடர்க்கு - புருஷருக்கு, தச சங்கை - பத்து எண்ணிக்கை (யுடைய), உடம்பின் - சரீரத்தின் கண், உறைந்து அலது - பொருந்தி (அநுபவித்தால்) அன்றி, தீர்ந்திடாது - (பிராரப்த கர்மம்) நீங்கமாட்டாது, எனினும், என (நியமம்) இருப்பினும், மறைப்பு இன்றி - (ஆத்ம ஞானத்தின்) திரோதாந மின்றி, உறுதலால் - (அந் தப் பத்துச் சரீரத்தை) பொருந்தி (பிராரப்த கருமத்தை அநுபவித்தலால்), ஒருவனுக்கு - ஒரு புருஷனுக்கு, இங்கு - இவ் விடத்து, இளமை முதல் பேதம் - பால்ய (கௌமார யௌவந வார்த்தக்கிய) முதலியவற்றால் வேறுபாடு, பிறந் திடினும் - உண்டாயினும், அவனுக்கு - அந்த (அவஸ்தா விசிஷ்ட னன) புருஷனுக்கு, ஓர் - ஒரு, உடம்பே ஆய் - சரீரமேயாக, நின்ற - இருக்கின்ற, பெற்றி - தன்மை, போல் - போல, ஆகும் - ஆம், என - என்று, தெரிந்து - செவ்வை யாக, உணர்ந்திடுக - அறிவாயாக. எ—று.

தான் - ஏ - அசை.

"உடம்பு தன்னில்" என்பதில், தன் - அசை.

"வினையது', என்பதில், அது பகுதிப் பொருள் விகுதி.

புகன்ற பிராரப்த கர்மம் ஆனது, வேறு லோகத்திற்குச் செல்லுதலில் அதிகாரம் இன்றி வதிகின்ற மநுடர்கட்கு மாத்திரமே, ஒரு சரீரத்தில் நெருங்கி அநுபவித்துத் தீரும்.

வேறு லோகத்திற்குச் செல்லுதலில் அதிகாரம் உடையவர்களாய், உயர்ந்த மநு வியாசாதி மகா புருஷர்சட்குப் பத்து எண்ணிக்கை உடைய சரீரத்தின்கண் பொருந்தி அநுபவித்தால் அன்றி, பிராரப்த கர்மம் நீங்க மாட்டாது என நியமம் இருப்பினும், ஆத்ம ஞாநத்தின் திரோதாநம் இன்றி, அந்தப் பத்துச் சரீரத்தினைப் பொருந்தி பிராரப்த கர்மத்தினை அநுபவித்தலால், ஒரு புருஷனுக்குப் பால்ய கௌமார யௌவந வார்த்தைக்கிய முதலியன உண்டாயினும், அந்த அவஸ்தா விசிஷ்டனான புருஷனுக்கு, ஒரு சரீரமே யாக இருக்கின்ற தன்மை போல, ஆகும் என்று செவ்வை யாக அறிவா யாக என உணர்க, (161)

[விஷயங்கள் யாவற்றிற்கும் மித்தை யாத்தன்மையினைச் சித்தம் செய்கின்ற ஆத்ம ஞாநத்திற்கும், விஷயங்கள் யாவற்றிற்கும் சத்தியத் தன்மையினைத் சித்தம் செய்கின்ற சரீரத்தின் பிராரப்த கர்மத்திற்கும், பரஸ் பரம் விரோதம் இருக்கின்றபடியால், விஷயங்களை மித்தை என உணர்ந்த பிரஹ்ம ஞாநிக்கு, சத்தியம் ஆன பிராரப்த கர்ம போகம் எவ் வாறு பொருந்தும் என்று சங்கித்து, ஜாக்கிர

அவஸ்தையில் நாசத்தினை அடைகின்ற ஸ்வப்நம், இந்திர ஜாலம் முதலியவற்றில், வநிதாதி சேர்க்கையினால், ஜநிக்கா நின்ற மைதுநம் முதலியன நாசம் இன்றிய அநுபவம் உண்டாகின்றது போல, பிராரப்த கர்ம பல போகத்துக் குரிய தேகாதி பதார்த்தங்கள் சத்தியமா யிருந்தால் தான் அநுபவிக்கலாம். மித்தை யாக இருந்தால் அநுபவிக்க முடியாது என்னும் நியமம் இல்லாதப்படியினால், பிராரப்த போக அநுபவமும், ஆத்ம ஞாநமும், பரஸ்பரம் விரோதம் ஆகாது என்று சமாதாநம் கூறுகின்றார்.]

விடயங்க ளனைத்தினுக்கும் பொய்ம்மைசா திக்கு
  மெய்ஞ்ஞாநந் தனக்குமவைக் குண்மைசா திக்கு,
முடலினுகர் வினைக்குமொன் றற்கொன்று விரோத
  முண்மையினா ஞாநிக்கு நுகர்வெங்ங னென்னிற்,
கெடுகநவு முதலவற்று ணைதுநா திகளாங்
  கேடினுகர் வாதல்போற் பிராரப்த போக,
விடயங்க ளுண்மையா யலதாகா தென்னும்
  விதியின்மை யானுகர்வு முணர்வுமுர னுவால். (162)

(இ—ள்) விடயங்கள் - விஷயங்கள், அனைத்தினுக்கும் - யாவற்றினுக்கும், பொய்ம்மை — மித்தையாத தன்மையினை, சாதிக்கும் — சித்தம் செய்கின்ற, மெய் ஞாநம் தனக்கும் - ஆத்ம ஞாநத்திற்கும், அவைக்கு — விஷயங்கள் யாவற்றிற்கும், உண்மை - சத்தியத் தன்மையினை, சாதிக்கும் - சித்தம் செய்கின்ற, உடலின் - சரீரத்தினது, நுகர் வினைக்கும் - பிராப்த கர்மத்திற்கும், ஒன்றற்கு ஒன்று - பரஸ்பரம், விரோதம் உண்மையினால் - விரோதம் இருக்கின்றபடியால், ஞாநிக்கு - (விஷயங்களை

மித்தை என உணர்ந்த பிரஹ்ம) ஞானிக்கு, நுகர்வு - (சத்திய மான பிராரப்த கர்ம போக) அநுபவம், எங்ஙன் - எவ்வாறு (பொருந்தும்), என்னில் – என்று கேட்கில், [சமாதானங் கூறுகின்றார்] கெடு கனவு (ஜாக்கிரத்தில்) நாசத்தை அடையாநின்ற சொப்பனம், முதலியவற்றுள் (இந்திர ஜாலம்) முதலியவைகளில், மைதுன ஆதிகள் - (வனிதாதி சேர்க்கையால் ஜநிக்காநின்ற) மைதுனம் முதலிய, கேடு இல் நுகர்வு ஆம் - நாச மின்றிய அநுபவம், ஆதல் - உண்டாகுதல், போல் - போல, பிராரப்த போக - பிராரப்த (கர்ம பல) போகத்துக் குரிய, விடயங்கள் - (தேகாதி) பதார்த்தங்கள், உண்மை ஆய் - சத்தியமா (யிருந்தால் தான் அநுபவிக்க லாம்), அலது - மித்தையா யிருந்தால், ஆகாது - அநுபவிக்க முடியாது, என்னும் - என்னும், விதி இன்மையான் - நியம மில்லாதபடியினுல், நுகர்வும் - (பிராரப்த போக) அநுபவமும், உணர்வும் - (ஆத்ம) ஞானமும், முரணு - (பரஸ்பரம்) விரோத மாகா. எ—று.

ஆல் - "மெய்ஞ் ஞானம் தனக்கு" என்பதில், தன் - அசை.

விஷயங்கள் யாவற்றினுக்கும் மித்தியாத் தன்மையினைச் சித்தம் செய்கின்ற ஆத்ம ஞானத்தினுக்கும், விஷயங்கள் யாவற்றிற்கும் சத்தியத் தன்மையினைச் சித்தம் செய்கின்ற சரீரத்தினது பிராரப்த கர்மத்தினுக்கும், பரஸ்பரம் விரோதம் இருக்கின்றபடியால், விஷயங்களை மித்தை என உணர்ந்த பிரஹ்ம ஞானிக்கு, சத்தியம் ஆன பிராரப்த கர்ம போக அநுபவம் எவ் வாறு பொருந்தும் என்று கேட்கில்,

(சமாதானம் கூறுகின்றார்)

ஜாக்கிரத்தில் நாசம் அடைகின்ற ஸ்வப்நம், இந்திர ஜாலம் முதலியவற்றில், வநிதாதி சேர்க்கையால், ஜநிக்கா நின்ற மைதுநம் முதலியன உண்டாதல் போல, பிராரப்த கர்ம பல போகத்துக் குரிய தேகாதி பதார்த்தங்கள் சத்தியமா யிருந்தால் அநுபவிக்க லாம். மித்தை யாக இருந்தால் அநுபவிக்க முடியாது என்னும் நியமம் இல்லாதபடியினால், பிராரப்த போக அநுபவமும், ஆத்ம ஞாநமும், பரஸ் பரம் விரோதம் ஆகா தென உணர்க என்று சமாதாநம் கூறுகின்றார் என உணர்க. (162)

[சுக்தியினிடத்து சூரிய கிரணத்தினால் உண்டாகிய ரஜகப் பிராந்தியானது, நேதம் ரஜதம் என்னும் ஞாநம் உண்டாய் நிவிர்த்தி யான அப் பொழுதே ரஜதம் நிவிர்த்தியாதல் போல, பிரஹ்ம ஞாநத்தினால், பந்த ஹேது வான அஞ்ஞாநம் நிவிர்த்தியாதலும், இந்தப் பிரபஞ்சத்தினது சுழுத்தியன் போலப் பிரதிதியே இல்லாததனால், பிராரப்த கர்ம போக அநுபவம் ஞாநிக்கு எவ் வாறு பொருந்தும் என்று கேட்கில், சமாதாநம். பிராந்தி சோபாதிகம் நிருபாதிகம் என இரு வகைத்தாம். அதனால், ஜிளிஞ்சிலினிடத் துண்டாகிய வெள்ளி நிருபாதிகப் பிராந்தி யாகிய தன்மையினால், அதிஷ்டாநக் ஜிளிஞ்சிலே அறிந்த மாத்திரத்தில், ஆரோப ரஜதத் தோற்றம் நிவிர்த்தி யாம். பந்த ஹேது வாகப் பொருந்தியிருக்கின்ற தேகாத்மப் பிராந்தி யானது, சோபாதிகம் ஆகிய காரணத்தினால், நீ கூறிய சுத்தி ரஜத நிருபாதிகப் பிராந்தி போல், அன் றாகும். பின்னர், தேகாத்மப் பிராந்தி எது போல் எனில், அடுத்த கவியில் யாம் சமாதாநம் கூறு வாம் எனக் கூறுகின்றார்.]

வந்தமய லொழிந்தனவே யிப்பியிடை வெள்ளி
மாய்தல்போ லறிவினு லஞ்ஞாநங் கெடலு,
மிந்தவுல கதுதோற்ற மேயிலா மையினு
லெங்ஙனமாம் வினைப்போக நுகர்ச்சியெனி லிப்பி,
தந்தவிர சதநிருபா திகப்பிரமை யாகுந்
தன்மையா லுணர்ந்தளவில் வெள்ளியுரு வொழியும்,
பந்தமுறு மிதுசோபா திகமாகு மதனுற்
பகர்ந்ததுபோ லன்ருமற் றெங்ஙனெனி லுரைப்பாம். (163)

(இ—ள்) இப்பி யிடை - சுத்தியி னிடத்து, வந்த - (சூரிய கிரணத்திஞல்) உண்டாகிய, மயல் -(ரசதப்) பிராந்தி யானது, ஒழிந்த அளவே - (நேதம் ரசதம் என்னும் ஞாநம் உண்டாய்) நிவிர்த்தி யான அப் பொழுதே, வெள்ளி - ரச தம், மாய்தல் - நிவிர்த்தி ஆதல், போல் - போல, அறிவி னுல் - (பிரஹ்ம) ஞாநத்தினுல், அஞ்ஞாநம் - (பந்த ஹேது வான) அஞ்ஞாநம், கெடலும் - நிவிர்த்தியாதலுல், இந்த உலகது - இந்தப் பிரபஞ்சத்தினது, தோற்றமே - (சுழுத் தியிற் போல்) பிரதீதியே, இலாமையினுல் - இல்லாததனுல், வினைப் போக - (பிராரப்த) கர்ம போக, நுகர்ச்சி - அநு பவம், எங்ஙனம் ஆம் - (ஞாநிக்கு) எவ் வாறு பொருந் தும், எனில் - என்று (நீ) கேட்கில், [சோபாதிகப் பிராந்தி நிருபாதிகப் பிராந்தி என்று, பிராந்தி இரு வகை யாம் எனக் கூறுகின்ருர்] இப்பி - கிளிஞ்சலினிடத்து, தந்த உண்டாகிய, இரசதம்- வெள்ளி, நிருபாதிகப் பிரமைஆகும் தன்மையினுல்-நிருபாதிகப் பிராந்தியாகிய தன்மையினுல், உணர்ந்த - (அதிஷ்டாநக் கிளிஞ்சிலை) அறிந்த, அளவில் - மாத்திரத்தில், வெள்ளி உரு - (ஆரோப) ரசதத் தோற்றம், ஒழியும் - நிவிர்த்தி யாம், பந்தம் உறும் - பந்த (ஏது

வாகப்) பொருந்தி யிருக்கின்ற, இது - தேகாத்மப் பிராந்தி யானது, சோபாதிகம் ஆகும் - சோபாதிக் மாம், அதனால்- அந்தக் காரணத்தினால், பகர்ந்தது - (நீ) கூறிய (சுத்தி ரசத நிருபாதிகப் பிராந்தி), போல்-போல, அன்றும் - அன் றுகும். [தேகாத்ம பிராந்தியினை அடுத்த கவியில் கூறுவாம் என்று கூறுகின்றார்] எங்ஙன் எனில்-(தேகாத்மப் பிராந்தி) எது போ லெனில். உரைப் பாம் - யாம் (சமாதாநம்) கூறு வாம் எ—று. மற்று - அசை.

"உலகது" என்பதில், அது - பகுதிப் பொருள் விகுதி.

சோபாதிகப் பிராந்தி என்பது, நதிக் கரையில் இருப் பவன், தான் தலை கீ ழாக விருக்க வில்லை என்று தனக்கு அபரோக்ஷ சாக்ஷாத்காரம் உண்டாயினும், ஜலஉபாதி யிருப் பதால், தான் தலை கீ ழாக இருப்பது போல் தோன்றும். அது போன்று, தான் தேகத் திரய விலக்ஷணன் என்ற அதிஷ்டாந ஞாநம் இருப்பினும், தேகத் திரயம், பிராரப்த கர்மம் வரை யிருப்பதால், பாதித அநுவிருத்தியாகத் தோன்றும்.

நிருபாதிகப் பிராந்தி என்பது, கிளிஞ்சிலில் வெள்ளித் தோற்றம். அதிஷ்டாநக் கிளிஞ்சிலை அறிந்தவுடன் ஆரோப வெள்ளி நாசம் ஆகிவிடும்.

சோபாதிகம் - உபாதியோடு கூடிய தாம். நிருபாதி கம் - உபாதி யின்றிய தாம். சதேக கைவல்யம் ஆகிய ஜீவந் முக்தி, சோபாதிகம் ஆம். விதேக கைவல்யம் ஆகிய தேக பாதம் நிருபாதிகம் ஆம் என உணர்க.

(பிண்டப் பொழிப்பு)

சுத்தியினிடத்தில் சூரிய கிரணத்தினால் உண்டாகிய ரஜதப் பிராந்தி யானது, ஜேதம் ரஜதம் என்னும் ஞானம் உண்டாய் நிவிர்த்தி ஆன அப் பொழுதே, ரஜதம் நிவிர்த்தி ஆதல் போல, பிரஹ்ம ஞானத்தினால், பந்த ஹேது வான அஞ்ஞானம் நிவிர்த்தியாதலும், இந்தப் பிரபஞ்சத்தினது சுழுத்தியன் போல், பிரதீதியே இல்லாததனால் - பிராரப்த கர்ம போக அநுபவம், ஞானிக்கு எவ்வாறு பொருந்தும் என்று நீ கேட்கில், பிராந்தி, சோபாதிகம் நிருபாதிகம் என இருவகைத் தாம். சிளிஞ்சினில் இடத்து உண்டாகிய வெள்ளி நிருபாதிகப் பிராந்தி யாகிய தன்மையினால், அதிஷ்டானக் கிளிஞ்சிலை அறிந்த மாத்திரத்தில், ஆரோப ரஜதத் தோற்றம் நிவிர்த்தி யாம். பந்த ஏது வாகப் பொருந் தியிருக்கின்ற தேகாத்மப் பிராந்தியானது. சோபாதிகம் ஆகிய காரணத்தினால், நீ கூறிய சுக்தி ரஜத நிருபாதிகப் பிராந்தி போல, அன் ருகும். பின்னர், தேகாத்மப் பிராந்தி, எது போல் எனில், யாம் சமாதானம் கூறுவாம் அடுத்த கவியில் எனக் கூறுகின்றார் என உணர்க. (163)

[தடாகத்தினது உயர்ந்த தீரத்தில் பொருந்தியிருப் போன், அந்தத் தடாக ஜலத்தில், தான் தலைகீழாக இருப்ப தாகத் தோற்றுவது பிராந்தி யாம் என உண்டாகி, தெளிந்த அந்தக் கரணத்தோடு கூடிய தான் இருந்தான் ஆயினும், பின்னரும், ஜல உபாதி யிருத்தலினால், தலைகீழாகத் தனது வடிவம் பிரதீதி ஆதல் போல், மூல அகங்காரமும், அத னைச் சம்பந்தித்து வருகின்ற ஜீவத் தன்மை முதலி யனவுமோ மித்தை யாம். இவற்றினை உணர்கின்ற கூடஸ் தனே தனது சொருபம் ஆம் என்று ஜீவன் முக்தன் அறிந் திருப்பினும், கூட்டமாய் உள்ள ஜீவன் முதலிய பிரபஞ்சம் சுழுத்தியிற் போல், அபாவம் ஆகாமல். ஸ்வப்நம் போலப்

பொருந்தியிருத்தலினால், ஜீவந் முக்தனுக்கு பிராரப்த கர்ம போக வியவகாரம் அங்கீகரிக்கப்பட்ட தாம் எனக் கூறுகின்றார்.]

தடத்தினுயர் கரையமர்வோ னத்தடத்துப் புனலிற்
றானதோ முகமாக விருப்பதுபொய் யென்று,
படைத்ததெளி வுளமொடிருப் பினுமதோ முகமாம்
படிவந்தோன் றுதல்போல மூலவகங் கார,
மடுத்துவரு சீவபா வாதிகமோ மித்தை
யறிதுரியன் றானெனவே யுணரினுஞ்சீ வாதித்,
தொடுத்தவுல குறுதலினாற் சீவந்முத்தன் றனக்குத்
துய்க்கும்வினைப் போகவிவ காரமுடம் பாடாம். (164)

(இ—ள்) தடத்தின் - தடாகத்தினது, உயர் - உயர்ந்த, கரை - தீரத்தின்கண், அமர்வோன் - பொருந்தியிருப்போன், அத் தடத்துப் புனலில் - அந்தத் தடாக ஜலத்தில், தான் - தான், அதோ முகம் ஆக - தலை கீழாக, இருப்பது - இருப்ப(தாகத் தோற்றுவ)து, பொய் -மித்தையாம், என்று - என, படைத்த - உண்டாகி, தெளி - தெளிந்த, உளம் ஒடு - அந்தக் கரணத்தோடு கூடி, இருப்பினும் - (தான்) இருந்தான் ஆயினும், அதோ முகம் ஆம் படிவம் - (பின்னரும் ஜல உபாதி இருத்தலினால்) தலை கீழாகி (தனது) வடிவம், தோன்றுதல் - பிரதீதி ஆதல், போல் - போல், மூல அகங்காரம் - மூலாகங்காரமும், அடுத்து - (அதனைச்) சம்பந்தித்து, வரு - வருகின்ற, சீவபாவ ஆதிகமோ - ஜீவத் தன்மை முதலியனவுமோ, மித்தை - மித்தை யாம், அறி - (இவற்றினை) உணர்கின்ற, துரியன் - கூடஸ்தனே, தான் - தனது சொரூப மாம், என - என்று, உணரினும் - (சீவந் முத்தன்) அறிந்திருப்

பினும், தொடுத்த - கூட்டமா யுள்ள, சீவ ஆதி - ஜீவங் முதலிய, உலகு - பிரபஞ்சம். உறுதலினுல் - சுழுத்தியிற் போல, அபாவம் ஆகாமல், (சொப்பநம் போல) பொருந்தி யிருத்தலினுல், சீவங் முத்தன் தனக்கு - ஜீவங் முத்தனுக்கு, துயக்கும் வினைப் போக - பிராரப்த கர்ம போக, விவகா ரம் - விவகாரம், உடம்பாடு ஆம் - அங்கீகரிக்கப்பட்ட தாம். எ—று

ஏ - "சீவங் முத்தன் தனக்கு" என்பதில் - தன் - அசை.

தடாகத்தினது உயர்ந்த தீரத்தின்கண் பொருந்தி யிருப்போன், அந்த தடாக ஜலத்தில் தான் தலை கீழாக இருப்ப தாகத் தோற்றுவது மித்தையாம் என உண்டாகித் தெளிந்த அந்தக் கரணத்தோடு கூடி தான் இருந்தான் ஆயினும், பின்னரும், ஜல உபாதி யிருத்தலினுல், தலை கீழாகத் தனது வடிவம் பிரதீதி ஆதல் போல், மூல அகங் காரமும், அதனைச் சம்பந்தித்து வருகின்ற ஜீவத் தன்மை முதலியனவுமோ, மித்தையாம். இவற்றினை உணர்கின்ற கூடஸ்தனே, தனது சொரூபம் ஆம் என்று, ஜீவங் முக்தன் அறிந்திருப்பினும், கூட்டமா யுள்ள ஜீவங் முதலிய பிரபஞ் சம் சுழுத்தியிற் போல, அபாவம் ஆகாமல், ஸ்வப்நம் போலப் பொருந்தியிருத்தலினுல், ஜீவங் முக்தனுக்கு பிரா ரப்த கர்ம போக வியவகாரம் அங்கீகரிக்கப்பட்ட தாம் என உணர்க. (164)

[ஜீவங் முக்தனுக்கு மைத்திரி கருணை முதிதை உபேக்ஷை யாகிய நற் குண சதுஷ்டயங்கள் உரித் தாக உள்ளன வாம். அந் நான்கனுள், பொருந்தாநின்ற சத்

புருஷரோடு கூடச் சிநேகம் செய்வது, மைத்திரி யாகும். பிரபஞ்சத்தில் வாட்டம் உற்றிருக்கின்ற துக்கிப் பிராணி களிடத்தில் வைக்கும் இரக்கம், கருணை ஆம். வருத்தம் இன்றி யிருக்கின்ற நல்ல புண்ணியவான்க ளிடத்தில் வைக்கும் விருப்பம். முதிதை ஆம். இந்த லோகத்தில், துஷ்க் கிருத்தியங்களைச் செய்கின்ற பாவிகளை, ராகத் துவேஷங் கள், பிரியாப்பிரியங்கள் என்னும் இரண்டும் இன்றி, விட்டு விடுவது உபேக்ஷை யாம் என்று உணர்வா யாக என்றும், அந்த ஜீவன் முக்தனுக்கு பஞ்சப் பிரயோசநங்கள் இருக் கின்றன, அவற்றினை மேற் கவியில் கூறு வாம் எனவும் கூறுகின்றார்.]

சீவன்முத்தற் குரியனவா மயித்திரியே கருணை
திகழ்முதிதை யுபேட்சையெனுஞ் சற்குணங்க [ளவற்றுண்
மேவுறுசற் புருடரொடு நட்புமயித் திரியா
மெலிதருதுக் கிகளிடத்தி னிரக்கமே கருணை
யோவறுநற் புண்ணியர்பால் விருப்பமே முதிதை
யுவப்புவெறுப் பிரண்டுமிலா துலகிலவ மியற்றும்,
பாவிகளை விடுதலே யுபேட்சையென வறிகப்
பயனைந்தச் சீவன்முத்தற் குளவவையீண் டுரைப்பாம்.
(165)

(இ—ள்) சீவன் முத்தற்கு - ஜீவன் முத்தனுக்கு, மயித்திரி - மைத்திரி, கருணை - கருணை, திகழ் - விளங்கா நின்ற, முதிதை - முதிதை, உபேட்சை - உபேக்ஷை, எனும் - ஆகிய, சத் குணங்கள் - நற் குண (சதுஷ்டய) ங்கள், உரியன ஆம் - உரித் தாக உள்ளன வாம், அவற் றுள் - அந் நான்கனுள், மேவு உறு - பொருந்தாநின்ற,

சத் புருடர் ஒடு - சத் புருஷரோடு கூட, நட்பு - சிநேகம் (செய்வது), மயித்திரி ஆம் - மைத்திரி யாகும், மெலி தரு- (பிரபஞ்சத்தில்) வாட்ட முற்றிருக்கின்ற, துக்கிக ளிடத்தின் - துக்கிப் பிராணிக ளிடத்தில், இரக்கம் - (வைக்கும்) இரக்கம், கருணை - கருணை யாம், ஒவு அறும் - வருத்தமின்றி யிருக்கின்ற, நல் புண்ணியர்பால் - நல்ல புண்ணியவான்க ளிடத்தில், விருப்பம் - (வைக்கும்) விருப்பம், முதிதை - முதிதை யாம், உலகில் - (இந்த) லோகத்தில், அவம் - துஷ்க்கிருத்தியங்களை, இயற்றும் - செய்கின்ற, பாவிகளை - பாவிகளை, உவப்பு வெறுப்பு இரண்டும் இலாது - ராகத் துவேஷங்கள் (பிரிய அப்பிரியங்கள் என்னும்) இரண்டும் இன்றி, விடுதல் - (விட்டு) விடுவது, உபேட்சை - உபேக்ஷை யாம், என - என்று, அறிக - உணர்வா யாக, [ஜீவந் முக்தனுக்கு பஞ்சப் பிரயோஜநம் உண்டு, அதனை மேலே கூறு வாம் எனக் கூறுகின்றார்], அந்தச் சீவந் முத்தற்கு — அந்த ஜீவந் முத்தனுக்கு, ஐந்து பயன் உள —பஞ்சப் பிரயோசநங்க ளிருக்கின்றன, அவை- அவற்றினை, ஈண்டு - இவ் விடத்து, உரைப் பாம் - கூறு வாம் (யாம்) எ—று ஏ - ஏ-ஏ-ஏ-அசை.

ஜீவந் முக்தனுக்கு, மைத்திரி, கருணை, முதிதை, உபேக்ஷை ஆகிய நற் குண சதுஷ்டயங்கள் உரித் தாக உள்ளன வாம்.

அந் நான்கனுள், சத் புருஷரோடு கூடச் சிநேகம் செய்வது மைத்திரி யாகும்.

பிரபஞ்சத்தில் வாட்டம் உற்றிருக்கின்ற துக்கிப் பிராணிகளிடத்தில் வைக்கும் இரக்கம், கருணை ஆம்.

வருத்தம் இன்றி யிருக்கின்ற நல்ல புண்ணியவான் களிடத்தில் வைக்கும் விருப்பம் முதிதை ஆம்.

இந்த லோகத்தில் துஷ்க்கிருத்தியங்களைச் செய்கின்ற பாவிகளை, ராகத் துவேஷங்கள் பிரிய அப்பிரியங்கள் என்னும் இரண்டும் இன்றி, விட்டு விடுவது, உபேக்ஷை ஆம் என்று உணர்வா யாக.

அந்த ஜீவந் முக்தனுக்கு, பஞ்சப் பிரயோஜநங்கள் இருக்கின்றன. அவற்றினை மேலே கூறு வாம் என உணர்க. (165)

[ஞாந ரக்ஷையும், தவமும், சர்வ ஜந சம்வாதமும், துக்க நிவிர்த்தியும், சுகாவிர்ப் பாவமும் ஆம் ஜீவந் முத்தப் பஞ்சப் பிரயோஜநங்கள் ஆன அவ் வைந்தனுள், வாசநா க்ஷயம், மநோ நாசங்களால், அந்தக் கரணம் நிர்மலமா யிருப்பது, ஞாந ரக்ஷை யாம், எனவும், இந்திரிய மநங்களின் ஏகாக்கிரத் தன்மை, தவம் ஆம் எனவும், ஞாநி என்று கருதி ஆபால கோபால பண்டித பரியந்தம் ஆன யாவரும் நமஸ்காரம் முதலியவற்றைச் செய்வது, சர்வ ஜந சம்வாதம் ஆம் என்றும், பந்த ஹேது வாய், இக லோக பரலோகங்களைப் பற்றி உள தாவதான மநத்தின்கண் உள்ள கிலேசம் நீங்குதல், துக்க நிவிர்த்தி ஆம் எனவும், அந்தச் சாதநங்களினுல், தனக்கு ஒரு வித பிரதிபந்தகமும் இன்றியிருத்தல், சுக ஆவிர்ப் பாவம் ஆம் எனவும், கூறுகின்றார்.]

ஞாநரக்கை தவஞ்சகல சம்வாத முடனே
நவிறுக்க வொடுக்கமொடு சுகாவிற்பா வந்நா,

ஞனவற்றுண் மருவுவா சனையழிவு மநத்தி
னடக்கங்க ளாற்புத்தி நிருமலமா யிருத்தன்,
ஞாநரக்கை மநம்பொறிகட் கொருமையே தவமா
ஞாநியென வுலகமெலாம் வழிபடல்சம் வாத,
மானமநக் கிலேசமற லேதுக்க வொடுக்க
மவற்றினற் பந்தமறல் சுகாவிற்பா வந்தான் (166)

(இ—ள்) ஞாந ரக்கை - ஞாந ரக்ஷையும், தவம் - தவமும், சகல சம்வாதம் உடன் - சர்வ (ஜந) சம்வாத மும், நவில் - சொல்லாநின்ற, துக்க ஒடுக்கம் ஒடு - துக்க நிவிர்த்தியும், சுக ஆவிர்பாவம் - சுகாவிர்பாவமும் ஆம், ஆன - (ஜீவந் முத்தப் பஞ்சப் பிரயோசநங்கள்) ஆன, அவற்றுள் - அவ் வைந்தனுள், மருவு - பொருந்தாநின்ற, வாசனை அழிவு - வாசநா க்ஷயம், மநத்தின் அடக்கங்களால்- மநோ நாசங்களால், புத்தி - அந்தக் கரணம், நிருமலம் ஆய் இருத்தல் - நின்மலமா யிருப்பது, ஞாந ரக்கை - ஞாந ரக்ஷை யாம், மநம் பொறிகட்கு - இந்திரிய மநங்களின், ஒருமை - ஏகாக்கிரத் தன்மை, தவம் ஆம் - தவ மாம், ஞாநி என - ஞாநி என்று (கருதி), உலகம் எலாம் - உல கத்தி லுள்ள (ஆபால கோபால பண்டித பரியந்த மான) யாவரும். வழிபடல் - நமஸ்காரம் (முதலியவற்றைச்) செய்வது, சம்வாதம் - (சர்வ ஜந) சம்வாத மாம், ஆன - (பந்த ஏது வாய், இஹ லோக பரலோகங்களைப் பற்றி உள தாவது) ஆன, மநக் கிலேசம் அறல் - மநத்தின்க ணுள்ள கிலேசம் நீங்குதல், துக்க ஒடுக்கம் - துக்க நிவிர்த்தி யாம், அவற்றினால் - அந்தச் சாதநங்களினால், பந்தம் அறல் - (தனக்கு ஒரு விதப்) பிரதிபந்தகமும் இன்றி (இருத்தல்), சுக ஆவிர்ப் பாவம் - சுகாவிர்ப்பாவ மாம். எ—று.

ஏ - தான் - ஏ-ஏ-தான்-அசை.

ஞான ரக்ஷையும், தவமும், சர்வ ஜந சம்வாதமும், துக்க நிவிர்த்தி, சுகாவிர்ப்பாவமும், ஜீவந் முக்தப் பஞ்சப் பிரயோசநங்கள், ஆன, அவ் ஐந்தனுள், வாசநா க்ஷயம், மநோ நாசங்களால், அந்தக் கரணம் நிர்மலம் ஆகியிருப்பது, ஞான ரக்ஷை ஆம். 2. இந்திரிய மநங்களின் ஏகாக்கிரத் தன்மை, தவம் ஆம். 3. ஞானி என்று கருதி உலகத்தில் உள்ள ஆபால கோபால பண்டித பரியந்தம் யாவரும் நமஸ்கரரம் முதலியவற்றைச் செய்வது, சர்வ ஜந சம்வாதம் ஆம். 4. பந்த ஹேது வாய், இக லோக பர லோகங்களைப் பற்றி உள தாவ தான மநத்தின்கண் உள்ள கிலேசம் நீங்குதல், துக்க நிவிர்த்தி யாம். 5. அந்தச் சாதநங்களினால், தனக்கு ஒரு வித பிரதிபந்தகமும் இன்றியிருக்குதல், சுகாவிர்ப்பாவம் ஆம் என்று உணர்க.

பஞ்சதசி 14 வித்தியாநந்தம்

2 இடர்கெடல் காம வடைவகங் கிருத
வின்கிருத் தியனடை வடைந்தோன்,
ஓடுவினை நான்கு விதமதா யுரைக்கு
முறுந்துயர் இகபரம் எனவே,
படுமிரு வகையா யைகிக நூக்கம்
பகர்வுறும் பருவன மொழியே,
திடனிலீ துளனென் றரிதரிற் றனையே
திண்ணைதை விழைந்தெதன் நசைக்காய.

என உணர்க. (166)

[ஞானிக்குப் பத்துச் சிந்நங்கள் இருக்கின்றவாம். அந்தச் சிந்நங்கள் ஆவன. 1. அக்குரோதமும், 2. தேக முத

லியவற்றில், நிராசை யாகிய வைராக்கியமும், 3. ஜிதேந்திரி யத் தன்மையும், 4. க்ஷமையும், 5 தமையும், 6. சர்வ ஜந பிரியத் தன்மையும், 7. அலோபமும், 8 தாதிருத் தன்மை யும், 9. அபயமும், 10. நிர்மதமும் என்று உணர்வா யாக என்றும், ஞாநி யாகிய ஜீவந் முக்தனுல், மோக்ஷ மார்க்கத் தினைப் பொருந்தி யிருக்கின்ற சிஷ்யர், பக்தர், உதாசீநர், சாஸ்திர விகித சந்மார்க்கத்தில் நில்லாது நாசம் உறுகின்ற பாவிகள், ஆகிய நான்கு பிரகாரம் ஆன நடை யுடைய வர்களுக்கும், கிரமம் ஆக அநுக்கிரஹம் உண்டாகாநிற் கும் என்று பெரியோர் கூறுவர் என்றும், அந்த நால்வருக் கும் உண்டாகாநின்ற அநுக்கிரகத்தினைக் கிரமம் ஆக மேலே எடுத்துக் கூறு வாம் யாம் என்றும், கூறுகின்ருர்.]

குறிகளோர் பத்துளவாம் ஞாநமயற் கவைதாங்
குரோதமின்மை வைராக்கியம் பொறிபுலன்க ளடக்க,
லறமுதவு சமைதமைமையே சஙப்பிரியத் துவமோ
டலோபமொடு கொடையபய நிருமதமென் றறிக,
நெறிமருவு சீடரொடு பத்தருதா சீநர்
நிலையில்பா விகளென்னு நால்வகையோ ரிடத்து,
முறையினநுக் கிரகம்வந் துறுமருள் கொள் சீவந்
முத்தனு லென்பரவை முறையினெடுத் துரைப்பாம். (167)

(இ—ள்) ஞாந மயற்கு - ஞாநிக்கு, குறிகள் - சிந் நங்கள், ஓர் - ஒப்பற்ற, பத்து - பத்து, உள ஆம் - இருக் கின்றன வாம், அவை - அந்தச் சிந்நங்க ளாவன, குரோ தம் இன்மை - அக்குரோதமும், வைராக்கியம் (தேக முத லானவற்றில் நிராசை யாகிய) வைராக்கியமும், பொறி புலன்கள் அடக்கல் - ஜிதேந்திரியத் தன்மையும், அறம்

உதவு - புண்ணியத்தினைக் கொடுக்கின்ற, சமை - க்ஷமையும், தமை - தமையும், சநப் பிரியத்துவம் - (சர்வ) ஜநப் பிரியத் தன்மையும், அலோபம் - அலோபமும், கொடை - தாதுருத தன்மையும், அபயம் - அபயமும், நிருமதம் - நிர்மதமும், என - என்று, அறிக - உணர்வா யாக, [ஜீவந் முக்தனால், சிஷ்யர் பக்தர் உதாசீநர் பாபிகள் என்னும் நால் வகையோருக்கும் அநுக்கிரகம் உண்டாம் என்று கூறுகின்றார்], அருள் கொள் சீவந் முத்தனால் - ஞானியாகிய ஜீவந் முக்தனால், நெறி - (மோக்ஷ) மார்க்கத்தினை, மருவு - பொருந்தியிருக்கின்ற சீடர் - சிஷ்யர், பத்தர் - பக்தர், உதாசீநர் - உதாசீநர், நிலையில் - (சாஸ்திர விகித சந்மார்க்கத்தில் நில்லாது) நாச முறுகின்ற, பாவிகள் - பாவிகள், என்னும் - ஆகிய, நால் வகையோ ரிடத்தும் - நான்கு பிரகார மான நடை யுடையவர்களுக்கும், முறையின் - கிரம மாக, அநுக்கிரகம் - அநுக்கிரகம், வந்து உறும் - உண்டாகாநிற்கும், என்பர் - என்று பெரியோர் கூறுவர், அவை - (அந் நால்வருக்கும் உண்டாகாநின்ற) அநுக்கிரகத்தினை, முறையின் - கிரம மாக, எடுத்து உரைப்பாம்-எடுத்துக் கூறு வாம் (யாம்). எ—று.

தாம் - ஏ - அசை. ஒடு - ஒடு - ஒடு எண்ணுப் பொருளில் வந்தன.

ஞானிக்குச் சிந்நங்கள் பத்து இருக்கின்றன. அந்தச் சிந்நங்கள் ஆவன.

1, அக்குரோதமும், 2, தேகம் முதலானவற்றில், நிராசை யாகிய வைராக்கியமும், 3. ஜிதேந்திரியத் தன்மையும், 4, புண்ணியத்தினைக் கொடுக்கின்ற க்ஷமையும், 5. தமையும், 6 சர்வ ஜநப் பிரியத் தன்மையும், 7. அலோபமும்,

8. தாதிருத் தன்மையும், 9. அபயமும், 10. நிர்மதமும், ஆகும் என்று உணர்வா யாக,

ஞானி யாகிய ஜீவந் முக்தனால், மோக்ஷ மார்க்கத்தினைப் பொருந்தியிருக்கின்ற சிஷ்யர் பக்தர் உதாசீநர் சாஸ்திர விகித சந்மார்க்கத்தில் நில்லாது நாசம் உறுகின்ற பாவிகள் ஆகிய நான்கு பிரகாரம் ஆன நடை யுடையவர்கட்கும், கிரமம் ஆக அநுக்கிரஹம் உண்டாகாநிற்கும் என்று பெரியோர் கூறுவர்.

அந் நால்வருக்கும் உண்டாகாநின்ற, அநுக்கிரகத்தினை கிரமம் ஆக மேற் கவியில் எடுத்துக் கூறுவாம் யாம் எனவும், கூறுகின்றார் என உணர்க.

1, அக்குரோதம், குரோதம் இன்மை, 2. வைராக்யம் - விரக்தி, 3. ஜிதேந்திரியத் தன்மை, பத்து இந்திரியங்களையும் ஜயித்தல், 4, க்ஷமை - பொறுமை, 5. தமை - புறக் கரணம் அடக்குதல், 6. சர்வ ஜநப் பிரியத்வம்-எல்லா மநிதரும் விரும்புதல், 7. அலோபம் - லோபம் இன்மை, 8 தாதிருத்துவம், கொடுக்குந் தன்மை, 9. அபயம் - பயம் இன்மை, 10. நிர்மதம் - மதம் இன்மை என பத்தின் பெயர்ப் பொருளை உணர்க. (167)

[சீவந் முக்தனை பிரஹ்மம் என விசுவசிப்பதனால், சிஷ்யர்களுக்கு, அவனது தத்வ உபதேசத்தால், அநர்த்த நிவிர்த்தி ஆநந்தப் பிராப்தி ரூப மோக்ஷமும், விருப்புத் தோடு சிசுருஷைகளைச் செய்கின்ற சிரேஷ்டம் பொருந்திய பக்தருக்குப், புண்ணியமும், அந்தச் ஜீவந் முக்தனது பரி சுத்தம் பொருந்தியிருக்கின்ற சரீரத்தினைப் பார்க்கின்ற உதாசீநர்கட்கு, தத்தமக்குக் கொள்ளத் தகுந்த புண்ணிய

கிருத்தியங்களில் இச்சையும், அந்தச் சீவந் முக்தனது சரீரத்தினை தெரிசித்தல் முதலியவற்ருல், பாவிகட்குப் பாப க்ஷயமும், வந்து பொருந்தாநிற்கும் என்று பெரியோர் கூறுவர் என்றும், சதா அந்தர் முகமாய் இருக்கின்ற ஜீவந் முக்தனுல், தர்க்க யுக்தி அநுமாநங்களோடு பிரஹ்ம வித்யா உபதேசம் முதலிய செய்யப்படுதல், எவ்வாறு பொருந்தும் என்று சங்கித்து, மேற் கவியில் சமாதாநங் கூறுவாம் என்றும் கூறுகின்ருர் ]

தெரிவரிய சீவந்முத்தன் றனைநம்பு மதனுற்
  சீடர்க்கு முத்தியுமன் பொடுவழிபா டதனைப்,
புரியுமுயர் பத்தர்க்கு நல்வினையு மவன்றன்
  புநிதமுறு சரிதமது கண்டவுதா சீநர்க்,
குரியபுண் ணியவிருப்பு மவன்றன்வடி வினைக்கண்
  ணுறுதன்முத லானவற்ருற் பாவிகட்குப் பாவ,
விரிவுமுறு மென்பர்தருக் காதியா லாத
  லெங்ஙனெனின் முத்தனுற் பிரமோப தேசம். (168)

(இ—ள்) தெரிவு அரிய - அறிதற் கரிய, சீவந் முத்தன் தனை - சீவந் முத்தனை, நம்புமதனுல் - (பிரஹ்மம் என) விசுவசிப்பதனுல், சீடர்க்கு - சிஷ்யர்களுக்கு, முத்தியும் - அவனது (தத்வ உபதேசத்தால்) அநர்த்த நிவிர்த்தி ஆநந்தப் பிராப்தி ரூப) மோக்ஷமும், அன்பொடு - விருப்பத்தோடு, வழிபாடதனை - சிசுருஷைகளை, புரியும் - செய்கின்ற, உயர் பத்தர்க்கு - சிரேஷ்டம் பொருந்திய பக்தருக்கு, நல் வினையும் - புண்ணியமும், அவன் - அந்தச் சீவந் முத்தனது, புநிதம் உறு - பரிசுத்தம் பொருந்தியிருக்கின்ற, சரிதமது - சரித்திரத்தை, கண்ட - பார்க்கின்ற, உதாசீநர்க்கு - உதாசீநர்களுக்கு,

உரிய - (தத் தமக்குக்) கொள்ளத் தகுந்த, புண்ணிய விருப் பும் - புண்ணிய (கிருத்திய)ங்களில் இச்சையும். அவன் - அந்தச் சீவந் முத்தனது, வடிவினை - சரீரத்தினை, கண்ணுறு தல் - தெரிசித்தல், முதலானவற்றால்-முதலியவைகளால், பாவிகட்கு - பாவிகளுக்கு, பாவ இரிவும் - பாப க்ஷயமும், உறும் - (வந்து) பொருந்தாநிற்கும், என்பர் - என்று (பெரியோர்) கூறுவர், [ஜீவந் முக்தனால், தர்க்க யுக்தி அநுமாநங்களோடு கூடிய பிரஹ்ம வித்பா உபதேசம் எங் ஙனம் கூடும் எனில் கூறுகின்றார்,] முத்தனால் - (சதா அந்தர் முக மாய் இருக்கிற) அந்தச் சீவந் முத்தனால், தருக்க ஆதியால் - தருக்க யுக்தி அநுமாநங்களோடு கூடி, பிரம்ம உபதேசம் - பிரஹ்ம (வித்தியா) உபதேசம் முதலியன, ஆதல் - செய்யப்படுதல், எங்ஙன் - எவ் வாறு (பொருந் தும்) எனில் - என்று கேட்பாயாகில் (மேற் செய்யுளில் சமாதாநங் கூறு வாம்) எ—று.

தன் - தன் - "சீவந் முத்தன் தனை" என்பதில். தன் - அசை.

"சரிதமது", "வழிபாடதனை" "நம்புமதனால்" என்ப வற்றில். அது - பகுதிப் பொருள் விகுதி.

அறிகற் கரிய ஜீவந் முக்தனைப் பிரஹ்மம் என விசு வசிப்பதனால், சிஷ்யர்களுக்கு அவனது தத்வ உபதேசத்தி னால், அநர்த்த நிவிர்த்தி ஆநந்தப் பிராப்தி வடிவ மோக்ஷ மும், விருப்பத்தோடு சிசுருஷைகளைச் செய்கின்ற சிரேஷ் டம் பொருந்தி பக்தருக்கு, புண்ணியமும், அந்தச் சீவந் முக்தனது பரிசுத்தம் பொருந்தியிருக்கின்ற சரீரத்தினைப் பார்க்கின்ற உதாசீநர்கட்குத், தத் தமக்குக் கொள்ளத்

தகுந்த புண்ணிய கிருத்தியங்களில் இச்சையும், அந்தச் சீவந் முக்தனது சரீரத்தினைத் தெரிசித்தல் முதலியவற்றால். பாவிகட்குப், பாப க்ஷயமும், வந்து பொருந்தாநிற்கும் என்று பெரியோர் கூறுவர். சதா அந்தர் முகம் ஆய் இருக்கின்ற அந்தச் சீவந் முக்தனால், தர்க்க யுக்தி அநுமாநங்களோடு கூடி, பிரஹ்ம வித்யா உபதேசம் முதலியன செய்யப்படுதல், எவ்வாறு பொருந்தும் என்று கேட்கில், மேற் செய்யுளில் சமாதாநம் கூறுவாம் எனக் கூறுகின்றார் என உணர்க. (168)

[திரோதாநம் இன்றி யிருக்கின்ற ஒப் பற்ற பிரஹ்ம சொரூபம் ஆக இருத்தலினால், ஒருவரிடத்து ராகம், ஒருவரிடத்து துவேஷாதிகள் இன்றிய ஈசுவரனுக்குப் புண்ணிய பாப கர்மம் உடையோரால், அநுக்கிரகம் செய்தலும், நிக்கிரகம் செய்தலும், வந்து பொருந்தாநிற்கும். ஈசுவரனுக்கு, அந்த நிக்கிரக, அநுக்கிரக கிருத்தியங்கள், புண்ணிய பாபம் உடைய சீவர்கள் நிமித்தம் ஆகப் பொருந்துதல் போல, ஜீவந் முக்தனுக்கு ஜீவர்களது பரிபாக வேற்றுமையினால், உயர்வினை உடைய பிரஹ்ம வித்தியா உபதேசம் முதலியன வந்து பொருந்தும் என்றும், கொள்ளத் தகுந்த ஞாநி யாகிய ஜீவந் முக்தர்கள், கூறிய இலக்ஷணங்களோடு, கூடி யிராமல் நாநா பிரகாரம் ஆக இருப்பது என்னை என்று சங்கை செய்வாய் ஆகில், உனக்கு அவ் வாறு இருக்க லாம் என்று நிச்சயம் உண்டாகும்படி, இதன் பழைய வேதம் முதலிய நூல்களில், சங்கிரகித்த தன்மை யாகவே யாம் இங்கு கூறு வாம் என்றும், கூறுகின்றார்]

மறைப்பகலு மொருபிரம சொரூபமா தலினன்
மகிழ்ச்சி வெறுப் பிலாவீபற் கநுக்கிரகஞ் செயவு,
மொறுப்புறவும் வருவினையி னோரா லத் தொழில்க
ளுறுதல்போற் சாதகர்தம் பக்குவபே தத்தாற்,
சிறப்புறுநல் லுபதேசா திகண்ஞானிக் கெய்துஞ்
செப்பியவிவ் விலக்கணமொ டிராதுபல முறையாற்,
றுறப்பிலருட் சீவந்முத்த ரிருப்பதென்கொ லென்னிற்
றுணிவுதோன் றுறமுதுநூ லுருகுத்தபரி சுரைப்பாம். (169)

(இ—ள்) மறைப்பு அகலும் - திரோதான மின்றி யிருக்கின்ற, ஒரு - ஒப் பற்ற, பிரம சொரூபம் - பிரம்ம சொரூப மாக, ஆதலினால் - இருத்தலினால், மகிழ்ச்சி வெறுப்பு இலா - (ஒருவரிடத்து), இராகம் (ஒருவரிடத்து) த்வேஷாதிகள் இன்றிய, ஈசற்கு - ஈசுவரனுக்கு, வினையினோரால் - (புண்ணிய பாப) கர்மம் உடையோரால், அநுக்கிரகம் செயவும் - அநுக்கிரகம் செய்தலும், ஒறுப்புறவும் - நிக்கிரகம் செய்தலும், வரும் - (வந்து) பொருந்தாநிற்கும், அத் தொழில்கள்-(ஈசுவரனுக்கு) அந்த நிக்கிரக அநுக்கிரக, கிருத்தியங்கள், உறுதல்- (புண்ணிய பாப முடைய சீவர்கள் நிமித்தமாகப்) பொருந்துதல், போல் - போல, ஞாநிக்(த- ஜீவந் முத்தனுக்கு), சாதகர் - சிஷ்யர்களது, பக்குவ பேதத் தால்-பரிபாக வேற்றுமையினால், சிறப்பு உறு - உயர்வினை யுடைய, நல் உபதேச ஆதிகள் - பிரஹ்ம வித்தியா உப தேசம் முதலியன, எய்தும் - (வந்து) பொருந்தும்.

[ ஜீவந் முக்தர்கள் கூறிய லக்ஷணங்கள் இன்றி, பல வேறு வித நடை யுடையவர்க ளாக இருப்பார்கள் அதனை

வேதம் கூறியபடி மேற் செய்யுளில் கூறு வாம் என்று கூறுகின்றார்.], துறப்பு இல் - கொள்ளத் தகுந்த, அருள்- ஞானி யாகிய, சீவந் முத்தர் - சீவந் முத்தர்கள், செப்பிய- புகன்ற, இவ் இலக்கணமொடு - இந்த லக்ஷணங்களோடு கூடி, இராது - இராமல், பல முறையால் - நாநா பிரகார மாக, இருப்பது - இருப்பது, என் - என்னே?, என்னின் - என்று கேட்பாயாகில். துணிவு-(உனக்கு அவ் வாறு இருக் க லாம் என்று) நிச்சயம், தோன்றுற - உண்டாகும்படி, முது நூல் – (இதன்) பழைய (வேத முதலிய), நூலில், தொகுத்த பரிசு - சங்கிரகித்த தன்மையாகவே, உரைப்பாம் (இங்கு) கூறு வாம் (யாம்). எ—று.

தம்-சொல்-அசை.

அந்தர் முகன் ஆன ஜீவந் முக்தனுக்குப், புண்ணிய முடையவரால், உபதேசாதி கூடும் என்பதை பாகவதத் தினல், சுகர், பரீச்சித்து இவர்களின் சம்வாத ரூப மான பாகத்தால் அறிக, திரோதாநம் இன்றி யிருக்கின்ற ஒப் பற்ற பிரஹ்ம சொரூபம் ஆக இருத்தலினுல், ஒருவரி டத்து இராகம், ஒருவரிடத்துத் துவேஷாதிகள் இன்றிய ஈசுவரனுக்கு. புண்ணிய பாப கர்மம் உடையோரால், அநுக் கிரகம் செய்தலும், நிக்கிரகம் செய்தலும், வந்து பொருந்தா நிற்கும்.

ஈசுவரனுக்கு அநுக்கிரக நிக்கிரகங்கள் புண்ணிய பாபம் உடைய ஜீவர்கள் நிமித்தம் ஆகப் பொருந்து தல் போல, ஜீவந் முக்தனுக்கு, சிஷ்யர்களது பரிபாக வேற்றுமையினுல், உயர்வினை உடைய பிரஹ்ம வித்யா உபதேசம் முதலியன வந்து பொருந்தும்.

கொள்ளத் தகுந்த ஞானி யாகிய ஜீவந் முக்தர்கள், சொல்லிய லக்ஷணங்களோடு கூடியிராமல், நாநா பிரகாரம் ஆக இருப்பது என்னை? என்று கேட்பாயாகில், உனக்கு அவ் வாறு இருத்தல் ஆம் என்று நிச்சயம் உண்டாகும்படி, இதன் பழைய வேதம் முதலிய நூலில் சங்கிரகித்த தன்மை யாகவே இங்கு யாம் கூறுவாம என உணர்க (169)

[ஜீவந் முக்தருக்கு கர்மாதீநம் ஆக வந்து பொருந்தா நின்ற பிராரப்த கர்ம சம்ஸ்காரம், தீவிர சம்ஸ்காரம் என்றும், மத்திய சம்ஸ்காரம் என்றும், மந்த சம்ஸ்காரம் என்றும், சுப்த சமஸ்காரம் என்றும், நான்கு, பிரகாரம், ஆம். தெளிந்த ஞானி யாக இருப்பினும், போகத்தின் கண்ணே மூழ்கி, மிருகத்தினைப் போல, உள்ளே ஆத்மப் பிரீதி மாத்திரம் ஆக இருப்பது தீவிரப் பிராரப்த சம்ஸ்கா ரம் என்றும், உயர்ந்த போகங்களை, ஞானி, பொருந்தி அநு பவித்தான் ஆயினும், ஆத்ம தத் பரனாய், பாலரைப் போல, மாந அபமாநம் இன்றி, தேகாதிகளால், விநோதம் செய்து கொண்டு இருப்பது, மத்திய பிராரப்த சமஸ்காரம் ஆம் என்றும், சகல போகங்களையும், விரக்தியினால், விட்டு கிராமிய தர்மம் ஆன மைதுநம் போல, ஆநந்தத்தினைப் பொருந்தியிருப்பது, மந்தப் பிராரப்த சம்ஸ்காரம் என்றும், கூறுகின்றார்.]

வந்தணையும் பிராரப்த வாசனைதீ விரமே
மத்தியமந் தஞ்சுப்த மெனவொருநான் காகும்,
பந்தமறு ஞானியா யினும்போகத் தழுந்திப்
பசுப்போலத் தன்மகிழ்ச்சி மாத்திரமா யிருத்தல்,

முந்துரைசெய் தீவிரம்போ கச்சிறப்புற் றிடினு
மொழியாங்ம தற்பரனாய் விநோதமே புரிந்து,
மைந்தரென விருத்தன்மத் தியம்போக மனைத்து
மாற்றிமிது நம்போலா நந்தமுறன் மந்தம் (170)

(இ—ள்) வந்து அணையும் - (சீவந் முத்தர்க்கு கருமாதீந மாக) வந்து பொருந்தாநின்ற, பிராரப்த வாசனை - பிராரப்த (கர்ம) சம்ஸ்காரம், தீவிரம் - தீவிர (சமஸ்கார மென்றும்), மத்தியம் - மத்திய (சம்ஸ்கார மென்றும்), மந்தம் - மந்த(சமஸ்கார மென்றும்), சுப்தம் - சுப்த (சம்ஸ்காரம்), என — என்றும், ஒரு நான்கு ஆகும் - நான்கு பிரகார மாம், பந்தம் அறும் - தெளிந்த, ஞாநி ஆயினும் - ஞாநி யாக விருப்பினும், போகத்து அழுந்தி - போகத்தின்கண்ணே மூழ்கி, பசு போல - மிருகத்தினைப் போல, தன் மகிழ்ச்சி மாத்திரம் ஆய் - (உள்ளே) ஆத்ம ப்ரீதி மாத்திர மாய், இருத்தல் - இருப்பது, முந்து - முன்னர், உரை செய் - புகன்ற, தீவிரம்-தீவிர (ப் பிராரப்த சம்ஸ்கார) மாம், சிறப்பு போகம் - உயர்ந்த போகங்களை, உற்றிடினும் - (ஞாநி) பொருந்தி அநுபவித்தா ராயினும், மொழி - கூறாநின்ற, ஆங்ம தத்பரன் ஆய் - ஆத்ம தத்பர னாக, மைந்தர் என - பாலரைப் போல, (மாந அபமாநம் இன்றி), விநோதம் புரிந்து - (தேகாதிகளால்) விநோதம் செய்து கொண்டு, இருத்தல் - இருப்பது, மத்தியம் - மத்திய (பிராரப்த சம்ஸ்கார) மாம், அனைத்தும் - சகல, போகம் - போகங்களையும், மாற்றி -(விரக்தியினால்)விட்டு, மிதுநம் போல் - (கிராமிய தர்ம மான) மைதுநம் போல, ஆநந்தம் - ஆநந்தத்தினை, உறல் - பொருந்தியிருப்பது, மந்தம் - மந்த (பிராரப்த சம்ஸ்கார)மாம். எ-று.

ஏ - அசை.

ஜீவந் முக்தனுக்குக் கர்மாதீநம் ஆக வந்து பொருந்து கின்ற பிராரப்த கர்ம சம்ஸ்காரம், தீவிர சமஸ்காரம் என்றும், மந்த சமஸ்காரம் என்றும், மத்திய சம்ஸ்காரம் என்றும், சுப்த சம்ஸ்காரம் என்றும், நான்கு பிரகாரம் ஆம்.

1. தெளிந்த ஞாநி யாக இருப்பினும், போகத்தின் கண்ணே மூழ்கி. மிருகத்தினைப் போல, ஆத்மப் பிரீதி மாத்திரம் ஆக இருப்பது, தீவிரப் பிராரப்த சம்ஸ்காரம், ஆம்.

2. உயர்ந்த போங்களை ஞாநி பொருந்தி அநுபவித் தான் ஆயினும், ஆத்ம தத்பரன் ஆக, பாலரைப் போல, மாந அபமாநம் இன்றி. தேகாதிகளால் விநோதம் செய்து கொண்டிருப்பது, மத்திய பிராரப்த சம்ஸ்காரம் ஆம்

3. சகல போகங்களையும் விரக்தியினால் விட்டு, கிராமிய தர்மம் ஆன மைதுநம் போல, ஆநந்தத்தினைத் பொருந்தி யிருப்பது, மந்தப் பிராரப்த சம்ஸ்காரம் ஆம் என உணர்க. (170)

[லோக வியவகாரங்கள் இன்றி, நிருபாதிக ஆத்மாவினிடத்தில், தத் பரன் ஆய், மே லான முக்தனை போல, ஆத்ம சுகத்தினோடு கூடி இருப்பது, சுப்தப் பிராரப்த சம்ஸ்காரம் ஆம் என்று கூறுவார் கள் என்றும், இந்த நான்கு பிரகாரம் ஆன பிராரப்த சம்ஸ்காரத்தினால், ஜீவந் முக்தர்கள், பிந்ந பிந்நம் ஆன ஒழுக்கங்களைப் பொருந்தியிருப்பினும், நேரான மார்க்கம் ஆகவும், வளைந்த மார்க்கம் ஆகவும், செல்லுகின்ற

கெங்கை முதல் ஆன பெரிய நதிகள், தரங்கத்தோடு கூடிய சமுத்திரத்தில் போய்ச் சேர்ந்து ஏக ஜலம் ஆக இருப்பது போல, விதேக கைவல்யம் ஆகிய பிராரப்த க்ஷயத்தில், சத் ரூபப் பிரஹ்மம் ஆய் இருக்கின்ற விதேக கைவல்ய சுகத்தினை அவர்கள் அடைவது ஒரே தன்மை யாம் என்றும் கூறுகின்றார்.]

உலகவழக் ககன்றுநிரு பாதிகாந் மாவி
 லுற்றதற் பரனுகிப் பரமுத்த னெனவே,
யிலகுசுகத் துடனிருத்தல் சுப்தவா சனையா
 மென்பர்நால் வகையாகுங் கருமவா சனையாற்,
றலைமைகொண்முத் தர்கள்வேறு வேறாய வொழுக்கஞ்
 சாரினுஞ்செந் நெறிகோண நெறிபெருமா நதிக,
ளலைகடலிற் புருதல்போன் முடிவினின்மெய்ப் பரமா
 யமர்தருநன் முத்திசுக மொருபரிசென் றறியே. (171)

(இ—ள்) உலக வழக்கு அகன்று - லோக விவகாரங்கள் இன்றி, நிருபாதிக ஆந்மாவில் - நிருபாதிக ஆத்மாவினிடத்தில், உற்ற - பொருந்தாநின்ற, தத் பரன் ஆகி - தத் பரனாய், பர முத்தன் என - மேலான முத்தனைப் போல, இலகு - விளங்காநின்ற, சுகத்துடன் - (ஆந்ம) சுகத்தோடு கூடி, இருத்தல் - இருப்பது, சுப்த வாசனை ஆம் - சுப்த (பிராரப்த) சம்ஸ்கார மாம், என்பர் - என்று கூறுவார்கள், [தீவிரம், மத்தியம், மந்தம், சுப்தம் என்னும் நான்கு பிரகார கர்ம வாசனையினால், முத்தர்கள் வேறு வேறு ஒழுக்கங்களைப் பொருந்தினாலும், செந்நெறி நதி, கோண நெறி நதி, கடலில் புகுதல் போல், விதேக கைவல்யத்தில் சத் ரூபப் பிரமம் ஆதல் ஒரே படித் தாம். சதேக

கைவல்யத்தில் வித்தியாசம் உண்டு, விதேக கைவல்யத்தில் வித்தியாசம் இல்லை எனவும் கூறுகின்றார் ] இந் நால் வகை ஆகும் - இந்த நான்கு பிரகார மாகிய, கரும வாசனையால்- (பிராரப்த) கர்ம சம்ஸ்காரத்தினால், தலைமை கொள் முத்தர்கள் - மேன்மை பொருந்திய ஜீவந் முத்தர்கள், வேறு வேறு ஆய - பிந்ந பிந்ந மாகிய, ஒழுக்கம் - ஒழுக்கங்களை சாரினும் - பொருந்தி யிருப்பினும், செம் நெறி - நே ரான மார்க்கமாகவும், கோணல் நெறி - வளைந்த மார்க்க மாக வும், பெரு - செல்லுகின்ற, மா நதிகள் - (கங்கை முதலான) பெரிய நதிகள், அலை கடலில்-தரங்கத்தோடு கூடிய சமுத்திரத்தில், புகுதல் - போய்ச் சேர்வது(ஒன்றே ஆதல்) ஏக ஜல மாக இருப்பது), போல் - போல, முடிவினில் - விதேக கைவல்லியத்தில், (பிராரப்த க்ஷயத்தில்), மெய் பரம் ஆய் - சத் ரூப பிரஹ்மம் ஆய், அமர்தரும் - பொருந்தி யிருக்கின்ற, நல் முத்தி சுகம் - விதேக கைவல்லிய சுகத்தை (அவர்கள் அடைவது), ஒரு பரிசு - ஒரே தன்மை யாம், என்று - என, அறி - உணர்வாயாக. எ-று

ஏ. ஏ. அசை இன்- சாரியை

தீவிரம் மத்திமம் மந்தம் சுப்தம் என்னும் சதுர் விதப் பிராரப்தங்களுக்கும், சத்துவாபத்தி, அசம் சக்தி, பதார்த்தாபாவனை, துரியகா, என்னும் நான்கு பூமிகளையும் ஒரு வாறு உபமாநம் ஆகக் கூறல் ஆம்.

லோக வியவகாரங்கள் இன்றி, நிருபாதிக ஆத்மாவினிடத்தில், பொருந்தாநின்ற தத் பரன் ஆய், மேல் ஆன முக்தனைப் போல, விளங்காநின்ற ஆத்ம சுகத்தோடு கூடி

இருப்பது சுப்தப் பிராரப்த சம்ஸ்காரம் ஆம் என்று கூறுவார்கள்.

அந்த நான்கு பிரகாரம் ஆன பிராரப்த கர்ம சம்ஸ்காரத்தினால், மேன்மை பொருந்திய ஜீவந் முக்தர்கள், பிந்ந பிந்நம் ஆகிய ஒழுக்கங்களைப் பொருந்தியிருப்பினும், நேர் ஆன மார்க்கம் ஆகவும், வளைந்த மார்க்கம் ஆகவும். செல்லுகின்ற கங்கை முதலிய பெரிய நதிகள், தரங்கத்தோடு கூடிய சமுத்திரத்தில், போய்ச் சேர்ந்து ஏக ஜலம் ஆக இருப்பது போல, விதேக கைவல்ய ரூப பிராரப்த க்ஷயத்தில், சத் ரூபப் பிரஹ்மம் ஆய், பொருந்தியிருக்கின்ற விதேக கைவல்ய சுகத்தினை அவர்கள் அடைவது ஒரே தன்மை யாம் என உணர்வா யாக என உணர்க. (171)

[பிராரப்தம் - இச்சாப் பிராரப்தம் - அநிச்சாப் பிராரப்தம் - பரேச்சாப் பிராரப்தம் என மூன்று பிரகாரம் ஆம் என்றும், இந்தப் பிராரப்தத்தினை பிரஹ்மாதி தேவர்களாலும் விலக்க முடியாது என்றும், வைத்தியர் கூறிய பத்தியத்திற்கு விரோதம் ஆக, அபத்தியம் செய்தல், தனக்கே அநர்த்தம் ஆம் என்று அறிந்திருந்தும், அபத்தியத்தினைச் செய்வித்தல், இச்சாப் பிராரப்த கர்மம் ஆம் என்றும், நான் இதனைச் செய்யமாட்டேன் என ஒருவன் கூறினும், ராஜ ஆக்ஞையைப் போல, இம்சாதிகளைப் பலாத்காரம் ஆகச் செய்வித்தல், அநிச்சாப் பிராரப்த கர்மம் ஆம் என்றும், தனக்குச் செய்ய வேண்டும் என்னும் இச்சையும், செய்ய வேண்டாம் என்னும் அநிச்சையும், இல்லாதிருந்தும், அந்நியர்களது தாக்ஷிண்யம் முதலியவற்றால், சுக துக்கங்களை அநுபவிக்கும்படி செய்வித்தல், பரேச்சாப் பிராரப்த கர்மம் ஆம் என்றும், கூறுகின்றார்.]

இச்சையுட னநிச்சைபிற ரிச்சையெனு மிவற்ரு
லியம்பலுறு பிராரப்த மூன்றுவகைப் படுமா,
லச்சுரர்க ளானும்விலக் குதற்கரிய வாகு
மபத்தியஞ்செய் திடறனக்கே கேடெனவிங் கறிந்து,
வைச்சுமது புரிவித்த லிச்சைசெய்யே னெனினு
மன்னவர்தம் மாணைபோற் செய்வித்த லநிச்சை,
யிச்சையநிச் சைகளின்றி யிருந்துமய லோரா
லின்பதுன்ப நுகர்வித்தல் பிறரிச்சை வினையாம். (172)

(இ—ள்) இச்சையுடன் - இச்சை. அநிச்சை - அநிச்சை, பிறர் இச்சை - பரேச்சை, எனும் இவற்ருல் - ஆகிய இவைகளால், இயம்பல் உறு - கூறுகின்ற, பிராரப்தம் - பிராரப்த (கர்ம)மானது, மூன்று வகைப்படும் - (இச்சாப் பிராரப்த கர்மம், அநிச்சாப் பிராரப்த கர்மம், பரேச்சாப் பிராரப்த கர்மம் என) மூன்று பிரகாரமாம், [மூ வகையாக உள்ள பிராரப்தத்தினை தேவர்களாயிருந்தாலும், அநுபவியாது நிவாரணம் செய்ய முடியாது என்று கூறுகின்ருர்.] அச் சுரர்களானும் - (இவை பிரஹ்மாதி) அந்தத் தேவதைகளாலும், விலக்குதற்கு- நிவாரணம் செய்தற்கு, அரிய ஆகும் - அசக்கியங்களாம், [இச்சை அநிச்சை பரேச்சா பிராரப்தம் மூன்றினையுந் திருஷ்டாந்தத்தோடு கூறுகின்ருர்] அபத்தியம் - (வைத்தியர் கூறிய தற்கு விரோதமாக) அபத்தியத்தினை, செய்திடல் - செய்தல், தனக்கே கேடு - தனக்கே அநர்த்தமாம், என - என்று, இங்கு - ஈண்டு, அறிந்துவைச்சும் - அறிந்திருந்தும், அது - அபத்தியத்தினை, புரிவித்தல் - செய்வித்தல், இச்சை - இச்சா(ப் பிராரப்த) கர்மமாம், செய்யேன் - (நான் இதனை) செய்யமாட்டேன், எனினும் - என்று (ஒருவன்) கூறினும், மன்னவர் ஆணை - ராஜ ஆஞ்ஞையை,

போல் - போல, செய்வித்தல் - (இம்சாதிகளை பலாத்கார மாக) செய்வித்தல், அநிச்சை - அநிச்சா(ப் பிராரப்த) கர்ம மாம், இச்சை அநிச்சைகள் இன்றி இருந்தும் - (தனக்கு செய்ய வேண்டு மென்று) இச்சையும், (செய்ய வேண்டா மென்று) அநிச்சையும், இல்லாதிருந்தும், அயலோரால் - அந்நியர்களது (தாக்ஷிண்ணிய) முதலியவற்ருல், இன்ப துன்பம் - சுக துக்கங்களை, நுகர்வித்தல் - அநுபவிக்கும் படி செய்தல், பிறர் இச்சை வினை ஆம் - பரேச்சாப் பிரா ரப்த கர்ம மாம், எ—று.

ஆம் -தாம் - அசை

இச்சை அநிச்சை பரேச்சை ஆகிய இவைகளால், கூருநின்ற பிராரப்த கர்மம் ஆனது, இச்சாப் பிராரப்த கர்மம், அநிச்சாப் பிராரப்த கர்மம், பரேச்சா பிராரப்த கர்மம் என மூன்று பிரகாரம் ஆம்.

இவை பிரஹ்மாதி அந்தத் தேவதைகளாலும், நிவாரணம் செய்தற்கு அசக்கியங்கள் ஆம் வைத்தியர் கூறியதற்கு விரோதம் ஆக, அபத்தினைச் செய்தல், தனக்கே அநர்த்தம் ஆம் என்று அறிந்திருந்தும், அபத்தியத்தினைச் செய்வித்தல் இச்சாப் பிராரப்த கர்மம் ஆம்.

நான் இதனைச் செய்யமாட்டேன் என்று ஒருவன் கூறினும், ராஜ ஆஞ்ஞையைப் போல, இம்சாதிகளைப் பலாத்காரம் ஆகச் செய்வித்தல், அநிச்சாப் பிராரப்த கர்மம் ஆம்.

தனக்குச் செய்யவேண்டும் என்னும் இச்சையும், செய்ய வேண்டாம், என்னும் அநிச்சையும், இன்றி யிருந்தும், அந்நியர்களது தாக்ஷண்யம் முதலியவற்ருல், சுக துக்கங்

களை அநுபவிக்கும்படி செய்தல், பரேச்சா பிராரப்த கர்மம் ஆம் என உணர்க. (172)

[இவ் வாறு இச்சை அநிச்சை பரேச்சை என்னும் மூன்று வகையாகிய பிராரப்த கர்ம அநுசாரத்திஞல், ஜீவந் முக்தர்கட்கு, நாநா விதம் ஆன நடைகள் உண்டாம் என்றும், இந்த உண்மை யான அர்த்தத்தினை வசிஷ்டன் நாரதன் துர்வாசன் வியாசன் சுகன் வாமதேவன் ஞாந ஜநகன் பரதன் கௌதமன் முதலானவர்களது ஒழுக்கங் களின் வேற்றுமை, அறிவிக்கும் என்றும், இவ் வாறு குற் றம் பொருந்தியிருக்கின்ற போகங்களை அநுபவிக்கும்படி கொடுக்கின்ற இச்சா பிராரப்தம், அநிச்சாப் பிராரப்தம், பரேச்சாப் பிராரப்தங்களை, ஞாநி கொள்ளுவான் ஆயின், அஞ்ஞாநிக்கும், ஞாநிக்கும், பேதம் காணப்படுவது எவ் வாறு என நீ கேட்பாயாகில் சமாதாநங் கூறுவாம் என் றும், கூறுகின்ருர்.]

இப்பரிசு மூவகையாம் பிராரப்த விளைவா
லெண்ணில்பல வொழுக்கமாஞ் சீவந்முத்தர்க் கிந்த,
மெய்ப்பொருளை வசிட்டனு ரதன்றுருவா சன்சீர்
வியாசனொடு சுகன்வாம தேவனருட் சநக,
னொப்பரிய பரதனெழிற் கௌதமனே முதலா
யுளர்வருத்த நாபேத முணர்த்தலுறு மிங்ஙன்,
றுப்புதவு பிராரப்தங் கொளினஞ்ஞா நிக்குஞ்
சுத்தனுக்கும் வேறுபா டெங்ஙனெனின் மொழிவாம். (173)

(இ—ள்) இப் பரிசு - இவ் வாறு, மூ வகை ஆம் - (இச்சை, அநிச்சை, பரேச்சை என்னும்) மூன்று வகை யாகிய, பிராரப்த விளைவால் - பிராரப்த கர்ம அநுசாரத்

திறல், சீவந் முத்தர்க்கு - ஜீவந் முத்தர்களுக்கு, எண்ணில் - கருதுமிடத்து, பல ஒழுக்கம் ஆம் - நாநா விதமான நடைகள் உண்டாம், [இச்சாப் பிராரப்த கர்ம, அநிச்சாப் பிராரப்த கர்ம, பரேச்சா பிராரப்த கர்மங்களால், ஜீவந் முக்தர்கள் நாநா ஒழுக்கம் உடையவர்க ளாக இருப்பார்கள், அதனை அவர்கள் நடை முறைகள் அறிவிக்கும் என்று கூறுகின்றார்.] இந்த மெய்ப் பொருளை - இந்த உண்மை யான அர்த்தத்தினை, வசிட்டன் - வசிஷ்டன், நாரதன் - நாரதன், துருவாசன் - துர்வாசன், சீர் - சிறப்புப் பொருந்திய, வியாசன் - வியாசன், சுகன் - சுகன், வாமதேவன் - வாமதேவன், அருள் சநகன் - ஞாந ஜநகன், ஒப்பு அரிய - சமாநம் இன்றிய, பரதன் - பரதன், எழில் - அழகு பொருந்திய, கௌதமன் - கௌதமன், முத லாய் உளர் - முத லாக உள்ளவர்களது, வருத்தநா- ஒழுக்கங்களின், பேதம் - வேற்றுமை, உணர்த்தல் உறும்- அறிவிக்கும், [இவ் வாறு குற்றம் பொருந்திய போகங்களை ஞாநி கொள்ளுவான் ஆயின், அஞ்ஞாநிக்கும், ஞாநிக்கும் வேற்றுமை எப்படி என்று கேட்கில். மேற் கவியில் கூறுவாம் என்று கூறுகின்றார்.] இங்ஙன் - இவ் வாறு, துப்பு உதவு - (குற்றம் பொருந்தியிருக்கின்ற) போகங்களை அநுபவிக்கும்படி கொடுக்கின்ற, பிராரப்தம் - இச்சாப் பிராரப்தம், அநிச்சாப் பிராரப்தம், பரேச்சாப் பிராரப்தங்களை, கொளின் - (ஞாநி) கொள்ளுவா னயின், அஞ்ஞாநிக்கும் - அஞ்ஞாநிக்கும், சுத்தனுக்கும் - ஞாநிக்கும், வேறுபாடு - பேதம் காணப்படுவது, எங்ஙன் -எவ் வாறு, எனின் - என்று கேட்பாயாகின், மொழிவாம் - (சமாதாநம்) கூறு வாம். எ—று,

ஒடு - ஏ - அசை.

இவ் வாறு, இச்சை அநிச்சை பரேச்சை என்னும் மூன்று வகை யாகிய பிராரப்த கர்ம அநுசாரத்தினால், ஜீவந் முக்தர்கட்குக் கருதும் இடத்து நாநா விதம் ஆன நடைகள் உண்டாம்.

இந்த உண்மை யான அர்த்தத்தினை வசிஷ்டன் நாரதன் துருவாசன் சிறப்புப் பொருந்திய வியாசன் சுகன் வாமதேவன் ஞாந ஜநகன் சமானம் இன்றிய பரதன் அழகு பொருந்திய கௌதமன் முதலாய் உள்ளவர்களது ஒழுக்கங்களின் வேற்றுமை அறிவிக்கும். இவ் வாறு, குற்றம் பொருந்திய போகங்களை அநுபவிக்கும்படி கொடுக்கின்ற இச்சாப் பிராரப்தம், அநிச்சாப் பிராரப்தம், பரேச்சாப் பிராரப்தங்களை ஞாநி கொள்ளுவா னுவான், ஆயின், அஞ்ஞாநிக்கும், ஞாநிக்கும் பேதம் காணப்படுவது, எவ் வாறு என்று நீ கேட்பாயாகின் யாம் சமாதாநம் கூறு வாம் எனக் கூறுகின்றார் என உணர்க. (173)

[பூலோகத்தில் வர்ணாசிரம கர்ம அநுஷ்டாந விவேகம் இன்றிய விராத்தியருக்கும், வர்ணாசிரம கர்ம அநுஷ்டாந விவேகம் உடைய சுரோத்தியருக்கும், வேத அத்தியயநம் இன்றி யிருத்தலாலும், வேத அத்யயநம் செய்து இருத்தலாலும், பேதமே அன்றி, ஆகாரம் நித்திரை முதலிய அவரிடத்துக் கருதும்படி வருகின்ற கிரியைகளால், பேதம் இல்லாமை போல, அஞ்ஞாநிக்கும், ஞாநி யாகிய ஜீவந் முக்தருக்கும், ஹிருதயத்தில், பந்தத்தோடுகூடி யிருத்தலாலும், ஹிருதயத்தின்கண், பந்தம் நீங்கியிருத்தலினாலும், பேதமே அன்றி, போகத்தினை புஜிக்கும் நிலைமையினால், பேதம் இல்லை என்று அநேக அத்தியாத்ம சாஸ்திரங்களை

அத்தியயநம் செய்து அறிந்த, திட அபரோக்ஷ ஞாநிகள் கூறுவார்கள் என்று கூறுகின்றார்]

மண்ணுலகில் விராத்திரியர் சோத்திரியர் தமக்கு
மறையொழித லோதலா லன்றியுணன் முதலா,
யெண்ணவருஞ் செயலான்வே றிலாமையது போல
விதயபந்த முறலொழித லாலன்றிப் போக,
முண்ணுநிலை யதனாலஞ் ஞாநமுடை யோர்க்கு
முணர்வுமய மாய்நின்ற சீவந்முத்தர் தமக்கு,
நண்ணிவரும் வேறுபா டிலையெனவே நவில்வர்
ஞாநநூல் பலவுணர்ந்த நல்லுணர்வி னவரே. (174)

(இ—ள்) மண் உலகில் - பூ லோகத்தில், விராத்திரியர் - (வர்ணாசிரம கர்மாநுஷ்டாந விவேக மின்றிய) விராத்திரியருக்கும், சோத்திரியர் தமக்கும் - வர்ணாசிரம கர்மாநுஷ்டாந விவேக முடைய சுரோத்திரியருக்கும், மறை ஒழிதல் - வேதாத்தியயநம் இன்றி இருத்தலாலும், ஓதலால் - வேதாத்தியயநம் செய்திருத்தலாலும், அன்றி - (பேதமே) அன்றி, உணல் முதல் ஆய்-ஆகாரம் (நித்திரை) முதலிய, எண்ண வரும் - (அவரிடத்துக்) கருதும்படி வருகின்ற, செயலால் - கிரியைகளால், வேறு இலாமை யது - பேத மில்லாமை, போல - போல், அஞ்ஞாந முடையோர்க்கும் - அஞ்ஞாநிக்கும், உணர்வு மயம் ஆய் நின்ற சீவந் முத்தர் தமக்கும் - ஞாநி யாகிய ஜீவந் முத்தருக்கும், இதய பந்தம் உறல் - ஹ்ருதயத்தின்கண் பந்தத்தோடு கூடியிருத்தலாலும், ஒழிதலால் - (ஹ்ருதயத்தின்கண் பந்தம்) நீங்கி யிருத்தலினாலும், அன்றி - (பேதமே) அன்றி, போகம் உண்ணும் நிலையதனால் - போகத்தைப் புசிக்கின்ற

ஸ்திதியினுல், நண்ணி வரும் - பொருந்தி வருகின்ற, வேறு பாடு - பேதம், இலே - இல்லை, என - என்று, பல ஞாந நூல் உணர்ந்த - அநேக அத்தியாத்ம சாஸ்திரங்களை (அத்தியயநம் செய்து) அறிந்த, நல் உணர்வினவர் - திட அபரோக்ஷ ஞாநிகள், நவில்வர் - கூறுநிற்பர். எ—று.

ஏ - ஏ - அசை.

'சோத்திரியர் தமக்கும்' 'முத்தர் தமக்கும்' என்பதில், தம் - அசை

வேறிலாமையது, உண்ணு நிலேயதனுல், என்பதில் - அது - பகுதிப் பொருள் விகுதி.

பூ லோகத்தில், வர்ணுசிரம கர்ம அநுஷ்டாந விவேகம் இன்றிய விராத்தியருக்கும், வர்ணுசிரம கர்ம அநுஷ்டாந விவேகம் உடைய சுரோத்திரியருக்கும், வேத அத்தியயநம் இன்றியிருத்தலாலும், வேத அத்தியயநம் செய்து இருத்தலாலும், பேதமே அன்றி, போகத்தினைப் புஜிக்கின்ற ஸ்திதியினுல், பொருந்தி வருகின்ற பேதம் இல்லை என்று அநேக அத்யாத்ம சாஸ்திரங்களை அத்தியயநம் செய்து அறிந்த திட அபரோக்ஷ ஞாநிகள் கூறுநிற்பர் என உணர்க. (174)

[பிரஹ்ம ஆத்ம ஐக்கிய ஞாநத்தினுல், ஜீவந் பிரஹ்மத்தை அடையப்படும் ஆபின், கொடுங் கண்களை உடைய ஓர் வகை வரிப் புலியினைப் பார்க்கப் பட்ட புருஷன், நாசம் ஆவது போல, ஜீவத் தன்மையினை, பிரஹ்மம் ஆனது, தன்னைச் சாக்ஷாத்கரித்த அவ் விடத்திலே நாசம் செய்யாநிற்கும், தன்னை நாசம் செய்வதாய் இருப்ப

தால், அந்தச் ஜீவந், தனது நாசத்திணுக்குச் சம்மதிப்பனு என்று நீ கேட்பாயாகில், தேவத் தன்மையை அடைய வேண்டும் என்னும் இச்சையினுல், கங்கை முதலிய தேவ நதிகளில், நரத் தன்மையை விடுவதற்கு லோகத்தில் அநே கர் சம்மதிக்கின்றனர். அது போல, சதா நித்திய மாய் உள்ள பிரத்தியக்காத்ம ரூப மாகிய பிரஹ்ம ரூபம் ஆக இருத்தற்கு ஜீவந் தனது நாசத்திற்குச் சம்மதிப்பன் எனக் கூறுகின்றார்.]

தத்துவஞா நத்திறை பிரமமடைந் திடுமேற்
றறுகண்வரிப் புலிகண்டோன் போற்சீவத் துவத்தை,
யத்தலேயே யழித்திடுமா தலினுலச் சீவ
னழிவுதனக் குடன்படுமோ வெனிற்கடவுட் டன்மைக்,
குய்த்தவா தரவினுற் கங்கைமுத லவற்று
ளொழிப்பதனுக் கிசைவர்நரத் துவமதுபோ லென்றும்,
பொய்தலிலாத் துரியவடி வாம்பிரமத் துவத்திற்
பொருந்தத்தன் கேட்டினுக்கிங் குடன்படுஞ்சீ வன்முன். (175)

(இ—ள்) தத்துவ ஞாநத்திறைல் - (பிரஹ்ம) ஆத்ம ஐக்கிய ஞாநத்தினுல், பிரமம் அடைந்திடுமேல் - (ஜீவந்) பிரஹ்மம் அடையப்படு மாயின், தறு கண் வரிப் புலி கண்டோன் - கொடுங்கண்ணை யுடைய (ஓர் வகை) வரிப் புலியினை பார்க்கப்பட்ட புருஷன், போல் - (நாச மாவது) போல, சீவத்துவத்தை - ஜீவத் தன்மையினை, அத்தலேயே- (பிரஹ்ம மானது தன்னைச் சாக்ஷாத்கரித்த) அவ் விடத்தி லேயே, அழித்திடும் - நாசம் செய்யாநிற்கும், ஆதலினுல் -

தன்னை நாசம் செய்வதா யிருப்பதனுல், அச் சீவன் - அந்தச் சீவன், தனக்கு - தனது, அழிவு - நாசத்துக்கு, உடன் படுமோ - சம்மதிப்பனு, எனில் - என்று (நீ) கேட்பாயா கில், [சமாதானங் கூறுகின்ருர்] கடவுள் தன்மைக்கு - தேவத் தன்மையை, உய்த்த - அடையவேண்டு மென்னும், ஆதரவினுல் - இச்சையினுல், கங்கை முதல் அவற்றுள் - கங்கை முதலிய தேவ நதிகளில், நரத்துவம் - நரத் தன் மையை, ஒழிப்பதனுக்கு -விடுவதற்கு, இசைவன்-லோகத் தில் அநேகர்) சம்மதிக்கின்றனர், அது - அது, போல் - போல, என்றும் பொய்த்தல் இலா - சதா நித்தியமா யுள்ள, துரிய வடிவு ஆம் - பிரத்திய காத்ம ரூப மாகிய, பிரமத்துவத்தில் - பிரம்ம ரூப மாக, பொருந்த - இருத் தற்கு, சீவன் தன் கேட்டினுக்கு - ஜீவன் தனது நாசத் திற்கு, இங்கு - ஈண்டு, உடன்படும் - சம்மதிப்பன். எ-று.

தான் - "அழிவு தனக்கு" என்பதில், தன் - அசை.

"தனக்கு" வேற்றுமை மயக்கம், ஆரும் வேற்றுமை யிருக்க வேண்டும்.

"தன்மைக்கு'- வேற்றுமை மயக்கம், இரண்டாம் வேற்றுமை இருக்க வேண்டும்.

பிரஹ்ம ஆத்ம ஐக்கிய ஞானத்தினுல் ஜீவங் பிரஹமத் தினை அடையப்படும் ஆயின், கொடுங் கண்களை உடைய ஓர் வகை வரிப் புலியினைப் பார்க்கப்பட்ட புருஷன் நாசம் ஆவது போல், ஜீவத் தன்மையினைப் பிரஹ்மம் ஆனது, தன்னைச் சாக்ஷாத்கரித்த அவ் விடத்திலேயே நாசம் செய் யாநிற்கும்.

தன்னை நாசம் செய்வதாய் இருத்தலினால், அந்த ஜீவன் தனது நாசத்தினுக்கு சம்மதிப்பனோ என்று நீ கேட்பாய் ஆகில்,

தேவத் வன்மையினை அடைய வேண்டும் என்னும் விருப்பத்தினால், கங்கை முதலிய தேவ நதிகளில், நரத் மையினை விடுவதற்கு லோகத்தில், அநேகர் சம்மதிக்கின் றார். அது போல, சதா நித்தியமா யுள்ள பிரத்தியக்காத்ம ரூபம் ஆய் உள்ள, பிரஹ்ம ரூபம் ஆக இருப்பதற்கு, ஜீவன் தனது நாசத்திற்குச் சம்மதிப்பன் என உணர்க. (175)

[வியாசர் முதலியவர்கள் போல, சாப அநுக்கிரகம் செய்யச் சாமர்த்தியம் உடையவனே தத்வ ஞானி ஆவன், சாப அநுக்கிரகம் சிறிதும் இல்லாதவன் தத்வ ஞானி அல் லன் என்று நீ கூறுவாயாகில், சாப அநுக்கிரக சாமர்த்தி யம், சகாம தவத்தின் பிரயோசநம் ஆம், ஆத்ம ஞானத்தின் பிரயோஜநம் அல்ல வாம். ஆத்ம ஞான பலம் அல்ல வாயின், "பெரிய தவமே ஆத்ம ஞானத்திற்கு முக்கியம் ஆம்" என வேத தைத்திரீய உபநிஷத் வாக்கியம் இருப்ப தால், தவம் இல்லாதவர்க்கு, ஆத்ம ஞானம் இல்லை என்று நீ கூறுவாயாகில், சாமாநுக்கிரக சாமர்த்தியத்திற்கு, யோக் கியம் ஆன சகாம தவமே காரணம் ஆம். ஆத்ம ஞானத் திற்கு சிரவண மநந நிதித்யாசநம் ஆகிய நிஷ்காம தவமே காரணம் ஆம் என உணர்வா யாக என்று கூறுகின்றார்.]

வாதரா யணன்முதலோர் போற்சாப முடனே
மற்றருள்செய் வலியுடையோன் றத்துவஞா னத்தோ,
னேதிலா னலனெனிலவ் வலிதவத்தின் பலமா
மிலங்குதத் துவஞான பலமன்று மாயின்,

மாத்வமே ஞானத்திற் கேதுவெனுஞ் சுருதி
வழக்கினுற் றவமிலர்க்குத் தத்துவஞா னந்தா,
னேதெனிலாஞ் சாபாதிக் குச்சாகா மியமே
யேதுநிட்கா மியதவஞா னத்தினுக்கென் றறியே. (176)

(இ—ள்) வாதராயணன் - வியாசர், முதலோர் - முதலியவர்கள், போல் - போல, சாபம் - சாப, அருள் செய் வலி யுடையோன் - அநுக்கிரகம் செய்யச் சாமர்த்தியம் உடையவனே. தத்துவ ஞானத்தோன் - தத்வ ஞானி யாவன், ஏது(ம்) இலான் - (சாபாநுக்கிரக சாமர்த்தியம்) சிறிதும் இல்லாதவன், அலன் - (தத்வ ஞானி) அல்லன், எனில் - என்று நீ கூறுவா யாகில், [சாபாநுக்கிரக சாமர்த்தியம் சகாம தவத்தின் சாமர்த்தியம் ஆம், ஆத்ம ஞானத்தின் பிரயோசநம் அன்று என்று கூறுகின்ருர்] அவ் வலி- அந்த (சாபாநுக்கிரக) சாமர்த்தியம், தவத்தின் பலம் ஆம்- (சகாம) தவத்தின் பிரயோசந மாம், இலங்கு - விளங்கா நின்ற, தத்துவ ஞாந - ஆத்ம ஞானத்தின், பலம் - பிரயோசநம், அன்ரும் - அல்ல வாம், [பெருந் தவமே ஆத்ம ஞானத்துக்கு காரணம் என்று தைத்திரிய உபநிஷத் வாக்கியம் இருப்பதனுல், தவம் இல்லாதவர்க்கு ஆத்ம ஞானந் தான் எங்ஙனம் உண்டாகும் என்று ஆக்ஷேபித்துக் கூறுகின்ருர்], ஆயின் - (ஆத்ம ஞாந பல மல்ல) ஆயின், மா தவமே -பெரிய தவமே, ஞானத்திற்கு (ஆத்ம ஞானத்திற்கு), ஏது - முக்கிய மாம், எனும் சுருதி வழக்கினுல் - என வேத (தைத்திரீய உபநிஷத்) வாக்கிய மிருப்பதால், தவ மிலர்க்கு - தவம் இல்லாதவர்களுக்கு, தத்துவ ஞானம் - ஆத்ம ஞானம், ஏது - இல்லை, எனில் - என்று நீ கூறுவா யாகில், [சமாதானங் கூறுகின்ருர்] சாப ஆதிக்கு - சாபாநுக்கிரக சாமர்த்தியத்துக்கு, சாகாமியமே - (யோக

மாகிய) சகாம தவமே, ஏது ஆம் - காரண மாம், ஞாநத்தி னுக்கு - (ஆத்ம) ஞாநத்தினுக்கு, நிடகாமிய தவம் - (சிர வண மநந நிதித்தியாசந மாகிய) நிஷ்காமிய தவமே, என்று - (காரண மாம்) என, அறி - உணர்வா யாக. எ—று.

உடன் - ஏ - மற்று - தான் - அசை.

சகாம தவம் - யோகம் முதலியன. நிஷ்காம தவம், சிரவண முதலியன ஆம்.

தைத்திரீய உபஷத்தில், "மகாதவம் ஞாந ஹேது" என்று கூறியிருக்கிறது, வியாசர் முதலியவர்கள் போல், சாபம் அநுக்கிரகம் செய்யச் சாமர்த்தியம் உடையவனே தத்வ ஞாநியாவன், சாப அநுக்கிரக சாமர்த்தியம் சிறிதும் இல்லாதவன், தத்வ ஞாநி அல்லன் என்று நீ கூறுவா யாகில்,

அந்தச் சாப அநுக்கிரக சாமர்த்தியம் சகாம தவத்தின் பிரயோஜநம் ஆம்.

ஆத்ம ஞாநத்தின் பிரயோஜநம் அல்ல வாம்.

ஆத்ம ஞாந பலம் அல்ல வாயின், "பெரிய தவசே ஆத்ம ஞாநத்திற்கு முக்கியம் ஆம்" என வேத தைத்திரீய உபநிஷத் வாக்கியம் இருப்பதால், தவம் இல்லாதவர் களுக்கு, ஆத்ம ஞாநம் இல்லை என்று நீ கூறுவாய் ஆகில்,

சாப அநுக்கிரக சாமர்த்தியத்திற்கு, யோக்கியம் ஆகிய சகாம தவமே காரணம் ஆம்.

ஆத்ம ஞாநத்தினுக்கு, சிரவண மநந நிதித்தியாசநம் ஆகிய நிஷ்காம தவமே காரணம் ஆம் என உணர் வாயாக (176)

[வேத விபாகம் செய்த வியாசர் முதலியோர்கட்கு ஆத்ம ஞானமும், சாப அநுக்கிரக சாமர்த்தியமும், ஆகிய இரண்டும் பொருந்தியிருக்கின்றதே என்று கேட்பாயாகில், வியாசர் முதலியோர்கட்கு, யோகம் ஆகிய சகாமம், சிர வண மனன நிதித்யாசம் ஆகிய, நிஷ்காம தவங்கள் ஆன இரண்டு தவங்களும், இருக்கின்றன. அந்தக் காரணத்தினுல், ஆத்ம ஞானம், சாப அநுக்கிரக சாமர்த்தியம் என்னும் இரண்டும் அவர்கட்கு கூடும். சகாமம் நிஷ்காமம் என்னும் இரு வகையின் உள்ளே, ஒவ்வொரு தபசைச் செய்யின், ஒவ்வொன்றினையே அடைவர். அங்ஙனம் ஒன்றொன்றே அடைவதனுல், விரோதம் இல்லை யாம். உயர்வாகிய சாப அநுக்கிரக சாமர்த்தியம் இன்றியவர்களாய், விதி சூந்ய தத்துவ ஞானிகளை, கிரியா நிஷ்டகள் நிந்திப்பார்கள் என்று கூறுவாயாகில், அந்தக் கிரியா நிஷ்டகளுக்கும், விஷய லம்படர்களால் நிந்தை உண்டாகாநிற்கும் ஆனதால், கிரியாநிஷ்டர் நிந்தையினுலும், மாடுகள், புலிகள், பாய்வதனுலும், பாம்பு கடித்தலினுலும், ஆத்ம ஞானிக்கு, தோஷம் இல்லை யாம் என்று கூறுகின்றுர்.]

வேதவியா சாதிகட்கு ஞானம்வலி யிரண்டு
மேவுமே யெனிலவர்கட் கிருதவமு முளவா,
மாதலினு லவ்விரண்டு மாகுமொரோர் தவமே
யாயினெவ்வொன் றேயடையு மதனுன்மா றின்ரு,
மேதையாஞ் சாபாதி வலியிலர்க ளாகி
விதியிறத் துவஞானி கனைக்கிரியா நிட்ட,
ரோதுவார் நிந்தையெனி லவர்தமக்கும் விடயத்
துழல்பவரா னிந்தையா தலிற்குறைவின் ருமால். (177)

(இ—ள்) வேத வியாச ஆதிகட்கு - வேத (விபாகம் செய்த) வியாசர் முதலியோர்கட்கு, ஞானம் -(ஆத்ம) ஞான

மும், வலி - (சாபாநுக்கிரக) சாமர்த்தியமும், இரண்டும் - (ஆகிய) இரண்டும், மேவுமே - பொருந்தி யிருக்கின்றதே, எனில் - என்று கேட்பாயாகில், அவர்கட்கு - வியாசர் முதலியோர்கட்கு, இரு தவமும் - (யோக மாகிய சகாம, சிரவண மநந நிதித்யாசந மாகிய நிஷ்காம தவங்க ளான) இரண்டு தவங்களும், உள ஆம் - இருக்கின்றன, ஆதலி னால் - அந்தக் காரணத்தினால், அவ் விரண்டும் - அந்த ஞாநம், சாபாநுக்கிரக சாமர்த்தியம் என்னும் இரண்டும், ஆகும் - (அவர்கட்குக்) கூடும், ஒரு ஓர் தவமே ஆயின் - (சகாம நிஷ்காமம் என்னும் இரு வகையி னுள்ளே) ஒவ் வொரு தவத்தைச் செய்யின், ஒவ் வொன்றே - ஒன் றொன்றினையே. அடையும் - அடைவர், அதனால் - (அங்ஙனம்) ஒன் றொன்றே அடைவதனால், மாறு இன்றாம் - விரோதம் இல்லை யாம், [உயர்வினைத் தருகின்ற சாப அநுக் கிரகங்கட்கு சாமர்த்தியம் இன்றியவர்கள் ஆய், விதிப்படி நடவாத தத்துவ ஞாநிகளை - கர்ம நிஷ்டர் நிந்திப்பார்களே என்று கூறுவாயானால், கர்ம நிஷ்டருக்கும், விஷயப் பிர வர்த்தர்களால், நிந்தை உண்டாகிறபடியால், கிரியா நிஷ்டர் நிந்தைகளால், ஆத்ம ஞாநிக்கு தோஷம் இன்று என்று சமாதாநங் கூறுகின்றார்], மேதை ஆம் - உயர் வாகிய, சாப ஆதி வலி இலர்கள் ஆகி - சாபாநுக்கிரக சாமர்த்தி யம் இன்றியவர்களாய். விதி இல் - விதி சூந்ய, தத்துவ ஞாநிகளை - தத்துவ ஞாநிகளை, கிரியா நிட்டர் - கிரியா நிஷ்டர்கள், நிந்தை ஓதுவார் - நிந்திப்பார், எனில் - என்று கூறுவாயாகில், அவர் தமக்கும் - அந்தக் கிரியா நிஷ்டர் களுக்கும், விடயத்து உழல்பவரால் - விஷய லம்படர் களால், நிந்தை ஆதலின் - நிந்தை உண்டாகாநிற்கு மாத லின், குறைவு இன்றாம் - (கிரியா நிஷ்டர் நிந்தையினு

னும், பாம்பு கடித்தலினுலும், மாடு புலி பாய்வதனுலும், (ஆத்ம ஞாநிக்கு) தோஷமில்லை யாம், எ—று.

ஆல்-"தத்துவ ஞாநிதனை", "அவர் தமக்கும்" என்ப வற்றில், தன் - தம் - அசை.

வேத விபாகம் செய்த வியாசர் முதலியோர்கட்கு, ஆத்ம ஞாநமும், சாப அநுக்கிரக சாமர்த்தியமும் ஆகிய இரண்டும் பொருந்தியிருக்கின்றதே என்று கேட்பாகில்,

வியாசர் முதலியோர்கட்கு, யோகம் ஆகிய சகாமம், சிரவண மநந நிதியாசநம் ஆகிய நிஷ்காம தவங்க ளான இரண்டு தவங்களும் இருக்கின்றன. அந்தக் காரணத்தினுல், ஆத்ம ஞாநம், சாபாநுக்கிரக சாமர்த்தியம் என்னும் இரண் டும் அவர்கட்கு கூடும்.

சகாமம் நிஷ்காமம் என்னும் இரு வகையி னுள்ளே, ஒவ்வொரு தவசைச் செய்யின், ஒவ்வொன்றினையே அடைவர். அங்ஙனம் ஒன் றொன்றே அடைவதனுல், விரோதம் இல்லை யாம். உயர் வாகிய சாப அநுக்கிரக சாமர்த்தியம் இன்றியவர்க ளாய், விதி சூந்ய தத்துவ ஞாநி களைக் கிரியா நிஷ்டர் நிந்திப்பார் என்று கூறுவாயாகில்.

அந்தக் கிரியா நிஷ்டருக்கும், விஷய லம்படர்களால், நிந்தை உண்டாநிற்கும், ஆதலின், கிரியா நிஷ்டர் நிந்தையி னுலும், மாடுகள் புலிகள் பாய்வதனுலும், பாம்பு கடித் தலினுலும், ஆத்ம ஞாநிக்குத் தோஷம் இல்லை யாம் என உணர்க. (177)

[ஜகத்தின்கண் சத்யத்வப் பிரதீதி யின்றிய ஞாநி, பிரா ரப்த கர்ம சம்ஸ்காரத்தினுல் 1. அருந்தலுக் குரிய பொருள்

பலவற்றைக் கிரகித்தும், 2. சுழுத்தி மௌனத்தோடு வாக்கு மௌனத்தினைப் பொருந்தியும், 3. லௌகீக வசனங்களையும், அத்யாத்ம சாஸ்திரங்களை அநேக தன்மைகளாகக் கூறியும், 4. சீடர்க்கு ஆத்ம உபதேச மார்க்கத்தினைச் செய்தும், 5. துக்கத்தினை அடைந்தும், 6. சந்தோஷத்தினை அடைந்தும், 7. சமய நல்ல வேஷங்களை அலங்காரம் செய்து கொண்டும், 8. வஸ்திரம் இன்றியும், 9. வஸ்திரம் தரித்தும், 10 அநேக வித்தைகளை அப்யாசம் செய்தும், 11. சாஸ்திரங்களை அப்யாசம் செய்யாது, 12. ஸ்திரீகளினது கலவியில் பொருந்தியிருந்தும்- இந்தப் பிரகாரம் ஆன அநேக விதம் ஆன ஒழுக்கங்களைப் பொருந்தியிருப்பினும், ஞானலீலையாம் என்று கருதியே, அந்த ஞானியை முமுக்ஷுக்கள் கொஞ்சமும் சந்தேகத்தினை அடையாமல், மகான் ஆக விசுவசிப்பா யாக என்று கூறுகின்றார்.]

உலகிறந்த சீவன்முத்த னுகர்வினைவா சனையா
 லுண்பொருள்கள் பலகவர்ந்து மௌனமே யுற்றும்,
பலதிறங்கண் மொழிந்துமுப தேசநெறி புரிந்தும்
 பரிதபித்தும் மகிழ்ந்துமிகு வேடங்கள் புனைந்தும்,
கலைதுறந்து முடையுடுத்துங் கல்விபல பயின்றுங்
 கல்லாது மாதர்முயக் கிடையுற்று மிவ்வா,
றுலகிறந்த நடையுறினு மருள்விளையாட் டென்றே
 யவன்றனைநம் புகவைய மொருசிறிது முறாமல். (178)

(இ—ள்) உலகு இறந்த - ஜகத் (தின்கண் சத்யத்வப் பிரதீதி) இன்றிய, சீவன் முத்தன் - ஞானி, நுகர் வினை வாசனையால் - பிராரப்த கர்ம சமஸ்காரத்தினால், உண் பொருள்கள் -1. அருந்தலுக் குரிய பொருள்கள், பல கவர்ந்

தும் - பலவற்றைக் கிரகித்தும், மௌனமே உற்றும் - 2 (சுழுத்தி மௌனத்தோடு வாக்கு) மௌனத்தினைப் பொருந்தியும், பல திறங்கள் - 3. (லௌகிக வசனங்களை யும் அத்தியாத்ம சாஸ்திரங்களை) அநேக தன்மைகளாக, மொழிந்தும் - கூறியும், உபதேச நெறி - 4. (சீடர்க்கு) ஆத்மோபதேச மார்க்கத்தினை, புரிந்தும்-செய்தும், பரிதபித் தும் - 5. துக்கத்தினை அடைந்தும், மகிழ்ந்தும் - 6. சந் தோஷத்தை அடைந்தும், மிகு வேடங்கள் - 7. நல்ல (சமய) வேஷங்களை, புனைந்தும் - அலங்காரம் செய்து கொண்டும், கலை துறந்தும் -8. வஸ்திர மின்றியும், உடை உடுத்தும் - 9. வஸ்திரம் தரித்தும், பல கல்வி பயின்றும் - 10- அநேக வித்தைகளை அப்யாசநம் செய்தும், கல்லாது - 11. (சாஸ்திரங்களை) அப்யாசம் செய்யாது, மாதர் - 12, ஸ்திரீகளினது, முயக்கிடை - கலவியில், உற்றும் - பொருந் தி யிருந்தும், இவ் வாறு - இந்தப் பிரகாரம், அலகு இறந்த- அநேக வித மான, நடை - ஒழுக்கங்களை, உறினும் - பொருந்தி யிருப்பினும், அருள் விளையாட்டு - ஞானலீலை யாம், என்றே - என்று கருதியே, அவன் றனை - அந்த ஞானியை. ஒரு சிறிதும் - (முமுக்ஷுக்கள்) கொஞ்சமும், ஐயம் உறுமல் - சந்தேகத்தினை அடையாமல், நம்புக - (மகா னுக) விசுவசிப்பா யாக. எ—று.

“அவன்தனை” என்பதில், - தன் அசை

அஞ்ஞு வதைப் பரணி 11 உட் பரிவாரம்.
பொருளைவி ரிப்பார் புகழுதி றத்தார்.
புளகித முற்றூர் புரளுத லுற்றூர்.
ஆருளைவி ரிப்பார் அறியவு ரைப்பார்.
அதிசய மிக்கார் அவளடி யாரே. 14

தெரியுமு ளத்தார் சிலவர்தெ ளிப்பார்.
சிலவர்க ளிப்பார் சிலவர்தி கைப்பார்.
அளியுமு ளத்தோ டழுதுசி ரிப்பார்.
அவர்கள் செயப்பா டறியவொ ணாதே.

எனக் கூறுதல் கொண் டுணர்க.

1. ஜகத்தின்கண் சத்தியத்வப் பிரதீதி யின்றிய ஞானி, பிராரப்த கர்ம சம்ஸ்காரத்தினால், அருந்தலுக் குரிய பொருள்கள் பலவற்றைக் கிரகித்தும்,

2. சுழுத்தி மௌனத்தோடு வாக்கு மௌனத்தினைப் பொருந்தியும்,

3. லௌகிக வசனங்களையும், அத்யாத்ம சாஸ்திரங் களை அநேகத் தன்மைக ளாகக் கூறியும்,

4. சீடர்க்கு ஆத்மோபதே மார்க்கத்தினைச் செய்தும்,

5. துக்கத்தினை அடைந்தும்,

6. சந்தோஷத்தினை அடைந்தும்,

7. நல்ல சமய வேஷங்களை அலங்காரம் செய்து கொண்டும்,

8. வஸ்திரம் இன்றியும்,

9. வஸ்திரம் தரித்தும்,

10. அநேக வித்தைகளை அப்யாசம் செய்தும்,

11. சாஸ்திரங்களை அப்யாசம் செய்யாது,

12. ஸ்திரிகளினது கலவியில் பொருந்தி யிருந்தும், இந்தப் பிரகாரம் அநேக விதம் ஆன ஒழுக்கங்களை பொருந்தியிருப்பினும், ஞான லீலை யாம் என்று கருதியே

அந்த ஞாநியை முமுக்ஷுக்கள் கொஞ்சமும் சந்தேகத்தினை அடையாமல் மகா ஞாநி என விசுவசிப்பாய் ஆக என உணர்க. (178)

[விதேக கைவல்ய லக்ஷணங் கூறுகின்றார்]

[எக் காலத்தும், எத் தேசத்தும், ஒரு சரீரத்தினையும் பொருந்தாது, அத்வைத சச்சிதாநந்த பிரஹ்ம சொரூப மாக இருத்தல், புநராவிருத்தி யின்றிய நன்மையினைத் தருகின்ற விதேக கைவல்யம் ஆம் என்று பெரியோர் கூறு கிற்பர், புகன்ற விதேக கைவல்யத்தினை அடையும் வழி எந்தக் கிரமத்தால் என்று கேட்பாயாகில், 1. நாசம் இன் றிய நித்திய கர்மாநுஷ்டாநத்தினால் புண்ணியமும், 2. அந் தப் புண்ணியத்தினால் பாப க்ஷயமும், 3. அந்தப் பாப க்ஷயத்தினால் நிறைந்த சித்த சுத்தியும், 4. அந்தச் சித்த சுத்தியினால் மித்தை யான சம்சாரத்தின்கண் தோஷ தரிசந மும், 5. அந்தத் தோஷ தரிசநத்தினால், உண்மை யான சந் யாசமும், 6. அந்தச் சந்யாசத்தினால், என்று அடுத்த கவி யில் முடிக்கின்றார் என்று கூறுகின்றார்.]

என்றுமெவ் விடத்தினுமோ ருடம்புமுறா தொன்றா
யிருந்தசச்சி தாநந்த சிவசொரூப மாத,
னன்றிதரு விதேககைவல்லியமென் றிசைப்பர்
நவின்றவதை யெய்துமா றெவ்வாற்றா னென்னிற்,
பொன்றலினித் தியகருமா நுட்டாநந் தன்னாற்
புண்ணியமப் புண்ணியத்தாற் பாவவொழி வதனாற்,
குன்றலறு சித்தசுத்தி யதனாற்பொய்க் குடும்பக்
குற்றநிகழ் வதனன்மெய்த் துறவுதுற வதனால். (179)

(இ—ள்) என்றும் - எக் காலத்தும், எவ் விடத்தி னும் - எத் தேசத்திலும், ஓர் - ஒரு, உடம்பும் - சரீரத்

தினையும், உருது - பொருந்ாது, ஒன்று ஆய் இருந்த - அத்வைத, சச்சிதாநந்த சிவ சொரூபம் - சச்சிதாநந்த பிரஹ்ம ரூப மாக, ஆதல் - இருத்தல், நன்றி தரு - புநரா விருத்தி யின்றிய) நன்மையினைக் கொடுக்கின்ற, விதேக கைவல்லியம் - விதேக கைவல்லிய மாம், என்று - என, இசைப்பர் -(பெரியோர்) கூறுகிற்பர், [விதே கைவல்யம் அடையும் கிரமத்தினைக் கூறுகின்றார்] நவின்ற - புகன்ற, அதை-விதேக கைவல்லியத்தினை, எய்தும் ஆறு -அடையும் வழி, எவ் வாற்றால்-எந்தக் கிரமத்தால், என்னில் - என்று கேட்பாயாகில், [20 வகைக் கிரமம் உளது எனச் சமா தாநம் கூறுகின்றார்], பொன்றல் இல் - நாசம் இன்றிய, நித்திய கரும அநுட்டாநம் தன்னால் - நித்திய கருமா நுடா நத்தினால், புண்ணியம் - புண்ணியமும், அப் புண்ணியத் தால் - 2- அந்தப் புண்ணியத்தினால், பாவ ஒழிவு - பாப க்ஷயமும், அதனால் - 3. அந்தப் பாப க்ஷயத்தினால், குன்றல் அறு - நிறைந்த, சித்த சுத்தி-சித்த சுத்தியும், 4. அதனால்- அந்தச் சித்த சுத்தியினால், பொய் - மித்தை யான, குடும்ப - சம்சாரத்தின்கண், குற்ற நிகழ்வு - தோஷ தரிசநமும், அதனால் - 5. அந்த சம்சார தோஷ தரிசநத்தி னால், மெய்த் துறவு - உண்மை யான சந்நியாசமும், 6. துறவு அதனால் - 6. அந்தச் சந்நியாசத்தினால். எ—று.

"அநுஷ்டாநம் தன்னால்" என்பதில், தன் - அசை.

(இச் செய்யுள் குளகம்)

எக் காலத்தும், எத் தேசத்திலும், ஒரு சரீரத்தினையும் பொருந்ாது, அத்வைத சச்சிதாநந்த பிரஹ்ம ரூபம் ஆக இருத்தல், புநர் ஆவிருத்தி இன்றிய நன்மையினைக் கொடுக்கின்ற விதேக கைவல்யம் ஆம் என பெரியோர் கூறுகிற்பர்.

புகன்ற விதேக கைவல்யத்தினை அடையும் வழி எந்தக் கிரமத்தினுல் என்று கேட்பாயாகில், நாசம் இன்றிய

1. நித்திய கர்ம அநுஷ்டாநத்தினுல் புண்ணியமும்,

2. அந்தப் புண்ணியத்தினுல் பாப க்ஷயமும்,

3. அந்தப் பாப க்ஷயத்தினுல் நிறைந்த சித்த சுத்தியும்,

4. அந்தச் சித்த சுத்தியினுல் மித்தை யான சம்சாரத்தின் தோஷ தெரிசநமும்,

5 அந்தச் சம்சார தோஷ தரிசநத்தினுல், உண்மை யான சந்நியாசமும்,

6. அந்தச் சந்நியாசத்தினுல், என அடுத்த கவியில் முடிக்கிருர் என உணர்க. (179)

[மோக்ஷ அபேக்ஷையும், 7 அந்த மோக்ஷ அபேக்ஷையினுல், பாகிய கர்மத் தியாகமும், 8 கூறிய பாஹ்ய கர்மத் தியாகத்தினுல், சுபேச்சை முதலிய ஞாந பூமிகளின் அப்பியாசமும், 9 அந்த ஞாந பூமிகளின் அப்பியாச பலத்தினுல், சத்யம் ஆயிருக்கின்ற பிரதியகாத்ம பிரீதியும், 10 அந்தப் பிரத்யக் காத்மப் பிரீதியால், சொலற் கரிய மகா வாக்கிய விசாரமும், 11 அந்த மகா வாக்கிய விசாரத்தினுல், அத்வைத ஞாநமும், 12 அந்த அத்வைத ஞாநத்தினுல், அஞ்ஞாந நாசமும், 13 அந்த அஞ்ஞாந நாசத்தினுல், மித்தை யான த்வைதப் பிராந்தி நிவிர்த்தியும், 14 அந்தத் த்வைதப் பிராந்தி நிவிர்த்தியினுல், மிகுந்த சுக துக்க ஸ்மிருதி நிவிர்த்தியும், 15 அந்தச் சுக துக்க ஸ்மிருதியின் நிவிர்த்தியினுல், ராகத் துவேஷ ஹாநியும், 16 அந்த ராகத் துவேஷ ஹாநியினுல் விதி நிஷேத நிவிருத்தியும், 17 அந்த விதி நிஷேத நிவிர்த்தியினுல், என அடுத்த கவியில் முடிக்கின்ருர்.]

முத்திவிருப் பதனுனே புறக்கரும வொடுக்க
மொழிந்ததனுல் யோகநிலை முயற்சியது தன்னுற்,
பொய்த்தலறு துரியவிழை வத்துரிய விழைவாற்
புகலருமா வாக்கியவா ராய்ச்சியத னுனே,
யத்துவித ஞானமத னுலவிச்சை நாச
மதனுற்பொய்த் துவிதமயக் கழிதலத னுனே,
மெத்துசுக துக்கநினை வொழிவதனுல் விருப்பு
வெறுப்பறுத லதனுலொண் விதிவிலக்கோய் வதனுல். (180)

(இ—ள்) முத்தி விருப்பு - மோக்ஷ அபேக்ஷையும், அதனுன் - 7 அந்த மோக்ஷாபேக்ஷையால், புறக் கரும ஒடுக்கம் - பாஹ்ய கர்ம பரித்தியாகமும், 8 மொழிந்த அதனுல் - கூறிய பாஹ்ய கர்ம பரித்தியாகத்தினுல், யோக நிலை முயற்சி - (சுபேச்சை முதலிய ஞான) பூமிகாப்பியாசமும், 9 அது தன்னுல் - அந்த ஞான பூமிகாப்பியாசத்தினுல், பொய்த்தல் அறு - சத்தியமா யிருக்கின்ற, துரிய விழைவு - பிரத்தியகாத்மப் பிரீதியும், 10 அத் துரிய விழைவால் - அந்தப் பிரத்யகாத்மப் பிரீதியால், புகல் அரும் - சொலற் கரிய, மா வாக்கிய ஆராய்ச்சி - மஹா வாக்கிய விசாரமும், 11 அதனுன் - அந்த மஹா வாக்கிய விசாரத்தினுல், அத்துவித ஞானம் - அத்வைத ஞானமும், 12 அதனுல் - அந்த அத்வைத ஞானத்தினுல், அவிச்சை நாசம் - அஞ்ஞான நாசமும், 13 அதனுல் - அந்த அஞ்ஞான நாசத்தினுல், பொய் - மித்தை யான, துவித மயக்கு அழிதல் - துவைதப் பிராந்தி நிவிர்த்தியும், 14 அதனுன் - அந்தத் துவைதப் பிராந்தி நிவிர்த்தியினுல், மெத்து-மிகுந்த, சுக துக்க நினைவு ஒழிவு - சுக துக்க ஸ்மிருதி நிவிர்த்தியும்,

15 அதனுல் - அந்த சுக துக்க ஸ்மிருதி நிவிர்த்தியினுல், விருப்பு வெறுப்பு அறுதல் - ராக த்வேஷ ஆநியும், 16 அதனுல் - அந்த ராக த்வேஷ ஹாநியினுல், ஒண் - பிரகாசம் பொருந்திய, விதி விலக்கு ஓய்வு - விதி நிஷேத நிவிர்த்தியும், 17 அதனுல் - அந்த விதி நிஷேத நிவிர்த்தியினுல். எ—று.

ஏ - ஏ - ஏ "அது தன்னுல்" என்பதில், தன் - அசை

(இச் செய்யுள் குளகம்)

மோக்ஷ அபேக்ஷையும்,

7. அந்த மோக்ஷாபேக்ஷையால், பாஹ்ய கர்ம பரித்தியாகமும்,

8. கூறிய பாஹ்ய கர்ம பரித்தியாகத்தினுல், சுபேச்சை முதலிய ஞாந பூமிகாப்பியாசமும்.

9. அந்த ஞாந பூமிகாப்பியாசத்தினுல், சத்யமாயிருக்கின்ற பிரத்யகாத்மப் பிரீதியும்,

10. அந்தப் பிரத்யகாத்மப் பிரீதியினுல், சொலற்கரிய மகா வாக்கிய விசாரமும்,

11. அந்த மகா வாக்கிய விசாரத்தினுல், அத்வைத ஞாநமும்,

12. அந்த அத்வைத ஞாநத்தினுல், அஞ்ஞாந நாசமும்,

13. அந்த அஞ்ஞாந நாசத்தினுல், மித்தையான த்வைதப் பிராந்தி நிவிர்த்தியும்,

14. அந்தத் த்வைதப் பிராந்தி நிவிர்த்தியினுல், மிகுந்த சுக துக்க ஸ்மிருதி நிவிர்த்தியும்.

15, அந்தச் சுக துக்க ஸ்மிருதி நிவிருத்தியினுல், ராகத் துவேஷ ஹானியும்,

16. அந்த ராகத் துவேஷ ஹானியினுல், பிரகாசம் பொருந்திய விதி நிஷேத நிவிர்த்தியும்,

17. அந்த விதிநிஷேத நிவிர்த்தியினுல், என்று மருகவியில் முடிக்கிருர் என உணர்க. (180)

[புண்ணிய பாப கர்ம க்ஷயமும், 18 அந்தப் புண்ணிய பாப கர்ம க்ஷயத்தினுல், தேக ஆத்ம பாவ நிவிர்த்தியும், 19 தேக ஆத்ம பாவ நிவிர்த்தியினுல், சர்வ பாச நிவிர்த்தியும், 20 சர்வ பாச நிவிர்த்தியினுல், பரத்துக் கெல்லாம் பரம் ஆய், பரம ஸ்தாநம் ஆய், நாம ஜாதி லிங்கம் இன்றி அத்வைதம் ஆய், அவாங் மாநச கோசரம் ஆய், நித்திய ஆநந்த சொருபம் ஆய் உள்ள, மீண்டும் திரும்பாத, விதேக கைவல்யம், வேதத்தினுலும், ஆசாரியராலும், வந்து பொருந்தும் என்று ஆநந்த ரூப மோக்ஷத்தினை அடைகின்ற மார்க்கத்தினை விரும்புகின்ற அதிகாரி உணர்ந்து நிச்சயம் செய்க என்று கூறுகின்ருர் ]

வினையிரண்டு மகறலத ஞற்றேக பாவ
  விச்சிந்தி யதனுனே பாசமெலா மொழிதல்,
பினையறைந்த வதனுனே பராபரமாய் முடிவாய்ப்
  பெயர்சாதி குறிபெரு தொன்ருகி வாக்கு,
மநமிறந்து நித்தியா நந்தமய மாகி
  மறிவிலா விதேககைவல்லியம்வந் தெய்து,
மெனவறிந்து துணிந்திடுக சுருதிகுரு பரனு
  லின்பவீ டடையுநெறி விரும்புறுமுத் தமரே. (181)

(இ—ள்) வினை இரண்டும் அகறல் - புண்ணிய பாப கர்ம க்ஷயமும், 18. அதனால் - அந்தப் புண்ணிய பாப கர்ம க்ஷயத்தினால், தேக பாப விச்சிந்தி - தேக (ஆத்ம) பாவ நிவிர்த்தியும், 19 அதனன்-அந்த தேகாத்ம பாவ நிவிர்த்தியினால், எலாம் பாசம் ஒழிதல் - சர்வ பாச நிவிர்த்தியும், பினை - பின்னர், அறைந்த - கூறிய, 20. அதனன்-அந்தச் சர்வ பாச நிவிர்த்தியினால், பர அபரம் ஆய் - பரத்துக் கெல்லாம் பர மாய், முடிவு ஆய் - பரம ஸ்தான மாய், பெயர் சாதி குறி பெருது - நாம ஜாதி லிங்கம் இன்றி, ஒன்று ஆகி - அத்வைத மாய், வாக்கு மநம் இறந்து - அவாங்க மாநச கோசர மாய், நித்திய ஆநந்த மயம் ஆகி - நித்தியா நந்த சொரூபமா யுள்ள, மறிவு இலா - (மீண்டும்) திரும் பாத, விதேக கைவல்லியம் - விதேக கைவல்லியம், சுருதி குருபரனால் - வேதத்தினாலும் ஆசாரியராலும், வந்து எய் தும் - வந்து பொருந்தும், என - என்று, இன்ப வீடு - ஆநந்த ரூப மோக்ஷத்தினை, அடையும் - அடைகின்ற, நெறி - மார்க்கத்தினை, விரும்பு உறும் - விரும்புகின்ற. உத்தமர் - அதிகாரிகள், அறிந்து - உணர்ந்து, துணிந் திடுக - நிச்சயம் செய்க, எ—று.

ஏ - ஏ - ஏ அசை.

பரம் என்று சொல்லப்பட்ட பிரஹ்மா முதலியவர் கள், எதனை நோக்க அபரம் ஆவார்களோ, அது பரம் ஆம். அதுவே பிரஹ்மம் ஆம்.

புண்ணிய பாப கர்ம க்ஷயமும்,

18. அந்தப் புண்ணிய பாச கர்ம க்ஷயத்தினால், தேக ஆத்ம பாவ நிவிர்த்தியும்,

19. தேக ஆத்ம பாவ நிவிர்த்தியினால், சர்வ பாச நிவிர்த்தியும்,

20. சர்வ பாச நிவிர்த்தியினால், பரத்துக் கெல்லாம் பரம் ஆய், பரம ஸ்தானம் ஆய், நாம ஜாதி லிங்கம் இன்றி, அத்வைதம் ஆய், அவாங் மானச கோசரம் ஆய், நித்தியா நந்த சொரூபம் ஆய் உள்ள, மீண்டும் திரும்பாத விதேக கைவல்யம், வேதத்தினாலும், ஆசாரியராலும், வந்து பொருந்தும் என்று, ஆநந்த ரூப மோக்ஷத்தினை அடைகின்ற மார்க்கத்தினை விரும்புகின்ற அதிகாரிகள் உணர்ந்து நிச்சயம் செய்க என உணர்க (181)

கிரந்தம் முடிவும், பரி சளிப்பும், கூறுகின்றார்.

[வேதத்தினை முதன்மை யாகக் கொண்ட சகல அத்தியாத்ம சாஸ்திரத்திலும், பிரதிபாதிக்கின்ற அர்த்தத்தினை அதிகாரிக்கு விளங்கும்படி, உள்ளங் கை நெல்லிக் கனி போலத் தெரிவித்து, ஞான ரூபம் ஆகிய பிரஹ்மாநந்தத்தின் கண் மக்கினம் ஆகும்படி செய்கின்ற, ஒப் பின்றிய இந்த வேதாந்த சூடாமணி என்னும் சாஸ்திரார்த்தினை, மோக்ஷத்தினை அடைதற்குத் தகுதி ஆன, விவேகம், வைராக்யம் சமாதி ஷட்க சம்பத்தி, முமுக்ஷுத்வம் என்னும் நான்கு சாதநங்களையும், அவதி பரியந்தம் அடைந்து, எப்படிப் பட்டவராலும், எவராலும், எப் பொழுதும், நீக்க முடியாத பவ வியாதியை நிவிர்த்திப்பதற்குக் கருதி, விருபத்தோடு ஞானாச்சாரியனை, அலை கடல் சூழும் பூதலம் மிசை, எங்கணும் தேடி, அநலில் இட்ட மெழுகு போல, மநம் உருகுகின்ற அதிகாரிகளைப் பார்க்கின், சந்தோஷத்தோடு உபதேசிப்பா யாக, என்று கூறுகின்றார்]

வேதமுத லாகியநூ லனைத்தினுஞ் சொல் பொருளை
விளங்கியிடக் கரதலா மலகமெனக் காட்டிப்.
போதமய மாகியபே ரானந்தத் தழுத்தும்
பொருவிகந்த விந்நூலை முத்திபெறற் குரிய,
சாதநநான் கினையுமடைந் தெவரானு மென்றுந்
தடுப்பரிய பிறவிநோய் தணிப்பதனுக் கெண்ணி,
யாதரவி னருட்குரவன் றனைத்தேடி யுருகு
மன்புடையோர் தமைக்காணி னளித்திடுக வுவந்தே.
(182)

(இ—ள்) வேதம் முதல் ஆகிய நூல் அனைத்தினும் - வேதத்தினை முதன்மையாகக் கொண்ட சகல அத்யாத்ம சாஸ்திரத்திலும், சொல் - பிரதிபாதிக்கின்ற, பொருளை - அர்த்தத்தினை. விளங்கியிட - (அதிகாரிக்கு) விளங்கும்படி, கர தல ஆமலகம் என -உள்ளங் கை நெல்லிக் கனி போல, காட்டி - தெரிவித்து, போத மயம் ஆகிய - ஞாந ரூப மாகிய, பேர் ஆநந்தத்து - பிரம்மாநந்தத்தின்கண், அழுத்தும் - மக்கிந மாகும்படி செய்கின்ற, பொருவு இகந்த - ஒப் பின்றிய, இந் நூலை - இந்த (வேதாந்த சூடாமணி என்னும்) சாஸ்திரத்தார்த்தத்தினை, முத்தி - மோக்ஷத்தினை, பெறற்கு - அடைதற்கு, உரிய - தகுதி யான, சாதநம் நான்கினையும் - (விவேகம் வைராக்கியம் சமாதிஷட்க சம்பத்தி முமுக்ஷுத்வம் என்னும்) நான்கு சாதநங்களையும், அடைந்து - (அவதி பரியந்தம்) அடைந்து, எவரானும் - எப்படிப்பட்டவராலும், என்றும் - எப் பொழுதும், தடுப்பு அரிய - நீக்க முடியாத, பிறவி நோய் - பவ வியாதியை, தணிப்பதனுக்கு - நிவிர்த்திப்பதற்கு, எண்ணி- கருதி, ஆதரவின் - விருப்பத்தோடு, அருள் குரவன் தனை- ஞாநாசாரியனை, தேடி - (அலை கடல் சூழும் பூதல மிசை

எங்கனும்) தேடி, உருகும் - (அநலில் இட்ட மெழுகு போல் மநம்) உருகுகின்ற, அன்புடையோர் தமை - அதிகாரிகளை, காணின் - பார்க்கின், உவந்து - சந்தோஷத்தோடு, அளித்திடுக - கொடு (உபதேதசி)ப்பா யாக. எ-று.

ஏ—"குரவன்தனை" என்பதில், தன் - "அன்புடையோர் தமை" என்பதில், தம் - அசை.

வேதத்தினை முதன்மை யாகக் கொண்ட சகல அத்யாத்ம சாஸ்திரத்திலும், பிரதிபாதிக்கின்ற அர்த்தத்தினை, அதிகாரிக்கு விளங்கும்படி, உள்ளங் கை நெல்லிக் கனி போல, தெரிவித்து, ஞாந ரூபம் ஆகிய பிரஹ்மாநந்தத்தின் கண் மக்கிநம் ஆகும்படி செய்கின்ற ஒப் பின்றிய இந்த வேதாந்த சூடாமணி என்னும் சாஸ்திரார்த்தத்தினை, மோக்ஷத்தினை அடைதற்குத் தகுதி யான, விவேகம், வைராக்கியம் சமாதி ஷட்க சம்பத்தி முமுக்ஷுத்வம் என்னும் நான்கு சாதநங்களையும் அவதி பரியந்தம் அடைந்து, எப் படிப்பட்டவராலும், எப் பொழுதும் நீக்க முடியாத பவ வியாதியை நிவிர்த்திப்பதற்குக் கருதி, விருப்புத்தோடு ஞாநாச்சாரியனை அலை கடல் சூழும் பூதலம் மிசை எங்கனும் தேடி, அநலில் இட்ட மெழுகு போல, மநம் உருகுகின்ற அதிகாரிகளைப் பார்க்கின், சந்தோஷத்தோடு உபதேசிப்பா யாக என உணர்க. (182)

திருப் பூ வணம், வேதாந்த மடாதிபதி, சத சாஸ்திர கர்த்தா, ஸ்ரீ காசிகாநந்த ஞாநாச்சாரிய ஸ்வாமிகள், வேதாந்த சூடாமணி என்னும் நூலுக்கு, இயற்றிய சந்தோஷ தாயினி என்னும் உரை, நல்ல முறையில் எழுதப் பெற்று, முற்றுப் பெற்றது. 40வது வயதில் எழுதப் பெற்று, 83வது வயதில் அச்சிட்டு முடிவு பெற்றது.

சர்வம் சிங்யம். ஓம் சாந்தி. சாந்தி. சாந்தி.

ஸ்ரீ வீர சேகர ஞாந தேசிக ஸ்வாமிகள்
திரு அடிகளே சரணம்.

சாதகர் 13வது கவி, சூசகனும் 14வது பாட்டு உதாரணம்.

பிரஹ்ம வித்தியா உபநிஷத்

"சோதகோ போதகச்சைவ மோதகச்ச பராஸ்மிருத: 51
இத்யேஷாம் திரிவிதோ ஞேயா: ஆசார்யஸ் து மஹீதலே
சோதகோ தர்சயேந் மார்க்கம் போதக;
ஸ்தாநமாசரேத்;. 52
மோதகஸ் து பரம் தத்த்வம் யஞ்ஞாத்வா
பரமஸ்நுதே. 52½"

இதன் பொருள்.

"சோதகர் போதகர் மோதகர் எனவே நன்கு ஸ்மரிக்கப்படுகின்றது இவ் வாறு, இவர்கள் மூன்று விதம் ஆனவர்கள், பூலோகத்தில் ஆசாரியர்கள் என்று அறிக."

"சோதகர் மார்க்கத்தினைக் காண்பிப்பவர் ஆவர். போதகர் ஸ்தாநத்தை ஆசரிப்பவர் ஆவர். மோதகர் எதனை அறிந்து பிரஹ்மத்தினை அநுபவிக்கின்றரோ (அந்த) பரம தத்துவத்தினை உபதேசிப்பவர் ஆவர்" என்று கூறுகின்றது. என உணர்க.

46வது கவி. "போற்றிறை" என்னும் கவியின் உரையின் கீழ்ச் சேர்த்துப் படிக்க வேண்டும்,

வாசுதேவப் பிரஹ்மேந்திர சரஸ்வதி இயற்றிய, சாஸ்திர சித்தாந்த லேச தாத்பரிய சங்கிரகம் என்னும் நூலில், அபிந்ந நிமித்த உபாதாநம் பிரஹ்மம், சுத்த ரூபமா? அல்லது, ஈசுவர ரூபமா? அல்லது, சீவ ரூபமா என்பது கேள்வி.

1. சம்க்ஷேப சாரீரக மத அநுசாரிகள், "ஜந்மாதி" சூத்திரத்தில், வாச்சியார்த்த ரூப சுத்தப் பிரஹ்மத்திற்கு,

பிரதாநத் தன்மையினுல் லக்ஷிக்கப்பட்டிருத்தலால், அதற்கே ஜகத் உபாதாநத் தன்மை என்று கூறுகின்றனர்.

2. மாயா உபாதியினுல் நிருபிக்கப்பட்ட பிம்ப சைதந்ய விசிஷ்டம், சர்வஞத்வாதி குணங்களுடைய ஈசுவர சைதந்யப் பிரஹ்ம ரூபமே உபாதாநம் என்று விவரண அநுசாரிகள் கூறுகின்றனர்.

3. மாயா பரிணும ஆகாசாதி பிரபஞ்சத்திற்கு, ஈசுவரனே உபாதாநம். அந்தக் கரணம் முதலியவற்றிற்கு ஜீவ அவித்தியா பரிணும, சூக்ஷ்ம பூதங்கட்கு ஈசுவர பூத மாயா பரிணும மஹா பூத உபஷ்டப்தங்களுக்கு உபாதாநத் தன்மையால், அவற்றில் பிரவேசித்தலினுலேயே, சீவ ஈசர் இருவர் உபாதாநம் என மாயா அவித்தியா பேத வாதிகள் கூறுகின்றனர்.

4. மாயா பரிணும வியதாதி பிரபஞ்சத்திற்கு ஈசுவரன் உபாதாநம், அவித்தியா பரிணும அந்தக் கரணுதிக்கு ஜீவனே என, மாயாவித்தியா விபேத வாதிகளில், ஏக தேசி கூறுகின்றனர்.

5. மாயா அவித்யா அபேத வாதிகளில் சிலர், வியதாதி பிரபஞ்சத்திற்கு ஈசுவர உபாதாநம், அந்தக் கரணுதிகளுக்கோ, ஜீவ தாதாத்மிய பிரதீதியினுல், ஜீவனே உபாதாநம் என்று கூறுகின்றனர்.

6. அந்யரோ, சகல வியாவகாரிக பிரபஞ்சத்துக்கும் பிரஹ்மமே உபதாநம், ஜீவனே, ஸ்வபநாதி பிராதிபாஸிக பிரபஞ்சத்துக்கு, உபாதாநம் என்று கூறுகின்றனர்.

7. சிலர் அத்தியந்தம் உத்தம அதிகாரியை உத்தேசித்து, சகல பிரபஞ்சத்துக்கும் பிராதிபாசிகத் தன்மை அங்கீகரித்து, ஸ்வப்நப் பிரபஞ்சம் போன்று, ஜீவனே ஈசுவரனோடு கூடிய சகல ஆகாசாதி திரிசிய பிரபஞ்சத்திற்குக் காரணம் என்று கூறுகின்றனர்.

இவ் வாறு கூறியிருப்பதனை உணர்க.

பாட்டு, "73" தும்மலுடன் இருமல் வரும்" பக்கம் 196 உரையின் கீழ் சேர்க்கவும்.

இச் செய்யுளில், தநஞ் செய வாயு இறந்த ஐந்து நாள் காறும் இருந்து, நனி வீங்கி மெய்முழுதும் வெடித்திடச் செய் தகலும்" என்று கூறுகின்றபடியால், தூல சரீரத்தினை விட்டுச் சூக்ஷ்ம சரீரம் மரணம் ஆன உடனே நீங்கிப் போவது என்று சொலற்கில்லை. நீணாள் குடி யிருந்தவர், வீட்டை விட்டுப் போயும் வாசனை வயத்தால் மறதியால் அந்த வீட்டை நோக்கி வருவது போல, இந்தச் சூக்ஷ்ம சரீர 20 தத்துவ ரூப சூக்ஷ்ம சரீர சம்பந்த வாயுக்கள் இருக்கின்றன என உணர வேண்டும். சூக்ஷ்ம சரீரத்தில் சில தத்துவம் நீங்கி, சில தத்துவம் இருக்கின்றன என்று கொளற்கு நியாயம் இல்லை, ஓர் இந்திரிய வியவகாரத்திலும் மனோ ராஜ்ஜிய வியவகாரத்திலும், ஸ்வப்ந அவஸ்தையிலும், சில தத்துவம் வேலை செய்து, சில தத்துவம் வேலை செய்யாதிருக்கின்றது போலக் கொள்ளல் வேண்டும். அப்படிக் கன்றிச், சூக்ஷ்ம சரீரம் உடனே நீங்கி விட்டது என்று கொண்டால், தூல சரீரத்தை வீங்கல் செய்தல், முதலிய தொழில்கள் நடவாதிருக்கவேண்டும். நடத்தலின், வாயுக்கள் இருக்கின்றன என்றே கொள்ளல் வேண்டும். என உணர்க.

"விரியுமூல கனைத்தும் பொய்" என்னும்" 32வது கவியின் உரை ஈற்றுத் தொடர்பு. சேர்த்துப் படிக்குக.

4—25 அபாவம்.

ஐந்து அபாவத்தினைக் கூறுவாம்;— பிராகபாவம், பிரத்வம்ஸாபாவம், ஸாமாயிகாபாவம், அத்தியந்தாபாவம், அந்யோந்யாபாவம், என்னும் பேதத்தினுல் ந்யாய மத சித்த அபாவம் ஐ வகைத் தாம். அந்யோந்யாபாவத்தின் பிந்ந மாய நான்கு அபாவத்தினையும் ஸம்ஸர்க்காபாவ மென்றுங் கூறுவர். எச் சம்பந்தத்தினுல் அபாவத்தின் பிரதியோகி, தன் அதிகரணத்தி லிருக்கின்றதோ, அச் சம்பந்தாவச்சிந்ந மாகவே அதன் அபாவமும் ஆண்டு இருக்கின்றது. எங்ஙனம்? எப் பூதலத்தில் ஸம்யோக ஸம்பந்தத்தினுல், கட மிருக்கின்றதோ, ஆண்டு, கட அபாவ காலத்தில், ஈண்டு ஸம்யோக ஸம்பந்தாவச்சிந்ந கட மில்லை. அல்லது, கடத்தின் ஸம்யோக ஸம்பந்தம் இல்லை. அபாவம் இப் பிரதீதிக்கு விஷய மாகலின், அதனுல் ஸம்ஸர்க்காபாவ மெனப்படுகின்றது. "நாஸ்தி (இல்லை)" என்னும் சப்த ஜந்ய நிஷேத ரூபப் பிரதீதியின் விஷய மாவது, அல்லது, சம்பந்த ஸாதி நுசியங்களின் பிந்ந மாகிய பிரதியோகியின் ஸாபேக்ஷப் பிரதீதிக்கு விஷய மாவது, அபாவ மெனப்படும்.

பிராசீந நவீந மத பேதத்தினுல், அபாவங்களின் ஸாமாந்ய லக்ஷணம் இரு வித மாக ஈண்டுக்கூறப்பட்டது.

1 பிராகபாவம்

1. இப் பொழுது விசேஷ லக்ஷணத்தினைக் கூறுவாம்:— உத்பத்தி யின்றி நாச மடையும் அபாவம், பிராகபாவ மெனப்படும். ஆகாசாதி நித்தியத் திரவ்யத்திலும்

அந்யோந்யாபாவ, அத்தியந்தாபாவங்களிலும் அதிவ்யாப்தி நிவாரணத்தின் பொருட்டு 'நாசம்' எனக் கூறப்பட்டது. கடாதிகளிலும் பிரத்வம்ஸாபாவம். ஸாமயிகாபாவங்களிலும், அதிவியாப்தி நிவாரணத்தின் பொருட்டு, "உத்பத்தியின்றியது" எனக் கூறப்பட்டது. வேதாந்தத்தால் சித்தித்த மாயை, அதன் சம்பந்த முதலிய உத்பத்தி யின்றி நாசமுடைய ஐந்து பாவ பதார்த்தத்திலும், அதிவியாப்தி நிவாரணத்தின் பொருட்டு, "அபாவம்' எனக் கூறப்பட்டது. அந்தப் பிராகபாவம் பிரதியோகியின் ஸமவாயி (உபாதாந) காரணத்தில் இருக்கின்றது. பிரதியோகியின் விரோதியாயிருக்கின்றது. ஏனெனில், பிரதியோகியின் அதிகரணத்தில், ஒரு காலத்தில் இருப்ப தின்மையின். பிரதியோகியின் உத்பத்தியினுல் நாசமாகின்றமையின். "கடம் உண்டாம்" என்னும் வியவஹாரத்தின் ஹேது, இப் பிரதீதியின் விஷயமாயிருக்கின்றது. பிரதியோகியினை உண்டாக்குவதாயுமிருக்கின்றது. எங்ஙனம் கடத்தின் ஸமவாயி காரணமாய் கபாலத்தில், கடோத்பத்தியின் பூர்வம், கடத்தின் அபாவம் இருக்கின்றது. பச்சைக் கபாலத்தில், ரக்த ரூப உத்பத்தியின் பூர்வம், ரக்த ரூபத்தின் அபாவம் இருக்கின்றது.

## 2. பிரத்வம்சாபாவம்

2. உத்பத்தி யுடைய தாய் அந்த மின்றிய அபாவம், பிரத்வம்ஸாபாவ மெனப்படும். கடாதிகளிலும், ஸாமயிகாபாவத்திலும், அதிவ்யாப்தி நிவாரணத்தின் பொருட்டு 'அந்த மின்றியது' எனப்பட்டது. ஆகாசாதிகளிலும், பிராகபாவாதிகளிலும், அதிவ்யாப்தியின் நிவாரணத்தின் பொருட்டு. 'உத்பத்தி யுடையது' எனப்பட்டது. பிரதியோகியின் நிமித்த காரணங் (தண்டாதி) களினுல் உண்

டாய்ப் பிரதிபோகியின் ஸமவாயி காரணத்தி லிருக்கின்றது. "கடம் நாச மடைந்தது" என்னும் வியவஹாரத்தின் ஹேது வாம். எங்ஙனம், கடோத்பத்தியின் பின் (உலக்கை முதலியவற்றால்) அடித்த லாதிகளால், கடத்தின் நாச முண்டாய்த் தனது ஸமாயி காரண மாகிய கபாலத்தில் கடத்தின் அபாவம் இருக்கின்றது. அக்நியின் சம்யோகத்தினால் பக்குவ மடைந்த கபாலத்தில், ரக்த ரூபத்தின் உத்பத்தியாய்ச் சியாம ரூபத்தின் அபாவ முண்டாகின்றது. அது பிரத்வம்ஸாபாவ மாம்.

### 3 சாமயிகாபாவம்.

3. உத்பத்தி யுடைய தாய் நாச முடைய அபாவம் ஸாமாயிகபாவ மாம். அது பிரதியோகியின் ஸம்பந்தி யாய் பூதலாதிகளில் இருக்கின்றது. "இப் பொழுது இப் பூதலத்தில் கட மில்லை" என்னும் வியவஹாரத்திற்கு ஹேதுவாயிருக்கின்றது. பிராகபாவத்தி லுள்ள அதிவ்யாப்தி நிவிர்த்தித்தற் பொருட்டு, 'உத்பத்தி யுடைய' தென்று கூறப்பட்டது.

பிரத்வம்ஸாபாவத்தி லுள்ள அதிவ்யாப்தியின் நிவாரணத்தின் பொருட்டு, 'நாச முடைய' தென்று கூறப்பட்டது. கடாதி பாவ ரூப ஜகத்தி லுள்ள அதிவியாப்தியின் நிவாரணத்தின் பொருட்டு, 'அபாவ' மெனப்பட்டது. எங்ஙனம்? பூதலாதிகளில் கடாதிகளின் அபாவம் இருக்கின்றது. அது ஒரு காலத்தில் உண்டாகின்றது. ஒரு காலத்தில் நாச மடைகின்றது. பூதலத்தி லின்றும் கடத்தினை வேறு தேசத்திற்குக் கொண்டு போயின், கடத்தின் அபாவம் பூதலத்தி லுண்டாகிறது. அப் பூதலத்தில், கடத்தினைக் கொண்டுவரின், கடத்தின் அபாவம். பூதலத்தில் நஷ்ட

மாகின்றது. அதனுல், ஸாமயிகாபாவம் உத்பத்தி நாச முடையதா யிருக்கின்றது.

நவீந நையாயிகர்களே இங் ஙனம் கூறுகின்றனர்:— ஸமய விசேஷத்தில் தோற்றும் ஸாமயிகாபாவம், அத்தியந்தாபாவத்தி லடக்க மாம். கடாபாவ முடைய பூதலத்தில் கடத்தினைக் கொண்டு வருதலால் அத்தியந்தாபாவம். வேறு இடத்திற்குச் செல்லுதலின், அபாவம் உண்டாயினும், பிரதீதி யின்மையால். கடத்தினை எடுத்துவிடின் பிரதீதி யாகுதலால், பூதல கட ஸையோகங்களின் பிராக பாவம் ப்ரத்வம்ஸாபாவம் என்னும் இரண்டும் அத்தியந்தா பாவப் பிரதீதியின் நியாமக மாக இருக்கின்றது. கட முடைய பூதலத்தில், அதன் சம்யோகத்தின் பிராகபாவப் பிரத்வம்சாபாவம் என்னும் இரண்டும் அஸத்தா யிருத்தலின், அத்தியந்தாபாவத்தின் பிரதீதியும் உண்டாவ தில்லை. பூதல கட ஸம்யோகத்தின் பூர்வ காலத்திலும், கடத்தினை எடுத்து விடின், ஸம்யோகத்தின் த்வம்ஸ காலத்திலும், அத்தியந்தாபாவத்தின் பிரதீதி யுண்டாகின்றது.

### 4. அத்தியந்தாபாவம்.

4. த்ரைகாலிக (முக் காலத்தினை யுடைய)ஸம்பந்தத்தினுல் அவச்சிந்நம் பண்ணப்பட்ட பிரதியோகியினை யுடைய அபாவம், அத்தியந்தாபாவ மாம். அது அநாதி அநந்தமா யிருக்கின்றது த்வம்ஸப், பிராகபாவங்களில் உண்டாம் அதிவ்யாப்தியினை நிவிர்த்தித்தற் பொருட்டு, "த்ரைகாலிகம்" என்னும் பதங் கூறப்பட்டது. அந்யோந்யாபாவத்தில் உண்டாம் அதிவ்யாப்தியினை நிவிர்த்தித்தற் பொருட்டு, 'ஸம்பந்தாவச்சிந்நம்' என்னும்

பதங் கூறப்பட்டது. அத்தியந்தாபாவம், அநந்த மாயிருத்தலின், பிராகபாவ மன்று, பிராகபாவம் உத்பத்தி யுடைய தாகலின். அநாதியா யிருத்தலின், பிரத்வம்ஸா பாவமு மன்று. ஏனெனின், த்வம்ஸம். ஜந்ய மாகலின், ஸதா இருத்தலின், ஸாமயிகாபாவமு மன்று. ஏ னெனின், ஸாமயிகாபாவம் ஒரு காலத்திருத்தலின் த்ரைகாலிக ஸம்பந்தத்தினுல் நிரூபிக்கப்படுதலின், அது அந்யோந்யா பாவ மன்று. அந்யோந்யாபாவத்திற்கு ஸம்பந்த அபேக்ஷை யின்மையின், அது பிரதியோகியின் அதிகரணத் தில் எப் பொழுதும் இருக்கின்றது, "இல்லை" என்னும் வியவஹாரத்திற்கு ஹேதுவா யிருக்கின்றது. எங்ஙனம்? வாயுவில் ரூபம் முக் காலத்தும் இல்லை. ஆண்டு ரூபத்தின் அத்தியந்தாபாவம் இருக்கின்றது. எங்ஙனம்? கந்தமும், வாயுவில் எப் பொழுதும் இல்லை. அங்ஙனமே கந்தத்தின் அத்தியந்தாபாவமும் இருக்கின்றது. ஸ்நேக குணத்திற்கு, ஜலத் திரவிய மின்றி, மற்றைய எல்லாத் திரவியங்களிலும் அபாவ மாகின்றது. அது. அத்தியந்தாபாவ மாம். ஆத்மா வில், ரூப ரஸாதிகளின் அபாவம் இருக்கின்றது. அதுவும், அத்தியந்தாபாவ மாம். பிருதிவி ஜலங்க ளன்றி, மற்றைய எல்லாப் பதார்த்தங்களிலும் இருக்கும் ரஸத்தின் அபாவம், அத்தியந்தாபாவ மாம். ஜலத்தில், பிருதிவித்வ ஜாதியின் அபாவம், அத்தியந்தாபாவ மாம். க்ஷத்திரியாதி வ்யக்தியில், பிராஹ்மணத் தன்மை ஜாதியின் அபாவமும், அத்தியந்தா பாவ மாம், ஆகாசம், காலாதிகள் ஆத்மா என்னும் வியாபகத் திரவியங்களில் உள்ள கிரியையின் அபாவமும், அத்தியந்தாபாவ மாம். பிருதிவி முதல் மந பரியந்த மான ஐந்து திரவியங்களில், ஒரு காலத்துக் கிரியை யுண்டாகின் றது. ஒரு காலத்து கிரியையின் அபாவ மிருக்கின்றது.

அவற்றில், கிரியையின் அத்தியந்தாபாவ மில்லை. அங்ஙனமே, அதன் ஸாமயிகாபாவமு மில்லை. எதனுல், ஸம்யோக ஸம்பந்தாவச்சிந்ந மாகிய ஸாமயிகாபாவம் கேவலம் திரவியத்திற்கே உண்டாகின்றது. கிரியை குணங்களுக்கு உண்டாவ தில்லை. குண கிரியைகளுக்கு, ஸம்யோக ஸம்பந்தத்தினுல், யாண்டும் ஒரு காலத்தும் இருப்பின்மையின். அதனுல், அவற்றில் கிரியையின் பிராகபாவ ப்ரத்வம்ஸாபாவங்களே இருக்கின்றன. இவ் வாற்ருல், பூதலாதிகளில், யாண்டு ஒரு காலத்து கடாதிகள் இருக்கின்றது. ஒரு காலத்தில் இருப்ப தில்லை. ஆண்டு, கடாதிகட்கு ஸாமயிகாபாவமே யிருக்கின்றது. அது அத்தியந்தாபாவத்தில், அடக்க மில்லை.

எதனுல், அத்தியந்தாபாவத்திற்குப் பிரதியோகியோடு விரோத மிருக்கின்றது, யாண்டு பிரதியோகி இருக்கின்றது. ஆண்டு அபாவம் இருப்ப தில்லை. பின்னையோ, அபாவத்தின் அபாவ மிருக்கின்றது. ஸாமாயிகாபாவத்திற்கும், அத்தியந்தாபாவம் அங்கீகரிக்குங்கால், அத்தியந்தாபாவம் நித்திய மாய் இருக்கின்றதா மாயினும், பூதலாதிகளில் கட மிருக்குங் காலத்திலும், அத்தியந்தாபாவம் இருக்கின்றது. அதற்கு, தனது. பிரதியோகியோடு விரோத முண்டாகாது. ஒரே காலத்து ஒரு அதிகரணத்தில் இருப்ப தாகலின், அதுவோ இஷ்ட மில்லை. அதனுல், பூதலத்தில் ஒரு காலத் துள தாம் கடாபாவம் அத்தியந்தாபாவ மன்று. பின்னரோ, அதனினும், பிந்ந மாகிய ஸாமயிகாபாவமே யாம். அந்யோந்யாபாவ மல்லாமல் வேறு எல்லா அபாவங்கட்கும், பிரதியோகியோடு எப் பொழுதும் விரோத மிருக்கின்றது. பிரதியோகியின் அதிகரணத்தில், ஒரே காலத்தி லிருப்ப

தில்லை. அங்ஙனம் கடோத்பத்தியின் பூர்வம், கபாலத்தில் கடத்தின் பிராகபாவம் இருக்கின்றது. அது கட ரூபப் பிரதியோகியின் உத்பத்தியின் பின் கபாலத்தி லிருப்ப தில்லை. அது நாச மாகின்றது. ஆதலால், பிராகபாவத்திற் குப் பிரதியோகியோடு விரோதஞ் சித்திக்கின்றது. எங் ஙனம்? கபாலத்தில் கடம் இருக்கும்போது, கடத்தின் பிரத் வம்ஸாபவாம் இருப்ப தில்லை. ஆதலால், பிரத்வம்ஸத்திற் கும் பிரதியோகியோடு விரோதஞ் சித்திக்சின்றதோ, அங்ங னமேயே பூதல முதலியவைகளில் ஸம்யோக ஸம்பந்தத்தி ஞல், எவ் வளவு கடாதிக ளிருக்கின்றது, அதில், அவ் வளவு ஸாமயிகாபாவம் இருப்ப தில்லை. எப் பொழுது கடாதிகளுக்குப் போகுதல் உண்டாம், அப் பொழுது சாமாயிகாபாவம், ஆண்டு உண்டாகின்றது. எப் பொழுது மீண்டும், ஆண்டு, அதற்கு வருதல் உண் டாம். அப் பொழுது. அதன் நாசம் உண்டாகின்றது. அதனுல் சாமயிகாபாவமும், பிரதியோகிபோடு விரோத மாகின்றது. ஆதலால், ஸாமயிகாபாவத்திற்கு, அத்தியந்தாபாவத்தில் அடக்கம் அங்கீகரிப்பவர்களின் வசநம் மித்தையே யாம்.

### 5. அந்யோந்யாபாவம்

5. அபேத சம்பந்தத்தினுல் அவச்சிந்நம் பண்ணப் பட்ட பிரதியோகியினை யுடைய அபாவம், அந்யோந்யா பாவ மாம். அல்லது, இரண்டு வஸ்துக்களின் அபேத ஸம்பந்தத்தினை நிஷேதிப்பது, அந்யோந்யாபாவ மாம். அத்தியந்தாபாவம் முதலியவற்றில், அதிவியாப்தி நிவார ணத்தின் பொருட்டுத், "தாத்மிய ஸம்பந்த அவச்சிந்நம்" என்னும் பதங் கூறப்பட்டது. அது கட படத்தின் பேத

விவஹாரத்திற்கு ஹேது வாம். தர்மிப் பிரதியோகிகளி ஞல், நிருபிக்கத்தக்க தாம். வேறு அபாவங்களைப் போலப் பிரதியோகியோடு விரோதிப்பதில்லை. பிரதியோகியின் ஸமா நாதிகரணமா யிருக்கின்றது- பின்னையோ, பிரதியோகித் தன்மை அவச்சேதகத்தோடு ஒரு அதிகரணத்தி லிருப்ப தில்லை. பிரதியோகித் தன்மை அவச்சேதக அதிகரணத்தில் இருப்ப தில்லை என்பது பொருளாம். எங்ஙனம் "கடம் பட மன்று', 'பிராஹ்மணன் க்ஷத்திரிய னன்று (பிருதிவி ஜலம் அன்று) என்னுமிடத்துக் கடத்தின் பேதம் படத்திலும், பிராஹ்மணனின் பேதம், க்ஷத்திரியனிடத்திலும், பிருதிவி யின் பேதம் ஜலத்திலும் இருக்கின்றது. எதனுல், ஸம் யோக சம்பந்தத்திஞல், கடத்தின் அதிகரண மாகிய பூதலத் தில் கடத்தின் அந்யோந்யாபா வமு மிருக்கின்றது. கடமும் ஆண்டு இருக்கின்றது. அதஞல், பிரதியோகியோடு அதற்கு விரோத மில்லை பிரதியோகித் தன்மைக்கு அவச் சேதக மாகிய கடத்துவமோ, ஸமவாய ஸம்டந்தத்திஞல் கடத்தில் இருக்கின்றது. கடத்தின் பேதம் ஆண்டு இருப்ப தில்லை. தன்னிடத்தில் தனது பேதம் இன்மையின். அந் யோந்யாபாவத்திற்கே பேதம் இருக்கின்றது. அதஞல், அந்யோந்யாபாவம் பிரதியோகித் தன்மை அவச்சேதகத் தோடு விரோதிக்கின்றது. பிரதியோகியோடு விரோதிப்ப தில்லை. இதுவும், அத்தியந்தாபாவம் போன்று, அநாதி யநந்த மாம். பிராகபாவாதி போன்று, உத்பத்தி நாச முடைய தல்ல. பிருதிவியாதி நித்தியத் திரவ்யங்களில், பேத வியவஹாரத்தின் ஹேதுத் தன்மையிஞல் ஸதா இருத்தலின்.

ஐந்து வித அபாவத்திலும், அபாவத்துவ தர்மம், ஸமாநமா யிருக்கின்றது. பிரதியோகியின் ஸாபேக்ஷை யுடைய பிரதீதிக்கு விஷபத் தன்மையும் ஸமாநமா யிருக்கின்றது. அங்ஙன மாயினும், அந்யோந்ய அபாவத்தினும், நான்கு வித ஸம்ஸர்க்காபாவத்திற்கு வில க்ஷணத் தன்மையு மிருக்கின்றது. எவ் வாக்கியத்தில் பிரதி யோகி அநுயோகிகளைப் போதிக்கும் வெவ்வேறு வேற்று மைகளை முடிவிற் கொண்ட பதங்க ளிருக்கின்றன, அவ் வாக்கியத்தால், நான்கு வித ஸம்ஸர்க்காபாவத்தின் பிரதீதி யுண்டாகின்றது.

1. எங்ஙனம் உத்பத்தியின் பூர்வம் கபாலத்தில் கட மில்லை, அல்லது உண்டாம் என்னும் வாக்கியத்தில், அநு யோகியினைப் போதிக்கும் கட பதம் பிரதமாந்தமா (முதல் வேற்றுமை முடிவா) யிருக்கின்றது ஆண்டுப் பிராக பாவத்தின் பிரதீதி யுண்டாகின்றது.

2. உலக்கை முதலியவைகளால் அடித்தலால் கட நாசத்தின் பின், "கபாலத்தில் கடம் த்வம்ஸமாய் விட்டது" என்னும் வாக்கியத்திலும், தர்மிப் பிரதியோகிகளைப் போதிக்கும் பதம் ஏழாம் வேற்றுமையின் அந்தமும், முதல் வேற்றுமையின் அந்தமுமா யிருக்சின்றது. ஆண்டுப் பிரத்வம்ஸாபாவத்தின் பிரதீதி யுண்டாகின்றது.

3. வாயுவில், ரூபமில்லை என்னும் வாக்கியத்திலும், அநுயோகியினைப் போதிக்கும் ஸப்தமீ (ஏழாம் வேற் றுமை) அந்த பதம் இருக்கின்றது. பிரதியோகியினைப்

60

போதிக்கும் பதம் பிரதமாந்தமா யிருக்கின்றது. ஆண்டு, அத்தியந்தாபாவத்தின் பிரதீதி யுண்டாகின்றது.

4. "பூதலத்தில் இப் பொழுது கடமில்லை', என்னும் வாக்கியத்திலும், முன் போன்று, விபத்தியினை யுடைய பதம் இருக்கின்றது. ஆண்டு, ஸாமாயிகாபாவத்தின் பிரதீதி யுண்டாகின்றது.

5. 'பூதலம் கட மன்று" என்னும் வாக்கியத்தால், பூதலத்தில் கடத்தின் அந்யோந்யாபாவத்தின் பிரதீதி யுண்கிாகின்றது.

ஆண்டு, அநுயோகியினைப் போதிக்கும் பூதல பதம் பிரதியோகியினைப் போதிக்கும் கட பதம் என்னும் இரண்டும் பிரதமாந்த மாய் இருக்கின்றன. இவ்வாறு பின்ந வேற்றுமையினை அந்த மாக வுடைய பதங்க ளுள்ள வாக்கியத்தாற் ஜநித்த பிரதீதியின் விஷயத் தன்மை, நான்கு வித சம்சர்க்காபாவத்திலும் இருக்கின்றது அந்யோந்யா பாவத்தி லில்லை. சமாந வேற்றுமையினை அந்த மாக வுடைய பதங்க ளுள்ள வாக்கியத்தால் ஜநிக்கப்பட்ட பிரதீதியின் விஷயத் தன்மை அந்யோந்யாபாவத்தி லிருக்கின்றது, சம்சர்க்காபாவத்தி லில்லை. இப் பிரதீதியின் விலக்ஷணத் தன்மையினாலும், அபாவங்களின் விலக்ஷணத் தன்மை கூறப்படுகின்றது. இந்த ஐந்து பிரகார மாய அபாவத்தினை, மீமாம்சகரும், பிராசீந நையாயிருகரும், அதிகரண ஸ்வரூப மாக அங்கீகரிக்கின்றனர். கேவலம் அதிகரணத்தினாலே, "நாஸ்தி" (இல்லை) என்னும் வியவஹாரம் உண்டாகின்றது அபாவ ரூப வேறு பதார்த்தம் அங்கீகரியாமையின்.

நவீந நையாயிகரோ, அதிகரணத்தினும் பிந்ந மாக அபாவத்தினை யங்கீகரிக்கின்றனர், விஷேஷணத்தன்மை ரூப சம்பந்தத்தினால், எல்லா அபாவமும் தன் தன் அதிகரணத்தி லிருத்தலின். சூந்ய வாதியோ, அபாவத்தினை ஸ்வரூப மின்றிய தாக அங்கீகரிக்கின்றனர். அது சூந்யத்தின் வே றன்மையின். வேதாந்திகளோ, பாவத்தினை (பதார்த் தங்களை)ப் போல அபாவத்தினைப் பதார்த்தமா, யங்கீகரிக் கின்றனர். பாவாபாவங்கள் மாயையின் காரிய மாகலின். ஈண்டுக் கூறிய அநேக வித அபாவங்க ளெல்லாம், ஸ்வ சம்யுக்த விசேஷணத் தன்மைச் சம்பந்தத்தினால், அத னோடு கூடிய சக்ஷுர் இந்திரியத்தினாலேயே கிரகிக்கப்படு கின்றது. அதன், பிரமையின் பொருட்டு, வேறு பிரமா ணத்தின் கல்பனை யின்று, கௌரவ (தோஷ) மாகலின். இவ் வாறு, நியாய ரீதி யாக, அபாவங்களின் லக்ஷணம், ஸ்வரூபம், பிரதீதி, என்பவற்றைக் கூறி, இப் பொழுது வேதாந்த ரீதி யாகச் சுருக்க மாக அந்த நையாயிகர்களின் அபாவத்தின் அபாவத்தினையும் கூறு வாம்.

வேதாந்திகளோ இவ் வாறு கூறுகின்றனர்:-

1. "இது இல்லை" என்னும் பிரதீதியின் விஷயம் ஒரு அத்தியந்தாபாவமே யாம். வேறு ஒன்றும் இல்லை. "கபாலத்தில் கட முண்டாம்" என்னும் பிரதீதியை, நையாயிகர்கள் பிராகபாவத்தின் சாதக மாகக் கூறினர். அதுவோ, அந்யதா சித்த மாம். எதனால், இப் பிரதீதியின் விஷயம் பவிஷ்யத் கால சம்பந்தி யாகிய கடத்தின் சத் தையே யாம். கடத்தின் பிராகபாவ மன்று. எதனால், அபா வத்தினின்றும் பாவத்தின் உத்பத்தி யில்லை. இங்ஙனம் கொள்ளாக்கால், அசத் தாகிய முயற் கோட்டினின்றும்

காரியத்தின் உத்பத்தி யுண்டாம். "ஹே! சௌம்ய இஜ் ஜகத் உத்பத்தியின் பூர்வம் சத் ரூப மாகவே யிருந்தது" என்னும் சுருதியினுல், உத்பத்திக்குப் பூர்வம் காரிய ரூப ஜகத்திற்கு, காரண ரூபத்தினுல், சத் தன்மை நிச்சயஞ் செய்யப்படுகின்றது. சத்திற்கும் உத்பத்தி யுண்டாவ தில்லையாயினும், காரண வியாபாரத்தினுல், கடாதி காரியத் திற்கு, நாம ரூப மாக வெளிப்படும் தன்மையே காரியத் தின் உத்பத்தி யாம் அதனுல், பிராகபாவம் காரியத்தின் ஜநக மன்று. நையாயிகர்கள், இதற்கு அநாதித் தன்மை கூறினர். அதுவும் இல்லை.

ஆதியை யுடைய கபாலாதிகளில் இருத்தலின், எல்லா அபாவமும் மாயையின் காரிய மாகலின்.

2. உலக்கை முதலியவைகளால் (உடைத்தல் முத லியவைகளினுல்), கடத்தின் நாசம் உண்டாய், "ஈண்டு கடம் நாச மாய் விட்டது" என்னும் பிரதீதியை பிரத்வம் சாபாவத்தின் சாதக மாக அவர்கள் அங்கீகரித்தனர். அந்தப் பிரதீதியும், அந்யதா ஸித்த மாம். நாச சாமக்கிரியை யினுல் காரியத்திற்கு தனது உபாதாந காரணத்தில் நாம ரூப மாகத் திரோபவித்தலே, அந்தப் பிரதிதீயின் விஷய மாம். நாச மன்று. எதனுல், அத்வைத வாதத்தில், ஞாநத் திற்குப் பூர்வம், காரியத்தின் அத்தியந்தாபாவம் அங்கீகார மில்லை. பின்னையோ, ஸூக்ஷ்ம ரூபத்தினுல் திரோபாவமே உண்டாகின்றது அங்ஙனம் கொள்ளாக்கால், "இச் சகத்து சிருட்டிக்குப் பூர்வம் பிரஹ்ம ரூப மாகவே யிருந்தது", "அசத்திற்கு உத்பத்தி யில்லை. சத்திற்கு அபாவ மில்லை." என்னும் சுருதி ஸ்மிருதிகளின் விரோதப் பிரசங்கம் உண்டாம். அதனுல், பிரத்வம்சாபாவத்தின் அங்கீகார

மும் சுருதியின் விருத்தமும், பிர்த்தியக்ஷப் பிரமாணத்தி னுல் சித்தியா மையு மாம். பிரத்வம்சாபாவத்திற்கு, அநந்தத் தன்மை அவர்களாற் கூறப்பட்டது. அதுவுமின்று அந் தத்தை யுடைய கபாலங்களில் இருக்குந் தன்மையினுல், கபாலத்தின் நாச முண்டாய் அதன்கண் ணுள்ள பிரத்வம் சாபாவமும் நாச மாகின்றது, பாவாபாவ ரூப காரியம் பிரஹ்மத்தி லுள்ள அத்தியந்தாபாவத்தின் பிரதியோகி யாகலின்.

3. கட பூதலங்களின் சம்யோக சம்பந்த நாசத் தின் பின், "இப் பொழுது ஈண்டுக் கட மில்லை" என்னும் பிரதீதியினை அவர்கள் சாமயிகாபாவத்தின் சாதக மாகக் கூறினர். அதுவும், அந்யதா சித்த மாம். எதனுல், வேதாந்திகள் கொண்ட வியாவகாரிக அத்தியந்தாபாவமே அதற்கு விஷய மாம். அதினின்றும் பிந்நமாக சாமயிகா பாவம் இல்லை. அத்வைத மதத்தில், அத்தியந்தாபாவத்தை யும், உத்பத்தி நாச முடைய தாக அங்கீகரித்திருத்தலின்.

4. "கடம் பட மன்று" "கடம் பூதல மன்று" என் னும் பிரதீதியினை அந்யோந்யாபாவத்தின் சாதக மாக அவர் கள் கூறினர். அதுவும், கட படங்களின் அபேதத்தின் அத்தியந்தாபாவத்தினை விஷயஞ் செய்வ தாம். அந்யோந்யா பாவத்தினை விஷயஞ் செய்வ தன்று. எதனுல், தாதாத்மிய சம்பந்த மென்பது, அபேத சம்பந்த மாம், அபேத சம்பந் தாவச் சிந்நப் பிரதிபிரதியோகித் தன்மையின் அந்யோந்யா பாவம் அவர்களாலும் அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றது.

5. உத்பத்தி நாசங்களின் காரணம் நிருபிக்கப்படாமை யின், அத்தியந்தாபாவ, அந்யோந்யாபாவங்களை அவர்கள்

அநாதி யாகவும், நித்திய மாகவும், அங்கீகரிக்கின்றனர். அதுவும், மனோ ரத மாத்திர மாம். அத்வைத சுருதியின் விரோதத்தினால். எதனால், அத்வைத சுருதியோ, பிரஹ்மத்தினும், பிந்ந மாய் பாவாபாவ ரூப சர்வப் பிரபஞ்சத்தினையும் அசத் தென்கின்றது. அதனால், அத்வைத வாதத்தில், சர்வ பாவாபாவ ரூப அநாத்ம பதார்த்தங்களும், மாயையின் காரியங்க ளாம். அதனால், ஆத்மாவின் பிந்ந பதார்த்தங்கட்கு நித்தியத் தன்மை அசம்பவமா யிருக்கின்றது. பாவ ரூப மாயைக்கு அபாவ ரூப காரியத்தின் உபாதநத் தன்மை பொருந்துவ தில்லை. சஜாதீயமே உபாதாந மாகலின். அங்ஙன மாயினும், அநிர்வசநீயத் தன்மை, மித்யாத் தன்மை, ஞாந நிவிர்த்தியத் தன்மை, அநாத்மத் தன்மை முதலிய சமாந தர்மங்கள் இருத்தலின், மாயைக்கும், அபாவத்திற்கும், சஜாதீயத் தன்மை யிருக்கின்றது. சம்பூர்ண தர்மங்களால், உபாதாந உபாதேயங்களின் சஜாதீயத் தன்மை கூறினோ, கடத்துவ கபாலத்துவம் ஆகிய விஜாதீய தர்மங்கள் இருத்தலின், கட கபாலங்கட்கே, உபாதாந உபாதேயத் தன்மை உண்டாகாது. ஆதலால், எங்ஙனம் மண் மயத் தன்மை முதலிய தர்மியின் சமாந தர்மங்களால் கட கபாலங்கட்கு சஜாதீயத் தன்மை யிருத்தலின், அவற்றிற்குக் காரிய காரணத் தன்மை யிருக்கின்றதோ, அங்ஙனமே, அநிர்வசநீயத் தன்மை முதலிய சமாந தர்மங்களின் சம்பவத்தினால், மாயை அபாவங்கட்கும், காரிய காரண பாவம் இருக்கின்றது. எதனால், மாயையின் காரிய மாகலின், எல்லா அபாவமும் மித்தையே யாம். அதனால், அந்யோந்யாபாவத்தின் அநாதித் தன்மை, அநந்யத் தன்மைகள் மனோ ரத மாத்திர மாம்.

எதனால், விசேஷண விசேஷ்ய பாவ ரூப சம்பந்தமே யின்று, சம்யோக சமவாய சம்பந்தங்கட்குக் கூறிய

லக்ஷணம் பொருந்தாமையின். அவர்களால் சம்யோகாதி சம்பந்தம் ஒன்று, சம்பந்தங்களின் பிந்ந மாய் இரண்டின் ஆசிரித மாகக் கொள்ளப்பட்டிருக்கின்றது. விசேஷணு பாவமோ, விசேஷணத்தின் ஸ்வரூப மாம். விசேஷியா பாவமோ விசேஷயத்தின் ஸ்வரூப மாம். அவற்றின் பிந்ந மன்று. எதனுல், விசேஷண விசேஷ்ய பாவ சம்பந்தம் ஒன்று மில்லை. இரண்டின் ஆசிரிதமு மில்லை. விசேஷண விசேஷ்யங்கள் வெவ் வேறு ஸ்வரூப மாகலின். அதனுல், இந்திரியத்திற்கு அபாவத்தோடு விசேஷண விசேஷ்ய பாவ சந்நிகர்ஷ மின்மையின். சக்ஷு இந்திரியத்தால், அபாவத்தின் கிரஹணம் அவர்கள் உடன்பட்டிருக்கின்றனர். அதுவும், துச்ச மாம். அபாவம் அநுபலப்திப் பிரமாணத்தானே கிரகிக்கப்படுதலின்.

வேதாந்த மதத்தில், முற் கூறிய ஒரு அத்தியந்தாபாவமும், பாரமார்த்திக வியாவகாரிக பேதத்தால் இரு வகைத்தாம்:— "இப் பரமாத்மாவில் ஜீவேசுவர ஜகத்து ரூபம் இல்லை" என்பதாதி சுருதியால், பிரதிபாதிக்கப்படும் பிரஹ்ம ரூப அதிஷ்டாநத்தில், சர்வ பிரபஞ்சத்தின் அத்தியந்தாபாவம் பாரமார்த்திக மாம். அதிஷ்டாநம் பிரஹ்ம ஸ்வரூப மாகலின். அத்தியஸ்தத்திற்கு அதிஷ்டாநத்தினும் வேருகாமையின். அதனுல், பிரஹ்மத்தினும் பிந்ந மாகிய அசத்து ரூப ஜகத்தின் அபாவ ரூபம் அதிஷ்டாநப் பிரஹ்மத்தின் ஸ்வரூபமே யாம். அபாவத்தின் அபாவம் பாவரூப மாகலின்.

சிலரோ, இவ் வாறு கூறுகின்றனர்:- பிரபஞ்சத்தின் அத்தியந்தாபாவம்: அதிஷ்டாநப் பிரஹ்மத்தின் பிந்ந மாம்.

அதன் ஸ்ருப மல்ல, பார மார்த்திக மாம். இதில், அத்வைத சுருதிக்கும் விரோத மில்லை. அத்வைத சுருதி பாவ ருப த்வைதத்தின் நிஷேத பர மாகலின். அவர்களின் கூற்று யதார்த்த மல்ல:— அதிஷ்டானப் பிரஹ்மத்தினும் பிந்ந மாக அத்தியந்தாபாவம் பிரதியோகியின் சமாந சத்தை யுடைய தாகலின். அந்த அபாவத்தின் பிரதியோகி யாகிய பிரபஞ்சமோ, கல்பித மாம். அதனால், அதன் அபாவமும் கல்பித மாகலின், பரமார்த்தத் தன்மை பகரல் அசங்கத மாம். "ஒன்றே அத்விதீயம் பிரஹ்மம்,, என்னும் சுருதி யின் அர்த்தத்தினையும், அவர்கள் பிரபஞ்ச நிஷேதத்தில் சங்கோசம் செய்கின்றனர். அதிலும் பிரமாண மில்லை. எதனால், அந்தச் சுருதியோ பாவாபாவ மாகிய இரு பிரபஞ் சத்தின் நிஷேதக மாம். பிரத்தியக்ஷாதிப் பிரமாணமோ, பிரஹ்மத்தில் ருபாதி யின்றியதால், பிர்விர்த்திப்ப தில்லை. அதனால், அவர்களின் கூற்றும் பிரமாணத்தின் அபாவத்தி னால், அசத்தா யிருக்கின்றது.

"பூதலத்தில் கட மில்லை" என்னும் பிரதீதியின் விஷய மாகிய அத்தியந்தாபாவம் வியாவஹாரிக மாம். அதிஷ்டானத்தினும் பிந்ந மாகலின். எதனால். வியாவ ஹாரிக கடாதிகளின் அபாவத்திற்கும் பிரதியோகி யாகிய கடாதிகளின் சமாந சத்தையினால் வியாவகாரிகத் தன்மை யிருக்கின்றது. வியவகாரிகப் பிரபஞ்சத்தின் பாவாபாவங் கள் பிரஹ்ம ஞானத்தினால் பாத மாகின்றமையின். அத் வைத மதத்தில், வியாவகாரிக அத்தியந்தாபாவத்திற்கும் மித்தியாத் தன்மையே யிருக்கின்றது. "பூதலம் கட மன்று" என்னும் பிரதீதியின் விஷய மாகிய கட பட

அபேதத்தின் அத்தியந்தாபாவத்தினையே நையாயிகர் அந்யோந்யாபாவ மாகக் கொள்கின்றனர். ஜீவேசுவரர்களின் பேத ரூப அந்யோந்யாபாவத்தை நையாயிகர்கள் சத்திய மாக அங்கீகரித்திருக்கின்றனர். சத்திய மாக அவர்கள் கொள்ளுதலும் சுருதி தாத்பரிய ஞானத்தின் சூந்யத் தன்மையினு லாம். எதனுல், மஹா வாக்கியத்தினு லுண்டாம் பிரஹ்ம சாக்ஷாத்காரத்தினுல், அவித்தையின் நாச முண்டாய் அவித்தையின் காரிய மாகிய பாவாபாவ ரூப சர்வ பிரபஞ்சமும் நிவிர்த்தியாகின்றது. அந்த நிவிர்த்தி சுருதிப் பிரமாணத்தினு லும், வித்துவான்களின் அநுபவத்தினு லும், சித்தமாயிருக்கின்றது. நியாய மதத்தில், எவ்வளவு அபாவ ஞானம் சக்ஷு இந்திரியத்தினுல் உண்டாவ தாகக் கூறப்பட்டது. அவ்வெல்லா ஞானமும் வேதாந்த மதத்தில் அநுபலப்திப் பிரமாணத்தினுல் உண்டாவ தாகக் கூறப்படுகின்றது. நையாயிகர்கள் அநுபலப்திப் பிரமாணத்தின் அங்கீகாரத்தில் கூறிய கௌரவத் தன்மையுமில்லை. எதனுல், நியாய மதத்தில், சக்ஷு இந்திரியம் கரண மாகின்றது. அநுபலப்தி அதன் சஹகாரி காரண மாகின்றது. இந்திரியத்தில் பிரமாணத் தன்மை யிருக்கின்றது, அநுபலப்தியில் பிரமாணத் தன்மை யில்லை. வேதாந்த மதத்தில், அநுபலப்தியில் பிரமாணத் தன்மை அதிக மாகக் கொள்ளுகின்றனர். இவ்வாறு, அநுபலப்தியின் ஸ்வரூபம் இரண்டு மதத்திலும் சித்தித் திருக்கின்றது. நியாய மதத்தில், சம்யுக்த விசேஷணத் தன்மைச் சம்பந்தத்திற்கு, ஞானத்தின் கரணத் தன்மை அதிக மாக கொள்ளப்பட்டிருக்கின்றது. விசேஷண விசேஷ்யத் தன்மைச் சம்பந்தம் அபாவத்திற்கு ஸ்வரூப மாக இரண்டு மதத்திலும் சித்த

மாம். அதனால், லாகவ கௌரவம் ஒருவருக்கு மில்லை: இரண்டும் சமாந கல்பனையா யிருக்கிறது. அங்ஙன மாயி னும், அபாவ ஞாநத்தின் கரணத் தன்மை, இந்திரியத்தில் நையாயிகர்கள் அதிக மாகக் கூறுகின்றனர். இது அவர் களது மதத்தில் கௌரவ மாம். அப்பிரத்யக்ஷ வாயுவில், ரூபத்தின் அபாவ ஞாநம் நேத்திர வியாபார மின்றி யுண் டாகின்றது. பிரத்தியக்ஷப் பரமாணுவில் மஹத்துவத்தின் அபாவ ஞாநம் உண்டாகின்றது. அதனையும், நையாயிகர் கள் சாக்ஷுஷ ஞாநம் என்கின்றனர். அதுவோ, அநுபவ விருத்தமா யிருக்கின்றது. இரண்டு திரவ்யங்களும் சக்ஷு இந்திரிய கோசர மின்மையின். ஆதலால், அபாவ ஞாநம் சக்ஷு இந்திரிய ஜந்ய மென்று நையாயிகர்களின் அங்கீ காரம் யுக்தி யுடைய தன்றாம். அதனால், அபாவ ஞாநம் அநுபலப்திப் பிரமாண ஜந்ய மாம். ஆனால், அபாவ ஞாநத்தின் உத்பத்தியில், எதனால், வியாபார மின்றிய அநு பலப்தி அசாதாரண காரணமா யிருக்கின்றதோ, அதனால் அபாவ ஞாநத்தின் அசாதாரண காரணத் தன்மையே, அநுபலப்திப் பிரமாணத்தின் லக்ஷண மாம். வியாபார முடைத் தாய்க் காரணத் தன்மை யாவ தில்லை.

அநுபலப்திப் பிரமாணத்திற்கு, வேதாந்தத்தில் இவ் வாறு உபயோகம் இருக்கின்றது:- "ஈண்டு நாநா என்பது அற்பமும் இல்லை" என்ப தாதி சுருதியால், த்ரைகாலிக அபாவம் பிரபஞ்சத்திற்குப் பிரமத்தினிடத்தில் கூறப்படு கின்றது. அதுவோ, அநுபவ ஸித்தப் பிரபஞ்சத்திற்குப் பொருந்துவ தில்லை, பிரத்தியக்ஷ மாக விளங்குதலின். அத னால், பிரபஞ்சத்திற்கு ஸ்வரூப மாக நிஷேதம் முற்கூறிய சுருதி செய்வ தில்லை. ஆனால், பிரபஞ்சம் பாரமார்த்திக

மன்று என்று பாரமார்த்திகத் தன்மை விசிஷ்டப் பிரபஞ் சத்திற்குத் திரைகாலிக அபாவம், பிரஹ்மத்தில் இச் சுருதி கூறுகின்றது இவ் வாறு, பிரபஞ்சத்தின் அத்தியந்தா பாவம் எங்ஙனம் சுருதி சித்தமா யிருக்கின்றதோ, அங்ஙனமே, அநுபலப்திப் பிரமாணத்தினாலும் சித்த மாகின்றது. பாரமார்த்திகத் தன்மை விசிஷ்டப் பிரபஞ்சம் இருக்கு மாயின், எங்ஙனம் பிரபஞ்சம் ஸ்வரூப மாக விளங்குகின் றதோ, அங்ஙனமே பாரமார்த்திக ரூபத்தினாலும் அதன் பிரதீதி யுண்டாகுக. எதனால், வித்வானது அநுபவத்தினால், உண்டாகின்ற தில்லை அதனால், பாரமார்த்திகத் தன்மை யினால், பிரபஞ்சத்தின் அபாவம் இருக்கின்றது. இவ் வாறு பிரபஞ்சத்தின் (அத்தியந்த) அபாவ ஞாநம் அநுபலப்திப் பிரமாணத்தினாலும் உண்டாகின்றது. வேறு பிரஹ்ம ஞாநத்தின் உத்பத்தியின் பொருட்டும், அநேக அபாவங் களின் ஞாநம் ஜிஜ்ஞாஸுவிற்கு இஷ்ட மாம். அதன் ஹேதுவும் அநுபலப்திப் பிரமாண மாம். அதனால், வேதாந்தத்தில் பிரயோஜந முடைய அநுபலப்தியின் அங்கீ காரம் செய்யப்பட்டிருக்கின்றது.

அபாவம், இவ் வாறு வேதாந்த பதார்த்த மஞ்ஜூஷா வில் எழுதப்பட்டிருக்கின்றது.

(முற்றிற்று)



## வேதாந்த சூடாமணி செய்யுள் 185
## முதற் குறிப்பு அகராதி.

49 முதல் எழுத்தை கொண்டது.

---

| பக். | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 42 | 16 | சமங்வய | அவிரோத |
| 96 | 16 | என்னும் | என்றும் |
| 108 | 5 | விரிந்திதமிழ | விரிந்தமிழ |
| 113 | 4 | மாகைய | மாகையா |
| ,, | 5 | உயருண்மை | உயிருண்மை |
| 118 | 20 | விளங்கிடும் | விளங்கியிடும் |
| 135 | 10 | பரிச்செதம் | பரிச்சேதம் |
| 143 | 10 | நீரவிழுந் | நீர்விழுந் |
| 160 | 10 | பகுமூட | பகுமுட |
| 161 | 4 | லக்ஷியார்த்தம் | தொம்பத லக்ஷியார்த்தம் |
| 187 | 6 | சதுஷ்டபத்துள் | சதுஷ்டயத்துள் |
| ,, | 12 | திைாக | திரைக |
| 202 | 4 | யாற்ஞ்சபூத | யாற்பஞ்சபூத |
| 206 | 27 | விரவரத | விரவாத |
| 226 | 7 | துவமுனரினா | துவமுணரின் |

| | | | |
|---|---|---|---|
| 227 | 10 | பிரதிவிம்மித்திடுலே | பிரதிவிம்பித்திடுதலே |
| 250 | 19 | [illegible] | லநுபவிக்கை |
| ,, | 25 | இலகவின் | இலேகளின் |
| 253 | 16 | [illegible] | ஏது |
| 261 | 25 | [illegible] | சைதந்யப் |
| 270 | 26 | [illegible] | சாயையுடன் |
| 273 | 2 | [illegible]படுதல் | வசைப்படுதல் |
| 296 | 8 | முன்ருச் | மூன்ருச் |
| 309 | 14 | ஸ்வாவவு | ஸ்வபாவ |
| 311 | 20 | யீந்திர | யிந்திர |
| 315 | 12 | வேக | வேத |
| 316 | 5 | லவ்வியகெமன் | லவ்வியமென் |
| 318 | 4 | வல்ஞே | வலஞே |
| 320 | 6 | சிவமொடுரயிக்க | சிவமொடுயிரயிக்க |
| 364 | 18 | எள | என |
| 366 | 14 | சாதாநு | சத்தாநு |
| 368 | 17 | நிஸ்தத்ரங்க | நிஸ்த்தரங்க |
| 372 | 3 | துக்கபாவ | துக்காபாவ |
| 375 | 18 | களின்றும் | களினின்றும் |
| 377 | 23 | கிந்தை | சிந்தை |
| 387 | 26 | சித்தித்தில் | சித்தத்தில் |
| 392 | 3 | தகூந்த | தகுந்த |
| ,, | 13 | நான் என் | நான் |
| 397 | 2 | க்ஷயபாயந்தம் | க்ஷயபரியந்தம் |
| 405 | 22 | வார்த்தக்கிய | வார்த்தைக்கிய |
| 406 | 10 | சட்குப் | கட்குப் |
| 407 | 19 | மித்தையாத | மித்தையாத் |
| 409 | 11 | ரஜகத் | ரஜதப் |
| ,, | 14 | பாதலும் | யாதலும் |
| ,, | 24 | சுச்தி | சுக்தி |
| 419 | 4 | வாசநா | வாசுநா |
| 424 | 24 | பொருந்தி | பொருந்திய |